# திருக்கோவையார்

சைவசமயாசாரியராகிய

**மாணிக்கவாசகசுவாமிகள்**

அருளிச்செய்தது.

இது

மதுரையாசிரியர் பாரத்துவாசி

**நச்சினார்க்கினியருரையோடு**

இராமநாதபுரசமஸ்தானம் ம-ா-ா-ஸ்ரீ

**பொன்னுச்சாமித்தேவரவர்கள்**

வேண்டுகோளின்படி,

யாழ்ப்பாணத்து நல்லூர்

**ஆறுமுகநாவலரால்**

பலபிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து,

மேற்படியூர்

**சதாசிவப்பிள்ளையால்**

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.

பிலவ௵ புரட்டாசிம௴.

இதன்விலை ரூபா - ௨.

☞ இவ்வுரையைப் பிரயோகவிவேகநூலார் பேராசிரியரதென்றும் தஞ்சைவாணன்கோவையுரைகாரர் சேனாவரையரதென்றும் கூறுவர்.

சிவமயம்.

# நம்பியாண்டார்நம்பி.

வருவாசகத்தினின்முற்றுணர்ந்தோனைவண்டில்லைமன்னைத்
திருவாதவூர்ச்சிவபாத்தியன்செய்திருச்சிற்றம்பலப்
பொருளார்தருதிருக்கோவைகண்டேயுமற்றப்பொருளைத்
தெருளாதவுள்ளத்தவர்கவிபாடிச்சிரிப்பிப்பரே.

# அபியுத்தர்.

உருவாருந் தமிழ்ச்சங்கத் தடம்பொய்கைத் தோன்றி
யுயர்ந்தோங்கு மெய்ஞ்ஞான வொளியையுடைத் தாகி
மருவாருங் கிளவியிதழ் நானூ றாகி
மதுப்பொருள்வாய் மதிப்புலவர் வண்டா யுண்ணத்
தருவாரும பூவையூர னுலகுய்யக் குனிப்போன
நடங்கருணை யெனுமிரவி தன்கதிரா லலருந்
திருவாத வூராளி திருச்சிற்றம் பலவன்
றிருவடித்தா மரைச்சாத்துந் திருவளர்தா மரையே.

## இலக்கணக்கொத்துரை.

"பல்காற் பழகினுந் தெரியா வுளவேற்
றொல்காப் பியந்திரு வள்ளுவர் கோவையார்
மூன்றினு முழங்கு மாண்டினு மில்லையேல்
வடமொழி வெளிபெற வழங்கு மென்க.

திருவைக் கோவைக்குங் கூட்டுக. மாணிக்கவாசகர் அறிவாற் சிவனேயென்பது திண்ணம். அன்றியும், அழகிய திருச்சிற்றம்பல முடையார் அவர் வாக்கிற் கலந்திருந்து அருமைத் திருக்கையாலெழுதினர். அப்பெருமையை நோக்காது, சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, சங்கப்பாட்டு, கொங்குவேண்மாக்கதை முதலியவற்றோடு சேர்த்துச் செய்யுட்களோடொன்றாக்குவர். அங்ஙனமமையாது, இலக்கணமாவது தொல்காப்பியமொன்றுமே செய்யுளாவது திருவள்ளுவரொன்றுமே இவ்விரண்டும் நீங்கலான

இலக்கணவிலக்கியமெல்லாம் ஒன்றற்கொன்று பெருமை சிறுமை இணையென்று கொள்வாரென்பது தோன்ற, இம்முறைவைத்து அடையைப் பொதுவாக்கினாம். அவர் அதுமட்டோ, இறையனாரகப்பொருள் முதலான இலக்கணங்களையும் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம், பட்டணத்துப்பிள்ளையார்பாடல் முதலிய இலக்கியங்களையும் ஓர் பொருளாக எண்ணாது, நன்னூல், சின்னூல், அகப்பொருள், காரிகை, அலங்கார முதலிய இலக்கணங்களையும், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, இராமன்கதை, நளன்கதை, அரிச்சந்திரன்கதை முதலான இலக்கியங்களையும் ஓர் பொருளாகவெண்ணி வாணாள் வீணாள் கழிப்பர். அவர் இவைகளிருக்கவே அவைகளை விரும்புதலென்னெனின், பாற்கடலுட்பிறந்து அதனுள் வாழுமீன்கள் அப்பாலை விரும்பாது வேறுபலவற்றை விரும்புதல்போல அவரதியற்கை யென்க.”



சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

வேதாகம சித்தாந்த சைவசமயாசாரிய பீடமாய் விளங்காநின்ற

திருவாவடுதுறையாதீனத்துவித்துவான்

## தாண்டவராயசுவாமிகள்

இயற்றியது.

### நேரிசையாசிரியப்பா.

நிலமகள் முகத்தி னிலவுறு மியானைத்—திலகமென் றுரை
க்குந் தென்னா டதனிற்—சீர்மலி புகலிச் சிவபிரா னருளா—லேர்
மலி சிவையி னிணைமுலைப் பாலெனும்—பரஞா னந்தனைப் பரி
வொடும் பருகி—யுரவுநீர் ஞால முஞற்றிய தவத்தாற்—றோடெழு
வாயிற் றோன்றுபு துலங்கும்—பீடுசால் பதிகப் பெயர்பெற வுமிழ்
ந்த—ஞானசம் பந்த நற்றமிழ்ப் பெருமா—னினசம் பந்த விருட்
சமண் பொருட்டா—லருடிருப் பாசுர வருந்தமிழ் மறையினைத்—
தெருள்படப் பயின்று தெய்வவை திகமுஞ்—சைவமு முலகிற்
றழைந்திட நிறுத்த—வையைவார் நதிசூழ் வாத வூரின்—மறையவர்
குலத்திலா மாத்தியர் மரபி—லிறையவ னருளொண வெழில்பெறத்
தோன்றி—வளர்தரத் தாதையார் வாத வூரனென்—றுளமகிழ் சிற
ப்பா லுதவுமொண் பெயருறீஇ--வேத மாகமம் வேறுமற் றுள்ள--
வோதுநூற் பகுதியு முளங்கொளக் கற்று—வாழுநாட் கூடன்
மன்னரி மருத்தனப்—பூழியன் விளித்துப் புகன்முத லமைச்
சுந்—தென்னவன் பிரம ராயனென் சிறப்பு—மன்னபி தானமும்
வழங்குறப் பெற்றவ்—வண்ணலுக் கென்று மணிமணிக் கவச
முங்—கண்ணுமென் றுரைப்பக் காரியம் புரிந்து—வதியுநா ளொ
றும் வளர்சிவ புண்ணியப்—பொதியினாற் றூய்மை புந்தியிற் பொ
ருந்த—நிலைநிலை யாமையி னிலைமையை யளவிட்—டலைவுறும் பிற
வியி னருந்துயர்க் கஞ்சி—வீடு பேற்றின் மிகவிருப் பினராய்க்—
கூடுமெய் யடியார் குழாத்தொடுங் குலாவிச்—சிந்தையைச் சிவ
பிரான் றிருவடிக் கமைத்துத்—தந்தொழி லுங்கொடு சாரவோர்
ஞான்று—குணதிசைக் கலித்துறை குதிரைகள் குறுகலை—மணம்
விரி தண்டார் மன்னவன் றெரிந்தெம்—பொன்னறை திறந்து

பொருள்பல கவர்ந்துபோய்க்—கொன்பரி வாங்கிக் கொணர்கெ
னக் கூறி—விடைதரப் பொருளொடும் விமலனை வணங்கி—
நடைகொடு வருமிவர் நடைமுத லனைத்தும்—பரசிவன் றிருவுளம்
பற்றியோர் பனவக்—குரவனாய்ப் பெருந்துறைக் குருந்தடி நீழ
லிற்—போற்றிமா ணவர்சூழ்தரம் புடையுற நாப்பண்—வீற்றிருந்
தருளவவ் வியனக ரண்மி—யாலயம் புகுந்தன் பால்வலம் வரு
வார்—கோலமார் குருந்துறை குருமணி தன்னைக்—கண்டுள முரு
கிக் கண்ணீர் பெருகித்—தெண்டனிட் டெழுந்து சிவதே சிக
னே—யடிய னேனையு மாண்டருள் செய்கென—முடிமிசை யஞ்
சலி முகிழ்த்துநின் றிரப்ப—வேதியர் மலபரி பாக விளைவினை—
யாதிதே சிகனறிந் தியாக்கையா ருயிர்பொருண்—மூன்றையும்
புனலொடு முளரியங் கரத்தா—லேன்றருட் கண்ணா லிருண்மல
மகற்றிச்—சென்னிமேற் செங்கரஞ் சேர்த்தியைந் தெழுத்தான்—
மன்னிய பாச வலிகெடுத் தின்பப்—பூரண வடிவம் புரிந்தவப்
போதுபே—ராரண மறியா வருட்டே சிகனை—மாணிக்க நிகர்
க்கு மதுரவா சகத்தாற்—பேணிப் பரவப் பிரானனி மகிழ்ந்தவ்—
வாசில்கா ரணத்தா லமலமா ணிக்க—வாசக னெனப்பெயர் வழங்
கினன் மறைதலும்—வியந்துபின் றெளிந்தவ் விரிபொரு ளனை
த்து—நயந்தா னலய நற்பணி தனக்கு—மணிவிழா விற்குமர்ச்
சனைக்குமங் கணன்கண்—மணிகொண்மெய் யடியார் மாண்பூ
சனைக்கு—மமைத்தரு டந்த வாரிய னடிக—டமைப்பணிந் தங்ங
னஞ் சார்ந்தன ரிருப்ப—வழுதியீ தறிந்து வரவழைத் தெம்பொ
ருண்—முழுதுமீ யலதுமா முறையினிற் கொணர்தியென்—றண்
டரு மஞ்ச வல்லல்செய் மல்லராற்—றண்டனை செய்வது சகிக்கில
னாகிக்—கூடலங் கோனரி குதிரையாக் கியதிரு—வாடலா திகளா
லரசனைத் தெருட்டத்—தெருண்டவவ் வரசனிச் சிவனடி
யாரை—மருண்டபுன் மதியான் வருத்தின னெனவவ்—வன்பரை
யடைவுற் றடிகளிற் பணிந்தே—யென்பிழை பொறுத்தருள்
வீரென் றிரப்ப—வகமகிழ்ந் தன்பரவ் வரசனுக் கலகில—முக
மனன் குரைத்து முனைமதி முடியோன்—சன்னிதி சார்ந்து தாழ்
ந்துபின் புறம்போந்—தென்னிதி யேயென வெய்துபாண் டிய
னை—நிற்கப் பணித்து நின்மல மாக்கிய—வற்களத் தைய ரமர்பெ
ருந் துறையை—யடைந்து முன்போல வாரியற் காணவுள்—ளுவடை
ந்துநைந் துருகி யுலப்பில்பே ரன்பாற்—பற்பல விதமாப் பாமா
லைகள்புனைந்—தற்புதன் சேவடிக் கணிந்தவ ணிருப்பத்—தில்லை
யில் வருகெனச் சிவபர னருளலு—மொல்லையி னிறைஞ்சி யுடன்
னீங் கியாறு—செல்வழிச் சிற்சில சிவநகர் துதித்துப்—பல்வள

படைத்த பரமா காய—புண்ட ரீக புரந்தனிற் பொருந்தி—யண்
டர்தம் பெருமா னருணடங் கும்பிட்—டாரா வன்பி னருட்டுதி
யியற்றிச்—சீரார் சிவயோ கினிற்சிறந் திருப்ப—மணிமதிற் கூட
லில் வளர்தமிழ்ச் சங்கத்—தணிமுதற் புலவனு யமர்தரும் போது—
கூறரு மின்பொருட் கூறிறந் திடுதலின்—மாறனும் புலவரு மயங்
குறு காலை—யிறையனு ரகப்பொரு ளெனப்படும் பனுவலை—
முறைமையின் மொழிந்த முதிர்திரு வாக்கா—லைந்திணைக் கோவை
யலங்கரித் துரையெனச்—சுந்தரத் தாண்டவத் தோன்றலார் பணி
ப்பக்—கருணையை யுன்னிக் கணக்கில்பே ரின்பப்—பொருணயந்
தழுவிப் புனிதநல் வாக்காற்—றிருக்கோவை யுள்ளிடுந் தேவரும்
பரவத்—திருக்கோவை யாரினைச் செப்பின ரஃதை—யிருக்கினுஞ்
சிறந்ததா வேற்றெம் பெருமான்—றிருக்கரங் கொண்டு தீட்டிய
தன்றியு—மழகிய திருச்சிற் றம்பல முடையா—னெழுதிய தென
ரெட் டெழுத்துமிட் டருளின—னுதலா லிந்நூ லரும்பொருட்
பயனை—யோதவுங் கேட்கவு மொருவரான் முடிமோ—காமச்
சுவையினைக் கட்டுரைத் திடுதலாற்—காமுகர் காமநூ லெனக்களித்
துரைப்பவு—மிலக்கியக் கடனின் றேறுதற் கீதோ—ரிலக்கிய
நூலெனக் கவிஞர்க ளிசைப்பவு—மிலக்கண விதியெலா மெளிதி
னிற் பயில—விலக்கண நூலென வியல்வலோ ரியம்பவு—
மன்பினைப் பெருக்கி யரனடி யளித்தலா—லன்புநூ லென
மெய் யன்பின ரறையவும்—வேதமெய்ப் பொருளினை விளங்க
வோ துதலால்—வேதமே யெனவே தியர்வியந் துரைப்பவுஞ்—
சைவசித் தாந்தத் தனிப்பொரு டருதலிற்—சைவா கமமெனச்
சைவர்கள் சாற்றவும்—பலபட விங்ஙனம் பாருளோர் புனைந்து—
சொலநனி விளங்கித் தோன்று மிந்நூலிற்—குச்சிமேற் புலவர்கொ
ளுயர்நூற் குரைகள்செய்—நச்சினார்க் கினியார் நயந்துரை செய
வெணி—மற்றைய பொருளெலா மனக்குமெட் டாமையைத்—
தெற்றென வுணர்ந்து சீர்சா லகப்பொரு—ணூலினு னுதலிய
நுண்பொருட் கிணங்க—வாலிதிற் றேர்ந்து வகுத்தபே ருரை
யினை—யெளிதினிற் கற்றிவ் விருநிலத் தோருளங்—களிபெறும்
பயனைக் கருத்திடை யுன்னிக்—கரலிகி தங்களிற் காண்டுகள்
களைந்தே—யுரமொடு மச்சிட் டுதவுக வென்று—நதியணி சடில
நம்பனோர் முனியுறை—பொதியமென் றுரைக்கும் பொருவின்மா
மலையின—னுயர் கொடியின னருளினாற் போதலின்—வானு
ளோர் களும்புகழ் வையையவா ராற்றின—னம்பினோர்க் கெல்லா
லங்களுங் கொடுத்துயர்—செம்புகழ் படைத்த செம்பிநன் னாட்
டனன்—விதுவையூர் மாடமு மேடையும் விளங்கும்—பொதுவை

யுங் கொண்டொளிர் புதுவைமா நகரான்—கற்றவர் புனைபா
மாலையி னொடுகவி—னுற்றதண் டளவ வொண்பூ மாலையான்—
பண்பரி யிப்பரி யாகவுட் பதியவும்—விண்பரித் திசைப்பவும் விள
ங்கும்வெண் பரியான்—றிகைக்களிற் றினமுஞ் சென்றெதிர் மலைந்
திடிற்—றிகைக்குமா றிகல்புரி சேமவெங் களிற்றினன்—மாண்படு
மாற்றல ரன்றிமற் றையருங்—காண்பரே லச்சுறுங் காவியங்
கொடியினன்—வம்மினென் றெவரையும் வரச்செயுங் கொடை
முதன்—மும்மைகொண் டென்று முழங்குமும் முரசினன்—பொ
ங்கொளிக் கதிரோன் போந்துலாம் புவியிட—மெங்கணு நடாத்து
மிசைச்செங் கோலின—னொழுக்கமும் வாய்மையு முயர்குடிப்
பிறப்பு—மழுக்கிலா வன்பு மடக்கமு மருளுங்—கல்வியுங் கொடை
யுங் கணக்கில்பே ராற்றலுஞ்—செல்வமு மியல்பாச் சிவனுறச்
சிறந்தோ—னருந்தமி ழுளக்கரை யறிவெனு மம்பியாற்—றிருந்
துறக் கடத்தலாற் சீர்பெறத் திகழ்வோன்—சாந்த சமுத்திரந் தரு
மமா ணிக்கம்—வாய்ந்தபொற் பேழை வரகுண மேரு—சீரிய புல
வர் திறந்தெரிந் தொண்பொருண்—மாரியும் வெள்குற வழங்கிடும்
வள்ளன்—மேவுமெய் யறிவான் மேம்பா டுற்று—யாவருள் ளத்து
மரசவிற் றிருப்பேர்—ணிராசாங் கத்தினை யீரோப் பியரும்—
பராவுறச் செலுத்தும் பண்புகொள் பார்த்திவன்—சேது பதிக
டஞ் செங்கோற் சீர்மை—நீதியோ டென்று நிலவுறச் செய்
வோன்—பூக்கொளே ரம்பையைப் பொருந்தலிற் புவியோர்—மாக்
கோன்மன் னிபமுக வானவ னெனவுந்—தெய்வப் பிடியொடு
சேர்தலிற் றேவர்கட்—குய்வைத் தருவே லுத்தம னெனவு—மின்
னோர் பயோதர மேவலில் விண்மிளிர்—பொன்னா டளிக்கும் புரந்
தர னெனவு—மம்புய மேவி யமர்தலி னுலகெலா—மும்பரும் விய
க்க வுதவுவோ னெனவு—மீகை யுடையனா யிருத்தலிற் றிரு
வொடு—மோகையுற் றுறைதரு முபேந்திர னெனவும்—புலவர்கள்
கவிகளாற் புனைந்தேத் தெடுப்ப—நலமலி வாழ்வினா னண்ணு
நரேந்திரன்—பரிதிகள் பலவெண் பாற்கட லுதித்தாங்—கரிமுரல்
செந்தா மரையலர்ந் தொளிரும்—பூம்புனற் பொய்கையும் புது
மணம் பரப்புந்—தேம்பழச் சோலையுஞ் செறிந்துசூழ்ந் திலங்கிப்—
புகழ்தரு மிராம நாதபூம் புரத்திற்—றிகழ்தரு சேது பதியெனு
மிராணி—பாச்சீர் பெற்றுயர் பருவத வர்த்தனி—நாச்சியார்க்
கினிய நற்சகோ தரியு—மவஞா னந்தனை யகற்றிநல் லறிவு
கொள்—சிவஞா னப்பெயர்த் தேவரும் புரிந்த—நற்றவப் பேற்று
னரலைசூழ் ஞாலத்—துற்றொளிர் கின்ற வுயர்குணத் துரவோ—
னோரிடந் தனக்கோ வரியமா னேசரிப்—பாரிடந் தனக்கெலாம்

பகருமா னேசரென்—றெம்மனோர் புகலவெண் செல்வமு மெய்
இச்—செம்மையி னோங்கிச் சிறந்திடுஞ் சீமான்—பொன்னுசா மிப்
பெயர்ப் புரவலன் மகிழ்ந்தீ—நன்னய மோடு நவின்றன னாக—
மூலமு முரையு முறைமுறை நோக்கி—யேலவே திருத்தி யெழுதா
வெழுத்திற்—பதிப்பித் தளித்தனன் பரசிவ தலங்களுட்—கதிர்ப்
பொடு மிரண்டுதன் கண்ணுறக் காட்டு—மீழநாட் டைச்சேர்ந்
திலங்குபல் வளங்களுந்—தாழ்விலா துற்றுத் தயங்கும்யாழ்ப்
பாண—நகர்தனி னல்லூர் நாமமார் புரத்திற்—பகர்தரு சைவ
பரம்பரைக் குலத்திற்—றோன்றிய கந்தவே டொல்லையிற் செய்த—
வேன்றநற் றவத்தா லெழில்பெற வுதித்தோ—னியற்றமிழ்ப் பகு
தியி னியல்பெலாந் தெள்ளி—நயத்தக வுணர்ந்த நற்றமிழ்க்
குரிசி—றிருக்குற ளுரைமுதற் சிறந்தநூ லுரையெலாஞ்—சுருக்க
மின் றறிந்த துகளில்பே ரறிவினோன்—கதிதரு சைவா கமங்க
ளிற் கழறும்—பதிமுதன் முப்பொருட் பகுதியி னியல்பெலாஞ்—
சங்கையொன் றின்றித் தவவிசே டத்தா—லங்கையி னெல்லிபோ
லளவிட் டறிந்தோ—னரனடி யருச்சனை யன்றிமற் றென்றுந்—
திரமுறு பவநோய் தீர்த்திடா தெனவச்—சம்புவின் பூசனை தனி
னைநா டோறு—நம்பிமெய் யன்பா னடாத்திடு நல்லோ—னயிட்
டிகப் பிரம சாரிநன் னிலையிற்—றியக்கற நிற்குஞ் சீர்மைபெற்
றுடையோன்—சங்கர னடியவர் தமைச்சரண் பணிந்தே—யிங்கி
யான் செய்பணி யென்னென வியற்றுவோன்—சிவபிரான் மகி
மையைச் சீவர்க டமக்குப்—பவமறப் போதனை பண்ணுபாக் கியத்
தோன்—கிரியையான் ஞானங் கிடைக்கும தன்றி—யுரியமெய்ம்
முத்திக் குபாயமன் றென்றுஞ்—சார்கே வலமுதற் சாற்றுமூ விட
த்து—மாருயிர் சிவனுக் கடிமையே யென்றும்—புகல்சிவா கம
வாக் கியப்பொரு டன்னை—யிகலறத் தேர்வுற் றிதயத் திருத்தி
னோன்—கல்வியிற் காலங் கழித்தலீங் கிவன்கணென்—றல்வில
குளத்தவ ரறைதர வமைந்தே—யாறு முகனென வவனி—கூறு
மியற்பெயர் கொண்டநா வலனே.



சிறப்புப்பாயிரம்.

மகாவித்துவானாகிய

ம-ா-ா-ஸ்ரீ திரிசிரபுரம்

# மீனாட்சிசுந்தரப்பிள்ளை

இயற்றியது.

---

நேரிசையாசிரியப்பா.

திருவளர் மார்பத் தருவளர் கோவுந்—தாமரை வாழ்க்கைக் காமரு தேவு—நண்ணுதற் கரிய கண்ணுதற் பெருமா—னுமை யொரு பாகத் தமைதர நாளும்—பெற்றும் விகாரஞ் சற்று மிலா தவ—னொருவா வைந்தொழின் மருவா நின்றுந்—தொழிலொன் றில்லா வெழிலொன் றொருவன்—மண்ணுரு வாதி யெண்ணுரு வெட்டு—மேவுரு வத்து வாவுரு வாறுஞ்—சாலவைந் தொழிற்கு மூல மாகிய—வொன்பா னுருவு மன்பான் மருவியு—முருவொன் றில்லான் கருவொன் றில்லான்—றுணிபு மலரைக் கானிடு மல ரன்—றுன்னு னுருவுற முன்னு முதல்வன்—முத்தி விரும்புநர் பத்திமை யென்னும்—பொருணயந் தமருங் கருணையெம் பெரு மான்—செந்தளி ரீன்று பைந்துணர் கான்று—கனிபல பழுத்து முனிவறப் பிலிற்று—நறவுவட் டெடுத்துச் சுறவுழக் ககழி—யோருவப் பெய்த கீருவர்ப் பகற்றி—யுயிர்மல மகற்றுஞ் செயிர கல் குரவர்—தன்மை தெரிக்கு நன்மையிற் பொலியுந்—தேமாம் பொழிலும் வாமாஞ் செறுவும்—பொற்ப வுடுத்த கற்பமெண் ணிலதெரி—குருந்துறை தெய்வப் பெருந்துறை மேவித்—திருவுரு வென்னுங் குருவுருக் காட்டி—யருடர நன்று மருடப நின்று—துரியங் கடந்து பிரியம் படர்ந்த—பேரா னந்த மாரா நின்ற—வேதவூ ரனவு நாதவூ ரனவும்—போத வூரனவு மோதவூர் கீர்த்தி—வாதவூ ரடிகள் வாய்மலர்ந் தருளிய—திருக்கோவை யாரெனுந் தெய்வமா மறையைப்—பழமறை தெரிந்த பாரத்து வாச—நச்சினார்க் கினியர் நவின்றபே ருரையொடு—கரலிகி தங்க ளிற் காண்பிழை மாற்றிச்—சிரலிகி தம்போற் றிருந்துற வாற்றி—யச்சிற் பதிப்பித் தமைதரத் தருகென்—றிச்சகம் புகழு மிராசகு ளாமணி—நலந்தரு மிராம நாத புரத்தில்—வலந்தரு செங்கோன் மாண்பி னடாத்தி—யரசவீற் றிருக்கு மண்ணனற் குணமே—விர சுமா மேரு விரைநறுங் கமல—மாதுபதி யென்று வானவர் துணி புற்—றோதுபதி பற்ப வுயிர்க்கு நல்லருட்கடல்—கோதுபதி யாத

யோர்ந்தறிந்து—எமர் மால்பு இயற்றும் வேய் விளையாடும் வெற
பா - எம்முடையதமர் கண்ணேணியைச் செய்யும் வேய்விளையாடும்
வெற்பையுடையாய்—உற்று நோக்கி - குறித்துநோக்கி—அன்னை
எம் மெல்லியலைத் திருமலைக்குப் போய் விளையாடல் என்றாள் -
அன்னை எம்முடையமெல்லியலைத் திருமலைக்கட்புறம்போய் விளை
யாடவேண்டாவென்று கூறினாள்; இனி இற்செறிக்கும்போலும்
எ - று.

அம்பலத்தான் - அம்பலத்தின்கண்ணான்—புரத்தில் தீ விளை
யாட நின்று ஏ விளையாடி - முப்புரத்தின்கட்டீவிளையாட நின்று
ஏத்தொழிலால் விளையாடுவான்—திருமலை - அவனது திருமலை
யெனக்கூட்டுக.

எமர்மால்பியற்றும் வெற்பாவென்றதனால், தாமந்நிலத்து மக்
களாதலும் அவன்றலைவனாதலுங் கூறினாளாம். போய்விளையாடு
கென்றாளென்பது பாடமாயின், உய்றுநோக்கி இன்று போய்விளை
யாடுக வென்றாள்; அக்குறிப்பால் நாளையிற்செறிப்பாள்
ளவுரைக்க. ஈவிளையாட்டாற் றேன்விளைவையோர்ந்து எய
யற்றுமாறுபோல, கதிர்ப்பு வேறுபாட்டால் இவளுள்ளத்துக்
ந்த காமமுணர்ந்து மேற்செய்வனசெய்யக் கருதாநின்றாளென உள்
ளுறைகாண்க. இற்செறிவித்ததென்பது பாடமாயின், இன்னார்
கூற்றென்னாது துறைகூறிற்றாகவுரைக்க. (ககூ)

## தமர்நினைவுரைத்துவரைவுகடாதல்.

தமர்நினைவுரைத்து வரைவுகடாதலென்பது இச்செறிவறிவி
த்து வரைவுகடாயதோழி, அவன்முலை தாங்கமாட்டா திடைவருந்
துவதனைக்கண்டு எமரிற்செறிப்பாராக நினையாநின்றார்; அயலவர்
மகட்பேச நினையாநின்றாரெனத் தமர்நினைவுரைத்து வரைவு
வாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சுற்றுஞ்சடைக்கற்றைச்சிற்றம்பலவற்றொழாதவர்போல்சூ
கற்றுமறியலரிற்சிலம்பாவிடைநைவதுகண்
டெற்றுந்திரையின்னமிர்தையினித்தம்மிற்செறிப்பார்
மற்றுஞ்சிலபலசீறூர்பகர்பெருவார்த்தைகளே.

விற்செறிநுதலினை யிற்செறிவிப்பரென்
றொளிவேலவற்கு வெளியேயுரைத்தது.

இ - ள. சிலம்பா - சிலம்... —சுற்று...
றம்பலவற்

லவனை முற்பிறவியிற்றொழாமையான்—கற்றும் தொல் சீர் அறிய லரின் - நூல்களைக் கற்றுவைத்தும் அவனது பழைய புகழையறியா தாரைப்போல—இடை நைவது கண்டு - முலைதாங்ககில்லா திடை வருந்துவதனைக்கண்டு—எற்றும் திரையின் அமிர்தை இனித் தமர் இற் செறிப்பார் - எற்றுந்திரையையுடைய கடலிற்பிறந்த இனிய வமிர்தத்தையொப்பாளை இப்பொழுது தமர் இற்செறிப்பார்—மற் றும் சீறூர் பகர் பெருவார்த்தைகள் சில பல - அதுவுமன்றி இச் சிறூராற் பகரப்படும் பெரியவார்த்தைகள் சிலபலவுள. எ - று.

எற்றுந்திரையென்பது சினையாகிய தன்பொருட்கேற்ற வடை டடுத்துநின்றதோராகுபெயர். இற்செறிப்பாரென்பது ஆரீற்றுமுற் றுச்சொல். வினைப்பெயரென்பாருஞ் செறிப்பரென்று பாடமோ துவாருமுளர். சிலபலவென்பது பத்தெட்டுளவென்பதுபோலத் துணிவின்மைக்கண்வந்தது. சீறூர்ப்பகரென்பதூஉம் பாடம். இவ ற்றிற்கு மெய்ப்பாடும் பயனும் அவை. இவற்றுண் மேலைப்பாட்டிற் ...னை செறிப்பறிவுறுத்தாள். (கடுச)

## எதிர்கோள்கூறிவரைவுகடாதல்.

எதிர்கோள்கூறி வரைவுகடாதலென்பது தமர்நினைவுரைத்து வரைவுகடாயதோழி, நீவரைவொடுவரின், அன்னையும் ஐயன்மா ரும் அயலவரும் நின்வரவெதிர்கொள்ளாநிற்பர்; இனிப்பல நினை யாது பலருமறியவரைவொடு வருவாயாகவென எதிர்கோள்கூறி வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வழியுமதுவன்னையெனினமகிழும்வந்தெந்தையுநின்
மொழியின்வழிநிற்குஞ்சுற்றமுன்னேவயமம்பலத்துக்
...யும்பரேத்துமெங்கூத்தன்குற்றாலமுற்றும்மறியக்
...மவேபணைத்தோள்பலவென்னேகிளக்கின்றதே.

...இழைத்தோழி யேந்தலைமுன்னிக்
...று கொடிகென்றது.

இ... து - இவளை நீயெய்துதற்கு முறைமையும
கடியாகி... என்னின் மகிழும் - இவளை லத்தி
இ - ள். வழியும ...டுவாளாகலின் நீ வரைவுவேண்
...ரைவுவேண்டுதலே—அன்னை மகிழும்—வந்து எந்தையும்
...குத் தக்கானோர் கணவனைவேண்டி மறுத்தகன்று நின்ற

குலசிந் தாமணி—சேதுபதி ராணி திரைக்கடல் வரைப்பிற்—றன்
னுமா ருயிர்க்கெலாந் தோன்றுதா யேயாய்—மன்னுசீர்ப் பருப்
பத வர்த்தனி நாச்சியார்—தமக்கினி தாய சகோதரி யாரு—நமக்
கினி தாஞ்சிவ ஞானத் தேவரு—மியற்றருந் தவத்தா லிருநில மகி
ழவு—மயற்றலை புகுத்தா வண்டமிழ் தழையவுந்—திகழ்தரு பற்பல
சிவாலயம் விளங்கவும்—புகழ்தரு தருமம் பொலிந்து முழங்கவு—
மறக்கடை யாவு மஞ்சியோட் டொடுக்கவும்—பிறக்கடை ஞானப்
பெருவிளை வோங்கவுங்—கலிதரு நரகக் கடுங்கத வடைக்கவும்—
பொலிதரு மின்பப் புதவந் திறக்கவு—முணருந் திறத்தர்க் கொ
ளியா மொருவன்—புணருந் திருவருள் போலவ தரித்தோ—னற்
புறத் தமிழோ டளாய்நறுஞ் சாந்தம்—பொற்புறக் கமழும் பொதி
யமால் வரையா—னணிபல கொழிக்கு மருந்தமிழ்ச் சுவைதெரீஇ—
மணிபல கொழிக்கும் வையைமா நதியான்—கன்னலுங் கமுகுங்
கதலியும் பலவுஞ்—செந்நெலும் பொலியுஞ் செம்பிநன் னாட்
டான்—றன்னெயி லெனமேற் றலங்கொண் டுவக்கப்—பொன்
னெயி லோங்கும் புதுவைமா நகரா—னினியெனல் பொய்மை
யிதுவே மால்கொ—டணியுரு வென்று சாற்றுவாம் பரியா—னூற்
றுள வொருகோட் டொன்றனை வணங்கி—மற்றுள வெவையும்
வணக்குமால் களிற்றான்—கண்டுநிகர் மொழியார் கண்ணொடு
காமர்—வண்டுபடிந் துழக்கும் வாகைமா லிகையான்—றண்டார்
புனைந்து தடஞ்சிலை குனிக்கு—மண்டார் நடுங்க வதிர்தரு முர
சான்—மயலுக் கொடியா வருந்தவே ளுயர்த்த—கயலுக் கொடி
யாக் காவிக் கொடியான்—றுய்ப்புகு மான்றேர்த் தரணியொண்
செங்கதிர்—போய்ப்புகு மிடமெலாம் போய்ப்புகு மாணையான்—
மேவிக் குடையான் விறல்கொடு தொடுக்குங்—காவிக் குடை
யான் காவிக் குடையான்—சேரார் மணிமுடி தேய்க்குந் தாளான்—
ர்ரா ரிருநிதி காம தேனு—கற்பகத் தையும்புறங் காணுங் கை
யான்—பொற்பக மலர்ந்து பொலிதிரு மார்பா—ஞென்றல மேரு
வென் றுரைசெய்திண் டோளான்—மன்றமறு வில்லா மதியெனு
முகத்தா—னருண்மடை திறந்தா லனையசெங் கண்ணான்—பொரு
ணயந் தெரிந்து புகக்கொளுஞ் செவியான்—கனவினுங் கடுஞ்
சொற் கிரைதவில் வாயா—னனைவினுங் கனவினு நள்ளார் நடு
ங்க—வியைதரும் படிசிறி தெழுங்குறு மூரலான்—றலைகுடி
யிருந்து தழைக்கு மனத்தான்—வெள்ளிய நீறு விளங்குதிரு நுத
லான்—வள்ளிய வதற்கலால் வணங்கா முடியான்—பயன்மர முள்
ளூர்ப் பழுத்தற் றானன்—னயனுடை யான்க ணண்ணிய செல்வ
மென்—றான்றோ ருரைத்த வதற்கொரு சான்றாய்த்—தோன்று

நின்ற சுந்தரக் குரிசி—னாளன்று போகிப் புள்ளிடை தட்பப்—
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்—வறிது பெயர்குந
ரல்லர்நின் மாட்டென்—றறிதர முன்னா ளான்றோ ருரைத்த—
திவன்செய னோக்கி யெதிரது போற்றி—யன்றே யென்றுபே
ரறிஞ ருரைப்ப—நன்றே நானா நடாத்திவரு வள்ள—லிலனெ
ன்னு மெவ்வ மெனுந்திருக் குறட்குப்—பலர்பல விதமாப் பகர்ந்
தபே ருரையு—மிரப்பவ னிரக்கப் படுவோ னாகச்—சுரக்குங்
கொடையே சொல்லின் முதற்றா—லக்கொடை யிவன்பா லமைந்
ததியல் பேயென்—றெக்கொடை வல்லரு மியம்பப் பொலிவோ—
னருந்தமி ழாகர வாரிய முழுதும்—பெருந்தமி ழாமொழி பெயர்ப்
பது குறித்தோ—னிகழே யாரெடுத் தியம்புவ வெலாந்தன்—
புகழே யாக்கிய புண்ணிய மூர்த்தி—யரியமா நேச ரதிகா ரத்
தைத்—தெரிய நடாத்தித் திகழ்புரு டோத்தமன்—மன்னு சாமி
நன் மாதவச் சாமி—பொன்னு சாமிவேள் புகன்றன னாக—வண்ட
மிழ்ச் செய்யுணா னூறும்வா யுரையுட—னெண்பது மாதன னொரு
தலை கொண்டா—னெழுத்தே யாமென் றியாவரு மகிழ—வழு
த்தே யச்சில் வயக்கி முடித்தனன்—மன்னுகோ னாசல மாகே
திச்சர—மென்னு மிரண்டு மிரண்டு கண்ணாகப்—பெற்றவீ ழத்
திற் பிறங்குயாழ்ப் பாணத்—துற்றபல் வளனுக் குறையிட
னாகிச்—சொல்லூர் கழனி சூழ்தரக் கொண்டு—செல்லூர் பொழி
லாற் சேணுல களந்து—வில்லூர் மாட மிகக்கொடு பொலியு—
நல்லூர் வாழ்க்கை நயந்தரு ளறிஞன்—கந்தவே டவத்திற் கரு
தரன் பான்முன்—வந்தவே ளென்ன வந்தவ தரித்தோ—னீற்
றொடு கண்மணி நிறையப் பூண்பார்ப்—போற்றொடு பொலியும்
பண்ணிய புருட—னவநெறி யாய வனைத்துங் களைந்து—சிவநெறி
வளர்க்குந் திப்பிய குணத்த—னெழுத்துமுத லாக வியம்பிலக்
கணமும்—வழுத்திலக் கியமும் வரம்புகண் டெழுந்தோன்—சமு
யம் விசேடந் தகுநிரு வாணமென்—றமையுமுத் திக்கையு மடை
வுறப் பெற்றோன்—சமங்கல விசேடச் சுருதியா மூலா—கமங்க
ளின் முப்பொருள் கருதுபே ரருளான்—யுத்தியி னமைத்துணர்ந்
தோங்கனு பூதி—சித்தியுற் றமைந்த சிவசிந் தாமணி—கற்றுணர்
புலவருட் களிக்கு—முற்றுண ரறுமுகநா வலனே.



மகாவித்துவானாகிய ம-ா-ா-ஸ்ரீ

மீனாட்சிசுந்தரப்பிள்ளைமாணாக்கரும்

சிதம்பரச்செட்டியார் குமாரருமாகிய

# தியாகராஜச்செட்டியார்

இயற்றியது.

## நேரிசையாசிரியப்பா.

பூமலி சந்தனப் பொழிலிடை யுலாவுந்—தேமலி கருங்குழற்
சிறுகுற மடவார்—மீமிசைத் தொடுத்த விழைநற விறாலை—யிருள்
குடித்தெழுந்து மருவுதங் காதலர்—வரவு தகைந்த மாமதி யென
நினைந்—தங்கைக் கவணுறு மவிர்கதிர் மணியாற்—றுக்குறச்
சிதையா மீக்கிளர் புலமையோர்—நனிவுருத் துநர்க்கு நன்கு புரிந்
தாங்—கிழுமென வொழுக்குஞ் செழுமது வொழுக்கந்—தம்முள
மகலாத் தலைவர்தோ டழுவு—மாவலொடு புரியுங் காவலை யோவ—
விளைவுறீஇ யியற்றிய வுளைவுறு பகையெனாப்—பனிக்கறை வருத்த
வொளிக்கறைக் குழிப்பெய்—தடகரி மருப்பி னதிர்வுற வவை
த்த—பைந்தினை யிடியிற் பாய்தரத் திரட்டிக்—கடவுள ரமுதமுங்
கைப்பவார்ந் துவக்கும்—பொதியப் பொருப்பிற் பொலிந்தினி
திருக்குந்—தெய்வப் பெருமைச் சைவமா முனிவர—னன்புளம்
பெருக வின்புட னளித்த—செந்தமிழ்க் கன்னியைச் செவிலி
போல் வளர்க்கு—மங்கலப் பாண்டி வளநா டதனுள்—விண்ணர
சளிக்கும் பண்ணவர் பெருமான்—றன்பகை மறையிடந் தந்த
பகை நினைந்தென—வளறெழ வளக்க ரார்புனல் பருகி—யுவர்
கழித் தினிய வுதக மாக்கிப்—பெருநிலஞ் செழிக்கப் பிழையறப்
பெய்கென்—றுணையா றொழுகு மாணம ரெழிலியை—யேவுபே
ருதவியை யினிதுளத் துன்னு—வெதிர்செயுங் கைம்மா றெய்ப்ப
வான்புகுந்—தன்னவ னமர்தரு மணிவசந் தத்தின்—முன்னர்
மேவி முககனி மலர்ந்து—தலைவனைந் தின்கனி தளிர்க்கை தாங்
குபு—நின்றுற விளங்குந் துன்றலர் பொதுளிய—தண்பொழி லுடு
த்த வண்புனன் மருத—வளம்பொலிந் தொளிர்திரு வாத வூரிற்—
காமாரி யன்றிக் கனவினுங் கருதா—வாமாத் தியரெனு மரும
றைக் குலஞ்செய்—தொல்லைமா தவப்பயன் றோன்றிய தென்ன—
வேத மாகம மிளிர்தலை யெடுப்பப்—பாதகப் பிடகம் படுகுழி
வீழ—மெய்யுறு சைவம் விளங்கிநனி செழிப்பப்—பொய்யுறு

பௌத்தம் போய்மாய்ந் தொளிப்ப—வுன்னுபே ரன்பா முருக்
கொடு தோன்றிய—மன்னுபே ரருட்டிரு வாதவூ ரடிகள்—கதிர்
மணி மாடங் கருவொளி காலு—மதுரை யாளரி மருத்தன பாண்
டியன்—முதலமைச் சுரிமை யுதவுறப் பெற்று—வதிதரு நாளில்
வாசிகொள் வானச்—செழிய னேவச் சென்றிடு காலைக்—கரும்
பவ சாகரங் கடந்தினி தேறும்—பெருந்துறை யெனுந்திருப்
பெருந்துறை யதனில்—வண்டுண் மதுப்பெய் மலர்க்குருந் தடி
யிற்—றழைதரு சத்துவந் தழீஇக்கொண் டென்னப்—புண்ணிய
நீறு சண்ணித்த மேனியுஞ்—சிரமு முரமுங் கரமுங் காதுங்—
கண்டமும் பொலிதரு கண்டிகை யழகுங்—கொண்டொளி ரடி
யார் குழாங்கள் சூழ—நலிமலந் தெறுசிவ ஞான போதங்—கரம
லர் பொருந்தக் கனிதிரு வுளத்தொடு—பக்குவ நோக்கிப் பதநிழ
லடியார்க்—குதவுறு தன்னெழி லுலகையறி விக்கப்—பொருந்
திய தென்னவீற் றிருந்தருள் பரசிவ—ஞான சற்குரு நாதனை
முன்கண்—டெதிர்சென்று வணங்கி யிருகணீர் வார—நெஞ்ச
நெக் குருகி நிற்பவத் தேசிக—னுடல்பொரு ளாவிமூன் றுதக
மொடு கவரா—வருட்டிரு நோக்கா லாம்பரி சத்தாற்—பொருட்
டிரு வாக்காற் பொலிவுற வருளி—யறிவுரு வாக்க வானந்த வெள்
ளப்—பெருக்கிடை மூழ்கிப் பேருலகு வாழத்—திருவாய் மலர்ந்து
செப்பிய சிற்சபைத்—தேவையே பரவுந் திருச்சிற் றம்பலக்—
கோவையா ரென்னுங் குலவரு ணூலை—நச்சினார்க் கினியராய்
நலம்பல பயக்கு—நச்சினார்க் கினியர் நவையறச் செய்த—செறி
சுவை யுரையொடு தேர்ந்துணர் வோர்க—ளாரண முணர்பய னாகம
முணர்பயன்—சீரண வியபல் செழுங்கலை யுணர்பயன்—யாவு
மெளிதி னினிதுணர்ந் தடையப்—பாவுறு மச்சிற் பதித்துத் தரு
கெனப்—பளிக்கு படுத்த பன்மலர் வாவியைக்—கயவாய்ச் செங்
கட் கவையடிக் கவரி—கன்றுள்ளிப் பொழிந்த துன்றுசுவைத்
தீம்பால்—பாய்ந்து பெருகலிற் பயோததி யென்று—மதனிடை
யாட வவாவிப் புக்குத்—தாமரை நாளந் தனைதர நிற்குங்—கறை
யடிப் புகர்முகக் கவுட்கடாக் களிற்றை—வாசுகி பிணித்த மந்தர
மென்றும்—வெள்ளொளி விரிக்கும் வள்ளிதழ்க் கமலச்—செறி
வினை யமுதத் திரள்வினை *வென்றும்—பொற்றாது பொதிந்த
பொற்புடை மராளந்—தடமுலைச் சிற்றிடைத் தாக்கணங் கென்
றுந்—திரையெறி மணியுஞ் செம்பொனு நிறைந்த—குடக்கூன்
சங்கையுங் கோகன தத்தையும்—பெருநிதி யளிக்கு மிருநிதி
யென்றுந்—தேவருண் மதித்துச் சேர்தரப் பொலிந்து—பம்பு
வளஞ் சுரக்குஞ் செம்பிநன் னாடன்—பீடுற வுயர்ந்த வாடக்

குன்றம்—பலவுருக் கொண்டு நிலவிய தென்னச்—சேயொளி விரி
க்குஞ் செம்பொன் மாடத்—தொளிரர மியத்தின் மிளிர்தர
மேவிக்—கருங்குழற் செவ்வாய் வெண்ணகைப் பைந்தொடிக்—
குனிநுத னெடுங்கட் கொடியிடைக் கோதையர்—நித்திலங் குயி
ற்றிய தத்தொளி யம்மனை—செந்தளிர்க் கரங்கொடு தெய்வநன்
ஞட்டுக்—கடவுள் வேழங் கவளமென் றுன்னித்—துதிக்கை நீட்
டத் துதைந்தினி தாடும்—புனைவளஞ் செறியும் புதுவைமா நக
ரான்—கனியினும் பாலினுங் கண்டினுந் தேனினு—மினியதெள்
ளமுதினு மினிக்குஞ் சுவைத்தமி—ழேடெதி ரேற்ற பாடுறு நதி
யான்—விற்கொடி கயற்கொடி புற்கொடி யிவைகட்—காவிக்
கொடியெனுங் காவிக் கொடியா—னல்லெழி லிராம நாத புர
மெனும்—பதியாள் சேது பதிமகி ழிராணியார்—தருமவா கரமாம்
பருவத வர்த்தனி—நாச்சியா ருடன்வரு நற்சகோ தரியும்—பெறு
பெரு நலனெலாம் பெயரொன்றின் விளக்குஞ்—சிவஞானத்
தேவருஞ் செய்தமா தவத்திற்—புண்ணிய மென்னும் பொலிபயிர்
தழைப்பக்—கண்ணுறு பாவக் காஞ்சிரந் தருவிழச்—செல்வ மெ
ன்னுஞ் செழுங்கிரி வளர—வல்ல லென்னு மார்கலி வறப்ப—
வேதமி லறிஞ ரெண்ணில ராக—வாதுல ரவனியி லரிய ராகச்—
சாந்தங் கருணை சார்தரு மன்பு—வாய்ந்தநற் சீல மாண்புகழ் தேற்
றம்—வாய்மை யடக்க மலிதரு நீதி—யின்னன குணமெலா மெழி
லுறப் பாகக்—கொடையொரு நல்லுருக் கொண்டு வந்தென—
றிரும்புவி வியப்புற் றிசைப்பத் தோன்றியோன்—வளையாழி வாள்
வில் வயங்குகரஞ் சுமந்து—தனிசீர் கொள்வனந் தகைதொடை
தாங்கி—மாயக் கலையொழித் தேய்பொற் கலைதழீஇத்—தாணுவை
யேந்தித் தளர்பசு விடர்கழீஇக்--கான முவந்து கவினுற வாய்ந்து--
வானுறு புலவர் வழுத்தப் பெற்று—மிளிர்தலின் வனச மென்
மலர் வதியும்—பொன்னுச் சாமியே யெனப்புல வோர்சொலப்—
பொன்னுச் சாமிப் பூம்பெயர் புனைந்த—பூபதி யினிது புகன்றன
னுக—நன்றுநன் றென்று நனியுள மகிழ்ந்தே—யுயர்பிர ணவப்
பொரு ளொருதா னென்றே—நன்றறி வுறுத்தக் கொன்றைமலர்
முடித்த—புராதனப் பெருமான் பொலிந்தினி தமரு—மருக்
கொள்பூஞ் சோலைத் திருக்கோ ணசலங்—கருக்கோ தகற்றுந்
திருக்கே தீச்சர—மென்னுமித் தலங்களைத் தன்னகத் தடக்கிய—
தென்னீழ நாட்டின் மன்னுயாழ்ப் பாணத்துப்—பல்லூர் புகழு
நல்லூர் வாணன்—சந்தத முஞ்சிவ சிந்தனை யகலாக்—கந்தவே
டவத்தினில் வந்தவ தரித்தோன்—றொல்காப் பியமுத னல்லிலக்
கணங்களு—மொல்காப் பயன்றரும் பல்காப் பியங்களுந்—தவ

*நெறி காட்டுஞ் சிவபுரா ணங்களும்—பதிபசு பாசப் பகுப்பினி துணர்த்துஞ்—செய்தவர்க் கேயுறுஞ் சைவசாத் திரங்களு—மையந் திரிபற வறிந்து தெளிந்து—பெயரா வறிவிற் பெரியோ னாகி—வீறுகொண் டுயர்ந்த வாறுமுக நாவலன்—கரலிகி தங்க ளாற் காணுறு வழுக்களைந்—தரனடி யவர்க்கின் பரும்பப்—பரவுறு மச்சிற் பதிப்பித் தனனே.*



*மகாவித்துவானாகிய ம-ள-ள-ஸ்ரீ*

## மீனாட்சிசுந்தரப்பிள்ளைமாணாக்கரும்

### வீரச்செட்டியார் குமாரருமாகிய

### சோடசாவதானம்

# சுப்பராயச்செட்டியார்

## இயற்றியது.



### நேரிசையாசிரியப்பா.

*மணிதிகழ் பஃறலை வாளரா வனந்த—னணிதிகழ் செஞ்சுட் டதன்மிசைக் கிடக்குங்—கடல்விளிம் புடுத்த நெடுநிலப் பரப் பின்—மீமிசைப் போர்த்த விரியிருட் குப்பை—பாம மார்கடற் பனிதிரை முகட்டெழீஇக்—கதிர்வா னோச்சுங் கனலொளிப் பரி திக்—கதிர்வகத் தடைகுற் றடைக்கலம் புக்கெனத்—துணங்கற னிவந்த மணங்கமழ் பொதும்பர்—புடைதவழ் பாண்டிப் பொரு வினன் னாட்டிற்—கடையுகத் தெழுந்த கார்க்குல மென்ன—மகத் தெழு புகைக்குவால் வான்முகடு துவன்றி—யிகப்பருஞ் சீற்றத் தெறுழ்வலி பொருத்தல்—கனல்கொப் புளிக்குறுங் கண்கம் புளிப் பப்—பனலுறுங் திசைதொறும் படர்ந்து போர்ப்பப்—புரிநூல் கிடந்து புரளு மார்பினர்—இரியினெய் வழாஅது சிருக்குவழி வாக்குஞ்—சீர்சால் வாதவூர் செய்தவப் பேற்றுற்—பேர்சா னுன் மறைப் பிணக்கற வந்த—மாதவர்க் குழாம்புகழ் வாதவூ ரடிக—ளிருவகைப் பந்தத் திரையினு லெற்றுண்—டடலரும் போதத் தடஞ்சுழி வாய்ப்பட்—டொடிவில்லெம் பிறவிக் கடலிற் றுளைந் துளோ—ரொன்றிரண் டிகந்த பொன்றலின் முத்தி—வியன்கரை காணுபு நயன்றரு மின்பிற்—றெற்றெனத் திளைத்துத் தேக்கெறிந் துவப்பக்—குற்றமின் மதலையைக் கொடுத்தளித் தென்னப்—*

பொருவா சகவிருட் புணர்ப்பினை யிரிக்குந்—திருவா சகமருள்
செழுந்தவ மாமணி—செய்வதுந் தவிர்வதும் பெறுவது முறுவது—
muய்வது மாய வொருநான் கிவற்று—ளுறுவதே பேரின் புறுதலா
மென்ன—மாயிரு ஞால மேயமன் பதைக—ளகத்தடைத் துய்
தரப் பகுத்துவந் தருளிய—திருச்சிற் றம்பலத் திருத்தகு கோ
வையா—ரரும்பொரு ளொருங்கும் பெரும்புவி மீது—கைத்தலத்
தமர்தரு கழுமணி கடுத்து—வித்தக ருளத்தொளி விடுத்துக் கிடப்
பத்—தள்ளரும் புலமைத் தலைமைசால் சிறப்பி—னச்சினார்க் கர
ணிகர் நச்சினார்க் கினிய—ரிலக்கண நெறியின் புலக்கனத் ததுவெ
னத்—திருவுளம் பற்றிய பொருவிலின் னுரையினை—யறுகாற்
புள்ளின மறுகாத் துதைந்து—மடுத்துக் கனைத்துக் குமட்டியெதி
ரெடுப்பப்—புரிமுறுக் கவிழ்ந்து நறுமது வாக்கு—மம்போ ருக
வயல்வெம்போ ருகந்த—வனங்கவே டனைது மனங்கவ லுறுத்
தும்—பாசறை நிகர்ப்பப் பாசடைக் கொடிக்டாய்—விழைதரு
மின்சுவைக் கழைதலை வணக்கும்—பம்பிய வளஞ்சேர் செம்பிநன்
னாடன்—கரையொடு பொருதுந் திரையொலி சமழ்ப்ப—வதுவை
யின் முழக்கார் புதுவைநக ராளி—புங்கவர் குடைவான் கங்கை
யிற் றிடர்படத்—தேந்துகள் கொட்டும் பூந்துணர் பொதுளிய—
சேகுறு வான்சினைச் செஞ்சாந்து செறிந்த—போகுயர் குடுமிப்
பொதியப் பொருப்பன்—சுரிமுகச் சங்கினஞ் சூலுளைந் துயிர்த்த—
விரிநிலவெறிக்கும் வெண்மணிக் குவையினை—யிருகையுஞ் சிந்தி
யெக்க ராக்கும்—பெருநதி வையைப் பீடுகெழு துறைவ—னன்
றின ருளத்துத் துன்றுமச் சுறுத்த—மேவிக் கதிர்க்குங் காவிக்
கொடியினோன்—கலியுருப் பகற்றிக் கருதுபல் லுயிர்கட்—கோ
வற நிழற்றுங் காவிக் கவிகையன்—றடமருப் பிருங்கவுட் கடவுள்
யானை—விழையுமின் பிடியெனப் புழைக்கை நீட்ட—முழுமணி
யினங்கண் முகிழ்க்குறும் பித்திகை—கெழுமிய மாடமீக் கிளர்
தரு மரமியத்—திந்துநொந் துயிர்த்த டைந்தர ளம்போன்—மறு
வில்வாண் முகத்திற் குறுவெயர் வரும்பச்—சில்லரிச் சிலம்பொலி
யொல்லெண வொலிப்பச்—சிறுகிடை மறுகச் செறிகுழன் மடவி
யர்—நித்திலங் குயின்ற பொற்கழங் குந்தும்—பராவிய சீர்சா
விராம நாத—புரந்திகழ் வுறவருள் சுரந்து புரக்குஞ்—சேது பதி
யயிற் சேது பதித—னில்லறக் கிழமைபூண் டல்லலை மழுக்கு—
மருந்ததிக் கற்பிற் பெருந்துதி யிராணி—நங்கையொடு வந்த வங்
கனை தம்பாற்—பவஞா னந்தெறு பான்மையிற் படிந்த--சிவ ஞான
தேவர் செய்தவச் சிறப்பான்—வலம்புரி பயந்த நலம்புரிமுத்தின்—
வந்தநன் புலமைச் செந்தமிழ்க் குரிசி—லைவகைப் பகையு மெய்

வகை யுயிர்கட்--கணுகா வண்ண நணுகா வளிக்கும்--புரவு பூண்ட
வுரவதி காரன்—றெம்முனை யடுபோர்ச் சிற்றத் துப்பின்—வெம்
முனை யவுணர் வெரின்கொடுத் திரியத்—திரிமருப் பிரலை செரு
முகத் துகைக்குங்—கொற்றவைக் கரங்காங் கொற்றப் புயத்தி
னன்—கோத்திரை மிசைவேர் வீழ்த்தெழுந் தகன்ற—திசைதொ
றும் படர்ந்து செல்லிட மின்றிப்—புகைநிறத் தங்கட் புட்கரம்
போர்த்துக்—கண்ணகன் ஞாலத் தண்ணிய கலியிரு—ளுண்ணென
வொளிப்ப வெண்ணில வெறிக்கும்—புகழ்ப்படாம் போர்த்த
தகைப்பெருஞ் செம்ம—றன்பா லேற்குநர் தம்பா லேற்ப—வரை
யாது கொடுக்கும் வள்ளன்மை கற்றோ—னுரைசால் கலைபயி லுண
ர்ச்சியின் மிக்கோன்—றன்னூறு பல்லறத் துறையிற் றிறம்பாப்—
பொன்னுச் சாமிப் புனைகழ னரேந்திரன்—பெருகிய லச்சிற் றரு
கென வுரைப்பத்—தோன்றிய பலரும் வேண்டிய வாறே—வரை
தலின் வலவரும் வல்லா ராகி—நிறைதளர்ந் தயிர்த்து நெட்டுயிர்ப்
பெறிய—மிக்குங் குறைந்து முறழ்ந்தும் பிறழ்ந்துந்—தொக்கபல்
பிரதியின் றுரிசொருங் ககற்றி—யெளியரு மினிதுணர்ந் துளநனி
வியப்பக்—கனிவகத் தரும்பி நனிபெறப் பதித்தனன்—முழு
மணி குயின்றபொன் மோலிக ளுரிஞ்சிப்—பழுதறு பொற்றுகட்
புழுதி படுப்ப—நறுமணங் கமழுந் துறுமலர் சொரிந்து—விண்
ணவ ருச்சியி லண்ணிய கரங்கூய்க்—கெழுமிய நிகேதனக் கேதீச்
சுரமுந்—தொழுதகை யடியவர் தொல்பவத் தொடக்கைக்—காணு
வகைசெய் கோணு சலமுந்—தன்னிடை தழுவ மன்னிய சிறப்
பாற்—றுவரும் பழமறை மூவர்சொல் புனைந்த—காழகிற் பொ
ழில்சூ ழீழநன் னாட்டின்—முகிறுழா மிலாங்கலி நகுமிட றுமிழ்
ந்த—முற்றிய முப்புடை நெற்றிளங் கமுகின்—படுகுலை சாய்த்துத்
துடுமென வீழ்தலின்—வானயாற் றகவயின் மீனின மொளிப்
பக்—கானிமிர்த் திளவரால் கடிதுதாய்த் திருமு—நீர்கால் யாத்த
சீர்சால் படப்பை—புறந்தழீஇ யோங்கிச் சிறந்தநல் லூரன்—சூர்
முத றடிந்த கூர்நுதி வேற்கைக்—கந்தவேட் கன்பார் கந்தவேட்
பெயரியோன்—சொல்லியன் றவத்தாற் கல்வியங் குரித்தென—
விடலரும் பல்லுயிர் மடனற வந்தோ—னிலக்கண விலக்கிய தருக்
கவே தாந்தப்—பெருக்கமுற் றுணர்ந்த பீடுறு பெரியோன்—பதி
பசு பாசப் பகுப்பிற் றுமெனப்—பொதிவுறத் தெரித்துப் பொரு
ளின் புறத்துஞ்—சைவசித் தாந்த மெய்வரு பனுவன்—முற்றொ
ருங் குணர்ந்தருள் போத்திய வசத்தாற்—சிவமே பொருளெனத்

தேர்ந்த புந்தியோ—னவநிதி சமழ்ப்ப நல்கருட் கொடையினேன்--
கதுவிய புலமைக் கதிர்ப்பின்—முதுபுக ழாறு முகநா வலனே.



திரிசிரபுரம்

முத்துச்சாமிப்பிள்ளை குமாரர்

# முருகையப்பிள்ளை

இயற்றியது.



ஆசிரியவிருத்தம்.

•மருவளர் மலர்க்கணயன் மாற்கரிய திருமுடியு
மலரடியும் வையை நதியின்
வான்கரைம ணைளிதுணர மலியன்பு வாய்ந்ததிரு
வாதவூ ரடிக ளருள்செய்
திருவளர் திருக்கோவை யார்நச்சி ணர்க்கினியர்
செய்தவுரை சேர்த் தெழுதவுஞ்
சிற்றம்ப லத்தந்தை நினையினங் கரமலர்
சிவக்குமென் றுனு முருகவே
ஒருவளரு மோருரு வெடுத்துள முவந்துதற்
குரியதிரு நாம மேகொண்
டியர்நலூர் தனில்வந்த தெனவாறு முகனென்னு
மொண்பெயர் சுமந்து தெய்வத்
தருவளர் கரத்தினு னருளன்பு முதலாய
சற்குணஞ் சார்ந்த பொன்னுச்
சாமிவேள் கொண்டாட வடியர்கட் கின்பந்
தழைப்ப வச் சிட்டனனரோ.



# சூசிபத்திரம்.



உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்.

# திருக்கோவையார்

என்கின்ற

# திருச்சிற்றம்பலக்கோவையார்

மூலமும் உரையும்.



விநாயகவணக்கம்.

எண்ணிறைந்த தில்லையெழுகோபுரந்திகழக்
கண்ணிறைந்துநின் றருளுங்கற்பகமே—நண்ணியசீர்த்
தேனூறுசெஞ்சொற்றிருக்கோவையென்கின்ற
நானூறுமென்மனத்தேநல்கு.

நூற்சிறப்பு.

ஆரணங்காணென்பரந்தணர்யோகியராகமத்தின்
காரணங்காணென்பர்காமுகர்காமநன்னூலதென்ப
ரேரணங்காணென்பரெண்ணர் * எழுத்தென்பரின்புலவோர்
சீரணங்காயசிற்றம்பலக்கோவையைச்செப்பிடினே.

இவ்விரண்டு செய்யுளும்
பிற்காலத்தான்றோராற் செய்யப்பட்டன.



* எண்ணென்பது தருக்கநூலுக்கும், எழுத்தென்பது இலக்கணநூலுக்கும் பெயர். அது "எண்ணுமெழுத் துங்கண் ணினைவாய்ந்தின் நூற்பயனைக் —கண்ணுக்கான் பார்நற் கதி. காண்டலனுமானங் கதையருத்தா பத்தியிவை—யீண்டிசைத்த வெண்ணெணேயெண். வழூப்பதத்தை வாக்கினுக்கு மாற்றிவரமாக்கு—மெழுத்தெழுவா யைந்து மெழுத்து." என்னும் பரமததிமிரபானுத் திருக்குறள்களானுணர்க. ஏரணமெனினும் எண்ணெனினும் அளவையெனினும் தருக்கமெனினும் நியாயமெனினுமொக்கும். வடநூலாரும் தருக்கம் வியாகரணமென்னும் இரண்டையுமே மக்கட்கிருகண்ணெனக் கூறுமாறு கேட்டுணர்க.

## அதிகாரவரலாறு.

இயற்கைபாங்க ளிடந்தலைமதியுட
னிருவருமுள்வழி யவன்வரவுணர்தன்
முன்னுறவுணர்தல் குறையுறவுணர்த
னன்னிலைநாண நடுங்கநாட்டன்
மடல்குறைநயப்பு வழிச்சேட்படுத்த
விடமிகுபகற்குறி யிரவுக்குறியோ
டொருவழித்தணத்த லுடன்கொண்டேகல்
வரைவுமுடுக்கம் வரைபொருட்பிரிதன்
மணஞ்சிறப்போதல் வார்புவிகாவ
லிணங்கலர்ப்பொருத்தல் வேந்தற்குற்றுழி
பொருள்வயிற்பிரிதல் பரத்தையிற்பிரிதலென்
றருள்வயிற்சிறந்த வகத்திணைமருங்கி
னிருளறுநிகழ்ச்சி யிவையெனமொழிப.

இதன்பொருள். இயற்கைப்புணர்ச்சி,பாங்கற்கூட்டம், இடந்தலைப்பாடு, மதியுடன்படுத்தல், இருவருமுள்வழி யவன்வரவுணர்தல், முன்னுறவுணர்தல், குறையுறவுணர்தல், நாணநாட்டம், நடுங்கநாட்டம், மடல், குறைநயப்பித்தல், சேட்படை, பகற்குறி, இரவுக்குறி, ஒருவழித்தணத்தல், உடன்போக்கு, வரைவுமுடுக்கம், வரைபொருட்பிரிதல், மணஞ்சிறப்புரைத்தல், ஓதற்பிரிதல், காவற்பிரிதல்,பகைதணிவினைப்பிரிதல்,வேந்தற்குற்றுழிப்பிரிதல், பொருள்வயிற்பிரிதல், பரத்தையிற்பிரிதல் எனவிவ்விருபத்தைந்தும் இந்நூற்குக் கிளவித்தொகைத்தெனப்படுமதிகாரங்களாமென்று கூறுவர் அகத்திணையிலக்கணமுணர்ந்தோரென்றவாறு. அவற்றுள்,—

# க. இயற்கைப்புணர்ச்சி.

இயற்கைப்புணர்ச்சியென்பது பொருளதிகாரத்திற் கூறப்பட்ட தலைமகனும், தலைமகளும்,அவ்வாறொருபொழிலிடத்தெதிர்ப்பட்டுத் தெய்வமிடைநிற்பப் பான்மை வழியோடி ஓராவிற்கிரு கோடுதோன்றினாற்போலத் தம்முளொத்தவன்பினராய் அவ்விருவரொத்தார் தம்முட்டாமே கூடுங்கூட்டம். அது நிகழுமாறு—

காட்சியையத் தெளிதனயப்பே
யுட்கோடெய்வர் துணிதல்கைக்கிளையொடு

கலவியுரைத்த லிருவயினொத்தல்
கிளவிவேட்ட னலம்புனைந்துரைத்தல்
பிரிவுணர்த்தல்லொடு பருவரலறித
லருட்குணமுரைத்த லணிமைகூற
லாடிடத்துய்த்த லருமையறிதல்
பாங்கியையறித லெனவீரொன்பா
னீங்காவியற்கை நெறியெனமொழிப.

இ - ள். காட்சி, ஐயம், தெளிதல், நயப்பு, உட்கோள், தெய்வத்தைமகிழ்தல், புணர்ச்சிதுணிதல், கலவியுரைத்தல், இருவயினொத்தல், கிளவிவேட்டல், நலம்புனைந்துரைத்தல், பிரிவுணர்த்தல், பருவரலறிதல், அருட்குணமுரைத்தல், இடமணித்துக்கூறிவற்புறுத்தல், ஆடிடத்துய்த்தல், அருமையறிதல், பாங்கியையறிதல் எனவிவைபதினெட்டும் இயற்கைப்புணர்ச்சியாம். எ - று. அவற்றுள்—

## காட்சி.

காட்சியென்பது தலைமகளைத் தலைமகன்கண்ணுற்று இஃதோர்உருவியப்பென்னென்றல். அதற்குச்செய்யுள்—

திருவளர்தாமரைசீர்வளர்காவிகளீசர்தில்லைக் [தெய்வ
குருவளர்பூங்குமிழ்கோங்குபைங்காந்தள்கொண்டோங்கு
மருவளர்மாலையோர்வல்லியினொல்கியனநடைவாய்ந்
துருவளர்காமன்றன்வென்றிக்கொடிபோன்றொளிர்கின்றதே.

மதிவாணுதல் வளர்வஞ்சியைக்
கதிர்வேலவன் கண்ணுற்றது.

திருவாதவூரடிகள் இத்திருக்கோவையை என்னுதலியெடுத்துக்கொண்டாரோவெனின்,

அறிவோனறிவில தெனவிரண்டாகு
நெறியினிற்றொகைபெற்று நிரல்படவிரிந்த
மண்புனலனல்வளி மாவிசும்பெனாஅ
வெண்மதிசெஞ்சுடர் வேட்போனெனாஅ
வெண்வகைநிலைஇய வெவ்வகைப்பொருளுந்
தோற்றநிலையிறுதி கட்டுவீடென்னு
மாற்றருஞ்செயல்வழி மாறுதசெயப்பட்டு

வெருவாவுள்ளத்து வேட்போன்றன்செய்
யிருவினைப்பயன்றுய்த்து மும்மலனொரீஇப்
பொருவறுசிவகதி பொற்பினிற்பொருந்தவு
மேனையனதத்தங் குணநிலைபுணரவு
நிலைஇயவ்வயி னிமித்தமாகி
யலகுதவிர்த்த பலவகையண்டமு
மின்னுழைவெயிலின் றன்னணுப்புரைந்து
தன்னுளடங்கவுந் தானவற்றுள்ளு
நுண்ணுணர்வாயு நோக்கருநுழையிற்
சிறுமைபெருமைக் கிருவரம்பெய்திப்
போக்கும்வரவும் புணர்வுமின்றி
யாக்கமுங்கேடு மாதியுமந்தமு
நடுவுமிகந்து ஞானத்திரளா
யடியுமுடியு மளவாதுயர்ந்து
நெடியோனான்முக னென்மறைபோற்ற
வெரிசுடர்க்கனலியி னீங்காதுவிரிசுடர்
வெப்பமும்விளக்கமு மொப்பவோர்பொழுதினி
றுப்புறவியற்றுவ தெனவெப்பொருளுங்
காண்டலுமியற்றலு மியல்பாமாண்டுடன்
றன்னினீங்காது தானவின்றுவிளங்கிய
வெண்ணெண்கலையுஞ் சிலம்புஞ்சிலம்பும்
பண்ணமைத்தமொழிப் பார்ப்பதிகாண
வையாறதன்மிசை யெட்டுத்தலையிட்ட
மையில்வான்கலை மெய்யுடன்பொருந்தித்
தில்லைமூதூர்ப் பொதுவினிற்றோன்றி
யெல்லையிலானந்த நடம்புரிகின்ற
பரமகாரணன் றிருவருளதனாற்
றிருவாதவூர்பகிழ் செழுமறைமுனிவர்
ஐம்பொறிகையிகந் தறிவாயறியாச்
செம்புலச்செல்வ ராயினராதலி
னறிவனூற்பொருளு முலகநூல்வழக்குமென
விருபொருளுநுதலி யெடுத்துக்கொண்டனர்
ஆங்கவ் விரண்டனுள்,

ஆகமநூல்வழியி னுதவியஞான
யோகநுண்பொருளினை யுணர்த்துதற்கரி
துலகநூல்வழியி னுதவியபொருளொடு
மலகிறீம்பாற் பரவைக்கண்ணெனும்
புலனெனுங்கொள்கலன் முகந்தவகைசிறி
துலைபாமரபி னுரைக்கற்பாற்று.

அஃதியாதோவெனின், எழுவாய்க்கிடந்தபாட்டின் பொருளுரைக்கவே விளங்கும். அஃதேல், இப்பாட்டென்னுதலிற்றோவெனின், அறம் பொருள் இன்பம் வீடென்னு நான்குபொருளினும், இன்பத்தை நுதலி இத்திருக்கோவையின்கணுரைக்கின்ற களவியற் பொருளினது பொழிப்பிலக்கணத்தையும், அதற்குறுப்பாகிய கைக்கிளைத்திணையின்கண் முதற்கிடந்த காட்சியென்னும் ஒருதலைக்காமத்தினையும், உடனிலைச்சிலேடையாக வுணர்த்துதனுதலிற்று.

திருவளர் தாமரை — போன்றொளிர்கின்றதே.
மதிவாணுதல் — கண்ணுற்றது.

இ - ள். திருவளர் தாமரை - திருவளருந் தாமரைப் பூவினையும் — சீர்வளர் காவிகள் - அழகுவளரு நீலப்பூக்களையும் — ஈசர் தில்லை குருவளர் பூங்குமிழ் - ஈசர் தில்லைவரைப்பின்கணுண்டாகிய பூங்குமிழினது நிறம்வளரும் பூவினையும் — கோங்கு - கோங்கரும்புகளையும் — பைங்காந்தள் கொண்டு - செவ்விக் காந்தட்பூக்களையும் உறுப்பாகக்கொண்டு — ஓங்கு தெய்வ மருவளர் மாலை ஓர் வல்லியின் ஒல்கி - மேம்பட்ட தெய்வமணம்வளரும் மாலை ஒருவல்லிபோல நுடங்கி — அன நடை வாய்ந்து - அன்னத்தி னடைபோல நடைவாய்ந்து — உரு வளர் காமன்தன் வென்றிக்கொடி போன்று ஒளிர்கின்றது - வடிவுவளருங் காமனது வெற்றிக்கொடிபோன்று விளங்காநின்றது. என்னவியப்போ! எ - று.

திருவென்பது கண்டாரால் விரும்பப்படுந் தன்மைநோக்கம். எ - று. திருமகடங்குந் தாமரையெனினுமமையும். பூங்குமிழென்பது முதலாகிய தன்பொருட்கேற்ற அடையடுத்து நின்றதோராகுபெயர். ஈசர்தில்லையென்பதனை எல்லாவற்றோடுங் கூட்டுக. பலநிலங்கட்குமுரிய பூக்களைக்கூறியவதனால், நிலமயக்கங்கூறியவாறாயிற்று. ஆகவே, பலநிலங்களினுஞ்சென்று துய்க்குமின்பமெல்லாந் தில்லையின்வாழ்வார் ஆண்டிருந்தே துய்ப்பரென்பது போதரும். போதர, இம்மையின்பத்திற்குத் தில்லையேகாரணமென்பது கூறியவாறாயிற்று. ஆகவே, ஈசர்தில்லையென்றதனான், மறுமையின்பத்திற்குந்

காரணமாதல் சொல்லாமையேவிளங்கும். செய்யுளாதலாற் செவ்
வெண்ணின்றொகை தொக்குநின்றது. ஓங்கு மாலையெனவிளையும்.
தெய்வமருவளர்மாலையென்றதனால், தாமரை முதலாயினவற்றானிய
ன்ற பிறமாலையோடு இதற்குவேற்றுமை கூறியவாறாம். வாய்ந்தென்
பது நடையின்வினையாகலாற் சினைவினைப்பாற்பட்டு முதல்வினை
யோடு முடிந்தது. உருவளர்காமன்றன் வென்றிக்கொடியென்றது
நுதல்விழிக்குத்தோற்று உருவிழப்பதன்முன் மடியாவாணையனாய்
நின்றுயர்த்தகொடியை. அன நடைவாய்ந்தென்பதற்கு அவ்வவ்
வியல்புவாய்ப்பப் பெற்றெனினுமமையும்.

திருவென்பது கண்டாரால் விரும்பப்படுந் தன்மைநோக்க
மென்றது அழகு. இஃதென்சொல்லியவாறோவெனின், யாவனொ
ருவன் யாதொருபொருளைக்கண்டானோ அக்கண்டவற்கு அப்பொ
ருண்மேற்சென்ற விருப்பத்தோடேகூடியவழகு. அதன்மேலவற்கு
விருப்பஞ்சேறல் அதனிற்சிறந்தவுருவும் நலனும் ஒளியுமெவ்வகை
யானும் பிறிதொன்றற்கில்லாமையால். திருவென்றது அழகுக்கே
பெயராயிற்று. அங்ஙனமாயின் இதுசெய்யுளின்றொழிய வழக்கினும்
வருவதுண்டோவெனின், உண்டு; கோயிலைத் திருக்கோயிலென்
றும், கோயில்வாயிலைத் திருவாயிலென்றும், அலகைத் திருவலகெ
ன்றும், பாதுகையைத் திருவடிநிலையென்றும் வழங்கும் இத்தொ
டக்கத்தனவெல்லாந் திருமகளைநோக்கி யெழுந்தனவல்ல. அது
கண்டவனுடைய விருப்பத்தானேயெழுந்தது. ஆதலானுந் திருவெ
ன்பது அழகென்றேயறிக. அதனாற்றிருவென்பது கண்டாரால்
விரும்பப்படுந் தன்மைநோக்கமே. அல்லதூஉந் தான்கண்டவடி
வின் பெருமையைப் பாராட்டுவானாகலான், ஒருத்தியிருந்த தவி
சை இவளுக்கு முகமாகக்கூறுதல் வழுவாம். ஆதலாற் றான்கண்ட
வடிவினுயர்ச்சியையே கூறினானெனக் கொள்க.

வளரென்பதற்கு வளருமென்றும்மைகொடுத்து உரைவாய்
பாடுகாட்டியதெற்றிற்கு மேலாலோ வளரக்கடவதென்பது கடா.
அதற்குவிடை வளர்ந்ததாமரை வளராநின்ற தாமரையென்று கழி
காலத்தையும் நிகழ்காலத்தையுங்கூறாது, மேல்வருங்காலத்தைக்
கூறவேண்டியது. கழிகாலத்தைக்கூறினாற் கழிந்ததனைக் கூறிற்
றாம். நிகழ்காலத்தைக் கூறினால் முன்னும்பின்னுமின்றி இப்பொ
ழுதுள்ளதனைக் கூறிற்றாம். ஆகலான் வளருமென்று வருங்காலங்
கூறியவாறன்று. மூன்றுகாலத்திற்கும் பொதுவாகிய சொற்றான்
றவேகூறினார். ஆயின் உம்மைச்சொன் மூன்றுகாலத்திற்கும் பொ
துவாகிவந்தவாறென்னை? இது செய்யுட்சொல்லாதலால் வந்தது.
செய்யுளின்றொழிய வழக்கினும் வருவதுண்டோவெனின், உண்டு

அது ஞாயிறுதிங்களியங்கும் யாறொழுகும் மலைநிற்கும் என்றற் றொடக்கத்தனவற்றானறிக. அன்றியும், "முந்நிலைக் காலமுந் தோன்று மியற்கை—யெம்முறைச் சொல்லு நிகழுங் காலத்து—மெய்ந் நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்." * என்றாராகலின், உம்மைச்சொல் வருங்காலத்தையே காட்டாது மூன்றுகாலத்திற்கும் பொதுவாய்நிற்குமென்றேயறிக.

இனித் திருமகடங்குந் தாமரையெனினுமமையுமென்று அனமவுரைத்ததென்னை? இதனையுவமையாக்கக்குறையென்னை யெனின், திருமகளாலே தாமரையுயர்ந்ததாம். தாமரையினது சிறப்புக் கூறிற்றில்லையாம். என்னை எல்லாராலும் விரும்பப்பட்ட அழகு அவட்குண்டாகையாலே திருமகளென்று பெயராயிற்று. அங்ஙனம் பெருமையுடையவளும் இதன் சிறப்புநோக்கியேயிதனிலிருந்தாளல்லது தன்னாலேயிதற்குச் சிறப்புப்பெற வேண்டியிருந்தாளல்லள், ஆகலாற் றாமரைக்கொத்ததும் மிக்கதுமில்லை. அங்ஙனம் பெருமையுடையவளாலும் விரும்பப்பட்டதாகலான் திருவென்பது கண்டாரால் விரும்பப்படுந்தன்மை நோக்கமென்பது பெற்றாம்.

இனித் திருவளர்தாமரை சீர்வளர்காவியென்றனபோல இதனையுங் குருவளர் குமிழென்னாது பூங்குமிழென்ற தென்னிற்கெனின், முன்னும் பின்னும்வருகின்ற எண்ணிற் பூவைநோக்கியன்று, ஈண்டுச் செய்யுளின்பத்தைநோக்கியும் இதற்காகுபெயரை நோக்கியுமெனவறிக. அஃதென்போலவெனின், "தளிபெறு தண்புலத்துத் தலைப்பெயற் கரும்பீன்று—முளிமுதற் பொதுளிய முட்புறப்பிடவமும்." என்பதுபோல. கோங்கென இதனையொழிந்த நான்கிற்குமடைகொடுத்து இதற்கடைகொடாதது பாலைநிலஞ் சொல்லுதனோக்கி. என்னை, பாலைக்குநிலமின்றாகலான். ஆயின் மற்றைய நிலம்போலப் பாலைக்கு நிலமின்மையாற் கூறினாராகின்றார் மகளிர்க்குறுப்பிற் சிறந்தவுறுப்பாகிய முலைக்குவமையாகப் புணர்க்கப்பட்ட கோங்கிற்கு அடைகொடுக்கக் கடவதன்றோவெனின், அடைகொடுப்பிற் பிறவுறுப்புக்களுடன் இதனையுமொப்பித்ததாம். ஆகலான் இதற்கடைகொடாமையே முலைக்கேற்றத்தை விளக்கிநின்றது. அஃது முற்கூறியவகையில் திருக்கோயில் திருவாயில் திருவலகு என்றவற்றிற்கு நாயகராகிய நாயனாரைத் திருநாயனாரென்னாததுபோலவெனக்கொள்க.

இனி உடனிலைச் சிலேடையாவது ஒருபாட்டிரண்டுவகையாற் பொருள்கொண்டுநிற்பது. அவ்விரண்டனுள்ளும் இத்திருக்

* தொல்காப்பியம் சொல்லதிகாரம் வினையியல். சுக.

கோவையின்கணுரைக்கின்ற பொருளாவது காமனது வென்றிக் கொடிபோன்றுவிளங்கி அன்னநடைத்தாய்த் தாமரையே நெய் தலே குமிழே கோங்கே காந்தளே யென்றிப்பூக்களாற் றொடுக்கப் பட்டோங்குந் தெய்வமருவளர்மாலையின் வரலாறு விரித்துரைக் கப்படுகின்றதென்பது. என்றது என்சொல்லியவாறோவெனின், தாமரை மருதநிலத்துப்பூவாதலான் மருதமும், நெய்தல் நெய்தனி லத்துப்பூவாதலான் நெய்தலும், குமிழ் முல்லைநிலத்துப் பூவாத லான் முல்லையும், கோங்கு பாலைநிலத்துப் பூவாதலாற் பாலையும், காந்தள் குறிஞ்சிநிலத்துப்பூவாதலாற் குறிஞ்சியுமென இவ்வைந்து பூவினாலும் ஐந்துதிணையுஞ் சுட்டினார். ஆகலாற் றொடுத்துக் கொண்ட அகத்தமிழின் பெருமைகூறாது தில்லைநகரின் பெருமை கூறினார், நிலமயக்கங்கூறுதலான். அற்றன்று அஃதே கூறினார். என்னை, சொல்லின் முடிவினப்பொருண் முடித்தலென்னுந் தந்தி ரவுத்தியாற் புணர்தலும் புணர்தனிமித்தமுமாகிய குறிஞ்சியே கூறி னார். என்னை, பைங்காந்தளென்று குறிஞ்சிக்குரிய பூவிலே முடித் தலான். அன்றியும் பூவினையே நிலமனைத்தியவாறு இத்திருக்கோ வையின்கண் முன்னாக "குறப்பாவை நின்குழல் வேங்கையம்போ தொடு கோங்கம்விராய்" * என்னும் பாட்டினுட் கண்டுகொள்க. அல்லதூஉஞ் சினையைக்கூற முதலறிகிளவியென்னு மாகுபெயரா னுமாம். ஆயின் குறிஞ்சியே கூறவமையாதோ நிலமயக்கங் கூறவே ண்டியது எற்றிற்கெனின், ஓரிடத்தொரு கலியாணமுண்டானால் எல்லாரிடத்து முண்டாகிய ஆபரணங்களெல்லாம் அவ்விடத்துக் கூடி அக்கலியாணத்தைச் சிறப்பித்தாற்போலப் பலநிலங்களும் இக்குறிஞ்சியையே சிறப்பித்து நின்றன. உருவளர் காமன்றன் வெ ன்றிக்கொடியென்றமையின், அன்பினானே நிகழ்ந்த காமப்பொரு ளைச்சுட்டினார். யாருங்கேட்போரின்றித் தன்னெஞ்சிற்குச் சொன் னமையின், கந்தருவவொழுக்கத்தையேயொத்த களவொழுக்கத் தையே சுட்டினார். ஈசர்தில்லையென்றமையின், வீடுபேற்றின் பயத்த தெனச் சுட்டினார்.

களவொழுக்கமென்னும் பெயர்பெற்று வீடுபேற்றின் பயத்த தாய் அன்பினானிகழ்ந்த காமப்பொருளுதலிக் கந்தருவவொழுக்க த்தோடொத்துக் காமனது வென்றிக்கொடிபோன்று ஐந்திணை யின்கண்ணும் வென்று விளங்காநின்ற கடிமலர்மாலையின் வரலாறு இத்திருக்கோவையின்க ணுரைக்கப்படுகின்றதென்றவாறு. கள வொழுக்கத்தினை ஓர் மாலையாகவுட்கொண்டு உருவகவாய்பாட்டா னுணர்த்தினாரென்பது. இன்பத்தை நுதலியதென்றாராயினும்,

* திருக்கோவை. ௨௦௫.

இன்பந் தலைக்கீடாக அறம் பொருள் இன்பம் வீடென நான்கு பொருளையு நுதலிற்று. அவற்றுள் வீடு நுதலியவாறு மேலே சொன்னோம். ஒழிந்தமூன்றனையும் நுதலியவாறென்னையெனின், ஈண்டுத் தலைமகனுந் தலைமகளுமென்றுநாட்டினர். இவனுக்கு ஆண்குழூவினுள் மிக்காருமொப்பாருமில்லை இழிந்தாரல்லது. இவளுமன்னள். இவர் ஒருவர்கண்ணொருவர் இன்றியமையாத அன்புடையராகலான், இவர்கண்ணே அம்மூன்றுமுளவாம். இவ்வொழுக்கத்தினது சுவைமிகுதிகேட்கவே விழைவுவிடுத்த விழுமியோருள்ளமும் விழைவின்கட்டாழுமாதலின், காமனது வென்றிக்கொடியெனவே வென்றிகொள்ளா நின்றதென்றானென்பது. முதற்கட்கிடந்த இப்பாட்டுக் காட்சியின்மேற்று. இப்பாட்டால் வேட்கை இவன்கணுண்டாயவாறென்னைபெறுமாறெனின், உருவளர் காமனறன் வென்றிக்கொடியென்றமையிற் பெற்றாம்.

உவகைமிகுதியாற் சொன்னானாகலின், இப்பாட்டிற்கு மெய்ப்பாடு உவகை. உவகையாவது சிருங்காரம், அது காமப்பொருண்முதலாய வின்பத்தின்மேற்று. உவகையென்பது காரணக்குறி, உவப்பித்தலினுவகையாயிற்று. உவந்த நெஞ்சினனாய் அவளையோர் தெய்வப்பூமாலையாக வுருவகங்கொண்டு காமனது வென்றிக்கொடிபோலவுவமித்துச் சொன்னானென்பது. என்னை மாலையாமாறு, "பூப்புனை மாலையு மாலைபுனை மாதருந்—தோற்புனை வின்னாண் டொடர்நகக் கட்டியுங்—கோச்சேரன் பெயருங் கோதையென் றாகும்." என்பதனாற் பெண்ணுக்கு மாலையென்று பெயராயிற்று. ஆயின் யாரொருவரையுங் கேசாதிபாதமாதல் பாதாதிகேசமாதல் வருணிக்கவேண்டும். அவற்றுள், இது கேசாதிபாதமாக வருணிக்கப்பட்டது. என்னை, திருவளர் தாமரையென்று முகமுதலாகவெடுத்துக்கொண்டு அன்னநடையென்று பாதத்திலே முடித்தலான். ஆயின், இதில் நடைகண்டானாயின் மேல் ஐயநிலையுணர்த்தல் வழுவாமெனின், இவன் நடைகண்டானல்லன், இம்மாலை நடக்குமாயின் அன்னநடையையொக்குமென்றான். வாய்ந்தென்பது நடையின் வினையாகலிற் சினைவினைப்பாற்பட்டு முதல்வினையோடு முடிந்த தென்றது அன்னத்திற்குச் சினை கால், காலிற்குச் சினை நடை, ஆகையால் முதலென்றது அன்னத்தை.

அங்ஙனமுவமித்துச் சொன்னதனாற்பயன் மகிழ்தல். என்னை, "சொல்லெதிர் பெறுஅன் சொல்லியின் புறுதல், புல்லித்தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே" * என்று அகத்திணையியற் சூத்திரத்தி

* தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணை. ௫0.

ற்சொன்னாராகலினென்பது. அஃதேல் உவகையென்னு மெய்ப் பாட்டானே மகிழ்ச்சிபெறும். இனியிச்சொற்கள் விசேடித்து மகிழ்வித்தவாறென்னையெனின் நெஞ்சின்மிக்கது வாய்சோர்ந்து தான்வேட்டபொருள்வயிற் றன்குறிப்பன்றியேயுஞ் சொன்னிக ழும்] நிகழுந்தோறு மகிழ்ச்சிதோன்றுமென்பது. என்போல வெ னின், ஒருவன் தான்வழிபடுந் தெய்வத்தைப்பரவிய செய்யுட்களை யோதியுணர்ந்திருந்தானெனினும், அவற்றான் அத்தெய்வத்தை வழிபடும்போழ்து கண்ணீர்வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்பக் காண் டும், அல்லதூஉஞ் சுற்றத்தாரது சாக்காடு முற்றவுணர்ந்தானேயெ னினுஞ் செத்தாரிடனாக உரையாடினபொழுது துன்பமீதூரக் கலுழக்காண்டும், இவைபோலவென்பது. ஆகலின் நினைப்பின்வழி யதுரையாயினும் நினைப்பின் உரைப்பயன் விசேடமுடைத்தென் பது. நெஞ்சின்மிக்கது வாய்சோர்ந்து சொன்னிகழுமென்பதனை இக்கோவையின் எண்வகை மெய்ப்பாட்டின் கண்ணுந் தந்துரை த்துக்கொள்க. பயனென்பது நெஞ்சினடுத்ததோர் மெய்ப்பாடு காரணமாகத் தன்வயினிகழ்ந்த சொல்லானெய்துவது. மெய்ப்பா டென்பது புறத்துக்கண்ட தோர்பொருள் காரணமாக நெஞ்சின் கட்டோன்றிய விகாரத்தின்விளைவு. எழுவாய்க்கிடந்த இப்பாட்டு முதலியபொருள் மொழிப்பினுலுடைத்தாம். நுண்ணிதாக வுரைப் பான்புகின் வரம்பின்றிப்பெருகுமென்பது. (௧)

## ஐயம்.

ஐயமென்பது கண்ணுற்றபின்னர் இங்ஙனந் தோன்றாநின்ற இம்மாது திருமகள்முதலாகிய தெய்வமோ அன்றி மக்களுள்ளாள் கொல்லோவென் றையுறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

போதோவிசும்போபுனலோபணிகளதுபதியோ
யாதோவறிகுவதேதுமரிதியமன்விடுத்த
தூதோவனங்கன்றுணையோவிணையிலிதொல்லைத்தில்லை
மாதோமடமயிலோவெனநின்றவர்வாழ்பதியே.

தெரியவரியதோர் தெய்வமென்ன
அருவரைநாடனையுற்றது.

இ - ள். யமன் விடுத்த தூதோ - யமனால் விடுக்கப்பட்ட தூதோ—அனங்கன் துணையோ - வசித்தற்கரியாரை வசித்தற்கு அனங்கற்குண்டாயிற்றோர் துணையோ—இணையிலி தொல்லைத் தில்லை மாதோ - ஒப்பில்லாதானது பழையதாகிய இத்தில்லைக்கண் வாழ்வாரோர்மாதரோ—மட மயிலோ என நின்றவர் வாழ்பதி -

மடப்பத்தையுடைய மயிலோவென்று சொல்லும்வண்ணம் நின்ற வரது வாழ்பதி—போதோ - தாமரைப்பூவோ—விசும்போ - ஆகாயமோ—புனலோ - நீரோ—பணிகளது பதியோ - பாம்புகளது பதியாகிய நாகருலகமோ—யாதோ ஏதும் அறிகுவது அரிது - யாதோ சிறிதுந் துணிதலரிது. எ - று.

யமன்றூதும், அனங்கன்றுணையும், மடமயிலும், ஐயநிலையுவமைக்கணுவமையாய்நின்றன. தில்லைமாது உவமிக்கப்படும்பொருள். ஐயநிகழ்ந்தது திருமகள்முதலாகிய தெய்வமோ மக்களுள்ளாளோவென்றென்க. மக்களுள்ளாளாதல் சிறுபான்மையாகலிற் கூறிற்றிலர்.

தில்லைமாதோ வென்பதற்குத் தில்லைக்கண் வாழ்வாரோர் மானுடமாதரோவென் றுரைப்பாருமுளர். தில்லைமானுடமாது மகளிர்க்குவமையாகப் புணர்க்கப்படுவனவற்றி னொன்றன்மையால் உவமையாகாது. உவமிக்கப்படும் பொருளெனின், ஐயமின்றித் துணிவாம். அதனால் தில்லைமாதோவென்பது மானுடம் தெய்வமென்னும் வேறுபாடுகருதாது மகளிரென்னும் பொதுமைபற்றி நின்றது. தில்லைநின்றவரெனக் கூட்டினுமமையும்.

தெய்வமென்ன தெய்வமோ அல்லளோவென. மெய்ப்பாடு உவகையைச்சார்ந்தமருட்கை. என்னை, "புதுமை பெருமை சிறுமை யாக்கமொடு—மதிமை சாலா மருட்கை நான்கே." * என்றாராகலின். ஈண்டு வனப்பினது பெருமையை வியந்தானென்பது. அவ்வியப்பு மருட்கைப்பாற்படும். பயன்ஐயந்தீர்தல். (உ)

## தெளிதல்.

தெளிதலென்பது ஐயுற்றபின்னர் அவயவமியங்கக்கண்டு இவள் தெய்வமல்லளென்று தெளியாநிற்றல். அதற்குச் செய்யுள்.—

பாயும்விடையரன் றில்லையன் னாள்படைக்கண்ணிமைக்குந்
தோயுநிலத்தடி தூமலர்வாடுந் துயரமெய்தி
யாயுமனனேயணங்கல்லளம்மாமுலைசுமந்து
தேயுமருங்குற்பெரும்பணைத்தோளிச்சிறுநுதலே.

அணங்கல்லளென் றயில்வேலவன்
குணங்களைநோக்கிக் குறித்துரைத்தது.

இ - ள். பாயும் விடை அரன் தில்லை அன்னாள் - பாய்ந்துசெல்லும் விடையையுடைய அரனது தில்லையையொப்பாளுடைய—

---

* தொல்காப்பியம் பொருளதிகாரம் மெய்ப்பாட்டியல். எ.

படை கண் இமைக்கும் - படைபோலுங் கண்கள் இமையாநின்றன—நிலத்து அடி தோயும் - நிலத்தின்கண் அடி தீண்டாநின்றன—தூ மலர் வாடும் - தூய மலர்கள் வாடாநின்றன, ஆதலின்—துயரம் எய்தி ஆயும் மனனே - துயரத்தை யெய்தி ஆராயும் மனனே—அம் மா முலை சுமந்து - அழகிய பெரியவாகிய முலைகளைச் சுமந்து—தேயும் மருங்குல் - தேயாநின்ற மருங்குலையும்—பணை பெருந்தோள் - பணைபோலும் பெரிய தோள்களையுமுடைய—இச்சிறு நுதல் அணங்கு அல்லள் - இச்சிறு நுதல் தெய்வமல்லள். எ-று.

துயரமெய்தியாயுமனனே யென்றதனால், தெளிதல் கூறப்பட்டதாம். மெய்ப்பாடு மருட்கையினீங்கிய பெருமிதம். என்னை, "கல்வி தறுக ணிசைமை கொடையெனச்—சொல்லப் பட்ட பெருமித நான்கே." * என்றாராகலின். தெளிதலுங் கல்வியின்பாற்படும். பயன் தெளிதல்.

அவ்வகை தெய்வங் கொல்லோவென்றையுற்றுநின்றான் இவ்வகை குறிகண்டு தெய்வமல்லள் மக்களுள்ளாளெனத் துணிந்தானென்பது. எனவே தெய்வமல்லளாதற்குக்காரணம் இனையனகுறிபே வேற்றுமையில்லையென்பது துணிவு.

## நயப்பு.

நயப்பென்பது தெய்வமல்லளென்று தெளிந்தபின்னர் மக்களுள்ளாளென்று நயந்து இடையில்லைகொலென்ற நெஞ்சிற்கு அல்குலும் முலையுங்காட்டி இடையுண்டென்று சென்றெய்த நினைய நிற்றல். அதற்குச் செய்யுள்—

அகல்கின்றவல்குற்றடமதுகொங்கையவையவமே
புகல்கின்றதென்னைநெஞ்சுண்டேயிடையடையார்புரங்க [த
ளிகல்குன்றவில்லிற்செற்றோன்றில்லையீசனெம்மானெதிர்ந்
பகல்குன்றப்பல்லுகுத்தோன்பழனம்மன்னபல்லவளுக்கே.

வண்டமர்புரிகுழலொண்டொடிமடந்தையை
நயந்தவண்ணல் வியந்துள்ளியது.

இ-ள். அகல்கின்ற அல்குல் தடம் அது - அகலாநின்ற வல்குலாகிய தடம் அது—கொங்கை அவை - முலை அவை—நெஞ்சு அவம் நீ புகல்கின்றது என்னை - நெஞ்சே காரணமின்றி நீ சொல்லுகின்றதென்!—அடையார் புரங்கள் இகல் குன்ற வில்லில் செற்றோன் - அடையாதார் புரங்களது இகலைக் குன்றமாகிய வில்லாற் செற்றவன்—தில்லை ஈசன் - தில்லைக்கணுளனாகிய வீசன்—எம்மான் -

* தொல். பொருள். மெய்ப்பாட்டியல். ௯.

எம்முடையவிறைவன்—எதிர்ந்த பகல் குன்ற பல் உகுத்தோன் மாறுபட்ட ஆதித்தனது பெருமைகுன்றப் பல்லை யுகுத்தோன் பழனம் அன்ன பல்வளைக்கு இடை உண்டு - அவனது திருப்பழனத்தை யொக்கும் பல்வளைக்கு இடையுண்டு. எ - று.

தடம் - உயர்ந்தவிடம். அல்குற்றடமது கொங்கையவை என்புழி அல்குற்பெருமையானும் முலைப்பெருமையானும் இடையுண்டு என்றவாறன்று, அல்குலும் முலையுமுண்மையான் இடையுண்டு என்றவாறு. அல்குற்றடமதுவென்றும் முலையவையென்றும் பெருமைகூறியது அவை விளங்கித் தோன்றுதனோக்கி. இகல்குன்ற வில்லிற் செற்றோனென்பதற்கு இகல்குறைய வில்லாற் செற்றோனெனினும் அமையும். நயந்தவண்ணல் - மக்களுள்ளாளென்று துணிதலால் நயந்தவண்ணல். உள்ளியது-கூட்டத்தை நினைந்தது. மெய்ப்பாடு உவகையைச்சார்ந்த மருட்கை, வியந்துரைத்தலின். பயன் ஐயந்திர்ந்து மகிழ்தல்.

இந்நான்குபாட்டும் ஒருவருள்ளக்கருத்தை யொருவரறியாதவொருதலைக் காமமாதலிற் கைக்கிளைப்பால. அகத்திணையின்கட் கைக்கிளைவருதல் திணைமயக்காம் பிறவெனின், கைக்கிளைமுதற் பெருந்திணை யிறுவாயெழுதிணையினுள்ளுங் கைக்கிளையும் பெருந்திணையும் அகத்தைச்சார்ந்த புறமாயினும், களவிக்கோவையின் எடுத்துக்கோடற்கட் காட்சிமுதலாயின சொல்லுதல வனபபுடைமைநோக்கிக் கைக்கிளைதழீஇயினார். பெருந்திணைதழுவுதல் சிறப்பின்மையினீக்கினார். இது நலம்பாராட்டல். (௪)

## உட்கோள்.

உட்கோளென்பது மக்களுள்ளாளென்று நயந்து சென்றெய்த நினையாநின்றவன் தன்னிடத்து அவளுக்குண்டாகிய காதல் அவள் கண்ணிற்கண்டு தன்னுட்கொள்ளாநிற்றல். அதற்குச்செய்யுள்-

அணியுமமிழ்துமென்னாவியுமாயவன்றில்லைச்சிந்தா
மணியும்பராறியாமறையோனடிவாழ்த்தலரிற்
பிணியுமதறகுமருந்தும்பிறழப்பிறழுமின்னும்
பணியும்புரைமருங்குற்பெருந்தோளிபடைக்கண்களே. ௫

இறைதிருக்கரத்து மறிமானோக்கி
யுள்ளக்கருத்து வள்ளலறிந்தது.

இ - ள். மின்னும் பணியும் புரை மருங்குல் பெருந்தோளி படை கண்கள் - மின்னையும் பாம்பையுமொக்கு மிடையினையும்

பெருந்தோளியினையுமுடையாளது படைபோலுங் கண்கள்—பிறழ பிறழ பிணியும்-பிறழுந்தோறும் பிறழுந்தோறும் பொதுநோக்கத் தாற் பிணியும்—அதற்கு மருந்தும்-உள்ளக்கருத்து வெளிப்படுக்கு நாணோடுகூடிய நோக்கத்தால் அதற்கு மருந்துமாகாநின்றன. எ-று. அணியும் அமிழ்தும் என் ஆவியும் ஆயவன் - எனக்காபரணமும் அமிழ்தும் என்னுயிருமாயவன்—தில்லைச் சிந்தாமணி - தில்லைக்கட் சிந்தாமணிபோல் அன்பர்க்கு நினைத்தவை கொடுப்போன்—உம்பரார் அறியா மறையோன் - அன்பரல்லாத தேவர்களறியாத வந்தணன்—அடி வாழ்த்தலரில் பிணியும் - அவனுடைய திருவடிகளை வழுத்தாதவரைப்போல உறும்பிணியுமெனக்கூட்டுக.

அணியென்றார் அழகுசெய்தலான். அமிழ்தென்றார் கழிபெருஞ்சுவையோ டுறுதிபயத்தலுடைமையான். ஆவியென்றார் காதலிக்கப்படும் பொருள்களெல்லாவற்றினுஞ் சிறந்தமையான். ஈறிலின்பம்பயக்கு மிறைவனோடு சார்த்த அணியும் அமிழ்தும் ஆவியும் இறப்ப விழிந்தனவேயாயினும், "பொருளது புரைவே புணர்ப்போன் குறிப்பின், மருளற வரூஉ மரபிற் றென்ப." என்பதனான் ஈண்டுச்சொல்லுவானது கருத்துவகையானும், உலகத்துப் பொருள்களுள் அவற்றினூங்கு மிக்கனவின்மையானும், உயர்ந்தனவாயுவமையாயின. உம்பராரெலன்பது பாடமாயின், உம்பரானறியப்படாதவெனவுரைக்க. பிறழப்பிறழுமென்பது பாடமாயின், பிணியுமருந்தும் மாறிமாறிவரப் படைக்கண்கள் பிறழுமெனவுரைக்க. இஃதுட்கோள். இவையைந்துங்கைக்கிளை.

திணை-குறிஞ்சி. கைகோள்-களவு. கூற்று-தலைமகன்கூற்று. கேட்பது-நெஞ்சு. நெஞ்சென்பது பாட்டின்கண் இல்லையாலோ வெனின் எஞ்சிற்றென்பதாம்; வறிதே கூறினனெனினுமமையும். இடம்-முன்னிலை. காலம்-நிகழ்காலம். எச்சம்-இப்பெருந்தோளி படைக்கண்களென்புழி இவ்வென்னுஞ் சுட்டுச்சொல்லெஞ்சிற்று. மெய்ப்பாடு-உவகையைச்சார்ந்த பெருமிதம். ஈண்டு மெய்ப்பாட்டுப் பொருள்கோள் கண்ணினான் யாப்புறவறிதல். என்னை, "கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதி னுணரு—முணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியி—னன்னயப் பொருள்கோ ளெண்ணருங் குரைத்தே." * என்றாராகலின். பயன் தலைமகளது குறிப்பறிந்து மகிழ்தல். பிணியுமதற்கு மருந்துமாம் பெருந்தோளி படைக்கண்களென்றமையின், அவளுடம்பாட்டுக்குறிப்பு அவள் நாட்டத்தானுணர்

* தொல்காப்பியப்பொருளதிகாரம் மெய்ப்பாட்டியல். உஎ.

ந்தானென்பது. என்னை, "நாட்ட மிரண்டு மறிவுடம் படுத்தற் குக்—கூட்டி யுரைக்குங் குறிப்புரையாகும்." * என்றாராகலின்.()

## தெய்வத்தைமகிழ்தல்.

தெய்வத்தை மகிழ்தலென்பது உட்கொண்டு நின்று, என்னி டத்து விருப்பத்தையுடைய இவளைத்தந்த தெய்வத்தையல்லது வேறொரு தெய்வத்தை யான் வியவேனெனத் தெய்வத்தை மகிழ்ந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**வளைபயில்கீழ்கடனின்றிடமேல்கடல்வானுகத்தின்**
**றுளைவழிநேர்கழிகோத்தெனத்தில்லைத்தொல்லோன்கயிலைக்**
**கிளைவயினீக்கியிக்கெண்டையங்கண்ணியைக் கொண்டுதந்த**
**விளைவையல்லால்வியவேனயவேன்றெய்வமிக்கனவே.**

அன்னமென்னடை யரிவையைத் தந்த
மன்னிருந்தெய்வத்தை மகிழ்ந்துரைத்தது.

இ - ள். வளைபயில் கீழ்கடல் நின்று இட - சங்குநெருங்கின கீழ்த்திசைக்கடலிலே நின்று இட—நேர்கழி மேல்கடல் வான் நுகத்தின் துளை வழி கோத்தென - அவ்வொத்தகழி மேற்றிசைக் கடலிலிட்ட பெரிய நுகத்தினது துளைக்கட்சென்று கோத்தாற் போல--தில்லைத் தொல்லோன் கயிலை கிளை வயின் நீக்கி--தில்லையிட த்துப் பழையோனது கைலைக்கண் ஆயத்தாரிடத்து நின்று நீக்கி,— இ கெண்டை கண்ணியை கொண்டு தந்த விளைவை அல்லால் - இக் கெண்டைபோலுங் கண்ணையுடையாளைக் கைக்கொண்டு தந்த நல்வினையின் விளைவாகிய தெய்வத்தை யல்லது—மிக்கன தெய் வம் வியவேன் நயவேன் - மிக்கனவாகிய பிறதெய்வத்தை வியப் பதுஞ் செய்யேன் நயப்பதுஞ் செய்யேன். எ - று.

கைலைக்கட் கொண்டுதந்த வெனவினையும். இவளைத்தந்த தெய்வத்தையல்லது நயவேனென்று அவளதுநலத்தை மிகுத்தமை யின், இதுவும் நலம்பாராட்டல். பயந்தோர்ப்பழிச்சற்பாற்படுத்தி னுமமையும். மெய்ப்பாடு உவகையைச்சார்ந்த மருட்கை. பயன் மகிழ்தல். (சு)

## புணர்ச்சி துணிதல்.

புணர்ச்சி துணிதலென்பது தெய்வத்தை மகிழாநின்றவன் இது நமக்குத் தெய்வப்புணர்ச்சியெனத் தன்னெஞ்சிற்குச் சொல்லி அவளோடு புணரத் துணியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

---

* தொல், பொருள், களவியல். ௫.

ஏழுடையான்பொழிலெட்டுடையான்புயமென்னைமுன்னா
ளூழுடையான்புலியூரன்னபொன்னிவ்வுயர்பொழில்வாய்ச்
சூழுடையாயத்தைநீக்கும்விதிதுணையாமனனே
யாழுடையார்மணங்காணணங்காய்வந்தகப்பட்டதே.

கொவ்வைச்செவ்வாய்க் கொடியிடைப்பேதையைத்
தெய்வப்புணர்ச்சி செம்மறுணிந்தது.

இ - ள். பொழில் ஏழு உடையான்-பொழிலேழுடையான்—புயம் எட்டு உடையான்-புயமெட்டுடையான்—முன் என்னை ஆள் ஊழ் உடையான் - எனக்கு ஆட்படுந்தன்மை யுண்டாவதற்கு முன்னே என்னையாள்வதொரு புதிதாகிய முறைமையையுடையான்,—புலியூர் அன்ன பொன் - அவனது புலியூரையொக்கும் பொன்னனையாள்—இ உயர் பொழில் வாய் சூழ் உடை ஆயத்தை நீக்கும் விதி துணை ஆக - இவ்வுயர்ந்த பொழிலிடத்து ஒருபொழுதும் விடாது சூழ்தலையுடைய ஆயத்தை நீக்குதற்குக் காரணமாகிய விதிதுணையாக—மனனே - மனமே—யாழ் உடையார் மணங் காண் அணங்கு ஆய் வந்து அகப்பட்டது - கந்தருவர் மணங்காண் முன் வருத்துவதாய் வந்து அகப்பட்டது. இனிக் கூட்டத்துக்கு டன்படுவாயாக. எ - று.

பொன்னீக்குமெனவியையும். ஆகவென்பது ஆவென நின்ற செய்யுண்முடிபு புறனடையாற்கொள்க. அணங்காய் வந்தென் றான், உள்ளஞ்செல்லவும் இது தகாதென்று விலக்குதலால் முன் வருத்தமாயினமையின். தெய்வத்தன்மை யுடைத்தாய் வந்தெனினுமமையும். அகப்பட்டதென்று இறந்தகாலத்தாற் கூறினான், புணர்ச்சி துணிந்தமையான். இதுவுமுட்கோட்பாற்படும்.

இவையிரண்டும் ஒருதலைக்காம மல்லவெனினும் புணர்ச்சி நிகழாமையிற் கைக்கிளைப்பாற்படும். புணர்ச்சி நிகழாமை தெய்வப் புணர்ச்சி செம்மறுணிந்த தென்பதனானறிக. பேதையைப் புணர்ச்சிதுணிந்தது, விதிதுணையாகக் கந்தருவர் மணம் ஓர்பெண்வடிவு கொண்டு எனக்கெய்திற்றென்றமையின். இவனோடிவளிடையுண்டாய அன்பிற்குக்காரணம் விதியல்லாமை ஈண்டுப்பெற்றாம். பாங்கற்கூட்டந் தோழியிற் கூட்டமென்றிவற்றில் அவர்துணையாயவாறுபோல விதியும் இவரை ஆயத்தினீக்கிக் கூட்டின மாத்திரையேயன்றி அன்பிற்குக் காரணமன்றென்பது. அல்லதூஉம், விதியாவது செயப்படும் வினையினது நியதியன்றே, அதனானேயன்பு தோன்றிப் புணர்ந்தாரெனின், அதுவுஞ் செயற்கைப்புணர்ச்சி

யாய் முடியும், அது மறுத்தற்பொருட்டன்றே தொல்லோரிதனை யியற்கைப்புணர்ச்சியென்று குறியிட்டது. அல்லதூஉம், நல்வினை துய்த்தக்கால் முடிவெய்தும் இவர்களன்பு துய்த்தாலு முடிவெய் தாது எஞ்ஞான்று மொருபெற்றியே நிற்குமென்பது; அல்லதூ உம், "பிறப்பா னடுப்பினும் பின்னுந்துன்னத்தரும் பெற்றியர்." * என்றலானும் இவர்களன்பிற்குக் காரணம் விதியன்றென்பது. பலபிறப்பினுமொத்த அன்பென்றாராகலின், பலபிறப்பினுமொ த்து நிற்பதோர் வினையில்லையென்பது. அஃதேல், மேலைச்செய்யு ளில் வினைவிளைவே கூட்டிற்றாக விசேடித்துச் சொல்லவேண் டியதென்னையெனின், இம்மையிற் பாங்கனையுந் தோழியையுங் குறையுற அவர்கள் தங்களினாகிய கூட்டங்கூட்டினார்கள். உம்மை நல்வினையைக் குறையுற்றுவைத்து இம்மையதனை மறந்தான், மற ப்புழியும், அது தான்மறவாது இவர்களையுங் கண்ணுறுவித்து இவ ர்க்குத்துப்புமாயிற்றாகலான், விசேடிக்கப்பட்டது. அல்லதூஉம், "பாங்கனை யானன்ன பண்பனை" † என்று அவனை விசேடித்தும், "முத்தகஞ்சேர் மென்னகைப் பெருந்தோளி." ‡ என்று அவளை விசேடித்தும், அவர்களினலாய கூட்டத்திற்குக் கூறினமையின், நல்வினைப்பயனும் அம்மாத்திரையே விசேடித்ததென்பது. (எ)

## கலவியுரைத்தல்.

கலவியுரைத்தலென்பது தெய்வப்புணர்ச்சி புணர்ந்த தலைம கன் புணர்ச்சியின்பத்தியல்பு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**சொற்பாலமுதிவள்யான்சுவையென்னத்துணிந்திங்ஙனே**
**நற்பால்வினைத்தெய்வந்தந்தின்றுநானிவளாம்பகுதிப்**
**பொற்பாரறிவார்புலியூர்ப்புனிதன்பொதியில்வெற்பிற்**
**கற்பாவியவரைவாய்க்கடிதோட்டகளவகத்தே.**

கொலைவேலவன் கொடியிடையொடு
கலவியின்பங் கட்டுரைத்தது.

இ - ள். சொல் பால் அமுது இவள் யான் சுவை துணிந்து என்ன இங்ஙன் நல் பால் வினை தெய்வம் தந்து. எ-து. சொல்லும் பகுதியில் அமுதிவள் யானதன்சுவையென்று துணிந்துசொல்ல இவ்வண்ணமே நல்ல கூற்றின்வினையாகிய தெய்வந்தர. எ-று. என்றது சுவையையுடைய பொருட்குஞ் சுவைக்கும் வேறுபாடில் லாதவாறுபோல எனக்கும் இவட்கும் வேறுபாடில்லை. எ-று.

---

* திருக்கோவை. உ0ரு. † ஷை. கக. ‡ ஷை. க0சு.

இன்று நான் இவள் ஆம் பகுதி பொற்பு ஆர் அறிவார். எ-து. இவ்வொறு வேறுபாடில்லையாயினும், புணர்ச்சியான் வரும் இன்பந்துய்த்தற்பொருட்டாக இன்றியானென்றும் இவளென்றும் வேறுபாட்டோடுகூடிய அழகை யாரறிவார் இதனையனுபவிக்கின்ற யானேயறியினல்லது! எ-று. புலியூர் புனிதன் பொதியில் வெற்பில் கல் பாவிய வரை வாய் கடி தோட்ட களவகத்து. எ-து. புலியூர்க்கணுளனாகிய தூயோனது பொதியிலாகிய வெற்பிற் கற்பரந்த தாழ்வரையிடத்துக் காவலைவாங்கிய களவிடத்து. எ - று.

களவகத்துப் பொற்பெனக்கூட்டுக. தந்தென்பது தரவெனத் திரிக்கப்பட்டது. தந்தின்றென்பது தந்ததென்னும் பொருள்படாமையறிந்துகொள்க. தந்தன்றென்பதூஉம் பாடம்போலும். கடிதோட்டவென்பதற்குக் கடியப்பட்ட தொகுதியையுடைய களவென்றுரைப்பினுமமையும். தோட்டவென்றது தலைமகளாயத்தையுந் தன்னிளைஞரையும். கடிதொட்டவென்பது பாடமாயின், மணந்தொடங்கிய களவென்றுரைக்க. கொடியிடையொடுகலவி கொடியிடையொடு நிகழ்ந்தகலவி. மெய்ப்பாடு உவகை. பயன் மகிழ்ச்சி; தலைமகளை மகிழ்வித்தலுமாம். நல்வினைத்தெய்வம் இவளைக் களவின்கட் கூட்ட அமுதமும் அதன்கட் கரந்துநின்ற சுவையுமென்ன என்னெஞ்சம் இவள்கண்ணே யொடுங்க யானென்பதோர் தன்மை காணுதொழிய இருவருள்ளங்களும் ஒருவேமாமாறுகரப்ப ஒருவேமாகிய ஏகாந்தத்தின்கட் பிறந்த புணர்ச்சிப் பேரின்ப வெள்ளம் யாவரானறியப்படுமென்று மகிழ்ந்துரைத்தான்; உரைப்பக்கேட்ட தலைமகளும் எம்பெருமான் என்கண்வைத்த அருளினானன்றே இவ்வகையருளியதென்று இறப்பவு மகிழ்வாளாம். (அ)

## இருவயினொத்தல்.

இருவயினொத்தலென்பது புணராத முன்னின்ற வேட்கை பன்பு புணர்ந்த பின்னும் அப்பெற்றியே நின்றுவளர்ந்து சேறலால் தலைமகளை மகிழ்ந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**உணர்ந்தார்க்குணர்வரியோன் றில்லைச்சிற்றம்பலத்தொருத்தன், குணந்தான்வெளிப்பட்டகொவ்வைச்செவ்வாயிக்கொடியிடைதோள், புணர்ந்தாற்புணருந்தொறும்பெரும்போகம்பின்னும்புதிதாய், மணந்தாழ்புரிகுழலாளல்குல்போலவளர்கின்றதே.**

ஆராவின்பத் தன்புமீதூர
... மகிழ்ந்துரைத்தது.

இ - ள். உணர்ந்தார்க்கு உணர்வு அரியோன் - ஒருகாற் றன்னையுணர்ந்தவர்கட்குப் பின்னுணர்தற்குக் கருவியாகிய சித்தவிருத்தியுமொடுங்குதலான் மீட்டுணர்வரியோன்—தில்லை சிற்றம்பலத்து ஒருத்தன் - தில்லையிற் சிற்றம்பலத்தின்கணுள்ளனாகிய ஒப்பில்லாதான்—குணம் வெளிப்பட்ட கொவ்வை செவ்வாய் இ கொடி இடை தோள் புணர்ந்தால்— அவனது குணமாகிய ஆனந்தம் வெளிப்பட்டாற்போலுங் கொவ்வைக் கனிபோலுஞ் செவ்வாயையுடைய இக்கொடியிடை தோளைக் கூடினும்—புணருந் தொறும் பெரும்போகம் பின்னும் புதிது ஆய் - கூடுந்தோறும் பெரிதாகிய வின்பம் முன்புபோலப் பின்னும் புதிதாய்—மணம் தாழ் புரி குழலாள் அல்குல் போல வளர்கின்றது - மணந்தங்கிய சுருண்ட குழலையுடையாளது அல்குல்போல வளராநின்றது. எ - று.

உணர்ந்தார்க்குக் குணந்தான் வெளிப்பட்டவென இயைத்துரைப்பினுமமையும். உணர்ந்தார்க் குணர்வரியோனென்பதற்குத் தவத்தானுந் தியானத்தானும் எல்லாப் பொருள்களையு முணர்ந்தவர்க்கும் உணர்வரியோனெனினு மமையும். இப்பொருட்கு உணர்ந்தார்க்குமென உம்மை வருவித்துரைக்கப்பட்டது. குணந்தான் வெளிப்பட்ட கொடியிடையென்புழி உவமையோடு பொருட்கொற்றுமை கருதி உவமைவினை உவமிக்கப்படும் பொருண்மேலேற்றப்பட்டது. புணர்ந்தாற் புதிதாயெனவியையும். புணர்ந்தாலுமென இதற்கும் உம்மை வருவித்துரைக்கப்பட்டது. இன்பத்தன்பு-இன்பத்தான்வந்த செயற்கையன்பு. மெய்ப்பாடும் பயனும் அவை. புணர்ச்சிக்கட்டோன்றி யொருகாலைக்கொருகாற் பெருகாநின்ற பேரின்பவெள்ளத்தைத் தாங்கலாற்றாத தலைமகன் ஆற்றுதல் பயனெனினுமமையும்.

வளர்கின்ற தென்றமையிற் புணர்ந்ததனாற் பயனென்னை யெனின், புணராத முன்னின்ற வேட்கை புணர்ச்சிக்கட்குறைபடும், அக்குறைபாட்டைக் கூட்டத்தின்கட் டம்மிற்பெற்ற குணங்களினானாகிய அன்பு நிறைக்கும், நிறைக்க எஞ்ஞான்றும் ஒரு பெற்றித்தாய் நிற்குமென்பது. அல்குல்போல வளர்கின்றதென்றவழி ஒருகாலைக்கொருகால் வளருமென்றாரல்லர். என்னை, குறைபாடுள்ளதற்கன்றே வளர்ச்சியுண்டாவது; அல்லதூஉம் எஞ்ஞான்றும் வளருமெனின், அல்குற்கு வரம்பின்மையுந்தோன்றும். மற்றென்னை கருதியதெனின், இயற்கைப்புணர்ச்சி புணர்கின்றகாலத்து இவள் பதினோராண்டும் பத்துத்திங்களும் புக்காள் ஆகலின் இவளது அல்குல் இலக்கணக் குறைபாடின்றியே வளராநின்றது. வளர்ந்து

பன்னீராண்டு நிரம்பினால் ஒருபெற்றியே நிற்கும். அதுபோல இவன் காதலும் உள்ளமுள்ளளவு நிறைந்து பின்னைக் குறைபாடின்றி ஒருபெற்றியே நிற்குமென்பது. (கூ)

## கிளவிவேட்டல்.

கிளவிவேட்டலென்பது இருவயினொத்தின்புறுநின்ற தலைமகன் உறுதன்முதலாகிய நான்கு புணர்ச்சியும்பெற்றுச் செவிப்புணர்ச்சி பெருமையின் ஒருசொல்வேட்டு வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

அளவியை யார்க்கு மறிவரி யோன்றில்லை யம்பலம்போல்
வளவிய வான்கொங்கை வாட்டடங் கண்ணுதன் மாமதியின்
பிளவியன் மின்னிடை பேரமை தோளிது பெற்றியென்றாற்
கிளவியை யென்றோ வினிக்கிள்ளை யார்வாயிற் கேட்கின்றதே.

அன்னமன்னவ ளவயவங்கண்டு
மென்மொழிகேட்க விருப்புற்றது.

இ - ள். அளவியை யார்க்கும் அறிவு அரியோன் தில்லை அம்பலம் போல் வான் கொங்கை வளவிய - அளவை யார்க்கு மறிவரியவனது தில்லையம்பலம்போலப் பெருங்கொங்கைகள் வளத்தையுடையன.—தடங்கண் வாள்-பெரியகண்கள் வாளோடொக்கும்.—நுதல் மா மதியின் பிளவு இயல் - நுதல் பெரிய மதியின்பாகத்தினியல்பையுடைத்து—இடை மின்- இடை மின்னோடொக்கும்.—தோள் பெரு அமை - தோள்கள் பெரியவேயோடொக்கும்—பெற்றி இது என்றால் - இவற்றது தன்மை இதுவானால்—கிள்ளையார் வாயில் கிளவியை இனி கேட்கின்றது என் - கிள்ளைபோல்வாள் வாயின்மொழியை இனிக்கேட்க வேண்டுகின்றதென்! இப்பெற்றிக்குத் தக்கதேயிருக்கும். எ - று.

துறவு துறவியென நின்றாற்போல அளவு அளவியென நின்றது. மொழி கிளிமொழியோடொக்குமென்பது போதரக் கிள்ளையாரென்றான். வயினென்பது பாடமாயின், வாயினென்பது குறுகி நின்றதாகவுரைக்க. வயின் இடமெனினு மமையும். அவயவங்கண்டென்புழி உறுதன் முதலாகிய நான்கையுங் கண்டென்றார். மெய்ப்பாடு உவகை. பயன் நயப்புணர்த்துதல். (க0)

## நலம்புனைந்துரைத்தல்.

நலம்புனைந்துரைத்தலென்பது கிளவிவேட்டு வருந்தக்கண்ட தலைமகள் மூரன்முறுவல்செய்ய, தலைமகன் அதுபெற்றுச் சொல்

லாடாமையா னுண்டாகிய வருத்தநீங்கி, நுமதகன்ற மருதநிலத்துக் குறிஞ்சிநிலத்து இவள் வாய்போல நாறும் ஆம்பற்பூக்களுளவோவென அந்நிலத்து வண்டோடு வினவாநிற்றல். அதற்குச் செய்யுள்—

கூம்பலங்கைத்தலத்தன்பரென்பூடுருகக்குனிக்கும்
பாம்பலங்காரப்பரன்றில்லையம்பலம்பாடலரிற்
றேம்பலஞ்சிற்றிடையீங்கிவடீங்கனிவாய்கமழு
மாம்பலம்போதுளவோவளிகாணும்மகன்பணையே.

பொங்கிழையைப் புனைநலம்புகழ்ந்
தங்கதிர்வேலோ னயர்வுநீங்கியது.

இ - ள். அளிகாள் நும் அகன் பணை - வண்டுகாள் நுமதகன்ற மருதநிலத்து—தேம்பு சிற்றிடை ஈங்கிவள் - தேம்புஞ் சிறிய விடையையுடைய இவளது—தீம் கனி வாய் கமழும் ஆம்பல் போது உளவோ - இனியதாகிய கனிந்தவாய்போல நாறும் ஆம்பற் பூக்களுளவோ? சொல்லுமின். எ-று. கூம்பு கைத்தலத்து அன்பர் என்பு ஊடு உருக குனிக்கும் - கூம்புங் கைத்தலங்களையுடைய அன்பரது என்புமுள்ளுருகக் கூத்தாடாநின்ற—பாம்பு அலங்காரப் பரன் தில்லை அம்பலம் பாடலரின் தேம்பு-பாம்பாகிய அணியையுடைய பரமனது தில்லையம்பலத்தைப் பாடாதாரைப்போலத் தேம்புமெனக் கூட்டுக.

அல்லும் அம்மும் அல்வழிச்சாரியை. பாம்பலங்காரம் மெலிந்து நின்றது. ஈங்கிவளென்பது ஒருசொல். கனிவாய்-கனிபோலும் வாயெனினுமமையும். புனைநலமென்றது புனையப்பட்ட வியற்கைநலத்தை. அயர்வுநீங்கியது-சொல்லாடாமையி னுண்டாகிய வருத்தநீங்கியது. மெய்ப்பாடு உவகை. பயன் நயப்புணர்த்துதல். இயற்கையன்பினானும் அவள் குணங்களாற்றோன்றிய செயற்கையன்பினானும் கடாவப்பட்டு நின்ற தலைமகன் தனதன்பு மிகுதியையுணர்த்துதல் நயப்புணர்த்துதலென்பது. (கக)

## பிரிவுணர்த்தல்.

பிரிவுணர்த்தலென்பது ஐவகைப்புணர்ச்சியும் பெற்றுப் புணர்வதன் முன்னும் புணர்ந்தபின்னும் ஒத்தவன்பினனாய் நின்ற தலைமகன் பிரியுமாறென்னையெனின், இப்புணர்ச்சி நெடுங்காலஞ்செல்லக்கடவதாக இருவரையுங் கூட்டிய தெய்வந்தானே பிரியாமற் பிரிவிக்கும். அது பிரிவிக்குமாறு, தலைமகன் தனதாதரவினானலம்

பாராட்டக் கேட்டு, எம்பெருமான் முன்னின்று வாய்திறந்து பெரியதோர் நாணின்மை செய்தேனெனத் தலைமகள் நாணிவருந்தாநிற்ப, அதுகண்டு இவள் வருந்துகின்றது யான்பிரிவேனாக நினைந்தாக வேண்டுமென் றுட்கொண்டு, அவளுக்குத் தான் பிரிவின்மை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**சிந்தாமணிதெண்கடலமிர்தந்தில்லையானருளால்**
**வந்தாலிகழப்படுமேமடமான்விழிமயிலே**
**யந்தாமரையன்னமேநின்னையானகன்றாற்றுவனோ**
**சிந்தாகுலமுற்றென்னோவென்னைவாட்டந்திருத்துவதே.**

பணிவளரல்குலைப் பயிர்ப்புறுத்திப்
பிணிமலர்த்தாரோன் பிரிவுணர்த்தியது.

இ - ள். சிந்தாமணி தெள் கடல் அமிர்தம் தில்லையான் அருளால் வந்தால் - ஒருவன் றவஞ்செய்து பெறுஞ் சிந்தாமணியும் தெளிந்த கடலினமிர்தமும் வருத்தமின்றித் தில்லையானருளாற் றாமேவந்தால்—இகழப் படுமே - அவை அவனாலிகழப்படுமோ?—மட மான் விழி மயிலே - மடமான் விழிபோலும் விழியையுடைய மயிலே—அம் தாமரை அன்னமே - அழகிய தாமரைக்கண் வாழு மன்னமே—நின்னை யான் அகன்று ஆற்றுவனோ - நின்னை யான் பிரிந்தாற்றியுளனாவனோ?—சிந்தாகுலம் உற்று என்னை வாட்டம் திருத்துவது என்னோ - சிந்தையின் மயக்கமுற்று என்னை வாட்டுவதென்னோ? எ - று.

அந்தாமரையன்னம் திருவென்பாருமுளர். நின்னையென்புழி உயிரினுஞ் சிறந்த நின்னையென்றும், யானென்புழி இருதலைப் புள்ளினோருயிரேனாகிய யானென்றும், அச்சொற்களான் விளங்கின. வாட்டந்திருத்துவதே யென்னுஞ் சொற்கள் ஒருசொன்னீரவாய், வாட்டுவதேயென்று பொருள்பட்டு, இரண்டாவதற்கு முடிபாயின. வாட்டத்திருத்துவதென்று பாடமாயின், வாட்டத்தின்கணிருத்துவதென்றுரைக்க. பயிர்ப்பு-பயிலாதபொருட்கண்வந்த அருவருப்பு. ஈண்டுப்பயிலாத பொருள் பிரிவு. பிரிவுணர்த்தல்-அகன்றாற்றுவனோவெனப் பிரிவென்பது மொன்றுண்டென்பதுபட மொழிதல். மெய்ப்பாடு அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். பயன் பிரிவச்ச முணர்த்துதல். (௧௨)

## பருவரலறிதல்.

பருவரலறிதலென்பது பிரிவின்மை கூறக்கேட்ட தலைமகள் பிரிவென்பது மொன்றுண்டுபோலுமென வுட்கொண்டு முன்னை

ணின்றுற் சென்றெய்திய வருத்தநீங்கிப் பெரியதோர் வருத்தமெய்த அதுகண்டு, இவள் மேலுமேலும் வருந்துகின்றது பிரிந்தாற் கூடு தலரிதென்று நினைந்தோ நெடும்பொழு திவ்வாறிருந்தால் அவ்வி டத்துக் குடிப்பழியாமென்று நினைந்தோ அறிகிலேனென அவள் வருத்தமறியா நிற்றல். அதற்குச்செய்யுள்—

**கோங்கிற்பொலியரும்பேய்கொங்கைபங்கன் குறுகலரூர்**
**தீங்கிற்புகச்செற்றகொற்றவன் சிற்றம்பலமனையா**
**ணீங்கிற்புணர்வரிதென் றோநெடிதிங்ஙனேயிருந்தா**
**லாங்கிற்பழியாமெனவோவறியேனயர்கின்றதே.**

பிரிவுணர்ந்த பெண்கொடிதன்
பருவரலின் பரிசுநினைந்தது.

இ - ள். கோங்கின் பொலி அரும்பு ஏய் கொங்கை பங்கன் - கோங்கின்கணுண்டாகிய பொலிந்த வரும்பையொக்கு முலையையு டையாளது பங்கையுடையான்—குறுகலர் ஊர் தீங்கில் புக செற்ற கொற்றவன்-குறுகாதார் புரங்கள் பாசண்ட தருமமாகிய தீங்கிலே புகுதலான் அவற்றைக்கெடுத்த வெற்றியையுடையான்—சிற்றம்ப லம் அனையாள் அயர்கின்றது நீங்கில் புணர்வு அரிது என்றோ - அவனது திருச்சிற்றம்பலத்தை யொப்பாள் வருந்துகின்றது பிரிந் தாற் கூடுதலரிதென்று நினைந்தோ—நெடிது இங்ஙன் இருந்தால் ஆங்கு இற்பழி ஆம் எனவோ - நெடும்பொழுதிவ்வாறிருந்தால் அவ்விடத்துக் குடிப்பழியாமென்று நினைந்தோ—அறியேன் - அறிகிலேன். எ - று.

தீங்கிற்புகவென்பதற்குத் துன்பமறியாதார் துன்பத்திற் புக வெனினுமமையும். ஆங்கென்றது சுற்றத்தாரிடத்தும் அயலாரிடத் தும்; ஆங்கு அசைநிலையெனினுமமையும். பிரியலுறுகின்றானாகை லின், இற்பழியாமென்று வேறுபட்டாளாயின் நன்றென்பது கரு த்து. மெய்ப்பாடு அச்சத்தைச்சார்ந்த மருட்கை. பயன் ஐயந்தீ தல். அவ்வகை தலைமகளது ஆற்றாமைத்தன்மை தலைமகற்குப் புல னாயிற்று, புலனாகத் தலைமகன் இவ்வகை தன்னெஞ்சோடுசாவி ஆற்றானாயினானென்பது. (௧௯)

## அருட்குணமுரைத்தல்.

அருட்குணமுரைத்தலென்பது இற்பழியாமென்று நினைந் தோவென்று கூறக்கேட்ட தலைமகள் இது நந்தோழியறியின் என் னாங்கொல்லோவென்று பிரிவுட்கொண்டு பிரிவாற்றாது வருந்தா

நிற்ப, அக்குறிப்பறிந்து அவள்பிரிவுடம்படுவது காரணமாகத் தலைமகன் யாம்பிரிந்தேமாயினும் பிரிவில்லையெனத் தெய்வத்தினருள் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

தேவரிற்பெற்றநஞ்செல்வக்கடிவடிவார்திருவே
யாவரிற்பெற்றினியார்சிதைப்பாரிமையாதமுக்கண்
மூவரிற்பெற்றவர்சிற்றம்பலமணிமொய்பொழில்வாய்ப்
பூவரிற்பெற்றகுழலியென்வாடிப்புலம்புவதே.

கூட்டியதெய்வத் தின்னருட்குணம்
வாட்டமின்மை வள்ளலுரைத்தது.

இ - ள். தேவரில் பெற்ற நம் செல்வக்கடி - முயற்சியும் உளப்பாடுமின்றித் தேவராலே பெற்ற நமதழகிய மணத்தை—வடிவு ஆர் திருவே - வடிவார்ந்த திருவே—இனி யாவரில் பெற்று யார் சிதைப்பார்-இனிச் சிதைத்தற்கீடாகிய தன்மையை யாவராலேபெற்று யாவர் சிதைப்பார்—இமையாத முக்கண் மூவரில் பெற்றவர் சிற்றம்பலம் அணி - இமையாத மூன்றுகண்ணையும் மூவராலே பெற்றவரது சிற்றம்பலத்தையழகுசெய்த—மொய் பொழில் வாய் பூ அரில் பெற்ற குழலி - செறிந்த பொழிலிடத் துளவாகிய பூக்களது பிணக்கத்தைப் பெற்றகுழலையுடையாய்—வாடி புலம்புவது என் - நீ பொலிவழிந்து துன்பப்படுகின்றதென்னோ? எ - று.

மூவர் சந்திராதித்தர் செந்தீக்கடவுள். பிரிவுணர்த்தினனாக லின் பிரிந்தாலென்னுமென்னும் ஐயநீங்கக் கூறினன். இக்கடியை யாவராற் பெற்றெனினுமமையும். மெய்ப்பாடு பெருமிதம். பயன் வன்புறை. பெரியதோருவகைமீதூர இவ்வகை வற்புறீஇயினனென்பது. (கசு)

## இடமணித்துக்கூறிவற்புறுத்தல்.

இடமணித்துக்கூறி வற்புறுத்தலென்பது அருட்குணமுரைத்துவற்புறுத்தவும் ஆற்றுமைநீங்காத தலைமகட்கு, நும்மூரிடத்திற்கு எம்மூரிடம் இத்தன்மைத்தெனத் தன்னூரினணிமைகூறி வற்புறுத்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வருங்குன்றமொன்றுரித்தோன்றில்லையம்பலவன்மலயத்
திருங்குன்றவாணரிளங்கொடியேயிடரெய்தலெம்மூர்ப்
பருங்குன்றமாளிகைநுண்களபத்தொளிபாயநும்மூர்க்
கருங்குன்றம்வெண்ணிறக்கஞ்சுகமேய்க்குங் கனங்குழையே.

மடவரலை வற்புறுத்தி
இடமணித்தென் றவணியம்பியது.

இ - ள். வரும் குன்றம் ஒன்று உரித்தோன் - இயங்கு மலையொன்றை யுரித்தவன்—தில்லை அம்பலவன் - தில்லையம்பலத்தையுடையான்—மலயத்து இரு குன்ற வாணர் இளங்கொடியே - அவனது பொதியின் மலையிடத்துப் பெரிய குன்றத்தின்கண் வாழ்வாருடைய மகளே—இடர் எய்தல் - வருத்தத்தைவிடு—கனங்குழையே - கனங்குழாய்—எம் ஊர் பரு குன்றம் மாளிகை நுண் களபத்து ஒளி பாய - எம்மூரிடத்துப் பெரிய குன்றம்போலு மாளிகைகளின் நுண்ணிதாகிய சாந்தினொளிபரந்து—நும் ஊர் கரு குன்றம் வெள் நிறம் கஞ்சுகம் ஏய்க்கும் - நும்மூர்க்கணுண்டாகிய கரிய குன்றம் வெள்ளைநிறத்தையுடைய சட்டையிட்டதனோடொக்கும். எ - று.

கருங்குன்ற வெண்ணிறமென்பது பாடமாயின், நுண்களபத்தொளிபரப்ப அவ்வொளி நும்மூர்க் கருங்குன்றத்திற் கிட்ட வெண்ணிறக் கஞ்சுகத்தோடொக்குமென்றுரைக்க. ஈண்டுரைத்தவாற்றால், தலைமகன் மிக்கோனுதல்வேண்டும், வேண்டவே ஒப்பு என்னை பொருந்துமாறெனின், "மிக்கோ னாயினுங் கடிவரையின்றே."* என்பதோத்தாகலிற் பொருந்துமெனக. வற்புறுத்தி-வலியுறுத்தி. இடமணித்தென்றலே வற்புறுத்தலாக வுரைப்பினுமமையும். மெய்ப்பாடு பெருமிதம். பயன் இடமணித்தென்று வற்புறுத்தல். (கரு)

## ஆடிடத்துய்த்தல்.

ஆடிடத்துய்த்தலென்பது அணிமைகூறி யகலாநின்றவன், இனி நீ முற்பட்டுவிளையாடு யான் இங்ஙனம்போய் அங்ஙனம் வாராநின்றேனென அவளை ஆடிடத்துச் செலுத்தா நிற்றல். அதற்குச்செய்யுள்—

தெளிவளர்வான்சிலைசெங்கனிவெண்முத்தந் திங்களின்வாய்
தளிவளர்வல்லியன்னாய்முன்னியாடுபின்யானளவாக் [க்
கொளிவளர்தில்லையொருவன்கயிலையுகுபெருந்தேன்
றுளிவளர்சாரற்கரந்துங்ஙனேவந்துதோன்றுவனே.

வன்புறையின் வற்புறுத்தி
அன்புறுமொழியை யருககன்றது.

* தொல், பொருள், களவியல். உ.

இ - ள். வளர் வான் சிலை செம் கனி வெள் முத்தம் திங்களின் வாய்ந்து அளி வளர் வல்லி அன்னாய் - காணிமிர்ந்த பெரிய சிலைகளும் சிவந்த கொவ்வைக்கனியும் வெள்ளியமுத்தங்களும் ஒரு திங்களின்கண்ணே வாய்ப்ப அளிகள் தங்கும் வல்லியையொப்பாய்—தெளி - யான் சொன்னவற்றைத் தெளிவாயாக—முன்னி ஆடு - இனி முற்பட்டு விளையாடுவாயாக--ஒளி வளர் தில்லை அளவா ஒருவன் கயிலை உகு பெரு தேன் துளி வளர் சாரல் கரந்து - ஒளி வளராநின்ற தில்லைக்கணுள்ளனாகிய அளக்கப்படாத ஒருவனது கைலையிடத்து உகாநின்ற பெருந்தேன்றுளிகள் பெருகுஞ்சாரற் பொதும்பரிலொளித்து—யான் பின் உங்ஙன் வந்து தோன்றுவன் - யான் பின்னும் உவ்விடத்தேவந்து தோன்றுவேன். எ - று.

தெளிவளர் வான்சிலை என்பதற்கு ஒளிவளருஞ் சிலையென்றுரைப்பினுமமையும். திங்களை வல்லிக்கண்ணதாகக்கொள்க. வாய்ந்தென்பது வாய்ப்பவென்பதன்றிரிபாகலின், அளிவளரென்னும் பிறவினைகொண்டது. சாரலென்பது ஆகுபெயர். வன்புறையின்-வற்புறுத்துஞ்சொற்களால். மெய்ப்பாடு அது. பயன் இடங்குறித்து வற்புறுத்தல். (கசு)

## அருமையறிதல்.

அருமையறிதலென்பது ஆடிடத்துய்த்து அகலாநின்றவன் ஆயவெள்ளத்தையும் அவ்விடத்தையும் நோக்கி, இவளை யானெய்தினேனென்பது மாயமோ கனவோ இன்னதென்று அறியேன் இனியிவள் நமக்கு எய்தற்கு அரியவளென அவளது அருமையறிந்துவருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

புணர்ப்போனிலனும்விசும்பும்பொருப்புந்தன்பூங்கழலின், றுணர்ப்போதெனக்கணியாக்குந் தொல்லோன்றில்லைச்சூழ்பொழில்வா, யிணர்ப்போதணிகுழலேழைதன்னீர்மையிந் நீர்மையென்றாற், புணர்ப்போகனவோபிறிதோவறியேன்புகுந்ததுவே.

சுற்றமுமிடனுஞ் சூழலுநோக்கி
மற்றவளருமை மன்னனறிந்தது.

இ - ள். போது இணர் அணி குழல் ஏழை தன் நீர்மை இந் நீர்மை என்றால் - பூங்கொத்துக்களை அணிந்த குழலையுடைய ஏழைதனதுநீர்மை இத்தன்மையாயின்—நிலனும் விசும்பும் பொருப்பும் புணர்ப்போன் - மண்ணையும் விண்ணையும் மண்ணின்கணுள்ள மலை

யையும் படைப்போன்—தன் பூ கழல் துணர்ப்போது எனக்கு அணி ஆக்கும் தொல்லோன் - தன்னுடைய பொலிவினையுடைய திருவடியாகிய துணர்ப்போதுகளை எனக்கு முடியணியாக்கும் பழையோன்—தில்லை சூழ் பொழில் வாய் புகுந்தது - அவனது தில்லைக்கணுண்டாகிய சூழ்பொழிலிடத்து இவள்புகுந்தது—புணர்ப்போ கனவோ பிறிதோ அறியேன் - மாயமோ கனவோ! இரண்டுமன்றி வேறொன்றோ! இன்னதென்றறியேன். எ - று.

பூங்கழலென்பது பூப்போலுங் கழலென உவமைத்தொகையாய்க் கழலென்னுந் துணையாய் நின்றதெனினுமமையும், வீரக்கழலையுடைய துணர்ப்போதென் றுரைப்பினுமமையும். பொழில்வாயிணர்ப்போதென்பாருமுளர். பிறிதோவென்பதற்கு நனவோவென்பாருமுளர். புகுந்ததுவே யென்பதில் வகாரம் விகாரவகையான்வந்தது. சுற்றம்-ஆயம். இடம்-அந்நிலம். சூழல்-அந்நிலத்துள்ளும் புகுதற்கரிய அப்பொழில். மெய்ப்பாடு மருட்கை. பயன் தலைமகளதருமையுணர்தல். (கஎ)

## பாங்கியையறிதல்.

பாங்கியையறிதலென்பது அருமையறிந்து வருந்தாநின்ற தலைமகன் ஆயத்தோடு செல்லாநின்ற தலைமகளைநோக்க, அந்நிலைமைக்கண் அவளும் இப்புணர்ச்சி இவளுக்குப் புலனாங்கொல்லோவென உட்கொண்டு எல்லாரையும்போலன்றித் தன்காதற்றோழியைப் பல்காற் கடைக்கண்ணாற் பார்க்கக்கண்டு, இவள்போலும் இவட்குச்சிறந்தாள் இதுவும் எனக்கோர் சார்பாமெனவுட்கொண்டு அவள்காதற்றோழியை அறியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**உயிரொன் றுளமுமொன் றொன்றேசிறப்பிவட் கென்னொடென்னப், பயில்கின்றசென் றுசெவியுறநீள்படைக்கண்கள்விண் வாய்ச், செயிரொன் றுமுப்புரஞ்செற்றவன் றில்லைச்சிற்றம்பல த்துப், பயில்கின்றகூத்தனருளனலாகும்பணிமொழிக்கே.**

கடல்புரையாயத்துக் காதற்றோழியை
மடவரல்காட்ட மன்னனறிந்தது.

இ - ள். என்னொடு இவட்கு உயிர் ஒன்று உளமும் ஒன்று சிறப்பு ஒன்று என்ன - என்னோடு இவட்கு உயிருமொன்று மனமுமொன்று குரவர்களாற் செய்யப்படுஞ் சிறப்புக்களும் ஒன்றென்று சொல்லி--பணி மொழிக்கு-தாழ்ந்தமொழியையுடையாட்கு--செவி உற நீள் படை கண்கள் சென்று பயில்கின்ற--செவியுறும்

வண்ணம் நீண்ட படைபோலுங் கண்கள் இவள்கட் சென்று பயி லாநின்றன. அதனால் இவள்போலுமிவட்குச், சிறந்தாள். எ - று.

விண் வாய் செயிர் ஒன்று முப்புரம் செற்றவன் - விண்ணிடத்துக் குற்றத்தைப் பொருந்தின மூன்றுபுரத்தையுங் கெடுத்தவன்—தில்லை சிற்றம்பலத்துப் பயில்கின்ற கூத்தன் - தில்லைச்சிற்றம்பலத்தின்கண் இடைவிடா தாடுகின்ற கூத்தையுடையான்—அருள் எனல் ஆகும் பணிமொழிக்கு - அவனதருளென்று துணியலாம் பணிமொழிக்கெனக் கூட்டுக.

அருளென்றது அருளான்வரும் ஆனந்தத்தை. மெய்ப்பாடு பெருமிதம். பயன் ஆற்றாமைநீங்குதல்.

இப்பதினெட்டுப்பாட்டும் இயற்கைப்புணர்ச்சியையும் அதுநிமித்தமாகிய களவியையும் நுதலின. இதனை இயற்கைப்புணர்ச்சியெனினும், தெய்வப்புணர்ச்சியெனினும், முன்னுறுபுணர்ச்சியெனினும், காமப்புணர்ச்சியெனினும் ஒக்கும். (கஅ)

இயற்கைப்புணர்ச்சி முற்றிற்று.

# பாங்கற்கூட்டம்.

இனிப்பாங்கற்கூட்டம் வருமாறு. தெய்வப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன், தெருண்டுவரைதலைத் தெருளானாயின், தன்பாங்கனானாதல் இடந்தலைப்பாட்டானாதல் இரண்டனுளொன்றுற் சென்றெய்தல் முறைமையென்ப. அவற்றுள், பாங்கற்கூட்டமாவது—

நினைதல்வினாத லுற்றதுரைத்தல்
கழறன்மறுத்தல் கவன்றுரைத்தல்லே
வலியழிவுரைத்தல் விதியொடுவெறுத்த
னொந்துகூற னோதனீங்கி
யியலிடங்கேட்ட லியலிடங்கூறல்
வற்புறுத்தல்குறி வழிச்சேறல்காண்டல்
வியந்துரைத்தலம் மெல்லியறன்னைக்
கண்டமைகூறல் கருத்துக்கேற்பச்
செவ்விசெப்ப லவ்விடத்தேக
லீங்கிவைநிற்க விடந்தலைதனக்கு
மாங்கவண்மெலிதல் பொழில்கண்டுமகிழ்த

னீங்காமகிழ்வொடு நிலைகண்டுவியத்த
றளர்வகன்றுரைத்தன் மொழிபெறவருந்தல்
கண்புதைவருத்தங் காவனாண்விட
னண்பொடுசென்று நன்மருங்கணைத
லின்றியமையாமை யாயத்துய்த்த
னின்றுவருந்த னிகழாறைந்துந்
துன்றுபாங்கற் றுறையெனமொழிப.

இ-ள். பாங்கனைநினைதல், பாங்கன்வினாதல், உற்றதுரைத்தல், கழறியுரைத்தல், கழற்றெதிர்மறுத்தல், கவன்றுரைத்தல், வலியழிவுரைத்தல், விதியொடுவெறுத்தல்,பாங்கனேர்ந்துரைத்தல், இயவிடங்கேட்டல், இயலிடங்கூறல், வற்புறுத்தல், குறிவழிச்சேறல், குறிவழிக்காண்டல், தலைவனைவியந்துரைத்தல், கண்டமைகூறல், செவ்விசெப்பல், அவ்விடத்தேகல் இப்பதினெட்டுக்கிளவியுநிற்க, இடந்தலைதனக்கும்,மின்னிடைமெலிதல், பொழில்கண்டுமகிழ்தல், உயிரெனவியத்தல், தளர்வகன்றுரைத்தல், மொழிபெறவருந்தல், நாணிக்கண்புதைத்தல், கண்புதைக்கவருந்தல், நாண்விடவருந்தல், மருங்கணைதல், இன்றியமையாமைகூறல், ஆயத்துய்த்தல், நின்றுவருந்தல் என விவைமுப்பதும் பாங்கற்கூட்டமாம். எ - று. அவற்றுள்—

## பாங்கனைநினைதல்.

பாங்கனைநினைதலென்பது தெய்வப்புணர்ச்சியிறுதிக்கட் சென்றெய்துதற் கருமைநினைந்து வருந்தாநின்ற தலைமகன் அவள் கண்ணாலறியப்பட்ட காதற்றோழியை நயந்து, இவள் அவட்குச் சிறந்ததுணையன்றே அத்துணை எனக்குச் சிறந்தாளல்லள் எனக்குச் சிறந்தானைக்கண்டு இப்பரிசுரைத்தாற் பின்னிவளைச்சென்றெய்தக் குறையில்லையெனத் தன்காதற்பாங்கனை நினையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பூங்கனையார்புனற்றென்புலியூர்புரிந்தம்பலத்து
ளாங்கெனையாண்டுகொண்டாடும்பிரானடித்தாமரைக்கே
பாங்கனையானன்னபண்பனைக்கண்டிப்பரிசுரைத்தா
லீங்கெனையார்தடுப்பார்மடப்பாவையையெய்துதற்கே.

எய்துதற்கருமை யேழையிற்றோன்றப்
பையுளுற்றவன் பாங்கனைநினைந்தது.

இ - ள். பூ கனை ஆர் புனல் தென் புலியூர் அம்பலத்து புரிந்து - பூக்கனையுடைத்தாய் முழங்குதனிறைந்த புனலையுடைத்தாகிய தென்புலியூரம்பலத்தின்கண் விரும்பி—ஆங்கு என்னை ஆண்டுகொண்டு ஆடும் பிரான் அடி தாமரைக்கே பாங்கனை - அவ்வாறென்னை யாண்டுகொண்டு ஆடும் பிரானுடைய அடியாகிய தாமரைகட்கே பாங்காயுள்ளானை—யான் அன்ன பண்பனை - என்னையொக்கு மியல்பையுடையானை—கண்டு இப்பரிசு உரைத்தால் - கண்டு நிகழ்ந்த விப்பரிசையுரைத்தால்—மடம் பாவையை எய்துதற்கு ஈங்கு என்னை தடுப்பார் யார் - மடப்பாவையை எய்துதற்கு இவ்வுலகத்தின்கண் என்னைத் தடுப்பார் யாவர்? ஒருவருமில்லை. எ - று.

அம்பலத்துளாடும் பிரானெனவியையும். தென்புலியூர் புரிந்தம்பலத்துளாங்கென்னை யாண்டுகொண்டென்பதற்குப் பிறவுமுரைப்ப. ஆங்கென்றூர் ஆண்டவாறுசொல்லுதற்கருமையான். ஏழையினென்புழி இன் ஏழனுருபு; அது புறனடையாற் கொள்ளப்பட்டது. பையுள் நோய்; மயக்கமெனினுமமையும். மெய்ப்பாடு அசைவுபற்றிவந்த அழுகை. என்னை, "இளிவேயிழவே யசைவே வறுமையென, விளிவில் கொள்கை யழுகை நான்கே." * என்றாராகலின். பயன் ஆற்றாமைநீங்குதல். மேற்றோழியால் என்குறை முடிக்கலாமென்றுகருதிப் பெயர்ந்த தலைமகன் பாங்கனால் முடிப்பலெனக்கருதினானென்பது. என்னை, தமரான் முடியாக்கருமமுளவாயினன்றே பிறரைக் குறையுற வேண்டுவதென்பது. (கக)

## பாங்கன்வினாதல்.

பாங்கன்வினாதலென்பது தன்னை நினைந்து வாராநின்ற தலைமகனைத் தானெதிர்ப்பட்டு அடியிற்கொண்டு முடிகாறு நோக்கி, நின்னுடைய தோள்கள் மெலிந்து நீ யிவ்வாறாதற்குக் காரணமென்னோவென்று பாங்கன்முந்துற்று வினாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**சிறைவான்புனற்றில்லைச்சிற்றம்பலத்துமென்சிந்தையுள்ளு**
**முறைவானுயர்மதிற்கூடலினாய்ந்தவொண்டீந்தமிழின்**
**றுறைவாய்நுழைந்தனையோவன்றியேழிசைச்சூழல்புக்கோ**
**விறைவாதடவரைத்தோட்கென்கொலாம்புகுந்தெய்தியதே.**

கலிகெழுதிரடோண் மெலிவதுகண்ட
இன்னுயிர்ப்பாங்கன் மன்னனைவினையது.

---

* தொல், பொருள், மெய்ப்பாட்டியல். ரு.

ஆடும்பிரான்; அவனுடைய அடியாகிய

மடப்பாவையை எய்துநர்கள். இவ்வுலகத்

மதிட் கூடல்.

இ - ள். சிறை வான் புனல் தில்லை சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும் உறைவான் - காவலாயுள்ள மிக்க நீரையுடைய தில்லைச்சிற்றம்பலமாகிய நல்லவிடத்தும் என்னெஞ்சமாகிய தீயவிடத்தும் ஒப்பத்தங்குமவனது—உயர் மதில் கூடலின் ஆய்ந்த ஒள் நீந் தமிழின் துறைவாய் நுழைந்தனையோ-உயர்ந்த மதிலையுடைய கூடலின்கணாராய்ந்த ஒள்ளிய வினிய தமிழின்றுறைகளிடத்து நுழைந்தாயோ?—அன்றி ஏழிசை சூழல் புக்கோ - அன்றி ஏழிசையினது சூழலின்கட் புகுதலானோ—இறைவா - இறைவனே—தடவரை தோட்கு புகுந்து எய்தியது என் கொலாம் - பெரிய வரைபோலு நின்றோள்கட்கு மெலியப்புகுந் தெய்தியதென்னோ? எ-று.

தமிழின்றுறைகளாவன ஈண்டு அகமும் புறமுமாகிய பொருட்கூறு. ஏழிசையாவன குரல் முதலாயின. சூழலென்றது அவற்றானியன்ற பண்ணும் பாடலுமுதலாயினவற்றை. கொல் கொலாமென வீறுதிரிந்தது; ஆம் அசைநிலையெனினுமமையும். கலி புகழான் வருமாரவாரம்; தழைத்த வெனினுமமையும். மெய்ப்பாடு அணங்குபற்றிவந்த அச்சம். என்னை, "அணங்கே விலங்கே கள்வர்தம் மிறையெனப், பிணங்கல் சாலா வச்ச நான்கே." * என்றாகலின். பயன் தலைமகற்கு உற்றதுணர்தல். (௨௦)

## உற்றதுரைத்தல்.

உற்றதுரைத்தலென்பது எதிர்ப்பட்டு வினவாநின்ற பாங்கனுக்கு, நெருநலைநாட் கைலைப்பொழிற்கட் சென்றேன் அவ்விடத்து ஒரு சிற்றிடைச்சிறுமான்விழிக் குறத்தியால் இவ்வாறாயினேனெனத்தனக்குற்றது கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**கோம்பிக்கொதுங்கிமேயாமஞ்ஞைகுஞ்சரங்கோளிழைக்கும்**
**பாம்பைப்பிடித்துப்படங்கிழித்தாங்கப்பணைமுலைக்கே**
**தேம்பற்றுடியிடைமான்மடநோக்கிதில்லைச்சிவன்றா**
**ளாம்பொற்றடமலர்சூடுமென்னாற்றலகற்றியதே.**

மற்றவன் வினவ
உற்ற துரைத்தது.

இ - ள். கோம்பிக்கு ஒதுங்கி மேயா மஞ்ஞை - ஓந்திக் கொதுங்கிப் புறப்பட்டிரைகவராத மயில்—குஞ்சரம் கோள் இழைக்கும் பாம்பைப் பிடித்து படம் கிழித்தாங்கு - குஞ்சரத்தைக் கோளிழைக்கவல்ல பாம்பைப்பிடித்துப் படத்தைக் கிழித்தாற்போல—மான் மடம் நோக்கி அ பணை முலைக்கு தேம்பல் துடி இடை -

* தொல், பொருள், மெய்ப்பாட்டியல். அ.

மானின் மடநோக்குப்போலும் நோக்கையுடையாளுடைய அப்ப ணைமுலையானே தேய்தலையுடைய துடிபோலுமிடை—தில்லை சிவன் தாள் ஆம் பொன் தட மலர் சூடும் என் ஆற்றல் அகற்றியது - தில் லைக்கணுளனாகிய சிவனுடைய தாளாகிய பொன்போற் சிறப்பு டைய பெரியதாமரைப் பூவைச், சூடுகின்ற எனது வலியை நீக் கிற்று. எ - று.

குஞ்சரம் தான் உவமையன்றி உவமைக்கடையாய் அதனாற் றல் விளக்கிநின்றது. தடமலர் தான் உவமிக்கப்படும் பொருள ன்றி உவமிக்கப்படும்பொருட்கடையாய் அதனாற்றல் விளக்கி நின் றது. அப்பணைமுலைக்கே யென்றிழித்தது இவள் முலையை நோக்கி யன்று, முலையென்னுஞ் சாதியைநோக்கி. துடியிடையையுடைய மான்மடநோக்கி என்னாற்றலகற்றியது மஞ்ஞை பாம்பைப்பிடித் துப் படத்தைக்கிழித்தாற்போலுமெனக் கூட்டியுரைப்பாருமுளர். மெய்ப்பாடு அழுகை. பயன் பாங்கற்குணர்த்துதல். (௨௧)

## கழறியுரைத்தல்.

கழறியுரைத்தலென்பது உற்றதுரைப்பக்கேட்ட பாங்கன், இஃது இவன்றலைமைப்பாட்டிற்குப் போதாதென உட்கொண்டு, நீ ஒரு சிறுமான் விழிக்கு யான் இவ்வாறாயினேனென்றல் நின் கற்பனைக்குப் போதாதெனக் கழறிக்கூறாநிற்றல். அதற்குச் செய்யுள்—

**உளமாம்வகைநம்மையுய்யவந்தாண்டுசென் றும்பருய்யக்**
**களமாம்விடமமிர் தாக்கியதில்லைத்தொல்லோன்கயிலை**
**வளமாம்பொதும்பரின் வஞ்சித்துநின்றெரர் வஞ்சிமருங்கு**
**லிளமான் விழித்ததென் றேவின்றெம்மண்ணலிரங்கியதே.**

வெற்பனைத்தன் மெய்ப்பாங்கன்
கற்பனையிற் கழறியது.

இ - ள். உளம் ஆம் வகை உய்ய வந்து நம்மை ஆண்டு - உள மாயும் இலமாயும் மாறிவாராது நாமொருபடியே உளமாம் வண் ணம் பிறவித் துன்பத்திற் பிழைக்கத் தான்வந்து நம்மையாண்டு— உம்பர் உய்ய - உம்பரெல்லாந் தன்கட்சென்று பிழைக்க—களம் ஆம் விடம் அமிர்து ஆக்கிய தில்லை தொல்லோன் கயிலை - மிடற்றி ன்கணுளதாகு நஞ்சை யமிர்தமாக்கிய தில்லைக்கணுளனாகிய பழை யோனது கைலையில்—வளம் மா பொதும்பரின் வஞ்சித்து நின்று - வளவிய மாஞ்சோலைக்கண் வருத்துவதென் றறியாமல் நின்று—

வஞ்சி மருங்குல் ஒரு இளமான் விழித்தது என்றே எம் அண்ணல் இன்று இரங்கியது - வஞ்சிபோலு மருங்குலையுடையதோரிளமான் விழித்ததென்றே எம்மண்ணல் இன்றிரங்கியது! இது நின்பெருமைக்குத் தகாது. எ - று.

நம்மையென்றது தம்மைப்போல்வாரை. களமார்விடமென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு எள்ளல்பற்றிவந்தநகை. என்னை, "எள்ள லிளமை பேதைமை மடனென் — றுள்ளப் பட்ட நகை நான் கென்ப." * என்றாராகலின். பயன் கழறுதல். (௨௨)

## கழற்றெதிர்மறுத்தல்.

கழற்றெதிர்மறுத்தலென்பது காதற்பாங்கன் கழறவுங் கேளாதுய்ப் பின்னும் வேட்கைவயத்தனாய்நின்று, என்னாற்காணப்பட்ட விடிவை நீ கண்டிலை கண்டனையாயிற் கழறாயென்று அவனொடு மறுத்துரைத்து வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள் —

சேணிற்பொலிசெம்பொன்மாளிகைத் தில்லைச்சிற்றம்பலத்து
மாணிக்கக்கூத்தன்வடவான்கயிலைமயிலைமன்னும், பூணிற்
பொலிகொங்கையாவியையோவியப்பொற்கொழுந்தைக்
காணிற்கழறலைகண்டிலைமென்றோட்கரும்பினையே.

ஆங்குயிரன்ன பாங்கன்கழற
வளந்தருவெற்ப னுளந்தளர்ந்துரைத்தது.

இ - ள். சேணிற் பொலி செம்பொன் மாளிகை தில்லை சிற்றம்பலத்து - சேய்மைக்கண் விளங்கித் தோன்றாநின்ற செம்பொனானியன்ற மாளிகையையுடைய தில்லைச் சிற்றம்பலத்தின்கணுளனாகிய — மாணிக்கம் கூத்தன் வட வான் கயிலை மயிலை - மாணிக்கம் போலுங் கூத்தனது வடக்கின்கணுண்டாகிய பெரிய கைலைக்கண் வாழுமயிலை — மன்னும் பூணில் பொலி கொங்கை ஆவியை - பொருந்திய பூண்களாற் பொலிகின்ற கொங்கையையுடைய என்னுயிரை — ஓவியம் பொன் கொழுந்தை காணின் கழறலை - ஓவியமாகிய பொற்கொழுந்தைக் கண்டனையாயிற் கழறாய் — மென்தோள் கரும்பினை கண்டிலை - மென்றோளையுடைய கரும்பைக் கண்டிலை. எ - று.

மாணிக்கக்கூத்தனென்புழி மாணிக்கத்தைக் கூத்திற்குவமையாக வுரைப்பினுமமையும். பொற்கொழுந்து பொன்னைவண்ணமா

* தொல், பொருள், மெய்ப்பாட்டியல். ௪.

கக்கொண்டெழுதியகொழுந்து. மென்றேட்கரும்பினை யென்ப தற்கு மெல்லியதோளிலெழுதிய கரும்பையுடையாளை யெனினு மமையும். மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்து வருத்தம்பற்றிவந்த விளிவரல். என்னை, "மூப்பே பிணியே வருத்த மென்மையோ–டியாப்புற வந்த விளிவர னான்கே." * என்றாராகலின். பயன் பாங்கனை யுடம்படுவித்தல். பாங்கன் கழறவும் இவ்வகைமறுத்து ரைத்தானென்பது. (௨௬)

## கவன்றுரைத்தல்.

கவன்றுரைத்தலென்பது மறுத்துரைத்து வருந்தாநிற்பக் கண்ட பாங்கன் ஒருகாலத்துங் கலங்காதவுள்ளம் இவ்வாறு கலங்குதற்குக் காரணமென்னோவெனத் தலைவனுடன் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**விலங்கலைக்கால்விண்டுமேன்மேலிடவிண்ணுமண்ணுமுந்நீர்க், கலங்கலைச்சென்றவன்றுங்கலங்காய்கமழ்கொன்றைதுன்று, மலங்கலைச்சூழ்ந்தசிற்றம்பலத்தானருளில்லவர்போற், றுலங்கலைச்சென்றிதென்னோவள்ளலுள்ளந்துயர்கின்றதே.**

கொலைக்களிற்றண்ணல் குறைநயந்துரைப்பக்
கலக்கஞ்செய்பாங்கன் கவன்றுரைத்தது.

இ - ள். விலங்கலை கால் விண்டு மேன்மேல் இட - மலைகளைக் காற்றுப்பிளந்து மேன்மேலிட—விண்ணும் மண்ணும் முந்நீர் கலங்கலை சென்ற அன்றும் கலங்காய் - வானுலகும் மண்ணுலகும் முந்நீராற் கலங்குதலையடைந்தவிடத்துங் கலங்குந்தன்மையையல்லை—கமழ் கொன்றை துன்றும் அலங்கலை சூழ்ந்த சிற்றம்பலத்தான் அருள் இல்லவர் போல் துலங்கலை சென்று - கமழாநின்ற கொன்றைப்பூ நெருங்கிய மாலையை முடிமாலையாகச் சுற்றிய சிற்றம்பலத்தானது அருளையுடையரல்லாதாரைப்போலத் துளங்குதலையடைந்து—வள்ளல் உள்ளம் துயர்கின்றது இது என்னோ - வள்ளலே, நினதுள்ளந் துயர்கின்றது இஃதென்னோ! எ - று.

விண்டென்பது பிளந்தென்பதுபோலச் செய்வதன்றொழிற்குஞ் செய்விப்பதன் றொழிற்கும் பொது. இவனது கலக்கத்திற்குக்காரணமாய் அதற்கு முன்னிகழ்ந்தனோக்கிச் சென்றவன்றுமென இறந்தகாலத்தாற் கூறினான். வள்ளலென்பது ஈண்டு முன்னிலைக்கண்வந்தது. இதென்னோவென்பது வினவுதல் கருதாது

தொல், பொருள், மெய்ப்பாட்டியல். ௯.

அவனது கவற்சியைவிளக்கிநின்றது. கலக்கஞ்செய்பாங்கன்-கலங்கிய பாங்கன்; தலைமகனைக்கலக்கிய பாங்கனெனினுமமையும். மெய்ப்பாடு இளிவரல். பயன் கழறுதல். மேற்பொதுவகையாற் கழறினன், ஈண்டு விசேடவகையாற் கழறினனென்பது. (உச)

## வலியழிவுரைத்தல்.

வலியழிவுரைத்தலென்பது பாங்கன் கவன்றுரையா நிற்ப, முன்பு இத்தன்மையேனாகிய யான் இன்று ஒருசிறுமான் விழிக்கு இவ்வாறாயினேனெனத் தலைமகன் தன் வலியழிந்தமை கூறிவருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

தலைப்படுசால்பினுக்குந்தளரேன்சித்தம்பித்தனென்று
மலைத்தறிவாரில்லையாரையுந்தேற்றுவனெத்துணையுங்
கலைச்சிறுதிங்கண்மிலைத்தசிற்றம்பலவன்கயிலை
மலைச்சிறுமான்விழியாலழிவுற்றுமயங்கினனே.

நிறைபொறைதேற்ற நீதியொடுசால்பு
மறியுறுநோக்கிற்கு வாடினேனென்றது.

இ-ள். தலைப்படு சால்பினுக்கும் தளரேன் - முன் தலைமையாய அமைதியானு முள்ளந் தளரேன்—சித்தம் பித்தன் என்று மலைத்து அறிவார் இல்லை - பிறழவுணர்ந்தாயென்று மாறுபட்டறிவாருமில்லை—யாரையும் எத்துணையும் தேற்றுவன் - பிறழவுணர்ந்தார் யாவரையும் மிகவுந் தெளிவியாநிற்பேன்—கலை சிறு திங்கள் மிலைத்த சிற்றம்பலவன் கயிலை மலை சிறுமான் விழியால் அழிவுற்று மயங்கினன் - இப்பொழுது ஒருகலையாகிய சிறியபிறையைச் சூடிய சிற்றம்பலவனது கைலைமலைக்கணுண்டாகிய சிறுமானினது விழியால் அழிந்து மயங்கினேன். எ-று.

சால்பழிந்துள்ளந்தளரேனென்பான் சால்பினுக்குந் தளரேனென்றான். தலைப்படு சால்பென்பதற்கு எல்லாப்பொருளுஞ்சிவனைத்தலைப்பட்டுச் சென்றொடுங்கும் ஊழியிறுதி யென்றுரைப்பினுமமையும். நிறையும் பொறையுஞ் சால்பும் தலைப்படு சால்பென்றதனாற்பெற்றாம். பித்தனென்று மலைத்தறிவாரில்லை யென்றதனால் தேற்றம்பெற்றாம். யாரையுந்தேற்றுவனென்றதனால் நீதிபெற்றாம், கலங்கினாரைத் தெளிவித்தல் நீதியாகலான். ஈண்டுத்தன்னையுயர்த்தலென்னுங் குற்றந்தங்காது, சால்புமுதலாயினவற்றை இப்பொழுதுடையேனென்னாமையின். சால்பு "அன்புநாணொப்புரவு கண்

ஞேட்டம் வாய்மையோ—டைந்துசால வூன்றிய தூண்" * என்பதனுணறிக. நோக்கிறகு ே க்கினுல். மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்ருமையுணர்த்தல். இதுவும் மேலதேபோல மறுத்துரைத்தானென்பது. (௨௫)

## விதியொடுவெறுத்தல்.

விதியொடுவெறுத்தலென்பது வலியழிந்தமைகூறி வருந்தாநின்ற தலைமகன் பாங்கனெடுபுலந்து வெள்கி, யான்செய்த நல்வினையும்வந்து பயன்றந்ததில்லையெனத் தன் விதியொடு வெறுத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

நல்வினையுநயந்தந்தின் றுவந்தூநடுங்குமின்மேற்
கொல்வினைவல்லனகோங்கரும்பாமென் றுபாங்கன்சொல்ல
வில்வினைமேருவில்வைத்தவன் றில்லைதொழாரின்வெள்கித்
தொல்வினையாற்றுயரும்மெனதாருயிர்துப்புறவே.

கல்விமிகுபாங்கன் கழறவெள்கிச்
செல்வமிகுசிலம்பன் றெரிந்துசெப்பியது.

இ - ள். கொல் வினை வல்லன நடுங்கு மின் மேல் கோங்கு அரும்பு ஆம் என்று பாங்கன் சொல்ல - கொல்லுந்தொழிலை வல்லன நடுங்கு மின் மேலுண்டாகிய கோங்கரும்புகளாமென்று யான் பற்றுக்கோடாக நினைந்திருந்த பாங்கன்ருனே இகழ்ந்து சொல்லுதலால்—வெள்கி தொல் வினையால் துயரும் எனது ஆருயிர் துப்புற - நாணிப் பழையதாகிய தீவினையாற் றுயருருநின்ற எனது அரியவுயிர் வலியுறும்வண்ணம்—நல்வினையும் வந்து நயம் தந்தின்று - யான் உம்மைச்செய்த நல்வினையும் வந்து பயன்றந்ததில்லை. எ - று.

வில் வினை மேருவில் வைத்தவன் தில்லை தொழாரின் வெள்கி - வில்லின்ருெழிலினை மேருவின்கண்வைத்தவனது தில்லைதொழாதாரைப்போல வெள்கியெனக்கூட்டுக.

உம்மை எச்சவும்மை, கல்வியேயுமன்றி யென்றவாறு. நல்வினை தீவினையைக்கெடுக்குமாயினும் யான்செய்த நல்வினை அது செய்ததில்லையென்பது கருத்து. நாணினுர்மேனி வெள்குதலான், வெள்கியென்ருன். துப்புறவென்னுமெச்சம் தந்தின்றென்பதில் தருதலென்பதனேடு முடிந்தது. துப்புறத் துயருமென்றியைத்து மிகவுந் துயருமென முற்ருகவுரைப்பினுமமையும். நல்வினையுந்

---

* திருக்குறள், சான்ருண்மை. ௩.

நயந்தந்ததென்பது பாடமாயின், குறிப்புநிலையாகக் கொள்க. மெய்ப்பாடும் பயனும் அவை. (உசு)

## பாங்கனெந்துரைத்தல்.

பாங்கனெந்துரைத்தலென்பது விதியொடுவெறுத்து வருந்தாநிற்பக் கண்டபாங்கன், அமிர்தமும் மழையும் தங்குணங்கெடினும் நின்குணங்கெடாதநீ ஒருத்திகாரணமாக நின்சீலத்தை நினையாதவாறு இவ்வாறாகிய எனது தீவினையின்பயனும் இத்தனையன்றோவெனத் தானும் அவனோடுகூட வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஆலத்தினாலமிர் தாக்கியகோன்றில்லையம்பலம்போற்
கோலத்தினாள்பொருட் டாகவமிர்தங்குணங்கெடினுங்
காலத்தினான்மழைமாறினுமாறாக்கவிகைநின்பொற்
சீலத்தைநீயுநினையாதொழிவதென்றீவினையே.

இன்னுயிர்ப்பாங்க னேழைமைச்சுட்டி
நின்னது தன்மை நினைந்திலையென்றது.

இ - ள். ஆலத்தினால் அமிர்து ஆக்கிய கோன் தில்லை அம்பலம் போற் கோலத்தினாள் பொருட்டு ஆக - நஞ்சால் அமிர்தத்தையுண்டாக்கிய இறைவனது தில்லையம்பலம்போலும் அழகையுடையாளொருத்தி காரணமாக—அமிர்தம் குணம் கெடினும் காலத்தினான் மழை மாறினும் - அமிர்தம் தன்குணங்கெடினும் பெய்யுங்காலத்து மழை பெய்யாது மாறினும்—மாறாக் கவிகை நின் பொற்சீலத்தை - மாறாத வண்மையையுடைய நினது பொன்போலப் பெறுதற்கரிய ஒழுக்கத்தை—நீயும் - அறிவதறிந்த நீயும்—நினையாது ஒழிவது என் தீவினை - அறியாதொழிகின்றது எனது தீவினைப் பயன். எ - று.

நஞ்சின்றன்மையொழிந்து அமிர்தஞ்செய்யுங் காரியத்தைச் செய்தலின், அமிர்தாக்கியவென்றார். ஆலத்தினாலென்னு மூன்றாவது பாலாற்றயிராக்கிய வென்பதுபோல நின்றது. நஞ்சினாலோர் போனகத்தையுண்டாக்கிய வெனினுமமையும். அம்பலம்போலு மென்னு முவமை பட்டாங்குசொல்லுதற்கண் வந்தது; புகழ்தற்கண் வந்ததென்பார் அம்பலம்போற் கோலத்தினாள் பொருட்டேயாயினுமாகவென முற்றாகவுரைப்ப. மாறாக்கவிகையென வண்மை மிகுத்துக்கூறினான், தானுமொன்றிரக்கின்றானாகலின். மாறாக்கவிகைநீயுமெனக் கூட்டினுமமையும். மெய்ப்பாடு இளிவரல். பயன் தலைமகனைத்தெருட்டல். (உஎ)

## இயலிடங்கேட்டல்.

இயலிடங்கேட்டலென்பது தலைமகனுடன்கூட வருந்தாநின்ற பாங்கன் யானும் இவனுடன்கூட வருந்தினால் இவனை ஆற்றுவிப் பாரில்லையென அது பற்றுக்கோடாகத் தானாற்றிநின்று, அது கிடக்க நின்னாற்காணப்பட்ட வடிவுக்கு இயல் யாது இடம் யாது கூறுவாயாகவென அவளுடைய இயலும் இடமுங்கேளாநிற்றல். அதற்குச்செய்யுள்—

நின்னுடைநீர்மையுநீயுமிவ்வாறுநினைத்தெருட்டு, மென்னு
டைநீர்மையிதென்னென்பதேதில்லையேர் கொண்முக்கண்
மன்னுடைமால்வரையோமலரோவிசும்போசிலம்பா
வென்னிடம்யாதியனின்னையின்னேசெய்தவீங்கொடிக்கே.

கழுமலெய்திய காதற்றோழன்
செழுமலைநாடனைத் தெரிந்துவினாயது.

இ - ள். நின்னுடை நீர்மையும் இவ்வாறு - நின்னுடைய வியல்பாகிய குணமும் இவ்வாறாயிற்று—நீயும் இவ்வாறு - ஒருகாலத்துங் கலங்காத நீயும் இத்தன்மையையாயினாய்—நினைத் தெருட்டும் என்னுடை நீர்மையிது என் என்பதே - இனி நின்னைத்தெளிவிக்கும் என்னுடையவியல்பு யாதென்று சொல்லுவதோ! அதுகிடக்க-- சிலம்பா - சிலம்பா—நின்னை இன்னே செய்த ஈர்ங் கொடிக்கு-நின்னை யித்தன்மையையாகச் செய்த இணையுங்கொடிக்கு—தில்லை ஏர் கொள் முக்கண் மன்னுடை மால் வரையோ மலரோ விசும்போ இடம் என் இயல் யாது - தில்லைக்கணுளனாகிய அழகுபொருந்திய மூன்றுகண்ணையுடைய மன்னனது பெரியகைலைமலையோ தாமரைப்பூவோ வானோ இடம் யாது? இயல் யாது? கூறுவாயாக. எ-று.

என்னென்பதேயென்னு மேகாரம் வினா; அசைநிலையெனினு மமையும். பிறர்கண்போலாது மூன்றாயிருந்தனவாயினும் அவை தாம் ஓரழகுடையவென்னுங் கருத்தால், ஏர்கொண்முக்கணென்றார். கழுமல் மயக்கம். மெய்ப்பாடு அச்சம். பயன் தலைமகனையாற்றுவித்தல். (உஅ)

## இயலிடங்கூறல்.

இயலிடங்கூறலென்பது இயலிடங்கேட்ட பாங்கனுக்குத் தான் அவளை யெய்தினாற்போலப் பெரியதோ ராற்றுதலையுடையனாய் நின்று, என்னாற்காணப்பட்ட வடிவுக்கு இயல் இவை இடம் இது என்று இயலும் இடமுங்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**விழியாற்பிணையாம்விளங்கியலான்மயிலாமிழற்று**
**மொழியாற்கிளியாமுதுவானவர்தமுடித்தொகைகள்**
**கழியாக்கழற்றில்லைக்கூத்தன்கயிலைமுத்தம்மலைத்தேன்**
**கொழியாத்திகழும்பொழிற்கெழிலாமெங்குலதெய்வமே.**

அழுங்கலெய்திய வாருயிர்ப்பாங்கற்குச்
செழுங்கதிர்வேலோன் றெரிந்துசெப்பியது.

இ - ள். முது வானவர் தம் முடித் தொகைகள் கழியாக் கழல் - தலைவராகிய இந்திரன் முதலாகிய தேவர்களுடைய முடித் திரள்கள் நீங்காத கழலையுடைய—தில்லைக் கூத்தன் கயிலை - தில்லைக் கூத்தனது கைலைமலையிடத்து—முத்தம் மலைத் தேன் கொழியாத் திகழும் பொழிற்கு எழில் ஆம் எம் குலதெய்வம் - முத்துக் களைப் பெருந் தேன் கொழித்து விளங்கும்பொழிற்கு அழகாம் எம் முடைய நல்லதெய்வம்—விழியான் பிணை ஆம் - விழிகளாற் பிணை யாம்—விளங்கு இயலான் மயில் ஆம் - விளங்காநின்ற இயலான் மயிலாம்—மிழற்று மொழியான் கிளியாம் - கொஞ்சு மொழியாற் கிளியாம். எ - று.

இயல், இன்னவென்றும் இடம் கைலைப்பொழிலென்றுங் கூற ப்பட்டனவாம். முத்தம் யானைக்கோட்டினும் வேயினும் பிறந்த முத்து. அழுங்கல் இரக்கம். செழுமை வளமை. மெய்ப்பாடு உவகை. பயன் பாங்கற்குணர்த்தல். (உ௬)

## வற்புறுத்தல்.

வற்புறுத்தலென்பது இயலிடங்கூறக்கேட்டபாங்கன் நீசொ ன்ன கைலையிடத்தே சென்று இப்பெற்றியாளைக்கண்டு இப்பொழு தேவருவன்; அவ்வளவும் நீ யாற்றுவாயாதல் வேண்டுமெனத் தலை மகனை வற்புறுத்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**குயிலைச்சிலம்படிக்கொம்பினைத்தில்லையெங்கூத்தப்பிரான்**
**கயிலைச்சிலம்பிற்பைம்பூம்புனங்காக்குங்கருங்கட்செவ்வாய்**
**மயிலைச்சிலம்பகண்டியான்போய்வருவன்வண்பூங்கொடிகள்**
**பயிலச்சிலம்பெதிர்கூய்ப்பண்ணைநண்ணும்பளிக்கறையே.**

பெயர்ந்துரைத்த பெருவரைநாடனை
வயங்கெழுபுகழோன் வற்புறுத்தியது.

இ - ள். சிலம்ப - சிலம்பனே—குயிலை - குயிலை—சிலம்பு அடிக் கொம்பினை - சிலம்படியையுடையதோர் கொம்பை—தில்லை எம் கூத்தப்பிரான் கயிலைச் சிலம்பில் பைம் பூம்புனம் காக்கும்

கரும் கண் செவ்வாய் மயிலே - தில்லைக்கணுளனாகிய எம்முடைய கூத்தப் பிரானது கைலையாகிய சிலம்பின்கட் பைம்பூம்புனத்தைக் காக்குங் கரிய கண்ணையுஞ் சிவந்த வாயையுமுடையதோர் மயிலே-- வண் பூங் கொடிகள் பயிலச் சிலம்பு எதிர் கூய்ப் பண்ணை நண்ணும் பளிக்கு அறை யான்போய் - வளவிய பூவையுடைய கொடிகள் போலும் ஆயத்தார் நெருங்க அவரோடு சிலம்பிற் கெதிர்கூவித் தான் விளையாட்டைப் பொருந்தும் பளிக்கறைக் கண்யான்சென்று —கண்டு வருவன் - கண்டுவருவேன் நீ யாற்றுவாயாக. எ - று.

கூத்தப்பிரான் என்பது கூத்தனுயினும் பிரானுயுள்ளான் என்றவாறு. பெயர்ந்துரைத்தல் கழறமறுத்துரைத்தல். ஆற்றுத்தன்மையளுய்ப் பெயர்ந்து இயலும் இடனுங் கூறியவெனினுமமையும். வய்யென்னுமுரிச்சொல் விகாரவகையால் வயமென நின்றது. சிறுபான்மை மெல்லெழுத்துப் பெற்றதெனினுமமையும்.' கெழு சாரியை. மெய்ப்பாடு பெருமிதம். பயன் வற்புறுத்தல். (௫0)

## குறிவழிச்சேறல்.

குறிவழிச்சேறலென்பது தலைமகனை வற்புறுத்தி அவன் குறிவழிச் செல்லாநின்ற பாங்கன் இத்தன்மையாளை யான் அவ்விடத்துக்காணலாங் கொல்லோவென அந்நினைவோடு செல்லாநிற்றல். அதற்குச்செய்யுள் —

**கொடுங்கால்குலவரையேழேழ்பொழிலெழில்குன்றுமன்று**
**நடுங்காதவனைநடுங்கநுடங்குநடுவுடைய**
**விடங்காலயிற்கண்ணிமேவுங்கொலாந்தில்லையீசன்வெற்பிற்**
**றடங்கார்தருபெருவான்பொழினீழலந்தண்புனத்தே.**

அறைகழலண்ண லருளினவழியே
நிறையுடைப்பாங்க னினைவொடுசென்றது.

இ - ள். கொடுங் கால் குலவரை ஏழு ஏழ்பொழில் எழில் குன்றும் அன்றும் நடுங்காதவனை - கொடியகாற்றுற் குலமலைகளேழும் பொழிலேழும் அழகுகெடும் ஊழியிறுதியாகிய அன்றும் நடுங்காதவனை—நடுங்க நுடங்கும் நடு உடைய விடம் கால் அயிற் கண்ணி - நடுங்குவிக்கும் இடையையுடைய நஞ்சைக்காலும் வேல்போலுங் கண்ணையுடையாள்—தில்லை ஈசன் வெற்பில் தடம் கார் தரு பெருவான் பொழில் நீழல் தண் புனத்து மேவும் கொலாம் - தில்லைக்கணுளனாகிய ஈசனது வெற்பிடத்துப் பெரிய முகில்போலும் மிகவும் பெரிய பொழிலினிழலையுடைய குளிர்ந்த புனத்தின்கண் மேவுமோ மேவாளோ? எ - று.

கொடுங்காலெனச் சந்தநோக்கித் திரியாது நின்றது. கொடுங் காலுமெனவெண்ணினுமமையும். நடுங்க நுடங்குமென்னுஞ்சொற் கள் ஒருசொன்னீரவாய் நடுக்குமென்னும் பொருள்பட்டு இரண் டாவதற்கு முடிபாயின; ஐகாரம் அசைநிலையெனினுமமையும். தருவென்பது ஒருவமைவாய்பாடு. தடங்கார் தருபெருவான் பொ ழிலென்பதற்குக் கார்தங்கும் பொழிலெனினுமமையும். நிறை ஐம் பொறிகளையுமடக்குதல். மெய்ப்பாடு பெருமிதஞ் சார்ந்த மரு ட்கை. பயன் உசாவியுணர்தல். (கக)

## குறிவழிக்காண்டல்.

குறிவழிக்காண்டலென்பது குறிவழிச்சென்ற பாங்கன் தன்னை அவள் காணாமல் தானவளைக் காண்பதோரணிமைக் கணி ன்று, அவன் சொன்ன இடமும் இதுவே இயலும் இவையே இவளும் அவளே யென்று ஐயமறத் தெளியக்காணுநிற்றல். அதற் குச்செய்யுள் --

வடிக்கணிவைவஞ்சியஞ்சுமிடையிதுவாய்பவளந்
துடிக்கின்றவாவெற்பன்சொற்பரிசேயான்றொடர்ந்துவிடா
வடிச்சந்தமாமலரண்ணல்விண்ணோர்வணங்கம்பலம்போற்
படிச்சந்தமுமிதுவேயிவளேயப்பணிமொழியே.

குளிர்வரைநாடன் குறிவழிச்சென்று
தளிர்புரைமெல்லடித் தையலைக்கண்டது.

இ - ள். வடிக்கண் இவை - அவன்கூறிய வடுவகிர்போலுங் கண்களும் இவையே—வஞ்சி அஞ்சும் இடை இது - வஞ்சிக்கொ ம்பஞ்சு மிடையும் இதுவே—வெற்பன் சொற் பரிசே - வெற்பன் சொற்பரிசே—வாய் பவளம் துடிக்கின்ற வா - வாய் பவளந் துடி த்தாற்போலத் துடிக்கின்றவாறென்னே! அதனால்—யான் தொடர்ந்து விடா அடிச் சந்த மா மலர் அண்ணல் விண்ணோர் வணங்கு அம்ப லம் போல் படிச்சந்தமும் இதுவே - ஒருணர்வுமில்லாதயானும் பற்றிவிடமாட்டாத அடியாகிய சந்தமாமலரையுடைய தலைவனது விண்ணோர்வந்து வணங்கும் அம்பலம்போலும் ஒப்பும் இதுவே— அப் பணிமொழி இவளே - அப்பணிமொழியும் இவளே! எ - று.

வெற்பன்சொற்பரிசேயென்றது இதனையவன் தப்பாமற் கூறியவாறென்னே என்றவாறு. வடியென்பது வடுவகிருக்கோர் பெயர். அதரத்திற்குத்துடித்தல் இயல்பாகக்கூறுப. பவளந்துடிக் கின்றவா என்பதற்குப் பவளம்போலப் பாடஞ்செய்கின்றவாறு

என்னென்றுரைப்பாருமுளர். படிச்சந்தமென்பது வடமொழித் திரிபு. மெய்ப்பாடு பெருமிதம். பயன் தெளிதல். (கஉ)

## தலைவனைவியந்துரைத்தல்.

தலைவனைவியந்துரைத்தலென்பது குறிவழிக்கண்ட பாங்கன் இவ்வுறுப்புக்களையுடைய இவளைக்கண்டு பிரிந்து இங்கு நின்று அங்குவந்து யான்கழறவும் ஆற்றி அத்துணையுந் தப்பாமற் சொன்ன அண்ணலே திண்ணியானெனத் தலைமகனை வியந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

குவளைக்களத்தம்பலவன்குரைகழல்போற்கமலத்
தவளைப்பயங்கரமாகநின்றாண்டவவயவத்தி
னிவளைக்கண்டிங்குநின்றங்குவந்தத்துணையும்பகர்ந்த
கவளக்களிற்றண்ணலேதிண்ணியானிக்கடலிடத்தே.

நயந்தவுருவு நலனுங்கண்டு
வியந்தவனையே மிகுத்துரைத்தது.

இ - ள். குவளைக் களத்து அம்பலவன் குரை கழல் போற் கமலத்தவளை - குவளைப்பூப்போலுந் திருமிடற்றையுடைய அம்பலவனுடைய ஒலிக்குங் கழலையுடைய திருவடிபோலுந் தாமரைப்பூவி லிருக்குந் திருமகளை—பயங்கரம் ஆக நின்று ஆண்ட அவயவத்தின் இவளைக் கண்டு இங்கு நின்று அங்கு வந்து - தாமவட்குப் பயத்தைச் செய்வனவாக நின்று அடிமைகொண்ட உறுப்புக்களையுடைய இவளைக்கண்டு பிரிந்து இங்குநின்றும் அவ்விடத்து வந்து—அத்துணையும் பகர்ந்த கவளக் களிற்று அண்ணலே இக்கடலிடத்துத் திண்ணியான் - யான் கழறவும் ஆற்றி அவ்வளவெல்லாங்கூறிய கவளக்களிற்றையுடைய அண்ணலே இவ்வுலகத்துத் திண்ணியான். எ - று.

இவளைக்கண்டென்றது இவளுடைய நலத்தைக்கொண்டாடியவாறன்று, முன்னங்கே தலைவனுடைய பொலிவழிவுகண்டு இங்கே வந்தவன் இங்கு மிவளுடைய பொலிவழிவுகண்டு இலேசித்து இவளித்தன்மையளாக இங்கே யிவளைப்பிரிந்து அங்கேவந்து அத்துணையும் பகர்ந்தவனே திண்ணியானென்று இருவருடைய அனுராகமுங்கூறியவாறு. கவளக்களிறு தான்விரும்புங் கவளம் பெற்று வளர்ந்தகளிறு. நயமூ-தலைமகனயந்த. மெய்ப்பாடு மருட்கையைச்சார்ந்த அச்சம். பயன் தலைமகனைவியத்தல். (கக)

## கண்டமைகூறல்.

கண்டமைகூறலென்பது தலைமகனை வியந்துரைத்த பாங்கன் விரைந்துசென்று, தானவளைக்கண்டமை தலைமகனுக்குப் பிடிமிசைவைத்துக்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பணந்தாழரவரைச்சிற்றம்பலவர்பைம்பொற்கயிலைப்
புணர்ந்தாங்ககன்றபொருகரியுன்னிப்புனத்தயலே
மணந்தாழ்பொழிற்கண்வடிக்கண்பரப்பிமடப்பிடிவாய்
நிணந்தாழ்சுடரிலைவேலகண்டேனொன்றுநின்றதுவே.

பிடிமிசைவைத்துப் பேதையதுநிலைமை
அடுதிறலண்ணற் கறியவுரைத்தது.

இ - ள். வாய் நிணம் தாழ் சுடர் இலை வேல - வாய்க்கணிணந்தங்கிய சுடரிலைவேலையுடையாய்—பணம் தாழ் அரவு அரைச் சிற்றம்பலவர் பைம்பொன் கயிலை - பணந்தாழ்ந்த அரவையணிந்த அரையையுடைய சிற்றம்பலவரது பசும்பொன்னையுடைய கைலைக்கண்—புணர்ந்து ஆங்கு அகன்ற பொருகரி உன்னி - கூடி அவ்விடத்து நின்று மகன்ற பொருகரியை நினைந்து—புனத்து அயலே மணம் தாழ் பொழிற் கண் வடிக்கண் பரப்பி மடப்பிடி ஒன்று நின்றது கண்டேன் - புனத்திற்கயலே மணந்தங்கிய பொழிற்கண் வடுவகிர்போலுங் கண்களைப்பரப்பி மடப்பிடியொன்று நின்றதனைக் கண்டேன். எ - று.

பணந்தாழ்தல் முடிந்துவிடுதலாற்றெருங்கல்போலத் தாழ்தல்; தங்குதலெனினுமமையும். ஆங்ககன்றவென்புழி நின்றெனவைந்தாம்வேற்றுமைப் பொருளுணரநிற்பதோரிடைச்சொல் வருவித்துரைக்கப்பட்டது. புனத்தயலேயென்றான், புனத்துவிளையாடும் ஆயத்தைநீங்கி நிற்றலின். வடிக்கண்பரப்பியென்றான், இன்னதிசையால் வருமென்றறியாது சுற்றெங்குநோக்குதலின். கைலைக்கணென்பதூஉம், புனத்தயலென்பதூஉம், பொழிற்கணென்பதூஉம், நின்றதென்னுந் தொழிற்பெயரோடுமுடியும். நின்றதுவேயென்புழி வகாரஞ்சந்தநோக்கி வந்தது விரிக்கும்வழி விரித்தறபாற்படும். மெய்ப்பாடு உவகை. பயன் தலைமகனையாற்றுவித்தல்.

## செவ்விசெப்பல்.

செவ்விசெப்பலென்பது பிடிமிசை வைத்துக் கூறக்கேட்ட தலைமகன் அது தனக்குச்செவ்விபோதாமையிற் பின்னும் ஆற்று

லைமநீங்கானுயினான், அதுகண்டு அவனை ஆற்றுவிப்பதுகாரணமாக அவனுக்கு அவளவயவங்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள் —

**கயலுளவேகமலத்தலர்மீதுகனிபவளத்**
**தயலுளவேமுத்தமொத்தநிரையரனம்பலத்தி**
**னியலுளவேயிணைச்செப்புவெற்பாநினதீங்கொடிமேற் 2**
**புயலுளவேமலர்சூழ்ந்திருடேங்கிப்புரள்வனவே.**

அற்புதன்கைலை மற்பொலிசிலம்பற்
கவ்வுருக்கண்டவன் செவ்விசெப்பியது.

இ - ள். வெற்பா - வெற்பா—நினது ஈர்ங் கொடிமேல் கமலத்து அலர் மீது கயல் உளவே - நினது ஈர்ங்கொடிக்கண் தாமரைப்பூவின்மேற் கிடப்பன சிலகயல்களுளவே—கனி பவளத்து அயல் ஒத்த நிரை முத்தம் உளவே - கனிந்த பவளத்திற் கயல் இனமொத்த நிரையாகிய முத்துக்களுளவே—இணைச் செப்பு அரன் அம்பலத்தின் இயல் உளவே - இணையாகிய செப்பு அரனது அம்பலத்தி னியல்பையுடையனவுளவே—மலர் சூழ்ந்து இருள் தூங்கிப் புரள்வன புயல் உளவே - மாலைசூழ்ந்து இருள் செறிந்து கிடந்து புரள்வன புயலுளவே? உளவாயின் யான்கண்டவுருவம் நீ கூறியவுருவமாம். எ - று.

அரனம்பலத்தினியல் ஆறும்வேற்றுமைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. சூழ்ந்தென்பதூஉம், தூங்கியென்பதூஉம், சினைவினைப்பாற்பட்டு முதல்வினைகொண்டன. மலர் சினைபோலக் குழற்கின்றியமையாமையிற் சினைப்பாற்பட்டது. புயல் இரண்டாற்போலுமென்பது போதரப் புரள்வனவெனப் பன்மையாற் கூறினான். மெய்ப்பாடும் பயனும் அவை. (௩௫)

## அவ்விடத்தேகல்.

அவ்விடத்தேகலென்பது செவ்விசெப்பக்கேட்ட தலைமகன் இவ்வாறு காணப்பட்டதுண்டாயின் அது என்னுயிரெனத் தானவ்விடநோக்கிச் செல்லாநிற்றல். அதற்குச்செய்யுள் —

**எயிற்குலமூன்றிருந்தீயெய்தவெய்தவன்றில்லையொத்துக்**
**குயிற்குலங்கொண்டுதொண்டைக் கனிவாய்க்குளிர்முத்தநி**
**ரைத், தயிற்குலவேல்கமலத்திற்கிடத்தியனநடக்கு**
**மயிற்குலங்கண்டதுண்டேலதுவென்னுடைமன்னுயிரே.**

அரிவையது நிலைமை யறிந்தவனுரைப்ப
எரிகதிர்வேலோ னேகியது.

இ - ள். எயில் குலம் மூன்று இரும் தீ எய்த எய்தவன் தில்லை ஒத்து - எயிற்சாதி மூன்றும் பெரிய தீயையெய்த அவற்றையெய்தவனது தில்லையையொத்து—குயில் குலம் கொண்டு - குயிலாகிய சாதியைக்கொண்டு—தொண்டைக் கனி வாய்க் குளிர் முத்தம் நிரைத்து - தொண்டைக் கனியிடத்துக் குளிர்ந்த முத்தங்களை நிரைத்து—அயில் குல வேல் கமலத்தில் கிடத்தி - கூர்மையையுடைய நல்லவேலைக் கமலத்தின்கட் கிடத்தி—அனம் நடக்கும் மயில் குலம் கண்டது உண்டேல் அது என்னுடை மன் உயிர் - அன்னம்போல நடப்பதோர் மயிற்சாதி காணப்பட்டதுண்டாயின், அது எனது நிலைபெறுமுயிர். எ - று.

எயிற்குலமூன்றென்றார், அவை இரும்பும், வெள்ளியும், பொன்னுமாகிய சாதிவேறுபாடுடைமையின். குயிற்குலங் கொண்டென்றான், மொழியாற் குயிற்றன்மையை யுடைத்தாகலின். தொண்டைக்கனிவாயென்பதற்குத் தொண்டைக்கனிபோலும் வாயென்பாருமுளர். மெய்ப்பாடு உவகை. பயன் ஆற்றாமைநீங்குதல். (௩௬)

**இவைநிற்க இடந்தலைதனக்குமாமாறு சொல்லுமாறு.**

## மின்னிடைமெலிதல்.

மின்னிடைமெலிதலென்பது நெருநலைநாளில் தலையளிசெய்து நின்னிற்பிரியேன் பிரியினும் ஆற்றேனென்று கூறிப் பிரிந்தவர் வேட்கைமிகுதியால் இடமறியாது ஆயத்திடைவருவார் கொல்லோவென்னும் பெருநாணினானும், ஆற்றாமையான் இறந்துபட்டார் கொல்லோவென்னும் பேரச்சத்தினானும், யாருமில்லொருசிறைத் தனியேநின்று, தலைமகனை நினைந்து, தலைமகள் மெலியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஆவியன் னாய்கவ லேலக லேமென் றளித்தொளித்த
வாவியன் னார்மிக்க வாவின ராய்க்கெழு மற்கழிவுற்
றாவியன் னார்மன் னியாடஞ் சேர்வர்கொல் அம்பலத்தெம்
மாவியன் னான்பயி லுங்கயி லாயத் தருவரையே.

மன்னனை நினைந்து
மின்னிடை மெலிந்தது.

இ - ள். அளித்து ஆவி அன்னாய் கவலேல் அகலேம் என்று ஒளித்த ஆவி அன்னார் - தலையளிசெய்து ஆவியையொப்பாய் கவ

லா தோழி நின்னை நீங்கேமென்று சொல்லி மறைந்த என்னுவியை யொப்பார்--மிக்க அவாவினர் ஆய்க் கெழுமற்கு அழிவுற்று - மிக்க விருப்பத்தையுடையராய்க் கெழுமுதல் காரணமாக நெஞ்சழிதலான், இடமறியாது—அம்பலத்து எம் ஆவி அன்னான் பயிலும் கயிலாயத்து அருவரை - அம்பலத்தின்கணுளனாகிய எம்மாவியை யொப்பான் அடுத்துவாழுங் கைலாயத்தின்கட் பிறராற்செய்துதற் கரிய தாழ்வரையிடத்து—ஆவி அன்னார் மன்னி ஆடு இடம் சேர்வர் கொல் - ஆவியையொக்கும் ஆயத்தார் நிலைபெற்று விளையாடும் அவ்விடத்து அவர்காண வந்து பொருந்துவரோ! எ - று.

அளித்தல் பிரிகின்றகாலத்துச்செய்த தலையளியெனினு மமையும். மிக்கவென்பது கடைக்குறைந்து நின்றது. ஆயத்திடைவருவர்கொல்லென ஐயத்துள் ஒருதலையே கூறினாள், பெருநாணினளாகலின். மெய்ப்பாடு அச்சத்தைச்சார்ந்த மருட்கை. பயன் 'உசாவியாற்றாமை நீங்குதல். ஆயவெள்ளத்துள்ளே வருவர்கொல்லோவென்னும் பெருநாணினானும், ஆற்றாமையான் இறந்து பட்டனர்கொல்லோவென்னும் பேரச்சத்தினானும் மீதூரப்பட்டுத் தன்றன்மையளன்றிநின்று இவ்வகை உசாவினாளென்பது. (௩௭)

## பொழில்கண்டுமகிழ்தல்.

பொழில்கண்டுமகிழ்தலென்பது தலைமகளை நோக்கிச் செல்லாநின்ற தலைமகன் முன்னையொன்று அவளைக்கண்ணுற்ற பொழிலைச்சென்றணைந்து, அப்பொழிலிடை அவளுறுப்புக்களைக் கண்டு, இப்பொழில் என்சிந்தனைக்கு அவள்தானேயெனத் தோன்றாநின்றதென்று இன்புறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

காம்பிணையாற்களிமாமயிலாற்கதிர்மாமணியால்
வாம்பிணையால்வல்லியொல்குதலான்மன்னுமம்பலவன்
பாம்பிணையாக்குழைகொண்டோன்கயிலைப்பயில்புனமுந்
தேம்பிணைவார்குழலாளெனத்தோன்றுமென்சிந்தனைக்கே.

மணங்கமழ்பொழிலின் வடிவுகண் *
டணங்கெனநினைந் தயர்வுநீங்கியது.

இ - ள். காம்பு இணையால் - வேயிணையானும்—களி மா மயிலால் - களிப்பையுடைய கரிய மயிலானும்—கதிர் மா மணியால் - ஒளியையுடைய பெரிய நீலமணியானும்——வாம் பிணையால் - வாவும் பிணையானும்—வல்லி ஒல்குதலால் - வல்லி நுடங்குதலானும்— கயிலைப் பயில் புனமும் என் சிந்தனைக்குத் தேம்பிணை வார்

குழலாள் எனத் தோன்றும் - கைலைக்கணுண்டாகிய அவள்பயிலும் புனமும் இன்புறுத்துதலால் என்மனத்திற்குத் தேம்பிணையையு டைய நெடிய குழலையுடையாளென்றே தோன்றாநின்றது. எ - று.

மன்னும் அம்பலவன் பாம்பு இணையாக் குழை கொண்டோ ன்கயிலை-நிலைபெறு மம்பலத்தையுடையவன் பாம்பை ஒன்று மொ வ்வாத குழையாகக்கொண்டவன் அவனது கைலையெனக்கூட்டுக.

பாம்பையிணைத்துக் குழையாகக்கொண்டவனெனினு மமை யும். தேம்பிணை தேனையுடையதொடை. தேம்பிணைவார்குழலா ளெனத் தோன்றுமென்பதற்கு அவளைப்போலப் புனமும் யானின் புறத் தோன்றாநின்றதென்பாருமுளர். மெய்ப்பாடு உவகை. பயன் மகிழ்தல். நெருநைலநாளில் தலைமகளைக்கூடின பொழிலிடம் புகு ந்து இவ்வகை சொன்னனென்பது. (௩அ)

## உயிரெனவியத்தல்.

உயிரெனவியத்தலென்பது பொழில்கண்டுமகிழ்ந்து அப் பொழிலிடைச்சென்று புக்கு, அவளைக்கண்ட துணையான் என் னுயிர் இவ்வாறு செய்தோநிற்பதென வியந்துகூறாநிற்றல். அதற் குச்செய்யுள்—

நேயத்ததாய்நென்னலென்னைப்புணர்ந்து நெஞ்சநெகப்போ
யாயத்ததாயமிழ்தாயணங்காயரனம்பலம்போற்
றேயத்ததாயென்றன் சிந்தையதாய்த்தெரியிற்பெரிது
மாயத்ததாகியிதோவந்துநின்றதென் மன்னுயிரே.

வெறியுறுபொழிலின் வியன்பொதும்பரின்
நெறியுறுகுழலி நிலைமைகண்டது.

இ - ள். நென்னல் நேயத்தது ஆய் என்னைப் புணர்ந்து - நெ ருநல் உள்ள நெகிழ்ச்சியையுடைத்தாய் என்னைக்கூடி—நெஞ்சம் நெகப் போய்-பின் நேயமில்லதுபோல என்னெஞ்சுடையும் வண்ண நீங்கிப்போய்—ஆயத்தது ஆய் - ஆயத்தின் கண்ணதாய்—அமிழ்து ஆய் - இன்பத்தைச் செய்தலின் அமிர்தமாய்—அணங்கு ஆய் - துன்பத்தைச் செய்தலின் அணங்காய்—அரன் அம்பலம் போல் தேயத்தது ஆய்-புலப்பாட்டான் அரனதம்பலம்போலும் ஒளியை யுடைத்தாய்—என்றன் சிந்தையது ஆய் - புலப்படாது வந்து என் சிந்தைக்கண்ணதாய்— தெரியின் பெரிதும் மாயத்தது ஆகி வந்து நின்றது இதோ என் மன் உயிர் - ஆராயிற் பெரிதும் மாயத்தையு டைத்தாய் வந்து நின்றது இதுவோ எனதுமன்னுயிர். எ - று.

நேயமுடைமையும் நேயமின்மையும் இன்பஞ்செய்தலும் துன்பஞ்செய்தலும் புலப்படுதலும் புலப்படாமையும் ஒருபொருட்கியையாமையின், பெரிதுமாயத்ததாகியென்றான். தேயம் வடமொழிச்சிதைவு. அம்பலம்போலுந் தேசத்தின் கண்ணதாயென்றுரைப்பினுமமையும். ஓகாரம் அசைநிலையெனினுமமையும். என்மாட்டருளுடைத்தாய் முற்காலத்து என்னை வந்துகூடி அருளில்லதுபோல என்னெஞ்சுடையும்வண்ணம்போய்த் தன் மெய்யடியார் குழாத்ததாய் நினைதோறும் அமிர்தம்போல இன்பஞ்செய்து கட்புலனாகாமையிற் றுன்பஞ்செய்து அம்பலம்போலும் நல்லதேசங்களின் கண்ணதாய் வந்து என்மனத்தகத்ததாய் இத்தன்மைத்தாகலிற் பெரிதும் மாயத்தையுடைத்தாய் எனது நிலைபெறுமுயிர் வந்து தோன்றுநின்றதெனவேறுமொருபொருள் விளங்கியவாறு கண்டுகொள்க. பொழிலின் வியன்பொதும்பர்-பொழிலில் மரஞ்செறிந்தவிடம். மெய்ப்பாடும் பயனும் அவை. (௩௯)

## தளர்வகன்றுரைத்தல்.

தளர்வகன்றுரைத்தலென்பது உயிரென வியந்துசென்று பூக்கொய்தன்முதலிய விளையாட்டையொழிந்து யாருமில்லொருசிறைத்தனியேநின்று இவர்செய்யாநின்ற பெரியதவம் யாதோவென அவளைப் பெரும்பான்மைகூறித் தளர்வு நீங்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

தாதிவர்போதுகொய்யார்தையலாரங்கைகூப்பநின்று
சோதிவரிப்பந்தடியார்சுனைப்புனலாடல்செய்யார்
போதிவர்கற்பகநாடுபுல்லெனத்தம்பொன்னடிப்பா
யாதிவர்மாதவமம்பலத்தான்மலையெய்துதற்கே.

பனிமதிநுதலியைப் பைம்பொழிலிடைத்
தனிநிலைகண்டு தளர்வகன்றுரைத்தது.

இ - ள். தாது இவர் போது கொய்யார் - தாதுபரந்த பூக்களைக் கொய்கின்றிலர்—தையலார் அங்கை கூப்ப நின்று சோதி வரிப் பந்து அடியார் - ஆயத்தாராகிய தையலார் அங்கைகளைக் கூப்ப நின்று ஒளியையும் வரியையுமுடைய பந்தை அடிக்கின்றிலர்—சுனைப் புனல் ஆடல் செய்யார் - சுனைப்புனலாடுதலைச் செய்கின்றிலர்—போது இவர் கற்பக நாடு புல்லெனத் தம் பொன் அடிப்பாய் அம்பலத்தான் மலை எய்துதற்கு இவர் மாதவம் யாது - அதனாற் போதுபரந்த கற்பசங்களையுடைய தேவருலகம் பொலிவழிய நிலந்தோயாத தமது பொன்போலுமடியை நிலத்தின்கட்பாவி அம்

பலத்தானது கைலையை யெய்துதற்கு இவர் செய்யக் கருதுகின்ற பெரியதவம் யாது! எ - று.

தவஞ்செய்வார் புறத்தொழில்களைவிட்டு அகத்தானொன்றை யுன்னி மலைக்கட்டடங்குவரன்றே, இவளும் பூக்கொய்தல் முதலாகிய தொழில்களைவிட்டு மனத்தாற்றன்னை நினைந்து வரையிடத்து நிற்றலான் யாதிவர் மாதவமென்முன். மெய்ப்பாடும் பயனும் அவை. (சுo)

## மொழிபெறவருந்தல்.

மொழிபெறவருந்தலென்பது தளர்வுநீங்கியபின்னர்ச் சார்தலுறுநின்றவன் ஒருசொற் பெறுமுறையாற்சென்று சாரவேண்டிப் பின்னும் அவளைப்பெரும்பான்மைகூறி ஒருசொல்வேண்டி வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள் —

காவிநின்றோர்தருகண்டர்வண்டில்லைக்கண்ணார்கமலத்
தேவியென்றேயையஞ்சென்றதன்றேயறியச்சிறிது
மாவியன்றன்னமென்னோக்கிநின்வாய்திறவாவிடினென்
னுவியன்றேயமிழ்தேயணங்கேயின்றழிகின்றதே.

கூடற் கரிதென
வாடி யுரைத்தது.

இ - ள். மா இயன்றன்ன மெல் நோக்கி - மானோக்கத்தான் இயன்றாற்போலும் மெல்லிய நோக்கையுடையாய்—காவி நின்றுஎர்தரு கண்டர் வண் தில்லைக் கண் ஆர் கமலத் தேவி என்றே ஐயம் சென்றது அன்றே - நஞ்சாகிய நீலப்பூ நின்று அழகைக்கொடுக்கும் மிடற்றையுடையவரது வளவிய தில்லைக்கணுண்டாகிய கண்ணிற்கு ஆருந் தாமரைப்பூவின் வாழுந் தேவியோவென்று ஐயநிகழ்ந்தது—அறியச் சிறிது நின் வாய் திறவா விடின் - தெளிந்தறியச் சிறிதாயினும் நின்வாய் திறவாதொழியின்—அமிழ்தே - அமிழ்தமே—அணங்கே - அணங்கே—இன்று அழிகின்றது என் ஆவி அன்றே - இப்பொழுதழிகின்றது என்னுயிரன்றே, இதனை நீ கருதாதொழிகின்றதென்னை! எ - று.

தேவியென்பது பெரும்பான்மையாகலின், தேவியென்றேயையஞ்சென்றதென ஐயத்துள் ஒருதலையே பற்றிக் கூறினான். அறியவென்னும் வினையெச்சமும் சிறிதென்னும் வினையெச்சமும் திறவாவிடி னென்னுமெதிர்மறையிற் றிறத்தலோடு முடிந்தன. அமிழ்தேயணங்கேயென்றான், இன்பமுந் துன்பமும் ஒருங்கு நிகழ்தலின். மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்றுமையுணர்த்துதல். (சுக)

## நாணிக்கண்புதைத்தல்.

நாணிக்கண்புதைத்தலென்பது தலைமகன்றன் முன்னின்று பெரும்பான்மை கூறக்கேட்ட தலைமகள் பெருநாணினளாதலின் அவன் முன்னிற்கலாகாது நாணி, ஒருகொடியினொதுங்கி, தன்கண் புதைத்து வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

அகலிடந்தாவியவானோனறிந்திறைஞ்சம்பலத்தி
னிகலிடந்தாவிடையீசற்றொழாரினின்னற்கிடமா
யுகலிடந்தான்சென்றெனதுயிர்நையாவகையொதுங்கப்
புகலிடந்தாபொழில்வாயெழில்வாய்தருபூங்கொடியே.

ஆயிடைத்தனிநின் றாற்றாதழிந்து
வேயுடைத்தோளியோர் மென்கொடிமறைந்தது.

இ - ள். அகலிடம் தாவிய வானோன் அறிந்து இறைஞ்சு அம்பலத்தின் இகல் இடம் தா விடை ஈசன் தொழாரின் - உலகத்தைத் தாவி யளந்த வானவன் வணங்கப்படுவதென்றறிந்து வணங்கும் அம்பலத்தின்கணுளனாகிய இகலையுடைய விடங்களிலே தாவும் விடையையுடைய ஈசனைத் தொழாதாரைப்போல—இன்னற்கு இடம் ஆய் உகல் இடம் தான் சென்று எனது உயிர் நையாவகை - துன்பத்திற்கிடமாய் அழியுமளவைத் தானடைந்து எனதுயிர் நையாதவண்ணம்—பொழில் வாய் எழில் வாய்தரு பூங் கொடியே - பொழிலிடத்துளவாகிய அழகுவாய்ந்த பூவையுடையகொடியே - ஒதுங்கப் புகலிடம் தா - யானொதுங்குதற்குப் புகலிடந் தருவாயாக. எ - று.

உகலிடம் உகுதற்கிடம். உகுதலையுடைய விடமெனினுமமையும். ஆயிடை தலைமகன் அவ்வாறுகூறியவிடத்து. தனிநின்று ஆற்றுவிப்பாரையின்றி நின்று. ஆற்றாது நாணினாற்றாது. வேய் வேய்த்தன்மை. மெய்ப்பாடு அச்சம். பயன் ஆற்றாமை நீங்குதல்.()

## கண்புதைக்கவருந்தல்.

கண்புதைக்க வருந்தலென்பது தலைமகள் நாணிக்கண்புதையாநிற்ப, இவள் கண் புதையாநின்றது தன்னுடைய கண்கள் என்னை வருத்தத்தைச்செய்யுமென் றுகாதேயென உட்கொண்டு, யான்வருந்தாதொழிய வேண்டுவையாயின் நின்மேனி முழுதும் புதைப்பாயாகவெனத் தலைமகன் தன்வருத்த மிகுதி கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

தாழச்செய்தார்முடிதன்னடிக்கீழ்வைத்த வரைவிண்ணோர்,
சூழச்செய்தானம்பலங்கைதொழாரினுள்ளந்துளங்கப், போ
ழச்செய்யாமல்வைவேற்கண்புதைத்துப்பொன்னேயென்னை
நீ, வாழச்செய்தாய்சுற்றுமுற்றும்புதைநின்னைவாணுதலே.

வேற்றருங்கண்ணிணை மிளிர்வனவன்றுநின்
கூற்றருமேனியே கூற்றெனக்கென்றது.

இ - ள். தாழச்செய்தார் முடி தன் அடிக்கீழ் வைத்து - தன் கட்டாழ்ந்தவர்களுடைய முடிகளைத் தன் திருவடிக்கீழ்வைத்து—அவரை விண்ணோர் சூழச் செய்தான் அம்பலம் கை தொழாரின் - அவர்களை விண்ணோர் பரிவாரமாய்ச் சூழும்வண்ணஞ் செய்தவனது அம்பலத்தைக் கைதொழாதாரைப்போல—உள்ளம் துளங்க போழச்செய்யாமல் வை வேல் கண் புதைத்து-நெஞ்சந் துளங்கப் போழாமற் கூரிய வேல்போலுங் கண்களைப் புதைத்து—பொன்னே - பொன்னே—நீ என்னை வாழச் செய்தாய் - நீ என்னை வாழும்வண்ணஞ் செய்தாய்—வாள் நுதலே-வாணுதலையுடையாய்—நின்னைச் சுற்று முற்றும் புதை - என்னுள்ளந் துளங்காமைவேண்டின் நின்னைச் சுற்றுமுழுதும் புதைப்பாயாக. எ - று.

தாழச்செய்தாரென்பதனை ஒருசொல்லாக்காது தாழும்வண்ணம் முற்றவுஞ்செய்தாரென்றுனும், தம்மைச்செய்தாரென்றுனும் ஒருசொல்வருவித்தும், போழச்செய்யாமலென்புழியும் போழும் வண்ணமொருதொழிலைச் செய்யாமலென ஒருசொல் வருவித்தும், விரித்துரைப்பினுமமையும். வாழச்செய்தாயென்பது குறிப்புநிலை. புதைத்தவென்பதூஉம் பாடம். வேற்றருங்கண் வேல்போலுங் கண். மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்றுமையுணர்த்தல். (சுக)

## நாண்விடவருந்தல்.

நாண்விடவருந்தலென்பது தலைமகன் தனது ஆற்றுமை மிகுதிகூறக்கேட்டு, ஒருஞான்றுந் தன்னைவிட்டு நீங்காதநாண் அழலைச்சேர்ந்த மெழுகுபோலத் தன்னைவிட்டு நீங்காநிற்ப, தலைமகள் அதற்குப் பிரிவாற்றுது வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

குருநாண்மலர்ப்பொழில்சூழ்தில்லைக்கூத்தனையேத்தலர்போல், வருநாள்பிறவற்கவாழியரோமற்றென்கண்மணிபோன், றொருநாள்பிரியாதுயிரிற்பழகியுடன்வளர்ந்த, வருநாணளியவழல்சேர்மெழுகொத்தழிகின்றதே.

ஆங்ஙனங்கண் டாற்றாளாகி
நீங்கினநாணொடு நேரிழைநின்றது.

இ - ள். என் கண்மணி போன்று - இன்றியமையாமையால் என் கண்மணியை யொத்து—உயிரின் பழகி - உயிர்போலச் சிறப்புடைத்தாய்ப் பழகி—ஒருநாள் பிரியாது - ஒருபொழுதும் பிரியாது—உடன் வளர்ந்த - என்னுடனே வளர்ந்த—அரு அரிய நாண் - பெறுதற்கரிய அளித்தாகிய நாண்—அழல் சேர் மெழுகு ஒத்து அழிகின்றது - அழலைச்சேர்ந்த மெழுகையொத்து என்கணில்லாது அழியாநின்றது, அதனான்—குரு நாள் மலர்ப் பொழில் சூழ் தில்லைக் கூத்தனை எத்தலர் போல் வருநாள் பிறவற்க - நிறத்தையுடையவாகிய நாண் மலர்களையுடைய பொழில்களாற் சூழப்பட்ட தில்லைக்கணுள்ளனாகிய கூத்தனையேத்தாதார் துன்புறும் பிறவியிற் பிறப்பாரன்றே அவர்களைப்போல மேல்வரக்கடவநாளில் யான் இவ்வாறு பிறவாதொழிக. எ - று.

வருநாள் பிறவற்கவென்பதற்கு எத்தாதாரைப்போல வருந்த இவ்வாறு பயின்றாரைப் பிரியவரு நாட்கள் உளவாகா தொழிக வெனினுமமையும். வாழியென்பது இத்தன்மைத்தாகிய இடுக்கணின்றி இந்நாண் வாழ்வதாக வென்றவாறு. அரோவும் மற்றும் அசைநிலை. ஆங்ஙனங்கண்டு - அவ்வாற்றானைக் கண்டு. மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்றாமை நீங்குதல். (சச)

## மருங்கணைதல்.

மருங்கணைதலென்பது தலைமகள் நாணிழந்து வருந்தா நிற்ப, சென்றுசார்தலாகாமையின், தலைமகன் தன்னுதரவினால் அவ்வருத்தந்தணிப்பான்போன்று முலையொடுமுனிந்து, ஒருகையால் இறுமருங்குருங்கியும், ஒருகையால் அளிகுலம்விலக்கி அளகந்தொட்டும், சென்று அணையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

கோலத்தனிக்கொம்பரும்பர்புக்கஃதேகுறைப்பவர்தஞ்
சீலத்தனகொங்கைதேற்றகிலேஞ்சிவன்றில்லையன்னா [யாற்
ளாலொத்தசேரிடைநொய்ம்மையெண்ணாதுநுண்டேனசை
சாலத்தகாதுகண்டீர்வண்டுகாள்கொண்டைசார்வதுவே.

ஒளிதிகழ்வார்குழ லளிகுலம்விலக்கிக்
கருங்களிற்றண்ணல் மருங்கணைந்தது.

இ - ள். கோலத் தனிக் கொம்பர் உம்பர் புக்கு அஃதே குறைப்பவர் தம் சீலத்தன கொங்கை-அழகையுடைய தனியாகிய கொம்

பின்மேலேறி அதனையே அடிக்கட் குறைப்பார் தமது தன்மையை யுடையவாயிருந்தன கொங்கைகள்—தேற்றகிலேம் - இவை இத்த ன்மையவாயிருத்தலான் இது வீழுமென்றியாந் தெளிகின்றிலம், அதனால்—வண்டுகாள் - வண்டுகாள்—சிவன் தில்லை அன்னாள் நூல் ஒத்த நேர் இடை நொய்ம்மை எண்ணாது-சிவனது தில்லையையொ ப்பாளுடைய நூலையொத்த நேரியவிடையினது நொய்ம்மையைக் கருதாது—நுண் தேன் நசையால் கொண்டை சார்வது சாலத் தகாது - நுண்ணிய தேன்மேலுண்டாகிய நசையால் நீயிர் கொண் டையைச்சார்தல் மிகவுந்தகாது. எ - று.

தேற்றகிலேமென்பது "தேற்றாப்புன்சொனோற்றிசின்" என் பதுபோலத் தெளிதற்கண் வந்தது. முலைகளைத் தெளிவிக்கமாட்டே மென்பாருமுளர். பின்வருமேதத்தை நோக்கின் நீயிர்பயனாக நினை க்கின்ற இஃது இறப்பச்சிறிதென்னுங்கருத்தால், நுண்டேனென் றான். கண்டீரென்பது முன்னிலையசைச்சொல். அளிகுலம் வட மொழிமுடிபு. விலக்கிடணைந்தது-விலக்காநின்றணைந்தது. மெய்ப் பாடு உவகை. பயன் சார்தல். அவ்வகை நின்றமை குறிப்பினானு ணர்ந்த தலைமகன் இவ்வகை சொல்லிச் சார்ந்தானென்பது. (௬௫)

## இன்றியமையாமைகூறல்.

இன்றியமையாமை கூறலென்பது புணர்ச்சியிறுதிக்கண் விசு ம்பும் நிலனும் ஒருங்குபெறவரினும் இக்கொங்கைகளை மறந்து அதன்கண் முயலேனெனப் பிரிவுதோன்றத் தலைமகன் தனது இன்றியமையாமை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**நீங்கரும்பொற்கழற்சிற்றம்பலவர்நெடுவிசும்பும்**
**வாங்கிருந்தெண்கடல்வையமுமெய்தினும்யான்மறவேன்**
**தீங்கரும்பும்மமிழ்துஞ்செழுந்தேனும்பொதிந்துசெப்புங்கோ**
**கோங்கரும்புந்தொலைத்தென்னையுமாட்கொண்டகொங்கைகளே**

வென்றிவேலவன் மெல்லியறனக்
கின்றியமையாமை யெடுத்துரைத்தது.

இ - ள். நீங்கரும் பொன் கழல் சிற்றம்பலவர் நெடு விசும் பும் வாங்கு இரும் தெண்கடல் வையமும் எய்தினும் - விடுதற்கரிய பொன்னானியன்ற கழலையுடைத்தாகிய திருவடியையுடைய சிற்றம் பலவரது நெடிதாகிய தேவருலகையும் வளைந்த பெரிய தெண்கட லாற் சூழப்பட்ட நிலத்தையும் ஒருங்கு பெறவரினும்--தீம் கரும்பும் அமிழ்தும் செழும் தேனும் பொதிந்து - இனிய கரும்பின்சாற்றை

யும் அமிர்தத்தையும் கொழுவிய தேனையும் உள்ளடக்கி—செட் பும் கோங்கு அரும்பும் தொலைத்து - செப்பையுங் கோங்கரும்பை யும் வென்று—என்னையும் ஆட்கொண்ட கொங்கைகள் - என்னை யும் அடிமைக்கொண்ட கொங்கைகளை—யான் மறவேன் - யான் மறவேன். எ - று.

விசும்பும் நிலனும் ஒருங்குபெற வரினும் இக்கொங்கைகளை மறந்து அதன்கண் முயலுமாறில்லையெனத் தன்னின்றியமையாமை கூறியவாறாயிற்று. என்னையுமென்றவும்மை எச்சவும்மை. தொழிற் படுத்தலொற்றுமையால் தன்வினையாயிற்று. மெய்ப்பாடு அது. பயன் நயப்புணர்த்துதல். (சுசு)

## ஆயத்துய்த்தல்.

ஆயத்துய்த்தலென்பது இன்றியமையாமைகூறிப் பிரியலுறு நின்றவன், இனிப் பலசொல்லி யென்னை என்னுயிர் நினக்கடிமை யாயிற்று இனிச்சென்று நின்னுயத்திடைச் சேர்வாயாக வெனத் தன் பிரிவின்மை கூறித் தலைமகளை ஆயத்துச் செலுத்தா நிற்றல். அதற்குச்செய்யுள்—

சூளாமணியும்பர்க்காயவன்சூழ்பொழிற்றில்லையன்னுய்க்
காளாயொழிந்ததென்னுருயிராரமிழ்தேயணங்கே
தோளாமணியேபிணையேபலசொல்லியென்னைதுன்னு
நாளார்மலர்ப்பொழில்வாயெழிலாயநணுகுகவே.

தேங்கமழ் சிலம்பன்
பாங்கிற் கூட்டியது.

இ - ள். உம்பர்க்குச் சூளாமணி ஆயவன் சூழ் பொழில் தில்லை அன்னுய்க்கு என் ஆர் உயிர் ஆளாய் ஒழிந்தது - வானவர்க்கு முடி மணியாயவனது சூழ்ந்த பொழிலையுடைய தில்லையையொக்கும் நின க்கு எனதாருயிர் அடிமையாயிற்று—பல சொல்லி என்னை - ஆத லாற் பலசொல்லிப் பெறுவதென்!—ஆர் அமிழ்தே - நிறைந்த வமி ர்தே—அணங்கே - அணங்கே—தோளா மணியே - துளைக்கப்ப டாத மாணிக்கமே—பிணையே - மான்பிணையே—துன்னும் ஆர் நாள் மலர்ப் பொழில் வாய் எழில் ஆயம் நணுகுக - நீ பலகாலுஞ் சேர்ந்து விளையாடும் நிறைந்த நாண்மலரையுடைய பொழிற்கண் விளையாடும் அழகிய ஆயத்தை இனிச் சேர்வாயாக. எ - று.

அடுக்கிய விளிகளாற் காதற்சிறப்பு விளங்கும். பலசொல்லி யென்னையென்றது உயிர் நினக்கு ஆளாகியபின் வேறுபல சொல்

னுதல் பயனில கூறலன்றே யென்றவாறு. சொல்லியென்னும் வினையெச்சத்திற்குப் பெறுவதெனை ஒருசொல் வருவித்துரைக்கப் பட்டது. பொழில்வாய் நணுகுகவென இயைப்பினுமமையும். மெய்ப்பாடு பெருமிதம். பயன் பிரியலுறுந்தலைமகன் வற்புறுத்தல்.

## நின்றுவருந்தல்.

நின்றுவருந்தலென்பது தலைமகளை ஆயத்துய்த்துத் தானவ் விடத்தே நின்று அப்புனத்தியல்பு கூறித் தலைமகன் பிரிவாற்றாது வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பொய்யுடையார்க்கரன்போலகலும்மகன்றாற்புணரின்
மெய்யுடையார்க்கவனம்பலம்போலமிகநணுகு
மையுடைவாட்கண்மணியுடைப்பூண்முலைவாணுதல்வான்
பையுடைவாளரவத்தல்குல்காக்கும்பைம்பூம்புனமே.

பாங்கிற்கூட்டிப் பதிவயிற்பெயர்வோன்
நீங்கற்கருமை நின்றுநினைந்தது.

இ-ள். மை உடை வாட்கண் மணி உடைப் பூண்முலை வாள் நுதல் - மையையுடைய வாள்போலுங் கண்ணையும் மணியையு டைய பூணணிந்த முலையையுமுடைய வாணுதல்—வான் பை உடை வாள் அரவத்து அல்குல் - பெரிய படத்தையுடைத்தாகிய ஒளியையுடைய அரவுபோலும் அல்குலையுடையாள்—காக்கும் பூம் பைம் புனம் - அவள் காக்கும் பூக்களையுடைய பசியபுனம்—அகன் றால் - தன்னை யானகன்றால்—பொய் உடையார்க்கு அரன்போல் அகலும் - பொய்யையுடையவர்க்கு அரன்றுன்பத்தைச்செய்து சேயனுமாறுபோல மிக்க துயரத்தைச்செய்து எனக்குச்சேய்த் தாம்—புணரின் - அணைந்தால்—மெய் உடையார்க்கு அவன் அம் பலம்போல மிக நணுகும் - மெய்யையுடையவர்க்கு அவனது அம் பலம் பேரின்பத்தைச்செய்து அணித்தாமாறுபோலக் கழியுவகை செய்து எனக்குமிகவும் அணித்தாம். ஆதலான் நீங்குதல் பெரி தும் அரிது. எ-று.

வாணுதலையுமென்றெண்ணினும் அமையும். மெய்ப்பாடு அழு கை. பயன் ஆற்றாமை நீங்குதல். (சஅ)

பாங்கற்கூட்ட முற்றிற்று.



# இடந்தலைப்பாடு.



பொழிலிடைச்சேற லிடந்தலைசொன்ன
வழியொடுகூட்டி வகுத்திசினோரே.

இ-ள். பொழிலிடைச்சேறலொன்றும் இடந்தலைப்பாட்டிற் கேயுரியது. இதனையும் மேலைப் பாங்கற் கூட்டமுணர்த்திய சூத்திரத்தில் "ஈங்கிவைநிற்க விடந்தலைதனக்கும்" எனக் கூறியவாறே மின்னிடைமெலிதல் முதல் நின்றுவருந்துதலீறாகக் கூறப்பட்ட கிளவிகளோடுகூட்டி இடந்தலைப்பாடாமென்று வகுத்துரைத்துக் கொள்க. அவை பாங்கற்கூட்டத்திற்கும், இடந்தலைப்பாட்டிற்கும் உரியவாமாறு என்னையெனின், பாங்கற்கூட்டம் நிகழாதாயின் இடந்தலைப்பாடு நிகழும், இடந்தலைப்பாடு நிகழாதாயின் பாங்கற்கூட்டநிகழும் ஆகலின்.

## பொழிலிடைச்சேறல்.

பொழிலிடைச் சேறலென்பது இயற்கைப் புணர்ச்சியதிறுதிக்கட் சென்றெய்துதற்கருமை நினைந்து வருந்தாநின்ற தலைமகன் இப்புணர்ச்சி நெருநலும் என்னறிவோடுகூடிய முயற்சியான் வந்ததன்று தெய்வந்தர வந்தது இன்னும் அத்தெய்வந்தானே தரும் யாம் அப்பொழிலிடைச் செல்வேமெனத் தன்னெஞ்சொடு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள் —

**என்னறிவால்வந்ததன்றிதுமுன்னு மின்னும்முயன்றான், மன்னெறிதந்ததிருந்தன்றுதெய்வம்வருந்தனெஞ்சே, மின்னெறி செஞ்சடைக் கூத்தப்பிரான் வியன்றில்லைமுந்நீர், பொன்னெறிவார் துறைவாய்ச்சென்றுமின்றோய் பொழிலிடத்தே.**

ஐயரிக்கண்ணியை யாடிடத்தேசென்
றெய்துவனெனநினைந் தேந்தல்சென்றது.

இ-ள். இது முன்னும் என் அறிவால் வந்தது அன்று - இப்புணர்ச்சி நெருநலும் என்னறிவோடு கூடிய முயற்சியான்வந்ததன்று தெய்வந்தர வந்தது—முயன்றால் மன் நெறி தந்தது தெய்வம் இன்னும் இருந்தன்று - இன்னுஞ் சிறிது முயன்றான் மன்னியநெறியாகிய இவ்வொழுக்கத்தைத் தந்ததாகிய தெய்வம் இன்னுமிருந்தது அது முடிக்கும், அதனான்—நெஞ்சே - நெஞ்சமே—

வருந்தல்-வருந்தாதொழி—மின் எறி செம் சடைக் கூத்தப்பிரான் வியன் தில்லை முந்நீர் - மின்னை வெல்கின்ற சிவந்தசடையையுடைய கூத்தப்பிரானது அகன்ற தில்லையைச் சூழ்ந்த கடற்றிரை—பொன் எறி வார் துறைவாய் மின் தோய் பொழிலிடத்துச் சென்றும் - பொன்னைக் கொணர்ந்தெறிகின்ற நெடிய துறையிடத்து மின்னையுடைய முகிலைத் தோயும் பொழிற்கட்செல்லுதும். எ - று.

இன்னுமிருந்தன்றெனக்கூட்டி முயன்றுலென்னும் வினையெச்சத்திற்கு முடிக்குமொன் ஒருசொல் வருவித் துரைக்கப்பட்டது. மின்போலுநெறித்த சடையெனினுமமையும். கரையிற் பொன்னைத் திரையெறியுந்துறையெனினுமமையும். இருந்தின் றென்பது பாடமாயின், இருந்தின்றோவென ஓகாரம் வருவித்து இருந்ததில்லையோவெனவுரைக்க. மெய்ப்பாடு பெருமிதம். பயன் இடந்தலைப்படுதல். (சக)

இதற்கு மின்னிடைமெலிதன் முதலாக நின்றுவருந்தலீருக வருங்கிளவியெல்லாம் எடுத்துரைத்துக்கொள்க. என்னை, இவ்விரண்டனுள்ளும் ஒன்றே நிகழுமாகலின்.

இடந்தலைப்பாடு முற்றிற்று.

# மதியுடம்படுத்தல்.

மதியுடம்படுத்தல் வருமாறு. இரண்டனுள் ஒன்றாற் சென்றெய்தியபின்னர்த் தெருண்டுவரைதலைத் தெருளானாயின் அவள் கண்ணாற் காட்டப்பட்டகாதற்றோழியை வழிப்பட்டுச் சென்றெய்துதல் முறைமையென்ப. வழிப்படுமாறு தெற்றெனத் தன்குறைகூறாது இரந்துவைத்துக் கரந்தமொழியாற் றன்கருத்தறிவித்து அவளை ஐயவுணர்வினளாக்கி அதுவழியாகநின்றுதன்குறைகூறுதல்.

சேறறுணிதல் வேழம்வினுதல்
கலைமான்வழிபதி பெயர்வினுதல்லே
மொழிபெறுதுரைத்தல் கருத்தறிவித்த
விடைவினுதலோ டிவையீரைந்து
படவரற்றோழிக்கு மதியுடம்படுத்தல்.

இ-ள். பாங்கியிடைச்சேறல், குறையுறத்துணிதல், வேழம்வினுதல், கலைமான்வினுதல், வழிவினுதல், பதிவினுதல், பெயர்வினு

தல், மொழிபெறுதுகூறல், கருத்தறிவித்தல், இடைவினுதல் என விவைபத்தும் மதியுடம்படுத்தலாம். எ - று. அவற்றுள்—

## பாங்கியிடைச்சேறல்.

பாங்கியிடைச்சேறலென்பது இரண்டனுள் ஒன்றுற் சென்றெய்திப் புணர்ந்து நீங்கிய தலைமகன் இனியிவளைச் சென்றெய்துதல் எளிதன்று யாம் அவள் கண்ணுற்காட்டப்பட்ட காதற்றோழிக்கு நங்குறையுள்ளது சொல்வேமென்று அவளைநோக்கிச் செல்லாநிற்றல். அற்குச்செய்யுள்—

எளிதன்றினிக்கனிவாய்வல்லிபுல்லலெழின்மதிக்கீற் [ட்
ஒருளிசென்றசெஞ்சடைக்கூத்தப் பிரானையுன்னுரினென்க
டெளிசென்றவேற்கண்வருவித்தசெல்லலெல்லாந்தெளிவித்
தளிசென்றபூங்குழற்றோழிக்குவாழியறிவிப்பனே.

கரந்துறைகிளவியிற் காதற்றோழியை
இரந்துகுறையுறுவலென் றேந்தல்சென்றது.

இ - ள். கனி வாய் வல்லி புல்லல் இனி எளிது அன்று - தொண்டைக்கனிபோலும் வாயையுடைய வல்லியைப் புல்லுதல் இனி எளிதன்று, அதனுல்—எழில் மதிக் கீற்று ஒளி சென்ற செஞ்சடைக் கூத்தப்பிரானை உன்னுரின் - எழிலையுடைய மதியாகிய கீற்றினெளிபரந்த சிவந்தசடையையுடைய கூத்தப்பிரானை நினையாதாரைப்போல வருந்த—என்கண் தெளி சென்ற வேல் கண் வருவித்த செல்லல் எல்லாம்-என்னிடத்துத் தெளிதலையடைந்த வேல்போலுங் கண்கள் வருவித்த இன்னுமை முழுதையும்—அளி சென்ற பூம் குழல் தோழிக்குத் தெளிவித்து அறிவிப்பன் - வண்டடைந்த பூங்குழலையுடைய தோழிக்குக் குறிப்பினுலே தெளிவியா நின்று சொல்லுவேன். எ - று.

இரண்டாவது விகாரவகையாற்றெக்கது. வல்லியது புல்லலெனினுமமையும். வருந்தவென வொருசொல் வருவித்துரைக்கப்பட்டது. கண்ணேடாது பிறர்க்குத் துன்பஞ்செய்தலின், உன்னுதார் கண்ணிற்கு உவமையாகவுரைப்பினுமமையும். செல்லலெல்லாந் தெளிவித்தென்பதற்குச் செல்லலெல்லாவற்றையு நீக்கியென்பாருமுளர். வாழி அசைநிலை. கரந்துறைகிளவி உள்ளக்குறிப்புக் கரந்துறையுமொழி. மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த பெருமிதம். பயன் தோழிக்குணர்த்தி அவளான் முடிப்பலெனக்கருதி ஆற்றுமைநீங்குதல். (௯0)

## குறையுறத்துணிதல்.

குறையுறத்துணிதலென்பது பாங்கியை நினைந்து செல்லாநின்றவன் தெய்வத்தினருளால் அவ்விருவரும் ஓரிடத்தெதிர் நிற்பக் கண்டு, இவள் இவட்குச் சிறந்தாள் இனி யென்குறையுள்ளது சொல்லுவேனெனத் தன்குறைகூறத் துணியாநிற்றல். அதற்குச் செய்யுள்—

**குவளைக்கருங்கட்கொடியேரிடையிக்கொடிகடைக்க**
**ணுவளைத்தனதுயிரென்றதுதன்னோடுவமையில்லா**
**தவளைத்தன்பால்வைத்தசிற்றம்பலத்தானருளிலர்போற்**
**றுவளத்தலைவந்தவின்னலின்னேயினிச்சொல்லுவனே;**

ஓரிடத்தவரை யொருங்குகண்டுதன்
பேரிடர்பெருந்தகை பேசத்துணிந்தது.

இ - ள். குவளைக் கருங் கண் கொடி ஏர் இடை இக் கொடி கடைக்கண் - குவளைப்பூப்போலுங் கரியகண்ணிணையுங் கொடியை யொத்த இடையினையுமுடைய இக்கொடியினது கடைக்கண்— உவளைத் தனது உயிர் என்றது - உவளைத் தன்னுடையவுயிரென்று சொல்லிற்று, அதனால்—தன்னோடு உவமை இல்லாதவளைத் தன் பால்வைத்த சிற்றம்பலத்தான் அருள் இலர் போல் துவளத் தலை வந்த இன்னல் - தனக்கொப்பில்லாதவளைத் தன்னொருகூற்றின் கண்வைத்த சிற்றம்பலத்தானது அருளையுடையரல்லாதாரைப் போல் யான் வருந்தும்வண்ணம் என்னிடத்துவந்த இன்னாமை யை—இனி இன்னேசொல்லுவன் - இவட்கு இனி இப்பொழுதே சொல்லுவேன் எ - று.

கடைக்கணுவளையுயிரென்றதென்றது எனக்கிவ்விடர் செய்த கடைக்கண் இடர் நீக்கும் வாயிலுந் தானே கூறிற்றென்றவாறு. இன்னேயென்பது இவர்கூடிய இப்பொழுதே என்றவாறு. இனி யென்றது இவளிவட் கின்றியமையாமையறிந்த பின்னென்பது பட நின்றது. ஒருங்குகண்டு ஒருகாலத்துக்கண்டு. மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த பெருமிதம். பயன் மதியுடம்படுத்தற்கொருப்படுதல். (௫௧)

## வேழம்வினாதல்.

வேழம்வினாதலென்பது குறைகூறத் துணியாநின்றவன் என் குறையின்னதென்று இவளுக்கு வெளிப்படக் கூறுவேனாயின் இவள் மறுக்கவுங்கூடுமென உட்கொண்டு, என்குறை இன்னதென்று இவடானேயுணருமளவும் கரந்தமொழியாற் சில சொல்லிப்

பின் குறையுறுவதே காரியமெண, வேட்டைகருதிச் சென்முனாக அவ்விருவருழைச்சென்று நின்று, தன்காதறேன்ற இவ்விடத்தொரு மதயானைவரக் கண்டீரோவென வேழம் வினுவா நிற்றல். அதற்குச்செய்யுள்—

இருங்களியாயின்றியா னிறுமாப்பவின்பம்பணிவோர்
மருங்களியாவனலாடவல்லோன்றில்லையான்மலையீங்
கொருங்களியார்ப்பவுமிழ்மும்மதத்திருகோட்டொருநீள்
கருங்களியார்மதயானையுண்டோவரக்கண்டதுவே.

ஏழையரிருவரு மிருந்தசெவ்வியுள்
வேழம்வினுஅய் வெற்பன்சென்றது.

இ - ள். பணிவோர் மருங்கு இரும் களியாய் யான் இன்று இறுமாப்ப இன்பம் அளியா அனல் ஆட வல்லோன் - அடியவரிடத்தே அவரோடுகூடிப் பெரிய களிப்பையுடையேனுய் யான் இன்றிறுமாக்கும் வண்ணம் இன்பத்தை யெனக்களித்துத் தீயாடவல்லோன்—தில்லையான்-தில்லையான்—மலை ஈங்கு-அவனது மலையின் இவ்விடத்து—அளி ஒருங்கு ஆர்ப்ப - அளிகளொருங்கார்ப்ப—உமிழ் மும்மதத்து இரு கோட்டு நீள் கரும் களி ஆர் ஒரு மதயானை வரக் கண்டது உண்டோ - உமிழப்படாநின்ற மூன்று மதத்தையும் இரண்டுகோட்டையுமுடைய நீண்ட கரிய களியார்ந்த ஒருமதயானை வாராநிற்பக் கண்டதுண்டோ? உரைமின். எ - று.

மருங்கிறுமாப்பவெனக் கூடிற்று. அனலாடவென்பது அனலோடாடவெனவிரியும். ஆர்ப்ப வரவெனக்கூட்டுக. ஆர்ப்பவுமிழுமெனினுமமையும். நீட்சி விலங்குண்டாகிய நெடுமை. களி உள்ளச்செருக்கு. மதயானை மதமிடையறுத யானை. (௫உ)

## கலைமான்வினுதல்.

கலைமான்வினுதலென்பது வேழம்வினுவி உட்புகுந்த பின்னர், தான் கண்ணுலிடர்ப்பட்டமை தோன்ற நின்று, நும்முடைய கண்கள்போலுங் கணைபொருதலா லுண்டாகிய புண்ணேடு இப்புனத்தின்கண் ஒருகலைமான் வரக் கண்டீரோவென்று கலைமான் வினுவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

கருங்கண்ணனையறியாமைநின்றேன்றில்லைக் கார்ப்பொழில்
வாய், வருங்கண்ணனையவண்டாடும்வளரிளவல்லியன்னீ
ரிருங்கண்ணனையகணைபொருபுண்புணரிப்புனத்தின்
மருங்கண்ணனையதுண்டோவந்ததீங்கொருவான்கலையே.

சிலைமா னண்ணல்
கலைமான் வினுயது.

இ - ள். கரும் கண்ணனே அறியாமை நின்றேன் தில்லைக் கார்ப் பொழில் வாய்-கரியமாலே அவனறியாமற் றன்னையொளித்து நின்றவனது தில்லைவரைப்பினுண்டாகிய கரிய பொழிலிடத்து— வரும்கள் நனைய வண்டு ஆடும் வளர் இள வல்லி அன்னீர் - புறப் படா நின்ற கள்ளாற்றம் மேனி நனையும்வண்ணம் வண்டுகளாடும் வளராநின்ற இளையவல்லியை யொப்பீர்—இரும் கண் அனைய கணை பொரு புண் புணர் ஒரு வான் கலை அனையது இப் புனத்தின் மருங்கண் ஈங்கு வந்தது உண்டோ - நம்முடைய பெரிய கண்கள் போலுங் கணைபொருதலாலுண்டாகிய புண்ணைப்புணர்ந்த ஒரு வான் கலை அத்தன்மையது இப்புனத்தின்மருங்கு ஈங்கு வந்தது ண்டோ? உரைமின். எ - று.

கண்ணனென்பது கரியோனென்னும் பொருளதோர் பாகத ச்சிதைவு. அஃது அப்பண்புகுறியாது ஈண்டுப்பெயராய் நின்றமை யின், கருங்கண்ணனென்றார், சேற்றிற்பங்கயமென்றாற்போல. அறியாமை நின்றேனென்னுஞ் சொற்கள் ஒருசொன்னீரவாய் ஒளித்தோனென்னும் பொருள்பட்டு, இரண்டாவதற்கு முடிபா யின. ஐகாரம் அசைநிலையெனினுமமையும். வருங்கண்ணனையவெ ன்பதற்கு உண்டாகக்கடவ கள்ளையுடைய அரும்புகளை யுடைமை யான் வண்டு காலம்பார்த்து ஆடுமாறுபோல, நம் முள்ளத்து நெகி ழ்ச்சியுண்டாமளவும் நுமதுபக்கம் விடாது உழல்கின்றே னென் பது பயப்ப வருங்கண்ணனையையுடைய வென்றுரைப்பினுமமை யும். மருங்கென்பது மருங்கண்ணென ஈறுதிரிந்து நின்றது. அணித் தாகவென்னும்பொருட்டாய், அணி அண்ணெனக்குறைந்து நின்ற தெனினுமமையும். மருங்கண்ணனைய துண்டோ வென்பதற்கு அண்ணல் நையதென்று, புனத்தின்மருங்கு தலைமை நைதலையு டையதெனினுமமையும். (௫௯)

## வழிவினுதல்.

வழிவினுதலென்பது கலைமான்வினுவா நின்றவன், இவன் கருத்து வேறென்று தோழியறிய, அதனோடு மாறுபடநின்று, அது கூறீராயின் நும்மூர்க்குச் செல்லுநெறி கூறுமினென்று வழிவினு வாநிற்றல். அதற்குச்செய்யுள் —

**சிலம்பணிகொண்டசெஞ்சீறடிபங்கன்றன்சீரடியார், குல ம்பணிகொள்ளவெனைக்கொடுத்தோன்கொண்டுதாணணியுங்,**

கலம்பணிகொண்டிடமம்பலங்கொண்டவன்கார்க்கயிலைச், சி
லம்பணிகொண்டநுஞ்சீறூர்க்குரைமின்கள்சென்னெறியே.

கலைமான்வினைய கருத்துவேறறிய
மலைமானண்ணல் வழிவினையது.

இ - ள். சிலம்பு அணி கொண்ட செம் சீறடி பங்கன் - சிலம்புதானழகுபெற்ற செய்ய சிறிய அடியையுடையாளது கூற்றையுடையான்—தன் சீர் அடியார் குலம் பணி கொள்ள எனைக்கொடுத்தோன் - தன் மெய்யடியாரது கூட்டங் குற்றேவல்கொள்ள என்னைக்கொடுத்தவன்—தான் கொண்டு அணியும் கலம் பணி கொண்டு இடம் அம்பலம் கொண்டவன் - தான் கொண்டணியும் அணிகலம் பாம்பாகக்கொண்டு அம்பலத்தை இடமாகக்கொண்டவன்—கார்க் கயிலைச் சிலம்பு அணி கொண்ட நும் சீறூர்க்குச் செல் நெறி உரைமின்கள்-அவனது முகில்களையுடைய கைலைக்கட் சிலம்பழகுபெற்ற நுமது சிறியவூர்க்குச் செல்லு நெறியை உரைமின். எ - று.

கொண்டுகொடுத்தோனென இயைப்பாருமுளர். தனக்குத் தக்க தையலை இடத்து வைத்தானென்றுந் தன்னடியார்க்குத் தகாத என்னை அவர்க்குக் கொடுத்தானென்றும், அணிதற்குத் தகாத பாம்பை அணிந்தானென்றும், தனக்குத் தகுமம்பலத்தை இடமாகக் கொண்டானென்றும், மாறுபாட்டொழுக்கங் கூறியவாறும். கருத்துவேறறிய - வினையதற்கு மறுமொழி பெறாது பின்னுமொன்றை வினவுதலான் இவன்கருத்து வேறென்று தோழியறிய. சின்னெறியென்று பாடமாயின், சிறியநெறியென்றுரைக்க. சின்னெறியென்பது அந்நிலத்துப்பண்பு. (நிச)

## பதிவினாதல்.

பதிவினாதலென்பது மாறுபடநின்று வழி வினாவவும் அதற்கு மறுமொழி கொடாதாரை எதிர்முகமாகநின்று, வழிகூறீராயின் நும்பதி கூறுதல் பழியன்றே அது கூறுவீராமினென்று அவர்பதி வினாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஒருங்கடமூவெயிலொற்றைக்கணைகொள்சிற்றம்பலவன்
கருங்கடமூன்றுகுநால்வாய்க்கரியுரித்தோன்கயிலை
யிருங்கடமூடும்பொழிலெழிற்கொம்பரன்னீர்களின்னே
வருங்கடம்மூர்பகர்ந்தாற்பழியோவிங்குவாழ்பவர்க்கே.

பதியொடுபெயர்வினாய் மொழிபலமொழிந்து
மதியுடம்படுக்க மன்னன்வலிந்தது.

இ - ள். மூவெயில் ஒருங்கு அட ஒற்றைக் கணை கொள் சிற்றம்பலவன் - மூவெயிலையும் ஒருங்கே அடவேண்டித் தனியம்பைக்கொண்ட சிற்றம்பலவன்—கரும் கடம் மூன்று உகு நால் வாய்க் கரி உரித்தோன் - கரிய மதமூன்றுமொழுகாநின்ற நான்றவாயையுடைய கரியையுரித்தவன்--கயிலை இரும் கடம் மூடும் பொழில் எழில் கொம்பர் அன்னீர்கள் இன்னே வருங்கள் - அவனது கைலைக்கட் பெரியகாட்டான் மூடப்படும் பொழிற்கணிற்கின்ற எழிலையுடைய கொம்பையொப்பீராகிய நீங்கள் இங்கே வாரும்—தம் ஊர் பகர்ந்தால் இங்கு வாழ்பவர்க்குப் பழியோ - தமதூரையுரைத்தால் இம்மலைவாழ்வார்க்குப் பழியாமோ? பழியாயின் உரைக்கற்பாலீரல்லீர். எ - று.

இரண்டுமெதங் கடத்திற்பிறத்தலிற் பன்மைபற்றிக் கடமென்றார். கொம்பரன்னீர்களென்பது முன்னிலைப்பெயர். இன்னே வருங்களென்பது எதிர்முகமாக்கியவாறு. வாருமென்பது கூறுகின்றது. (௫௫)

## பெயர்வினாதல்.

பெயர்வினாதலென்பது பதிவினாவவும் அதற்கொன்றுங் கூறாதாரை, நும்பதிகூறுதல் பழியாயின் அதனையொழிமின் நும்பெயர் கூறுதல் பழியன்றே இதனைக்கூறுவீராமினென்று அவரது பெயர் வினாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

தாரென்னவோங்குஞ்சடைமுடிமேற்றனித்திங்கள்வைத்த
காரென்னவாருங்கறைமிடற்றம்பலவன்கயிலை
யூரென்னவென்னவும்வாய்திறவீரொழிவீர்பழியேற்
பேரென்னவோவுரையீர்விரையீர்ங்குழற்பேதையரே.

பேரமைத் தோளியர்
பேர்வினையது.

இ - ள். ஓங்கும் சடை முடிமேல் தார் என்னத் தனித் திங்கள் வைத்த-உயர்ந்த சடையாணியன்ற முடிமேல் தாராக ஒருகலையாகிய திங்களை வைத்த—கார் என்ன ஆரும் கறை மிடற்று அம்பலவன் கயிலை - கொண்டலென்று சொல்லும்வண்ணம் நிறைந்த கறுப்பையுடைத்தாகிய மிடற்றையுடைய அம்பலவனது கைலைக்கண்—ஊர் என்ன என்னவும் வாய்திறவீர் - நும்முடைய ஊர்கள் பெயர்

முதலாயினவற்றான் எத்தன்மையவென்று சொல்லவும் வாய்திறக்கின்றிலீர்—பழியேல் ஒழிவீர் - ஊர் கூறுதல் பழியாயின் அதனையொழிமின்—பேர் என்னவோ விரை ஈர்ங் குழல் பேதையரே உரையீர் - நும்முடைய பெயர்கள் எத்தன்மையவோ நறுநாற்றத்தையும் நெய்ப்பையுமுடையவாகிய குழலையுடைய பேதையீர், உரைப்பீராமின். எ - று.

தனித்திங்கள் ஒப்பில்லாத திங்களெனினுமமையும். ஓகாரம் வினா. தலைமகளுந் தோழியும் ஒருராரல்லரென்று கருதினான்போல ஊரென்னவெனப் பன்மையாற்கூறினான். என்னை, "இரந்து குறையுறா கிழவியுந் தோழியு—மொருங்குதலைப் பெய்த செவ்வி நோக்கிப், பதியும் பெயரும் பிறவும் வினாஅய்ப்—புதுவோன் போலப் பொருந்துபு கிளந்து—மதியுடம்படுத்தற்கு முரியனென்ப." * என்பதிலக்கணமாதலின். பேதையரேயெனச் சிறுபான்மை ஏகாரம் பெற்றது. ஊருஞ்சொல்லாதாரைப் பெயர்கேட்கவே வேறுகருத்துடையனென்பது விளங்கும். வாய்திறவாதொழிவீரென்பதூஉம் பாடம். (௫௬)

## மொழிபெறாதுகூறல்.

மொழிபெறாதுகூறலென்பது பெயர்வினாவவும் வாய்திறவாமையின், இப்புனத்தார் எதிர்கொள்ளத்தக்க விருந்தினரோடு வாய்திறவாமையை விரதமாகவுடையராதல் அதுவன்றி வாய்திறக்கின் மணிசிந்துமென்பதனைச் சரதமாகவுடையராதல் இவ்விரண்டனுளொன்று தப்பாதென்று கூறாநிற்றல். அதற்குச்செய்யுள் —

**இரதமுடையநடமாட்டுடையவரெம்முடையர்**
**வரதமுடையவணிதில்லையன்னவரிப்புனத்தார்**
**விரதமுடையர்விருந்தொடுபேச்சின்மைமீட்டதன்றேற்**
**சரதமுடையர்மணிவாய்திறக்கிற்சலக்கென்பவே.**

தேமொழியவர் வாய்மொழிபெறாது
மட்டவிழ்தாரோன் கட்டுரைத்தது.

இ - ள். இரதம் உடைய நடம் ஆட்டு உடையவர் - இனிமையையுடைய கூத்தாட்டையுடையவர்—எம் உடையர் - எம்முடைய தலைவர்—வரதம் உடைய அணி தில்லை அன்னவர் இப் புனத்தார் விருந்தொடு பேச்சின்மை விரதம் உடையர் - அவரது வரதமுடைய அழகிய தில்லையையொப்பாராகிய இப்புனத்துநின்ற இவ

* இறையனாரகப்பொருள். ௩.

்கள் எதிர்கொள்ளத்தக்க விருந்தினரோடு பேசாமையை விரதமாகவுடையர்—அது அன்றேல் - அதுவன்றாயின்—மீட்டு வாய்திறக்கின் சலக்கு என்ப மணி சரதம் உடையர் - பின் வாய்திறக்கிற் சலக்கென விழுவன முத்தமணிகளை மெய்யாகவுடையர். எ - று.

இரதமென்றது நாட்டியச்சுவையையன்று, கட்கினிமையை. நடமென்றது நாட்டியத்தையன்று, கூத்தென்னும் பொதுமையை. மீட்டென்பது பிறிதுமொன்றுண்டென்பதுபட வினைமாற்றாய் நிற்பதோரிடைச்சொல். இவையாறற்கும் மெய்ப்பாடு இளிவரலைச் சார்ந்தபெருமிதம். பயன் மதியுடம்படுத்தல். (௫௭)

## கருத்தறிவித்தல்.

கருத்தறிவித்தலென்பது நீயிர் வாய்திறவாமைக்குக் காரணமுடையீர் அதுகிடக்க இத்தழை நும்மல்குற்குத் தகுமாயின் அணிவீராமினெனத் தழைகாட்டிநின்று தன்கருத்தை அறிவியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வின்னிறவா ணுதல்வேனிறக்கண்மெல்லியலைமல்லற்
றன்னிறமொன்றிலிருத்திநின் றோன்றனதம்பலம்போன்
மின்னிறநுண்ணிடைப்பேரெழில்வெண்ணகைப்பைந்தொ
டியீர், பொன்னிறவல்குலுக்காமோமணிநிறப்பூந்தழையே.

உரைத்த துரையாது
கருத்தறி வித்தது.

இ - ள். வில் நிற வாள் நுதல் வேல் நிறக் கண் மெல்லியலை - வில்லினியல்பையுடைய வாணுதலையும் வேலினியல்பையுடைய கண்களையுமுடைய மெல்லியலை—மல்லல் தன் நிறம் ஒன்றில் இருத்தி நின்றோன் தனது அம்பலம் போல் - அழகையுடைய தன்றிருமேனியொன்றின்கண் இருத்தி நின்றவனது அம்பலத்தையொக்கும்—மின் நிற நுண் இடைப் பேர் எழில் வெள் நகைப் பைந் தொடியீர் - மின்னினியல்பையுடைய நுண்ணிய இடையையும் பெரிய வெழிலையும் வெள்ளிய முறுவலையுமுடைய பைந்தொடியீர்—மணி நிறப் பூந் தழை பொன் நிற அல்குலுக்கு ஆமோ - மணியினது நிறத்தையுடைய இப்பூந்தழை நும்பொன்னிற அல்குலுக்குத் தகுமோ தகுமாயின் அணிவீராமின். எ - று.

பொன்னிறத்திற்கு மணிநிறம் பொருத்தமுடைத்தென்பது கருத்து. பொன்னிறவல்குலென்று அல்குலின்றன்மை கூறியவத

றான், முன்னமே புணர்ச்சிநிகழ்ந்தமையு முண்டென்பது கூறிய வாறாயிற்று. ஆமோவென்ற ஓகாரம் கொடுப்பாரதுண்மகிழ்ச்சி யையும் கொள்வாரது தலைமையையும் விளக்கிநின்றது. மெய்ப்பா டும் பயனும் அவை. (௹அ)

## இடைவினாதல்.

இடைவினாதலென்பது தழைகாட்டித் தன்கருத்தறிவித்து அதுவழியாகநின்று நும்மல்குலும் முலையும் அதிபாரமாயிராநின் றன இவை இவ்வாறு நிற்றற்குக்காரணம் யாதோவென்று அவ ரிடை வினாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

கலைக்கீழகலல்குற்பாரமதாரங்கண் ணார்ந்திலங்கு
முலைக்கீழ்ச்சிறிதின்றிநிற்றன்முற்றாதன்றிலங்கையர்கோன்
மலைக்கீழ்விழச்செற்றசிற்றம்பலவர்வண்பூங்கயிலைச்
சிலைக்கீழ்க்கணையன்னகண்ணீரெதுநுங்கள்சிற்றிடையே.

வழிபதி பிறவினாய்
மொழிபல மொழிந்தது.

இ - ள். கலைக் கீழ் அகல் அல்குல் பாரமது - மேகலைக்குக் கீழாகிய அகன்றவல்குலாகிய பாரமது—ஆரம் கண் ஆர்ந்து இல ங்கு முலைக் கீழ்ச் சிறிது இன்றி நிற்றல் முற்றாது-முத்துவடம் கண் ணிற்கு ஆர்ந்திலங்காநின்ற முலையின்கீழ் இடை சிறிதின்றித் தானே நிற்றல் முடிவுபெறாது--அன்று இலங்கையர் கோன் மலைக்கீழ் விழச் செற்ற சிற்றம்பலவர் - இவ்வரையையெடுத்த அன்று இலங்கையர் கோன் இவ்வரைக்கீழ் வீழும்வண்ணஞ் செற்ற சிற்றம்பலவரது— வண் பூம் கயிலைச் சிலைக் கீழ்க் கணை அன்ன கண்ணீர் - வளவிய பொலிவையுடைய கைலையினிற்கின்ற சிலையின்கீழ்வைத்த கணை போலும் புருவத்தின் கீழுளவாகிய கண்ணையுடையீர்—நுங்கள் சிற்றிடை எது - நும்முடைய சிற்றிடை யாது? கட்புலனாகின்ற தில்லை. எ - று.

பாரமது நிற்றலெனவிவையும். பாரம் அதுவென எழுவாயும் பயனிலையுமாக்கி, முலைக்கீழ்ச் சிறிதாயினும் ஒன்றின்றி இவ்வுருவ நிற்றல் முற்றாதென்றுரைப்பாருமுளர். அதுவென்றும் எதுவென் றும் சாதிபற்றி ஒருமையாற்கூறினான். மெய்ப்பாடு அது. பயன் விசேடவகையான் மதியுடம்படுத்தல்.

மேலைப்பாட்டாறனும் வம்புமாக்கள் வினாவும் பெற்றியே கதுமெனத் தனது குறைதோன்றாவகை வினாவினான், இப்பாட்டி ரண்டிறனும் இவன்குறை நங்கண்ணதேயென்பது தோழிக்குப்

புலப்பட, இத்தழைநல்ல கொள்ளீரென்றும், நும்மிடை யாதென்றும் விணவிணனென்பது. (ருக)

மதியுடம்படுத்தல் முற்றிற்று.



# இருவருமுள்வழி யவன்வரவுணர்தல்.



இருவருமுள்வழியவன்வரவுணர்தலென்பது தலைமகளுந்தோழியுமுள்வழிச்சென்று, தலைமகன் கரந்தமொழியாற் றன்கருத்து அறிவிக்க, தோழி அவனிலைவறியாநிற்றல். அதுவருமாறு—

ஐயநாட லாங்கவையிரண்டு
மையறுதோழி யவன்வரவுணர்தல்.

இ-ள். ஐயுறுதல், அறிவுநாடல் எனவிவையிரண்டும் இருவருமுள்வழி யவன்வரவுணர்தலாம். எ-று. அவற்றுள்—

## ஐயுறுதல்.

ஐயுறுதலென்பது தலைமகன் தழைகொண்டுநின்று கரந்தமொழியாற் றன்கருத்தறிவிக்க, மேனியொளியிலனாய் இப்புனத்தினின்றும் போகாது யானையோடு ஏனம்விணவி இவ்வாறு பொய்கூறுநின்ற இவன் யாவனோவெனத் தோழி அவனையையுற்றுக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**பல்விலனாகப்பகலைவென்றோன்றில்லைபாடலர்போ**
**லெல்விலனாகத்தொடேனம்விணவிவன்யாவன்கொலாம**
**வில்விலனாகத்தழைகையில்வேட்டைகொண்டாட்டமெய்**
**யோர், சொல்விலனாகற்றவாகடவானிச்சுனைப்புனமே.**

அடற்கதிர்வேலோன் றொடர்ச்சிநோக்கித்
தையற்பாங்கி யையமுற்றது.

இ - ள். பல் இலன் ஆகப் பகலை வென்றோன் தில்லை பாடலர் போல் எல் இலன் - பல்லிலனாம்வண்ணம் பகலோனைவென்றவனது தில்லையைப் பாடாதாரைப்போல ஒளியையுடையனல்லன்—விணு நாகத்தொடு ஏனம் - ஆயினும் விணவப்படுகின்றன

யானையும் ஏனமுமாயிருந்தன—வில் இலன் - வில்லையுடைய னல்லன்—கையில் நாகத் தழை - கையின் நாகமரத்தின்றழைகளாயினும்—கொண்டாட்டம் வேட்டை - கொண்டாடப் படுகின்றது வேட்டை—மெய் ஓர் சொல் இலன் - கண்டவாற்றான் மெய்யாயிருப்பதொரு சொல்லையுமுடையனல்லன்—கற்ற வா ஆ - இவன் பொய்யுரைப்பக் கற்றவாறு என்! பொய்யுரைத்து வறிது போவானுமல்லன்—இச் சுனை புனம் கடவான் - ஈண்டொருகுறையுடையான்போல இச்சுனைப்புனத்தைக் கடவான்—இவன் யாவன் கொலாம் - இவன் யாவனோ. எ - று.

விறுவென்பது ஆகுபெயர். ஆ வியப்பின்கட்குறிப்பு. ஆகத் தோரேனமென்றுபாடமோதி, ஆகத்தொளியில னெனவுரைப்பாருமுளர். விறுப் என்பது பாடமாயின், வாராநின்றவென ஒரு சொல்வருவித்து முடிக்க. விறுய்க் கடவானென்று கூட்டுவாருமுளர். தையல்-புனையப்படுதல். மெய்ப்பாடு மருட்கை. பயன் உசாவியையந்தீர்தல். (க0)

## அறிவுநாடல்.

அறிவுநாடலென்பது இவன் யாவனோவென் றையுறுநின்ற தோழி பேராராய்ச்சியளாதலின், அவன் கூறியவழியே நாடாது வந்து தங்களிடைக்கே முடிதலின், இவ்வையர்வார்த்தை இருந்தவாற்றான் ஆழமுடைத்தாயிருந்ததென்று அவனினை வறியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**ஆழமன்னோவுடைத்திவ்வையர்வார்த்தையனங்கனைந்து**
**வீழமுன்னோக்கியவம்பலத்தான்வெற்பினிப்புனத்தே**
**வேழமுன்னாய்க்கலையாய்ப்பிறவாய்ப்பின்னு மென்றழையாய்**
**மாழைமென்னோக்கியிடையாய்க்கழிந்ததுவந்துவந்தே.**

வெற்பன்விறுய சொற்பதநோக்கி
நெறிகுழற்பாங்கி யறிவுநாடியது.

இ - ள். முன் அநங்கன் னைந்து வீழ நோக்கிய அம்பலத்தான் வெற்பின் இப் புனத்து - முற்காலத்து அனங்கன் அழிந்து பொடியாய்வீழ நோக்கிய அம்பலத்தானது வெற்பின் இப்புனத்தின்கண்ணே கூறுவது—முன் வேழமாய் - முன் வேழமாய்—கலையாய் - பின் கலையாய்—பிறவாய் - பின் வேறுசிலவாய்—பின்னும் மெல் தழையாய் - பின்னும் மெல்லியதழையாய்—வந்து வந்து-வந்து வந்து—மாழை மெல் நோக்கி இடையாய்க் கழிந்தது -

முடிவிற் பேதைமையையுடைய மெல்லிய நோக்கத்தையுடையாளது இடையாய்விட்டது—இவ்வையர் வார்த்தை ஆழம் உடைத்து - அதனான் இவ்வையர்வார்த்தை இருந்தவாற்றான் ஆழமுடைத்து. எ - று.

மன்னும் ஓவும் அசைநிலை. இப்புனத்தேயென்றது இவளிருந்தபுனத்தே யென்றவாறு. மெல்லிய நோக்கத்தை யுடையாள் இடைபோலப் பொய்யாய்விட்ட தென்பாருமுளர். பின்னுமென்றது முன்னைவினாவே ஐயந்தாராநிற்பப் பின்னுமொன்று கூறினானென்பதுபட நின்றது. தன்கண்வந்து முடிதலின் வந்து வந்தென்றான். சொற்பதம் - சொல்லளவு. அறிவுநாடியது-அறிவானாடியது. மெய்ப்பாடு மருட்கையைச்சார்ந்த பெருமிதம். பயன் ஐயந்தீர்தல்.

இருவருமுள்வழியவன்வரவுணர்தல் முற்றிற்று.



# முன்னுறவுணர்தல்.

வாட்டம்வினாதல் முன்னுறவுணர்தல்
கூட்டியுணருங் குறிப்புரையாகும்.

இ-ள். வாட்டம்வினாதல் எனவிஃதொன்றும் முன்னுறவுணர்தலாம். எ-று.

அது தலைமகன் இங்ஙனம் வினையதற்கெல்லாம் தோழி மறுமொழிகொடாளாகத் தலைமகன் வாடினான், வாடவே தலைமகளும் அதுகண்டு வாடினாள், ஆதலால் இருவரதுவாட்டமும் வினவப்படுதல். அன்றியும் முன்னர்த் தலைமகனது வாட்டத்தைப் பாங்கன் வினயதுபோலத் தலைவியது வாட்டத்தையும் பாங்கி வினாதலாம்.

முன்னுற்றதனையுணர்தலானே இதற்கு முன்னுறவுணர்தலென்று பெயராயிற்று. அஃதாவது தலைமகனைப் பாங்கன் வினயவாறுபோலத் தலைமகளையும் யாதனானோ இவள் வாடியதென ஐயுற்றுணர்தல். இவள் தலைமகளை வினவுவது இயற்கை யிறுதி இடந்தலையிறுதியினெனக்கொள்க. என்னை? தோழியும் பாங்கனைப்போலப் பிறறைஞான்றே தலைமகளை வினவப் பெறாளோவெனின், வினவாள். எற்றிற்கு? தலைமகளை ஒருபொழுதும் விடாத தோழி இவளை இத்தினங்காறுங்காணாளோவெனின், காணும். காணின், இயற்கைப் புணர்ச்சியது நீக்கத்து இவளதுவாட்டம் தோழி காணாதொழிவானேனெனின், இவரைக்கூட்டி முடித்த விதி தோழிக்

குத் தலைமகளது வாட்டம் புலனாகாமை மறைக்கும். என்னை? பாங் கற்கூட்டமும் இடந்தலைப்பாடும் நடக்கவேண்டி. அல்லதூஉம், தலைமகனுக்குந் தலைமகளுக்கும் வாட்டம் ஒக்க நிகழினும் இயற் கைப்புணர்ச்சியது இறுதிக்கட் டலைமகனைப் பாங்கன் கூடியும் தலைமகளைப் பாங்கிகூடியும் செய்தாராயினும், தலைமகனது வாட் டத்தைப் பாங்கன் வினவுதல் தலைமையாதலான் முன் வினவப் படும். பாங்கன் வினவியபின்னர்ப் பாங்கி வினவப்படும். ஆதலால் இடந்தலைப் பாட்டினிறுதியே தோழிக்கு வாட்டம் வினாதற்கு இடமாயிற்றெனவறிக.

கூட்டியுணருங் குறிப்புரையாகுமென்றது இந்த வாட்டம் வினாதற்குப் பக்கக்கிளவியாகச் சேறல் துணிதல் முதலாக முன்னு ரைக்கப்பட்ட கிளவியெல்லாங் கூட்டியுரைத்துக் கொள்ளப்படு மென்றவாறு. என்னை பக்கக்கிளவியாமாறு? தலைமகன் தனது வாட்டத்தால் அங்ஙனம் பலவும் வினயனவெல்லாம் தலைமகள் தனது வாட்டத்தாலுரைத்தாற்போலாயின. என்னை, அவ்வளவெ ல்லாம் அவன்வினயதற்குத் தோழி மறுமொழி கொடாது நிற்றலா னெனவறிக.

## வாட்டம்வினாதல்.

வாட்டம் வினாதலென்பது தலைமகன் மதியுடம்படுத்து வருந் தாநிற்பக்கண்டு, எம்பெருமான் என்பொருட்டான் இவ்வாறு இடர்ப்படாநின்றானெனத் தலைமகள் தன்னுள்ளே கவன்று வரு ந்தாநிற்க, அதுகண்டு, சுனையாடிச் சிலம்பெதிரழைத்தோ பிறிதொ ன்றினானோ நீ வாடியதென்றோவெனத் தோழி தலைமகளது வாட் டம் வினவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

நிருத்தம்பயின்றவன்சிற்றம்பலத்துநெற்றித்தனிக்க
ணொருத்தன்பயிலுங்கயிலைமலையினுயர்குடுமித்
திருத்தம்பயிலுஞ்சுனைகுடைந்தாடிச்சிலம்பெதிர்கூய்
வருத்தம்பயின்றுகொல்லோவல்லிமெல்லியல்வாடியதே.

மின்னிடைமடந்தை தன்னியனோக்கி
வீங்குமென்முலைப் பாங்கிபகர்ந்தது.

இ - ள். சிற்றம்பலத்து நிருத்தம் பயின்றவன் - சிற்றம்பலத் தின்கண் நிருத்தத்தை யிடைவிடாதேயாடியவன்--நெற்றித் தனிக் கண் ஒருத்தன் - நெற்றியிலுண்டாகிய தனிக்கண்ணையுடைய ஒப் பிலாதான்—பயிலும் கயிலை மலையின் உயர் குடுமி - அவன் பயி

லுங் கைலையாகிய மலையினது உயர்ந்தவுச்சியில்—திருத்தம் பயி லும் சுனை குடைந்து ஆடி-புண்ணியநீர் இடையறாது நிற்குஞ் சுனையைக் குடைந்தாடி—சிலம்பு எதிர் கூய்-சிலம்பிற் கெதிரழைத்து—வருத்தம் பயின்று கொல்லோ-இவ்வாறு வருத்தத்தைச் செய்யும் விளையாட்டைப் பயின்றோ பிறிதொன்றினாலோ—வல்லி மெல்லியல் வாடியது-வல்லிபோலும் மெல்லியவியல்பினையுடையாள் வாடியது. எ-று.

வருத்தம் ஆகுபெயர். மெய்ப்பாடு மருட்கை. பயன் தலைமகட்குற்ற வாட்டமுணர்தல். (சுஉ)

மூன்றுறவுணர்தல் முற்றிற்று.



# குறையுறவுணர்தல்.



குறையுறவுணர்தலாவது தலைமகன் குறையுறத் தோழி அதனைத் துணிந்துணராநிற்றல். அதுவருமாறு—

குறையுற்றுநிற்ற லவன்குறிப்பறித
லவள்குறிப்பறிதலோ டவர்நினைவெண்ணல்
கூறியநான்குங் குறையுறவுணர்வெனத்
தேறியபொருளிற் றெளிந்திசினோரே.

இ-ள். குறையுற்றுநிற்றல், அவன்குறிப்பறிதல், அவள்குறிப்பறிதல், இருவர்நினைவுமொருவழியுணர்தல் எனவிவைநான்கும் குறையுறவுணர்தலாம். எ-று. அவற்றுள்—

## குறையுற்றுநிற்றல்.

குறையுற்று நிற்றலென்பது தலைமகளது வாட்டங்கண்டு ஐயுறு நின்ற தோழியிடைச்சென்று, யான் உங்களுக்கெல்லாத் தொழிலுக்கும் வல்லேன் நீயிர் வேண்டுவதொன்று சொல்லுமின் யான் அது செய்யக்குறையில்லையென இழிந்தசொல்லால் தலைமகன் தன்னினைவு தோன்ற ஐயுறக்கூறுநிற்றல்.

படுக்கோகடலின்விடுதிமிலன்
படுக்கோபணிலம்பலகுளிக்
கொடுக்கோவளைமற்றுநும்
தொடுக்கோபணியீரணி

கறையுற்ற வேலவன்
குறை யுற்றது.

இ - ள். விடு திமில் கடலின் மடுக்கோ - விடப்படுந் திமிலைக் கடலின்கட் செலுத்துவேனோ—அன்றி மறி திரை மீன் படுக்கோ - அன்றிக் கீழ்மேலாந் திரையையுடைய கிளர்ந்த கடலிற்புக்கு மீனைப்படுப்பேனோ—பல பணிலம் குளிக்கோ - ஒருகுளிப்பின்கட் பல பணிலங்களையுமெடுப்பேனோ—பரன் தில்லை முன்றில் வளை கொடுக்கோ - பரனது தில்லைமுற்றத்திற் சென்று எல்லாருங்காணச் சங்கவளைகளை விற்பேனோ—மற்று நும் ஐயர்க்கு ஆய குற்றேவல் செய்கோ - அன்றி நும்மையன் மார்க்குப்பொருந்தின குற்றேவல்களைச் செய்வேனோ--அணி ஈர் மலர் நும் சுரிகுழற்குத் தொடுக்கோ - அணியப்படுந் தேனுலீரிய மலரை நுஞ்சுரிகுழற்குத் தொடுப்பேனோ—பணியீர் - நீயிர்வேண்டியது சொல்லுமின். எ - று.

மற்று வினைமாற்று. இவன் உயர்ந்த தலைமகனாதலின் அவர் தன்னை வேறுபடவுணராமைக் கூறியவாறு. முன்னிரந்து குறையுறுதற் கிடங்காட்டிக் குறையுற வுணர்தற்கு இயைபுபடக் குறையுறு மாற்றை ஈண்டுக்கூறினான். இது திணைமயக்கம். என்னை, "உரிப்பொரு ளல்லன மயங்கவும் பெறுமே." * எ-ம். "புனவர் தட்டைபுடைப்பி னயலிற் சந்துஉகிரலமருங்கழனியும் பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழுமே." எ-ம். சொன்னாராகலின். மெய்ப்பாடு இளிவரல். பயன் குறையுறுதல். (௪௬)

## அவன்குறிப்பறிதல்.

அவன்குறிப்பறிதலென்பது குறையுறுகின்றவன் முகத்தே தலைமகளது செயல் புலப்படக்கண்டு, இவ்வண்ணல் குறிப்பு இவளிடத்ததெனத் தோழி தலைமகனது நினைவு துணிந்துணராநிற்றல். அதற்குச்செய்யுள் —

அளியமன் னும்மொன் றுடைத்தண்ணலெண்ணரன் றில்லையன்னாள், கிளியைமன் னுங்கடியச்செல்லகிற்பிற்கிளராளகத்தளியமர்ந்தேறின்வறிதேயிருப்பிற்பளிங்கடுத்த, வொளியமர்ந்தாங்கொன் றுபோன்றென் றுதோன்றுமொளிமுகத்தே.

ரிதன் சிற்றிடைப்பாங்கு
றிப்பறிந்தது.

றாள் மன்னும் கிளியைக் கடியச்
யொப்பாள் புனத்துமன்னுங்

கிளியைக் கடிவதற்குச் சிறிதகல நிற்பினும்—கிளர் அளகத்து அளி அமர்ந்து ஏறின் - இவளுடைய விளங்காநின்ற அளகத்தின்கண் வண்டுகள் மேவியேறினும்—வறிதே இருப்பின் - இவள் வாளாவிருப்பினும்—ஒளி முகத்து பளிங்கு அடுத்த ஒளி அமர்ந்தாங்கு - இவனதொளியையுடைய முகத்தின்கண்ணே பளிங்கு தன்னிறத்தைவிட்டுத் தன்னையடுத்த நிறத்தை மேவினாற்போல—ஒன்று போன்று ஒன்று தோன்றும் - முன் வேறொன்றுபோன்றிருந்து பின்னிவள்குறிப்பாகிய வேறொன்று தோன்றுகின்றது, அதனால்-- அளிய அண்ணல் எண் மன்னும் ஒன்று உடைத்து - அளிய அண்ணலது குறிப்பு மன்னுமொன்றுடைத்து; அஃதிவள்கண்ணதே போலும். எ - று.

கிளியைமன்னுமென்புழி மன்னும் அசைநிலையெனினுமமையும். ஒன்றுபோன்றொன்று தோன்றுமென்றது கிளியைக் கடியச் சிறிதுபுடை பெயரின் நெட்டிடைகழிந்தாற்போல ஆற்றுதலானும், வண்டுமூசப் பொருளொன்று வருந்தி வண்டையோச்சுவான் போலச் சேறலானும், வாளாவிருப்பிற் கண்டின்புறுதலானும், இவள்கண்ணிகழ்ச்சி இவன்முகத்தே புலப்படாநின்றது என்றவாறு. ஏறி வறிதேயிருப்பினென்பது பாடமாயின், அளியேறி அளகத்தின்கட் சிறிதிருப்பினுமெனவுரைக்க. ஒளிர்முகமே யென்பதூஉம் பாடம். (சுச)

## அவள்குறிப்பறிதல்.

அவள் குறிப்பறிதலென்பது தலைமகனது நினைவறிந்த தோழி இவளிடத்து இவனினைவேயன்றி இவனிடத்து இவள் நினைவுமுண்டோவெனத் தலைமகளைநோக்க, அவண்முகத்தேயும் அவன்செயல் புலப்படக்கண்டு, இவ்வொண்ணுதல் குறிப்புமொன்றுடைத்தெனஅவனினைவுந் துணிந்துணராநிற்றல். அதற்குச்செய்யுள் —

பிழைகொண்டொருவிக்கெடாதன்புசெய்யிற்பிறவியென்னு, முழைகொண்டொருவன்செல்லாமைநின்றம்பலத்தாடுமுன்னோ, னுழைகொண்டொருங்கிருநோக்கம்பயின்றவெம்மொண்ணுதன்மாங், தழைகொண்டொருவனென்னுமுன்னமுள்ளந்தழைத்திடுமே.

ஆங்கவள் குறிப்புப்
பாங்கி பகர்ந்தது.

இ - ள். பிழை கொண்டு ஒருவிக் கெடாது ஒருவன் அன்பு செய்யின் - பிழைத்தலைப்பொருந்தித் தன்கட் செல்லாது நீங்கி

இவ்வாறு கெடாதே ஒருவன் அன்புசெய்யுமாயின்—பிறவி என்னும் முழை கொண்டு செல்லாமை - அவன் பிறவியென்னுநின்ற பாழியையடைந்து செல்லாதவண்ணம்—அம்பலத்து நின்று ஆடும் முன்னோன் - அம்பலத்தின்கணின்றாடும் எல்லாப்பொருட்கும் முன்னாயவனது—உழை கொண்டு-உழைமானை மருங்கேயுடையவனது—இரு நோக்கம் ஒருங்கு பயின்ற எம் ஒண்ணுதல் - வெள்ளைநோக்கமும் அவ்வுழைக்கில்லாத கள்ளநோக்கமுமாகிய இரு நோக்கத்தையும் ஒருங்கே செய்யக்கற்ற எம்முடைய ஒண்ணுதல்—மாந் தழை கொண்டு ஒருவன் என்ற முன்னம் - மாந்தழையைக் கொண்டொருவனென்று சொல்லுவதன்முன்—உள்ளம் தழைத்திடும் - உள்ளந்தழையாநின்றாள்; அதனால் இவள்குறிப்பு இவன் கண்ணதேபோலும். எ - று.

அடைந்தார் பிழைப்பின், தலையாயினார் பிழையையுட்கொண்டமைதலும், இடையாயினார் அவரைத் துறத்தலும், கடையாயினார் அவரைக்கெடுத்தலும் உலகத்தன்மையின், அம்மூவகையுஞ் செய்யாதெனினுமமையும். 'பிறிதுரைப்பாருமுளர். ஒருவியென்னும் வினையெச்சம் கெடாதென்னு மெதிர்மறைவினையெச்சத்திற் கெடுதலோடு முடிந்தது. (சுடு)

## இருவர் நினைவுமொருவழியுணர்தல்.

இருவர் நினைவுமொருவழியுணர்தலென்பது இருவர் நினைவுங் கண்டு இன்புறுநின்றதோழி இவ்விருவரும் இவ்விடத்து வந்தகாரியம் இவன்முகமாகிய தாமரைக்கண் இவள்கண்ணாகிய வண்டு இன்பத்தேனையுண்டு எழில்பெறவந்த இத்துணையல்லது பிறிதில்லையென அவ்விருவரது நினைவுந்துணிந்துணராநிற்றல். அதற்குச்செய்யுள்—

மெய்யேயிவற்கில்லைவேட்டையின்மேன்மனமீட்டிவளும்
பொய்யேபுனத்தினைகாப்பதிறைபுலியூரனையாண்
மையேர்குவளைக்கண்வண்டினம்வாழுஞ்செந்தாமரைவா
யெய்யேமெனினுங்குடைந்தின்பத்தேனுண்டெழிறருமே.

அன்புறுநோக் காங்கறிந்
தின்புறுதோழி யெண்ணியது.

இ - ள். இறை புலியூர் அனையாள் மை ஏர் குவளைக் கண் வண்டு இனம் - இறைவனது புலியூரை யொப்பாளுடைய மைய ழகையுடைய குவளைபோலுங்கண்ணாகிய வண்டினம்—வாழும் செந்

தாமரை வாய் - தான் வாழ்தற்குத் தரும் இவன் முகமாகிய செந் தாமரை மலர்க்கண்—எய்யேம் எனினும் - யாமறியேமாயினும்—குடைந்து இன்பத் தேன் உண்டு - குடைந்து இன்பமாகிய தேனை யுண்டு—எழில் தரும் - எழில்பெறுகின்றது, அதனால்—இவற்கு மெய்யே வேட்டையின் மேல் மனம் இல்லை - இவற்கு மெய்யாகவே வேட்டையின்மேல் உள்ளமில்லை—இவளும் புனத்தினை காப்பது பொய்யே-இவளும் புனத்தினையைக் காப்பது பொய்யே. எ-று.

மீட்டென்பதற்கு மீட்டதன்றேலென்புழி உரைத்ததுரைக்க. ஏர்குவளையென்னுமியல்பு புறனடையாற்கொள்க. வண்டினமென்றாள், நோக்கத்தின் பன்மை கருதி. எய்யேமெனினு மென்பதற்கு ஒருவரையொருவரறியேமென்றிருப்பினு மெனினுமமையும். எழிறருதல் எழிலைப்புலப்படுத்துதல். இன்புறுதோழி - இருவர் காதலையுங்கண்டின்புறுதோழி. ஐயநீங்கித்தெளிதலான் இன்புறு மெனினுமமையும். அன்றியும் இவளுடையநலத்திற்கேற்ற நலத்தை யுடைய தலைமகனைக் கண்டின்புறுந்தோழி. என்னை, களவொழுக்கத்தில் எழினல முடையானொருவனைக்கண்டு இன்புறக்கடவளோவெனின், எழினலமேயன்று, பின் அறத்தொடு நிலைநின்று கூட்டுகை அகத்தமிழினதிலக்கணமாதலால் தன்குரவர் வினவத் தானறத்தொடு நிற்குமிடத்துக் குரவர் தாமேசென்று மகட்கொடுக்குங் குடிப்பிறப்பினால் உயர்ச்சியையுடையனாதலாலும் இன்புற்றாள். இவைமூன்றற்கும் மெய்ப்பாடு பெருமிதம். பயன் துணிந்துணர்தல். இவைமூன்றும் குறையுறவுணர்தல். என்னை, "இருவரு முள்வழி யவன்வர வுணர்தன்—முன்னுற வுணர்தல் குறையுற வுணர்தலென்—றம்மூன் றென்ப தோழிக் குணர்ச்சி." * என்பவாகலின்.

குறையுறவுணர்தல் முற்றிற்று.

## நாணநாட்டம்.

இனிமுன்னர் "நன்னிலைநாணம்" என்றோதப்பட்ட நாணநாட்டமென்பது இருவர்நினைவும் ஐயமறத் துணிந்ததோழி அவரது கூட்டமுண்மை அறிவது காரணமாகத் தலைமகளை நாணநாடா நிற்றல். நன்னிலைநாணமென்றது நல்லநிலைபெற்ற நாணம். நல்லநிலையாவது நாணவும் நடுங்கவுநாடுதல் அகத்தமிழிலக்கணமன்றாதலான் இக்கோவை இஃதாமென்னுமிடம் பெற்றதாம். என்னை,

* இறையனாரகப்பொருள். எ.

தலைமகள் தனக்குத் தலைமகனோடுண்டாகிய புணர்ச்சியொழுக்கத்துக்கு இவள் காவற்றோழியாகையான் இடையூறுமென்னும் உள்ளத்தளாய்நின்று, இவ்வொழுக்கத்தைத் தோழியறியின் நன்றென்னும் நினைவு வாராநிற்க, அவ்விடத்திலே இவள் நாணநாடுகையின், நன்னிலை நாணமென்றார். என்னை,/ "நாணவு நடுங்கவு நாடாடோழி—காணுங் காலைத் தலைமக டேத்து." என்பவாகலின்.

பிறைதொழுகென்றல் பின்னுமவளை
யுறவெனவேறு படுத்தியுரைத்தல்
சுனையாடல்கூற றோற்றங்கண்டு
புணர்ச்சியுரைத்தல் பொதுவெனக்கூறி
மதியுடம்படுதல் வழிநாணனடுங்கல்
புலிமிசைவைத்தல் புகலுங்காலே.

இ-ள். பிறைதொழுகென்றல், வேறுபடுத்துக்கூறல், சுனையாடல் கூறிநகைத்தல், புணர்ச்சியுரைத்தல், மதியுடம்படுதல் எனவிவையைந்தும் நாணநாட்டமாம். புலிமிசைவைத்தல் எனவிஃதொன்றும் நடுங்கநாட்டமாம். எ - று. அவற்றுள்—

## பிறைதொழுகென்றல்.

பிறைதொழுகென்றலென்பது பிறையைக்காட்டித் தான்றொழுதுநின்று, நீயும் இதனைத்தொழுவாயாகவெனத் தோழி தலைமகளது புணர்ச்சிநினைவறியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மைவார்கருங்கண்ணிசெங்கரங்கூப்புமறந்துமற்றப்
பொய்வானவரிற்புகாதுதன்பொற்கழற்கேயடியே
னுய்வான்புகவொளிர்தில்லைநின்றோன்சடைமேலதொத்து
ச், செவ்வானடைந்தபசுங்கதிர்வெள்ளைச்சிறுபிறைக்கே.

பிறைதொழுகென்று பேதைமாதரை
நறுநுதற்பாங்கி நாணநாட்டியது.

இ - ள். மறந்தும் பொய் அவ் வானவரில் புகாது - மறந்தும் பொய்ம்மையையுடைய அவ்வானவரிடத்துப் புகாதே—தன் பொற் கழற்கே அடியேன் உய்வான் புக - தன்னுடைய பொன்றுனியன்ற கழலையுடைய திருவடிகளிலே அடியேன் உய்யவேண்டிப்புக—ஒளிர் தில்லை நின்றோன் சடைமேலது ஒத்து - விளங்குந் தில்லைக்கட் கட்புலனாய் நின்றவனுடைய சடைக்கண்ணதாகிய

பிறையையொத்து—செவ்வான் அடைந்த பசுங்கதிர் வெள்ளைச் சிறு பிறைக்கு - செக்கர்வானையடைந்த செவ்விக் கதிரையுடைய வெள்ளையாகிய சிறிய பிறைக்கு—மை வார் கருங்கண்ணி - மையை யுடைய நெடிய கரிய கண்ணினையுடையாய்—செங்கரம் கூப்பு - நினது செய்யகைகளைக் கூப்புவாயாக. எ - று.

மறந்துமென்பது ஈண்டு அறியாதுமென்னும் பொருட்டாய் நின்றது. மற்று அசைநிலை. மற்றையென்பது பாடமாயின், அல் லாத பொய்வானவரென்றுரைக்க. இனமல்லராயினும் இனமாக உலகத்தாரால் கூறப்படுதலின் அவ்வாறு கூறினார். "மூவரென் றேயெம் பிரானொடு மெண்ணி."* என்பதூஉம்,அக்கருத்தே பற்றி வந்தது. பிறர்கூறும் பெருமை அவர்க்கின்மையிற் பொய்வானவ ரென்றார். எனக்குப்பொறியுணர்வல்ல தின்மையிற் கணகவருந் திருமேனிகாட்டி என்னை வசித்தானென்னுங் கருத்தான், உய் வான் புகத்தில்லை நின்றேனென்றார். சடை செக்கர்வானத்திற் குவமை. (சுஎ)

## வேறுபடுத்துக்கூறல்.

வேறுப்படுத்துக் கூறலென்பது பிறைதொழாது தலைசாய்த்து நாணி நிலங்கிளையாநிற்பக் கண்டு, பின்னும் இவள்வழியே யொழுகி இதனையறிவோமென உட்கொண்டு, நீபோய்ச் சுனையாடிவாவெ ன்ன, அவளும் அதற்கிசைந்துபோய் அவனோடு தலைப்பெய்துவர, அக்குறியறிந்து அவளை வரையணங்காகப் புனைந்து வேறுபடுத்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**அக்கின்றவாமணிசேர்கண்டனம்பலவன்மலயக்**
**திக்குன்றவாணர்கொழுந்திச்செழுந்தண்புனமுடையா**
**ளக்குன்றவாறமர்ந்தாடச்சென்றாளங்கமவ்வவையே**
**யொக்கின்றவாறணங்கேயினுங்காகுமுனக்கவளே.**

வேய்வளைத்தோளியை வேறுபாடுகண்
டாய்வளைத்தோழி யணங்கென்றது.

இ - ள். அக்கு தவா மணி சேர் கண்டன் - அக்காகிய நல்ல மணிபொருந்திய மிடற்றையுடையான்—அம்பலவன் - அம்பல வன்—மலயத்து இக் குன்றவாணர் கொழுந்து இச் செழுந் தண் புனம் உடையாள் - அவனது பொதியின் மலயத்தின்கணுளராகிய இக்குன்றவாணருடைய மகளாகிய வள்ளிய இத்தண்புனங் காவ

* திருவாசகம், திருச்சாழல். ௬.

னுடையாள்—அக் குன்ற ஆறு அமர்ந்து ஆடச் சென்றாள் - அக் குன்றத்தின்கணுண்டாகிய ஆற்றைமேவி ஆடப்போயினாள்—அங்கம் அவ்வவையே ஒக்கின்ற ஆறு - நின்னுறுப்புக்கள் அவளுறுப்புக்களாகிய அவற்றையேயொக்கின்றபடி—அணங்கே - என்னணங்கே—உனக்கு அவள் இணங்கு ஆகும் - நினக்கு அவளிணங்காகும்; அதனால் அவளைக் கண்டு போவாயாக. எ - று.

இன் அல்வழிச்சாரியை. மலயத்திக்குன்றமென்று இயைப்பாருமுளர். (கூஅ)

## சுனையாடல்கூறிநகைத்தல்.

சுனையாடல் கூறிநகைத்தலென்பது வேறுபடுத்துக்கூற நாணல்கண்டு, சுனையாடினால் இவ்வாறு அழிந்தழியாத குங்குமமும் அளகத்தப்பிய தாதும் இந்நிறமுந்தருமாயின் யானுஞ் சுனையாடிக் காண்பேனெனத் தோழி தலைமகளோடு நகையாடா நிற்றல். அதற்குச்செய்யுள்—

செந்நிறமேனிவெண்ணீறணிவோன்றில்லையம்பலம்போ
லந்நிறமேனிநின்கொங்கையிலங்கழிகுங்குமமு
மைந்நிறவார்குழன்மாலையுந்தாதும்வளாய்மதஞ்சே
ரிந்நிறமும்பெறின்யானுங்குடைவனிருஞ்சுனையே.

மாணநாட்டிய வார்குழற்பேதையை
நாணநாட்டி நகைசெய்தது.

இ - ள். செந் நிற மேனி வெள் நீறு அணிவோன் தில்லை அம்பலம்போல் - செய்ய நிறத்தையுடைய மேனிக்கண் வெள்ளிய நீற்றை அணிவோனது தில்லையம்பலத்தையொக்கும்—அம் நிற மேனி நின் கொங்கையில் அங்கு அழி குங்குமமும் - அழகிய நிறத்தையுடைத்தாகிய மேனியையுடைய நின்னுடைய கொங்கைகளில் அவ்விடத்தழிந்த குங்குமத்தையும்—மை நிற வார்குழல் மாலையும் - மையைப்போலு நிறத்தையுடைய நெடிய குழலின் மாலையையும்—தாதும் - அளகத்தப்பிய தாதையும்—வளாய் மதம் சேர் இந் நிறமும் பெறின் - மேனிமுழுதையுஞ் சூழ்ந்து மதத்தைச் சேர்ந்த இந்நிறத்தையும் பெறுவேனாயின்—இருஞ் சுனை யானும் குடைவன்-நீ குடைந்த பெரியசுனையை யானுங்குடைவேன். எ-று.

அம்பலம்போன் மேனியெனவியையும். அங்கழிகுங்குமமென்றது முயக்கத்தான் அழியும் அவ்விடத்தழிந்த குங்குமம் என்றவாறு. மைந்நிறவார்குழற்கண் மாலையுந் தாதும் வளாவ இதனையும்

இதனையும் பெறினென எச்சந்திரித்துரைப்பினுமமையும். வளாவு தல் புணர்ச்சிக்காலத்தில் மாலையின் முறிந்தமலரும் அளகத்தப்பிய தாதுஞ் சிதறிக் குங்குமத்தினழுந்தி வாங்குதற்கருமையாக விரவு தல். மதமென்றது காமக்களிப்பாலுண்டாகிய கதிர்ப்பை. (சுகூ)

## புணர்ச்சியுரைத்தல்.

புணர்ச்சியுரைத்தலென்பது சுனையாடல்கூறி நகையாடாநின்ற தோழி, அதுகிடக்க நீயாடிய அப்பெரிய சுனை தான் கண்சிவப்ப வாய் விளர்ப்ப அளிதொடரும் வரைமலரைச் சூட்டவற்றோ சொல்வா யாகவெனப் புணர்ச்சி உரையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பருங்கண்கவர்கொலைவேழப்படையோன்படப்படர்தீத்
தருங்கண்ணுதற்றில்லையம்பலத்தோன்றடமால்வரைவாய்க்
கருங்கண்சிவப்பக்கனிவாய்விளர்ப்பக்கண்ணாரளிபின்
வருங்கண்மலைமலர்சூட்டவற்றோமற்றவ்வான்சுனையே.

மணக்குறி நோக்கிப்
புணர்ச்சி யுரைத்தது.

இ - ள். பருங் கண் கவர் கொலை வேழப் படையோன் பட - பரிய கண்ணையும் விரும்பப்படுங் கொலையையுமுடைய கருப்புச்சி லையாகிய படையையுடையவன் மாள—படர் தீத் தரும் கண் நுதல் தில்லை அம்பலத்தோன் தட மால் வரைவாய் - செல்லுந் தீயைத்தருங் கண்ணையுடைத்தாகிய நுதலையுடைய தில்லையம்பலத் தானது பெரிய மால்வரையிடத்து—அவ்வான் சுனை-நீயாடிய அப் பெரியசுனை—கருங் கண் சிவப்ப கனிவாய் விளர்ப்ப - கரிய கண் சிவப்பத் தொண்டைக்கனிபோலும் வாய் விளர்ப்ப—அளி பின் வரும் கண் ஆர் கள் மலை மலர் சூட்ட வற்றோ - அளிகள் பின்றொ டர்ந்துவருங் கண்ணிற்கு ஆருங்கள்ளையுடைய மலைமலரைச் சூட் டவற்றோ? சொல்வாயாக. எ - று.

பருங்கண்ணென மெலிந்துநின்றது. தடமும் மாலும் பெரு மையாகலின் மிகப்பெரியவென்பது விளங்கும். தடம் தாழ்வரை யெனினுமமையும். வருங்கண்வரை மலரென்பது பாடமாயின், அளிதொடரு மிடத்தையுடைய வரைமலரெனக. இடமென்றது பூவினேகதேசத்தை. இன்னும் வரைமலரென்பது ஒருபூவை முழு துஞ்சூட்டினாயின் தலைவி அதனையறிந்து பேணவேண்டி வாங் குதலைக்கூடும். ஆகையால் இவளிஃதறியாமற் றோழியறிவது பய னாக ஒருபூவின் முறித்ததொருசிறிய விதழைச் சூட்டினான் ஆகை

யான் வரைந்தமலரென்றுளாம். மற்று அசைநிலை. இவைநான்கும் நாணநாட்டம். மெய்ப்பாடு நகை. பயன் கரவுநாடி யுணர்தல்.

இவை முன்னுறவுணர்தலின் விகற்பம். இவைநான்கும் பெருந்திணைப்பாற்படும். என்னை, அகத்தமிழ்ச்சிதைவாகலான். என்னை, "கைக்கிளை பெருந்திணை யகப்புற மாகும்." இவற்றுள், கைக்கிளை யென்பது ஒருதலைக்காமம். பெருந்திணையென்பது பொருந்தாக் காமம். என்னை "ஒப்பில் கூட்டமு மூத்தோர் முயக்கமுஞ்—செப்பிய வகத்தமிழ்ச் சிதைவும் பெருந்திணை." என்பவாகலின். நாணநாடலாகாமை: இவள்பெருநாணினளாதலான், தான்மறைந்து செய்தகாரியத்தைப்பிறரறியின் இறந்துபடும்; ஆதலான், நாணநாட்டமாகாது. நடுங்கநாட்டமுமாகாது, இருவர்க்கும் உயிரொன்றாகலான் இறந்துபடுமாதலின். ஆதலால், அகத்தமிழிற்கு இவை வழுவாயின. இனி இதற்கு வழுவமைதி "நன்னிலைநாணம்." என்பதனானறிக.()

## மதியுடம்படுதல்.

மதியுடம்படுதலென்பது பலபடியும் நாணநாடிக் கூட்டமுண்மையுணர்ந்ததோழி இம்மலையிடத்து இவ்விருவர்க்கும் இன்பத்துன்பங்கள் பொதுவாய் வாராநின்றன, அதனால் இவ்விருவர்க்கும் உயிரொன்றேயென வியந்துகூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**காகத்திருகண்ணிற்கொன்றேமணிகலந்தாங்கிருவ**
**ராகத்துளோருயிர்கண்டனம்யாமின்றியாவையுமா**
**மேகத்தொருவனிரும்பொழிலம்பலவன்மலையிற், றோகைக்**
**குந்தோன்றற்குமொன்றாய்வருமின்பத்துன்பங்களே.**

*அயில்வேற்கண்ணியொ டாடவன்றனக்குயிரொன்றென*
*மயிலியற்றோழி மதியுடம்பட்டது.*

இ - ள். யாவையும் ஆம் ஏகத்து ஒருவன் - எல்லாப்பொருள்களுமாய் விரியும் ஒன்றையுடையவொருவன்--இரும்பொழில் அம்பலவன் - பெரியபொழில்களாற் சூழப்பட்ட அம்பலத்தையுடையான்—மலையில் தோகைக்கும் தோன்றற்கும் இன்பத் துன்பங்கள் ஒன்றாய் வரும் - அவனது மலையில் இத்தோகைக்கும் இத்தோன்றற்கும் இன்பத்துன்பங்கள் பொதுவாய் வாராநின்றன, அதனால்-- காகத்து இரு கண்ணிற்கு மணி ஒன்றே கலந்தாங்கு இருவர் ஆகத்துள் ஒருயிர் யாம் இன்று கண்டனம் - காகத்தினிரண்டு கண்ணிற்கும் மணியொன்றே கலந்தாற்போல இருவர் யாக்கையுள் ஒருயிரை யாமின்று கண்டேம். எ - று.

யாவையுமாமேகம் பராசத்தி. அம்பலவன் மலையில் இன்றுயா ங்கண்டனமென் றுகூட்டி, வேறொரிடத்து வேறொருகாலத்து வே றொருவர் இதுகண்டறிவாரில்லையென்பதுபட வுரைப்பினுமமை யும். கலந்தாரிருவரென்பது பாடமாயின், காகத்திருகண்ணிற் கொன்றேமணியென்பதனை எடுத்துக்காட்டாகவுரைக்க. மெய்ப் பாடு பெருமிதம். பயன் மதியுடம்படுதல். (எக)

நாணநாட்டம் முற்றிற்று.

# நடுங்கநாட்டம்.

மேல் "நடுங்கல், புலிமிசைவைத்தல் புகலுங்காலே." என்றோ தப்பட்ட நடுங்கநாட்டமென்பது கூட்டமுண்மை யுணர்ந்தனளா யினும், தலைமகள் பெருநாணினளாகலானும் தான் அவள் குற்றே வன்மகளாகலானும் பின்னும் தான் சொல்லாடாது அவடன்னைக் கொண்டே கேட்பது காரணமாக நெருங்கிநின்று, ஒருபுலி ஒரு வனை யெதிர்ப்பட்டதெனத் தோழி அவளை நடுங்க நாடாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஆவாவிருவரறியாவடிதில்லையம்பலத்து
மூவாயிரவர்வணங்கநின்றோனையுன்னாரின்முன்னித்
தீவாயுழுவைகிழித்ததந்தோசிறிதேபிழைப்பித்
தாவாமணிவேல்பணிகொண்டவாறின்றோராண்டகையே.

நடங்கிடைப் பாங்கி
நடுங்க நாடியது.

இ-ள். இருவர் அறியா அடி மூவாயிரவர் வணங்கத் தில்லை அம்பலத்து நின்றோனை உன்னாரின் - அயனும் அரியுமாகிய இருவ ரறியாத அடியை மூவாயிரவரந்தணர் வணங்கத் தில்லையம்பலத்து எளிவந்து நின்றவனை நினையாதாரைப்போல வருந்த—முன்னித் தீவாய் உழுவை கிழித்தது - எதிர்ப்பட்டுத் தன்கொடியவாயை உழுவை அங்காந்தது, அங்காப்ப—சிறிதே பிழைப்பித்து இன்று ஒரு ஆண்டகை மணிவேல் பணி கொண்ட ஆறு - அதனைச் சிறிதே தப்புவித்து இன்றோராண்டகை மணியையுடைய வேலைப் பணிகொண்டவாறென். எ-று.

அயனும் அரியுந் தில்லையம்பலத்திற்சென்று வணங்குமாறறிந் திலரென்னுங்கருத்தினராகலின், ஆவாவென்பது அருளின்கட்

குறிப்பு. இரக்கத்தின்கட்குறிப்பாய்த் தீவாயுழுவை கிழித்ததென்பதனை நோக்கிநின்றதெனினுமமையும். வருந்தவென ஒருசொல் வருவித்துரைக்கப்பட்டது. கொடியவுள்ளத்தராகலின் உன்றோர் புலிக்குவமையாக வுரைப்பினுமமையும். தீவாயையுடையவுழுவை அவனைக்கிழித்ததெனத் தெளிவுபற்றி இறந்தகாலத்தாற் கூறப்பட்டதெனினுமமையும். அந்தோவென்பது இரக்கத்தின் கட்குறிப்பு. இறுதிக்கண் ஆவாவென்பது வியப்பின்கட் குறிப்பு. இதனுள் தலைமகளை நடுங்கநாடியதெவ்வாறெனின், தன்கொடியவாயைப் புலி அங்காந்தது, உழுவையினது தீவாயை வேறொன்று கிழித்தது, உழுவையினது தீவாய் பிறிதொன்றனைக் கிழித்தது என இம்மூன்றுபொருளும் படுகையான், இது நடுங்கநாட்டமாயிற்று. என்னை, தலைமகள் இங்ஙனம் நடுங்கியாராயும் வண்ணம் தோழி நாடுகையான். தீவாயுழுவைகிழித்ததென்ற இம்மூன்று பொருளும் வினா. இங்ஙனந் தோழியுரைப்பத் தலைமகள் நாடி நடுங்காநிற்கக்கண்டு, ஓராண்டகை வேலைப்பணிகொண்டவாறென்னென நடுக்கந் தீர்த்ததாயிற்று. இது கரவுநாடுதல். அஃதாவது வெளிப்படச்சொல்லுஞ் சொல்லன்றிப் பிறிதொன்றன்மேல்வைத்துச் சொல்லுதல். இதுவும் பெருந்திணைப்பாற்படும். மெய்ப்பாடு நகை. பயன் நடுங்கநாடிக் கரவுநாடியுணர்தல்.

நிருத்தம்பயின்றவனென்பதுதொட்டு மெய்யேயிவற்கில்லையென்பதன்காறும் வர ஐந்துபாட்டினும் முன்னுறவுணர்தலையும் ஐயுற வாக்கி, இருவருமுள்வழி யவன்வர வுணர்வினைத் துணிந்துணர்வாக்கினர். மைவாரென்பதுதொட்டு இதன்காறும்வர இவையாறினும் முன்னுறவுணர்தல் குறையுறவுணர்தல் இருவருமுள்வழியவன்வரவுணர்தலென்னும் மூன்றனையுந் துணிந்துணர் வாக்கினர். ஈண்டிவ்விகற்பங் கண்டுகொள்க. (எஉ)

நடுங்கநாட்டம் முற்றிற்று.

# மடற்றிறம்.

மடற்றிறமென்பது நடுங்கநாடவும் பெருநாணினளாதலின், தலைமகள் தன்குறை சொல்லமாட்டாது நிற்ப, இனி இவளிறந்துபடவுங்கூடுமென உட்கொண்டு தலைமகனுடன் சொல்லாடத் தொடங்காநின்ற தோழி, தானும் பெருநாணினளாதலிற் பின்னுந் தலைமகன் குறையுறவேண்டிநிற்ப, அந்நிலைமைக்கட் டலைமகன் சென்று, இந்நாளெல்லாம் என்குறை நின்னான் முடியுமென்று நின்னை

வந்திரந்தேன்; இது நின்னான்முடியாமையின் யான் மடலூர்ந்தாயினும் இக்குறை முடித்துக்கொள்வேனெனத் தோழிக்குக் கூறுநிற்றல். என்னை, "முன்னுற வுணரினு மவன்குறை யுற்ற—பின்ன ரல்லது கிளவிதோன் றாது" * என்பவாகலின்.

ஆற்றாதுரைத்த லுலகின்மேல்வைத்த
றன்றுணிபுரைத்த லொடுவகையுரைத்த
லருளாலரிதென னடையாலரிதென
லவயவமெழுத லரிதெனவிலக்க
லுடம்படாதுவிலக்க லுடம்பட்டுவிலக்க
மிடம்படவொன்பதுஞ் செப்புங்காலை
வடம்படுமுலைமேன் மடலாகும்மே.

இ-ள். ஆற்றாதுரைத்தல், உலகின்மேல்வைத்துரைத்தல், தன்றுணிபுரைத்தல், மடலேறும்வகையுரைத்தல், அருளாலரிதெனவிலக்கல், மொழிநடையெழுதலரிதெனவிலக்கல், அவயவமெழுதலரிதெனவிலக்கல், உடம்படாதுவிலக்கல், உடம்பட்டுவிலக்கல் எனவிவை ஒன்பதும் மடற்றிறமாம். எ - று. அவற்றுள்—

## ஆற்றாதுரைத்தல்.

ஆற்றாதுரைத்தலென்பது தலைமகண்மேன் மடற்றிறங் கூறுகின்றானாகலின் அதற்கியைவுபட அவ்விருவருழைச் சென்றுநின்று, நீயிர் அருளாமையின் என்னுயிர் அழியாநின்றது; இதனை அறிமினெனத் தலைமகன் தனது ஆற்றாமை மிகுதி கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பொருளாவெனைப்புகுந்தாண்டுபுரந்தரன்மாலயன்பா
லிருளாயிருக்குமொளிநின்றசிற்றம்பலமெனலாஞ்
சுருளார்கருங்குழல்வெண்ணகைச்செவ்வாய்த்துடியிடையீ
ரருளாதொழியினொழியாதழியுமென்னாருயிரே.

மல்லற்றிரள் வரைத்தோளவன்
சொல்லாற்றாது சொல்லியது.

இ - ள். புகுந்து என்னைப் பொருளா ஆண்டு - தானேவந்து புகுந்து என்னைப் பொருளாக மதித்தாண்டு—புரந்தரன் மால் அயன் பால் இருளாய் இருக்கும் ஒளி நின்ற சிற்றம்பலம் எனல் ஆம் - இந்திரன் மால் அயனென்னும் அவர்களிடத்து இருளாயிரு

* இறையனாரகப்பொருள். ௯.

க்கின்ற ஒளி தங்கிய சிற்றம்பலமென்று சொல்லத்தகும்—சுருள் ஆர் கருங் குழல் வெள் நகைச் செவ்வாய்த் துடி இடையீர் - சுருளார்ந்த கரியகுழலினையும் வெள்ளியநகையினையுஞ் செய்யவாயினையுமுடைய துடியிடையீர்—அருளாதொழியின் என் ஆருயிர் ஒழியாது அழியும் - நீயிர் அருளாதொழியின் எனதாருயிர் தப்பாமலழியும்; அதனான் அருளத்தகும். எ - று.

தொகையின்மையிற் பாலென்பதனை எல்லாவற்றோடுங் கூட்டுக. சிற்றம்பலம் துடியிடையார்க்குவமை. மடற்றிறங் கூறுகின்றானாகலின், அதற்கியைவுபட ஈண்டுங் குறையுறுதல் கூறினான். சொல்லாற்றாது சொல்லுதற்கும் ஆற்றாது. மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்றாமையுணர்த்துதல். (எஅ)

## உலகின்மேல்வைத்துரைத்தல்.

உலகின்மேல்வைத்துரைத்தலென்பது ஆற்றாமைகூறி அதுவழியாகநின்று, ஆடவர் தம்முள்ளமாகிய மீன் மகளிரது கண்வலைப்பட்டால் அதனைப் பெறுதற்கு வேறுபாயமில்லாதவிடத்து மடலூர்ந்தும் அதனைப்பெறுவரென உலகின்மேல் வைத்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**காய்சினவேலன்னமின்னியல்கண்ணின்வலைகலந்து**
**வீசினபோதுள்ளமீனிழந்தார்வியன்றென்புலியூ**
**ரீசனசாந்துமெருக்குமணிந்தோர்கிழிபிடித்துப்**
**பாய்சினமாவெனவேறுவர்சீறூர்ப்பனைமடலே.**

புலவேலண்ணல் பனைமடலேற்
றுலகின்மேல்வைத் துய்த்துரைத்தது.

இ - ள். காய் சின வேல் அன்ன மின் இயல் கண் வலை - காய்சினத்தையுடைய வேல்போலும் ஒளியியலுங் கண்ணாகிய வலையை—கலந்து வீசினபோது உள்ளம் மீன் இழந்தார் - மகளிர் கலந்து வீசினபோது அவ்வலைப்படுதலான் உள்ளமாகிய மீனை யிழந்தவர்கள்—வியன் தென்புலியூர் ஈசன சாந்தும் எருக்கும் அணிந்து - பெரிய தென்புலியூர்க்கண்ணுளனாகிய ஈசனுடைய நீற்றையும் எருக்கம்பூவையும் அணிந்து—ஓர் கிழி பிடித்து - ஒருகிழியைக் கையிற்பிடித்து—பாய் சின மா எனப் பனை மடல் சீறூர் ஏறுவர் - பாயவல்ல சினத்தையுடைய மாவெனப் பனைமடலைச் சீறூர்க்கணேறுவர் தம்முள்ளம் பெறுதற்கு வேறுபாயமில்லாதவிடத்து. எ - று.

மின்னியல்வேலென்று கூட்டினுமமையும். இன் / அல்வழிச் சாரியை. கண்ணென்வலையென்பதூஉம் பாடம். மகளிரென ஒரு சொல்வருவியாது கருவி கருத்தாவாக உரைப்பினுமமையும். உள்ளமிழந்தவர் உள்ளம்பெறுமளவும் தம்வயமன்றி மடலின் வயத்தராய் நிற்றலால் கருவி கருத்தாவாகக்கொள்க. சாந்தும் எருக்குமென இரண்டாகலின் ஈசனவெனப் பன்மையுருபு கொடுத்தார். பாய்சினமென்புழிச் சினம் உள்ளமிகுதி. உய்த்துரைத்தது-குறிப்பாலுரைத்தது. (எச)

## தன்றுணிபுரைத்தல்.

தன்றுணிபுரைத்தலென்பது முன்னுலகின்மேல் வைத்துணர்த்தி அதுவழியாக நின்று, என்னையும் ஒருபெண்கொடி பிறரிகழ மடலேறப்பண்ணு நின்றதென ‡முன்னிலைப்புறமொழியாகத் தன்றுணிபு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

விண்ணை மடங்கவிரிநீர்பரந்துவெற்புக்கரப்ப
மண்ணை மடங்கவருமொருகாலத்துமன்னிநிற்கு
மண்ணன்மடங்கலதளம்பலவனருளிலர்போற், பெண்ணை
மடன்மிசையான்வரப்பண்ணிற்றோர்பெண்கொடியே.

‡ மானவேலவன் மடன்மாமிசை
யானுமேறுவ னென்னவுரைத்தது.

இ-ள். விண் மடங்க - விண் மடங்கவும்—விரிநீர் பரந்து வெற்புக் கரப்ப - விரிநீர் பரத்தலான் வெற்பொளிப்பவும்—மண் மடங்க வரும் ஒருகாலத்தும் மன்னிநிற்கும் அண்ணல் - மண் மடங்கவும் வரும் ஊழியிறுதியாகிய ஒருகாலத்தின்கண்ணும் நிலைபெற்று நிற்கும் அண்ணல்—மடங்கல் அதள் அம்பலவன் - சிங்கத்தினது தோலையுடைய அம்பலவன்—அருள் இலர் போல் பெண்ணை மடல்மிசை யான் வரப் பண்ணிற்று ஓர் பெண் கொடி-அவனதருளில்லாதாரைப்போலப் பிறரிகழப் பனைமடன்மேல் யான் வரும் வண்ணம் அறிவின்மையைச் செய்தது ஒருபெண்கொடி. எ-று.

விண்ணை மண்ணை என்புழி ஐகாரம் அசைநிலை. மடங்குதல் தத்தங்காரணங்களினொடுங்குதல். மடங்கல் புலியெனினுமமையும். மானம் கொண்டாட்டம். வேலையுடையவனது மானமாகிய குணம் வேண்மேலேற்றப்பட்டதெனினு மமையும். இவை யிரண்டற்கும் மெய்ப்பாடு இளிவரல். பயன் ஆற்றாமையுணர்த்துதல். (எரு)

## மடலேறும்வகையுரைத்தல்.

மடலேறும்வகையுரைத்தலென்பது துணிபுகூறவும் பெருநாணினளாதலிற் சொல்லாடாத தோழிக்கு வெளிப்படத் தான் நாணிழந்தமைதோன்ற நின்று, யான் நாளை நின்னூர்த்தெருவே மடலுங்கொண்டு வருவேன், பின்வருவது காணெனத் தலைமகன் தான் மடலேறும்வகை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**கழிகின்றவென்னையுநின்றநின்கார்மயிறன்னையும்யான்**
**கிழியொன்றநாடியெழுதிக்கைக்கொண்டென் பிறவிகெட்டின்**
**றழிகின்றதாக்கியதாளம்பலவன்கயிலையந்தேன்**
**பொழிகின்றசாரனுஞ்சீறூர்த்தெருவிடைப்போதுவனே.**

அடல்வேலவ னழிவுற்று
மடலேறும் வகையுரைத்தது.

இ - ள். கழிகின்ற என்னையும் - கழியாநின்ற என்னையும்— நின்ற நின் கார் மயில் தன்னையும் - யாணித்தன்மையளாகவுந் தன்றன்மையளாய்நின்ற நின்னுடைய கார்மயிறன்னையும்—கிழி ஒன்ற நாடி எழுதி - கிழிக்கட்பொருந்த ஆராய்ந்தெழுதி—யான் கைக்கொண்டு - யான் அதனைக் கையிற்கொண்டு—என் பிறவி இன்று கெட்டு அழிகின்றது ஆக்கிய தாள் அம்பலவன் கயிலை - என்பிறவியை இன்றுகெட்டழியாநின்றதாகச் செய்த தாளையுடைய அம்பலவனது கைலையின்--அம் தேன் பொழிகின்ற சாரல் நும் சீறூர்த் தெருவிடைப் போதுவன் - அழகிய தேன்பொழியாநின்ற சாரற்கணுண்டாகிய நுமது சீறூர்த்தெருவின்கட்டிரிவேன்; பின்வருவது காண். எ - று.

தனக்கு அவளயலென்னுங் கருத்தினளாய், நின்கார்மயிலென்றான். என்னையும் நின் கார்மயிறன்னையும் மடலிடத்தெழுதுவேனென்றதென்னை கார்மயிலை யெழுதுவதன்றித் தன்னையுமெழுதுமோவெனின், மடலெழுதிக் கையிற்கொண்டால் உரையாடுகையின்றி இவனும் ஓவியமாகலின், மடலின்றலையிலே தன்னூரையுந் தன்பேரையும் அவளூரையும் அவள்பேரையும் எழுதுகையால் என்னையுமென்றான். கார்மயில் கார்காலத்துமயில். அழிகின்றதென நிகழ்காலத்தாற் கூறினார், பிறத்தற்குக் காரணமாகிய மலங் கெட்டும் யாக்கைக்குக் காரணமாகிய மலத்துடனே வினைநின்றமையின். மெய்ப்பாடும் பயனும் அவை. (எகூ)

## அருளாலரிதெனவிலக்கல்.

அருளாலரிதெனவிலக்கலென்பது தலைமகன் வெளிப்பட நின்று மடலேறுவேனென்று கூறக்கேட்ட தோழி இனியிவன் மடலேறவுங்கூடுமென உட்கொண்டு, தன்னிடத்து நாணினை விட்டுவந்து, எதிர்நின்று, நீர்மடலேறினால் உம்முடைய அருள் யாரிடத்ததாமென்று அவனதருளை யெடுத்துக்கூறி விலக்கா நிற்றல். அதற்குச்செய்யுள்—

நடனும்வணங்குந்தொல்லோனெல்லைநான்முகன்மாலறியாக்
கடனுமுருவத்தரன்றில்லைமல்லற்கண்ணார்ந்தபெண்ணை
யுடனும்பெடையொடொண்சேவலுமுட்டையுங் கட்டழித்
து, மடனும்புனைதரின்யார்கண்ணதோமன்னவின்னருளே.

அடல்வேலண்ண லருளுடைமையின்
மடலேற்றுனக் கரிதென்றது.

இ - ள். நடன் - கூத்தன்—நாம் வணங்கும் தொல்லோன் - நாம் வணங்கும் பழையோன்—நான்முகன் மால் எல்லை அறியாக் கடன் ஆம் உருவத்து அரன் - நான்முகனும் மாலும் முடியும் அடியுமாகிய எல்லைகளை அறியாத இயல்பாகிய வடிவையுடைய அரன்—தில்லை மல்லல் கண் ஆர்ந்த பெண்ணை - அவனது தில்லைக்கணுண்டாகிய வளத்தையுடைய கண்ணிற்கார்ந்த பெண்ணைக்கண்—உடன் ஆம் பெடையொடு ஒண் சேவலும் முட்டையும் கட்டழித்து மடல் நாம் புனைதரின் - உடனுறையும் பெடையோடும் ஒள்ளியசேவலையும் முட்டையையுங் காவலையழித்து மடலைநாம் பண்ணின்—மன்ன - மன்னனே—இன் அருள் யார்கண்ணது - இனிய அருள் இவ்வுலகத்தில் யார்கண்ணதாம்? எ - று.

அறியாவுருவமென வியையும். அறியாத அக்கடனுளதா முருவமெனினுமமையும். மடல்விலக்கித் தழீஇக்கொள்கின்றுளாதலின், நாமென உளப்படுத்துக்கூறினாள். நின்னருளென்பது பாடமாயின், யார்கண்ணருளுவையென்றுரைக்க. அண்ணல் முன்னிலைக்கண் வந்தது. (எஎ)

## மொழிநடையெழுதலரிதெனவிலக்கல்.

மொழிநடையெழுதலரிதென விலக்கலென்பது அருளெடுத்து விலக்கவும் தன்வழி நில்லாமைகண்டு அவன்வழியொழுகி விலக்குவாளாக, நுமதருள்கிடக்க மடலேறுவார் மடலேறுதல்

மடலேறப்படுவோ ருருவெழுதிக்கொண்டன்றே; நுமக்கு அவள் மொழிநடையெழுதல் முடியாதாகலின் நீயிர் மடலேறுமாறென்னோவென விலக்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

அடிச்சந்தமால்கண்டிலாதனகாட்டிவந்தாண்டுகொண்டென்
முடிச்சந்தமாமலராக்குமுன்னோன்புலியூர்புரையுங்
கடிச்சந்தயாழ்கற்றமென்மொழிக்கன்னியனநடைக்குப்
படிச்சந்தமாக்கும்படமுளவோநும்பரிசகத்தே.

அவயவமரிதி னன்ன நீட்டினும்
இவையிவைநீட்ட வியலாதென்றது.

இ-ள். சந்தம் மால் கண்டிலாதன அடி காட்டி வந்து ஆண்டுகொண்டு - மறையும் மாலுங் கண்டறியாதனவாகிய அடிகளை எனக்குக் காட்டித் தானே வந்தாண்டுகொண்டு—என் முடிச் சந்த மா மலர் ஆக்கும் முன்னோன் புலியூர் புரையும் - அவ்வடிகளை என்முடிக்கு நிறத்தையுடைய பெரியமலராகச்செய்யும் முன்னோனது புலியூரையொக்கும்—கடிச் சந்த யாழ் கற்ற மென் மொழி - சிறந்த நிறத்தையுடைய யாழோசையின்றன்மையைக் கற்ற மென்மொழியையுடைய—கன்னி அன நடைக்கு - கன்னியது அன்னத்தி னடைபோலு நடைக்கு—படிச்சந்தம் ஆக்கும் படம் உளவோ நும் பரிசகத்து - படிச்சந்தமாகப் பண்ணப்படும் படங்கள் உளவோ நுமது சித்திரசாலையின்கண். எ - று.

கடிச்சந்தயாழ்கற்ற மென்மொழியென்பதற்குச் சிறந்தவோசையையுடைய யாழ்வந்தினிதாக வொலித்தலைக்கற்ற மென்மொழியென்றுரைப்பாருமுளர். படிச்சந்தமென்பது ஒன்றன்வடிவையுடைத்தாய் அதுவென்றே கருதப்படுமியல்பையுடையது. படிச்சந்தமென்பது பிரதிச்சந்தமென்னும் வடமொழிச்சிதைவு. (எஅ)

## அவயவமெழுதலரிதெனவிலக்கல்.

அவயவமெழுதலரிதென விலக்கலென்பது அவளது மொழி நடை கிடக்க, இவைதாமெழுத முடியுமோ? முடியுமாயின் யான் சொன்ன படியே தப்பாமலெழுதிக்கொண்டு வந்தேறுமென்று அவளதவயவங் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

யாழுமெழுதியெழின் முத்தெழுதியிருளின்மென்பூச்
சூழுமெழுதியொர்தொண்டையுந்தீட்டியென்றொல்பிறவி
யேழுமெழுதாவகைசிதைத்தோன்புலியூரிளமாம்
போழுமெழுதிற்றொர்கொம்பருண்டேற்கொண்டுபோதுகவே

## மடற்றிறம்.

அவயவ மானவை
யிவையிவை யென்றது.

இ - ள். யாழும் எழுதி - மொழியாக மொழியோடொக்கும் ஓசையையுடைய யாழையுமெழுதி—எழில் முத்தும் எழுதி - முறுவலாக எழிலையுடைய முத்துக்களையுமெழுதி—இருளில் மென் பூச்சூழும் எழுதி - குழலாக இருளின்கண் மெல்லிய பூவாணியன்ற சூழையுமெழுதி—ஒரு தொண்டையும் தீட்டி - வாயாக ஒருதொண்டைக்கனியையுமெழுதி—இள மாம் போழும் எழுதிற்று ஓர் கொம்பர் உண்டேல் - கண்ணாக இளையதாகிய மாவடுவகிரையும் எழுதப்பட்டதோர் கொம்பருண்டாயின்—கொண்டு போதுக - அதனைக்கொண்டு எம்மூர்க்கண் மடலேறவாரும். எ - று.

என் தொல் பிறவி எழும் எழுதாவகை சிதைத்தோன் புலியூர் இளமாம் போழும் - என்னுடைய பழையவாகிய பிறவிகளேழையும் கூற்றுவன் தன்கணக்கிலெழுதாதவண்ணஞ் சிதைத்தவனது புலியூரிளமாம் போழுமெனக்கூட்டுக.

முத்துமென்னு மும்மை விகாரவகையாற் றொக்குநின்றது. சூழென்றது சூழ்ந்த மாலையை. செய்தெனெச்சங்கள் எழுதிற்றென்னுந்தொழிற்பெயரின் எழுதுதலொடு முடிந்தன. எழுதிற்றென்பது செயப்படுபொருளைச் செய்ததுபோலக் கூறிநின்றது. வினையெச்சங்களும் அவ்வாறு நின்றவெனினு மமையும். மொழியும் இவளதாகலின், அவயவமென்றாள். இவை மூன்றற்கும் மெய்ப்பாடு நகை. பயன் மடல்விலக்குதல். (எக)

## உடம்படாதுவிலக்கல்.

உடம்படாதுவிலக்கலென்பது எழுதலாகாமைகூறிக் காட்டி, அதுகிடக்க, நும்மை யாம் விலக்குகின்றேமல்லேம், யான் சென்று அவணினைவறிந்து வந்தாற் பின்னை நீயிர் வேண்டிற்றைச்செய்யும், அவ்வளவும் நீயிர் வருந்தாதொழியுமெனத் தானுடம்படாது விலக்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஊர்வாயொழிவாயுயர்பெண்ணைத்திண்மடனின்குறிப்புச்
சீர்வாய்சிலம்பதிருத்தவிருந்திலமீசர்தில்லைக்
கார்வாய்குழலிக்குன்றதரவோதிக்கற்பித்துக்கண்டா
லார்வாய்தரினறிவார்பின்னைச்செய்கவறிந்தனவே.

அடுபடையண்ண லழிதுயரொழிகென
மடநடைத்தோழி மடல்விலக்கியது.

இ - ள். உயர் பெண்ணைத் திண் மடல் ஊர்வாய் - உயர்ந்த பெண்ணையினது திண்ணிய மடலையூர்வாய்—ஒழிவாய் - அன்றி யொழிவாய்—சீர் வாய் சிலம்ப - அழகுவாய்த்த சிலம்பையுடை யாய்—நின் குறிப்புத் திருத்த இருந்திலம் - நின்கருத்தை யாந்திரு த்த விருந்தேமல்லேம்—ஈசர் தில்லைக் கார் வாய் குழலிக்கு உன் ஆதரவு ஓதி - ஈசரது தில்லைக்கணுள்ளாளாகிய கருமைவாய்த்த குழ லையுடையாட்கு உனது விருப்பத்தைச்சொல்லி—கற்பித்துக் கண் டால் - இதற்கு அவளுடம்படும்வண்ணஞ் சிலவற்றைக் கற்பித்துப் பார்த்தால்—வாய்தரின் ஆர் அறிவார் - இடந்தருமாயினும் யாரறி வார்—பின்னை அறிந்தன செய்க - இடந்தாராளாயிற் பின் நீயறி ந்தவற்றைச் செய்வாயாக. எ - று.

கார்போலுங் குழலெனினுமமையும். வாய்தரினென்பதற்கு வாய்ப்பினெனினுமமையும். பின்னைச்செய்கவென்றது நீகுறித்தது செய்வாயாயினும் என்குறிப்பிதுவென்றவாறு. (௮0)

## உடம்பட்டுவிலக்கல்.

உடம்பட்டுவிலக்கலென்பது உடம்படாது முன் பொதுப்பட விலக்கி முகங்கொண்டு, பின்னர்த் தன்னோடு அவளிடை வேற்று மையின்மைகூறி, யான் நின்குறைமுடித்துத் தருவேன், நீவருந்த வேண்டாவெனத் தோழி தானுடம்பட்டு விலக்காநிற்றல். அதற் குச்செய்யுள்—

**பைந்நாண ரவன்படுகடல்வாய்ப்படுநஞ்சமுதா**
**மைந்நாண்மணிகண்டன்மன்னும்புலியூர்மணந்தபொன்னிம்**
**மொய்ந்நாண்முதுதிரைவாயானழுந்தினுமென்னின்முன்னு**
**மிந்நாளிதுமதுவார்குழலாட்கென்கணின்னருளே.**

அரவருநுண்ணிடைக் குரவருகூந்தலென்
னுள்ளக்கருத்து விள்ளாளென்றது.

இ - ள். பைந் நாண் அரவன் - பையையுடைய அரவாகிய நாணையுடையான்—படு கடல் வாய்ப் படு நஞ்சு அமுது ஆம் மைந் நாண் மணி கண்டன் - ஒலிக்குங் கடலிடத்துப்பட்ட நஞ்சம் அமுதாகும் மைநாணு நீலமணிபோலுங் கண்டத்தையுடையான்— மன்னும் புலியூர் மணந்த பொன் - அவன் மன்னும் புலியூரைப் பொருந்திய பொன்போல்வாள்—நாள் மொய் இம் முது திரை வாய் யான் அழுந்தினும் என்னின் முன்னும் - நாட்காலத்தாடும் பெருமையையுடைய இம்முதியகடற்கண் யானழுந்தினேனாயினும் தான் என்னின் முற்பட்டழுந்தும்-மது வார் குழலாட்கு என்கண்

இன் அருள் இந்நாள் இது - தேனையுடைய நெடியகுழலாட்கு என் கணுண்டாகிய இனிய அருள் இப்பொழுதித்தன்மைத்தாயிராநின்றது. எ - று.

அமுதாமென்னும் பெயரெச்சம் கண்டமென்னு நிலப்பெயர் கொண்டது. மைந்நாணுங் கண்டமெனவியையும். மணிகண்டனென்பது வடமொழியிலக்கணத்தாற்றொக்குப் பின்றிரிந்து நின்றது. மொய் வலி; ஈண்டுப் பெருமைமேனின்றது. குற்றேவல்செய்வார்கட் பெரியோர்செய்யும் அருள் எக்காலத்து மொருதன்மைத்தாய் நிகழாதென்னுங்கருத்தான் இந்நாளிதுவென்றாள். எனவே தலைமகளது பெருமையுந் தன்முயற்சியது அருமையுங் கூறியவாறாயிற்று. அரா குரா வென்பன குறுகிநின்றன. வருமென்பது உவமைச்சொல். இவையிரண்டற்கும் மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகனையாற்றுவித்தல். (அக)

மடற்றிறம் முற்றிற்று.

# குறைநயப்புக்கூறல்.

குறைநயப்புக் கூறலென்பது தலைமகனை மடல்விலக்கிக் குறைநேர்ந்த தோழி தலைமகளைக் குறைநயப்பிக்க அவன் குறை கூறாநிற்றல். அதுவருமாறு—

குறிப்பறிதலோடு மென்மொழிகூறல்
விரவிக்கூற லறியாள்போறல்
வஞ்சித்துரைத்தல் புலந்துகூறல்
வன்மொழிகூறன் மனத்தொடுநேர்தல்
சொன்னவிருநான்குந் துறைகுறை நயப்பென
மன்னியபொருளில் வகுத்திசினோரே.

இ-ள். குறிப்பறிதல், மென்மொழியாற்கூறல், விரவிக்கூறல், அறியாள்போறல், வஞ்சித்துரைத்தல், புலந்துகூறல், வன்மொழியாற்கூறல், மனத்தொடுநேர்தல் என விவையெட்டுங் குறைநயப்பித்தலாம். எ-று. அவற்றுள்—

## குறிப்பறிதல்.

குறிப்பறிதலென்பது தலைமகனது குறைகூறத் துணியாநின்ற தோழி தெற்றெனக் கூறுவேனாயின் இவள் இதனை மறுக்கவுங்

கூடுமென உட்கொண்டு, நம்புனத்தின்கட் சேயினது வடிவையு டையராய்ச் சினவேலேந்தி ஒருவர் பலகாலும் வாராநின்றார், வந்து நின்று ஒன்று சொல்லுவதுஞ் செய்கின்றிலர், அவரிடத்து யாஞ் செய்யத்தக்க தியாதெனத் தான் அறியாதாள்போலத் தலைமக ளோடு உசாவி, அவணிலைவறியாநிற்றல். என்னை, "ஆங்குணர்ந் தல்லது கிழவோ டேத்துத்—தான்குறை யுறுத றோழிக் கில்லை" * என்பவாகலின். அதற்குச்செய்யுள்—

தாதேய்மலர்க்குஞ்சியஞ்சிறைவண்டுதண்டேன்பருகித்
தேதேயெனுந்தில்லையோன்சேயெனச்சினவேலொருவர்
மாதேபுனத்திடைவாளாவருவர்வந்தியாதுஞ்சொல்லார்
யாதேசெயத்தக்கதுமதுவார்குழலேந்திழையே.

நறைவளர்கோதையைக் குறைநயப்பித்தற்
குள்ளறிகுற்ற வொள்ளிழையுரைத்தது.

இ - ள். மாதே - மாதே—தாது எய் மலர்க் குஞ்சி அம் சிறை வண்டு தண் தேன் பருகி - தாதுபொருந்திய மலரையுடைய குஞ்சி களின்கண் அழகிய சிறகையுடைய வண்டினங்கள் தண்டேனைப் பருகி—தேதே எனும் தில்லையோன் சேய் என - தேதேயெனப் பாடுந் தில்லையையுடையானுடைய புதல்வனாகிய முருகவேளென்றே சொல்லும்வண்ணம்—சின வேல் ஒருவர் புனத்திடை வாளா வரு வர் - சினவேலையுடையாரொருவர் நம்புனத்தின்கண் வாளா பல காலும் வாராநிற்பர்—வந்து யாதும் சொல்லார்-வந்துநின்று ஒன்று முரையாடார்—மது வார் குழல் ஏந்திழையே - மதுவார்ந்த குழலை யுடைய ஏந்திழாய்—செயத் தக்கது யாதே - அவரிடத்து நாஞ் செய்யத்தக்கது யாதென்றறிகின்றிலேன். எ - று.

குஞ்சி தில்லைவாழ்வார் குஞ்சி; மலரினது குஞ்சியெனவிரித்து அல்லியென்றுரைப்பினுமமையும். சேயோடொத்தல் பண்பு வடிவு முதலாயினவும், சினவேலேந்தி வரையிடத்து வருதலுமாம். வேட் டைமுதலாகிய பயன்கருதாது வருவரென்பாள், வாளா வருவரெ ன்றாள். முகம்புகுகின்றாளாதலின், பின்னும் ஏந்திழையே யென் றாள். சேயென்புழி எண்ணேகாரந் தொக்குநின்றது; என்னை, மேலே "புரிசேர் சடையோன் புதல்வன்கொல் பூங்கணைவேள் கொல்" எனவருதலான். யாதேயென்னுமேகாரம் வினா. மாதே ஏந்திழையே என்புழி ஏகாரம் விளியுருபு. அறிகுற்றவென்பது அறி யவேண்டியவென்னும் பொருட்கண்வந்த ஒருமொழிமுடிபு.(அஉ)

* இறையனாரகப்பொருள். அ.

## மென்மொழியாற்கூறல்.

மென்மொழியாற் கூறலென்பது நினைவறிந்து முகங்கண்டு, அதுவழியாகநின்று, ஒருபெரியோன் வாடிய மேனியனும் வாடாத தழையனுமாய் நம்புனத்தை விட்டுப் போவதுஞ் செய்கின்றிலன், தன்குறை இன்னதென்று வெளிப்படச் சொல்லுவதுஞ் செய்கின்றிலன். இஃதென்ன மாயங்கொல்லோ அறிகின்றிலேனெனத் தோழி தான் அதற்கு நொந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வரிசேர்தடங்கண்ணிமம்மர்கைம்மிக்கென்னமாயங்கொலோ
வெரிசேர்தளிரன்னமேனியனீர்ந்தழையன்புலியூர்ப்,புரிசேர்
சடையோன்புதல்வன்கொல்பூங்கணைவேள்கொலென்னத்
தெரியேமுரையான்பிரியானொருவனித்தேம்புனமே.

ஒளிருறுவேலவன் றளர்வுறுகின்றமை
இன்மொழியவட்கு மென்மொழிமொழிந்தது.

இ - ள். வரி சேர் தடங் கண்ணி - வரிசேர்ந்த பெரிய கண்ணையுடையாய்—ஒருவன் மம்மர் கைம்மிக்கு - ஒருவன் மயக்கங் கைம்மிக்கு—எரி சேர் தளிர் அன்ன மேனியன் - எரியைச்சேர்ந்த தளிரையொக்கும் மேனியையுடையனுமாய்—ஈர்ந் தழையன் - வாடாத தழையையுடையனுமாய்—இத் தேம்புனம் பிரியான் - இத் தேம்புனத்தைப் பிரிகின்றிலன்—உரையான் - ஒன்றுரைப்பதுஞ் செய்கின்றிலன்—புலியூர்ப் புரிசேர் சடையோன் புதல்வன் கொல் பூங் கணை வேள் கொல் என்னத் தெரியேம்-அவன்றன்னைப் புலியூர்க்கணுளனாகிய புரிதலைச்சேர்ந்த சடையையுடையோனுடைய புதல்வனோ பூவாகிய அம்பையுடைய காமவேளோவென்று யாந்துணிகின்றிலேம்—என்ன மாயம் கொலோ-ஈதென்ன மாயமோ. எ - று

அவ்வாறு இறப்பப் பெரியோன் இவ்வாறு எளிவந்தொழுகுதல் என்ன பொருத்தமுடைத்தென்னுங் கருத்தால்,என்ன மாயங் கொலோவென்றாள். புலியூர்ப்புரிசேர் சடையோன் புதல்வன் கொலென்றதனால் நம்மை யழிக்கவந்தானோவென்றும், பூங்கணை வேள் கொலென்றதனால் நம்மைக்காக்க வந்தானோவென்றும் கூறியவாறாயிற்று. புரிசேர்சடையோன் புதல்வனென்றதனை மடற் குறிப்பென்றுணர்க. கொல் ஐயம். மேனியன் தழையனென்பன வினையெச்சங்கள். மென்மொழி மொழிந்தது-மென்மொழியான் மொழிந்தது. (அ௩)

## விரவிக்கூறல்.

விரவிக்கூறலென்பது வன்மொழியாற் கூறின் மனமெலியு மென்றஞ்சி, ஓரலவன் தன்பெடைக்கு நாவற்கனியை நல்கக்கண்டு ஒருபெருந்தகை பேய்கண்டாற்போல நின்றான், அந்நிலைமையை நீ கண்டாயாயின் உயிர்வாழமாட்டாய், யான் வன்கண்மையேனாத லான் ஆற்றியுளேனாய்ப் போந்தேனென மென்மொழியோடு சிறிது வன்மொழிபடக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**நீகண்டனையெனின்வாழலைநேரிழையம்பலத்தான் [ன்**
**சேய்கண்டனையன்சென்றாங்கோரலவன்றன் சீர்ப்பெடையி**
**வாய்வண்டனையதொர்நாவற்கனிநனிநல்கக்கண்டு**
**பேய்கண்டனையதொன்றாகிநின்றானப்பெருந்தகையே.**

வன்மொழியின்மன் மெலிவதஞ்சி
மென்மொழிவிரவி மிகுத்துரைத்தது.

இ - ள். நேர் இழை - நேரிழாய்—அம்பலத்தான் சேய் கண்டனையன் - அம்பலத்தான் புதல்வனைக்கண்டாற்போன்றிருக்கும் ஒருவன்—ஆங்கு ஒரு அலவன் தன் சீர்ப் பெடையின்வாய் வண்டு அனையது ஒரு நாவல் கனி சென்று நனி நல்கக் கண்டு - அவ்விடத்து ஓரலவன் தனதழகையுடைய பெடையின்வாயின்கண் வண்டனையதொரு நாவற்கனியைச் சென்று மிகவுங்கொடுப்ப அதனைக்கண்டு—அப் பெருந்தகை பேய் கண்டனையது ஒன்று ஆகி நின்றான்-அப்பெருந்தகை பேயாற் காணப்பட்டாற்போல்வதோர் வேறுபாட்டையுடையனாகி நின்றான்—நீ கண்டனை எனின் வாழலை - அந்நிலையை நீகண்டாயாயின் உயிர் வாழமாட்டாய்; யான் வன்கண்மையேனாதலின், அதனைக்கண்டும் ஆற்றியுளேனாயினேன். எ - று.

பேய்கண்டனைய தென்பதற்குப் பேயைக் கண்டாற்போல் வதோர் வேறுபாடென்றுரைப்பினு மமையும். பேய்கண்டனைய தொன்றையுடையனாயென்னாது ஒற்றுமைநயம்பற்றி ஒன்றாகியெ ன்றாள். நாவற்கனியை நனிநல்கக்கண்டு தன்னுணர்வொழியப் போயினான் இன்றுவந்திலனென்னாது பேய்கண்டனையதொன்றாகி நின்றானென்று கூறினமையான் மென்மொழியும், சேய்கண்டனை யனென்றதனால் வன்மொழியும் விரவியதாயிற்று. மிகுத்தல் ஆற்றாமைமிகுத்தல். இவை மூன்றற்கும் மெய்ப்பாடு இளிவரலைச் சார்ந்த பெருமிதம். பயன் தலைமகளை மெலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தல், (அச)

## அறியாள்போறல்.

அறியாள்போறலென்பது பேய்கண்டாற்போல நின்றனெனத் தலைமகனிலைமைகேட்ட தலைமகள் பெருநாணினளாதலின் இதனையறியாதாளைப்போல, இஃதொரு கடல்வடிவிருந்தவாறு காணெனத் தானென்று கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**சங்கந்தருமுத்தியாம்பெறவான்கழிதான்கெழுமிப்**
**பொங்கும்புனற்கங்கைதாங்கிப்பொலிகலிப்பாறுலவு**
**துங்கமலிதலையேந்தலினேந்திழைதொல்லைப்பன்மா**
**வங்கமலிகலிநீர்தில்லைவானவனேர்வருமே.**

அறியாள் போன்று
குறியாள் கூறியது.

இ-ள். ஏந்திழை-ஏந்திழாய்—பல் மா வங்கம் மலி தொல்லைக் கலி நீர் தில்லை வானவன் நேர்வரும் - இத்தன்மைத்தாகலிற் பலவாய்ப் பெரியவாகிய மரக்கலங்கள் மிகப்பெற்ற பழையதாகிய கடல் தில்லைவானவற்கொப்பாம். எ - று.

சங்கம் தரு முத்து யாம் பெற வான் கழி தான் கெழுமி - சங்குதரு முத்துக்களை யாம்பெறப் பெரிய கழிகளைத் தான்பொருந்தி—பொங்கும் புனற் கங்கை தாங்கி - பொங்கும் புனலையுடைய கங்கையைத் தாங்கி—பொலி கலிப் பாறு உலவு துங்கம் மலிதலை ஏந்தலின் - பொலிந்த ஆரவாரத்தையுடைய பாறுகிய மரககலங்களியங்குந் திரைகளின் மிகுதியையுடைத்தாகலின், எனக் கடலிற்கேற்பவும்,

சங்கம் தரும் முத்தி யாம் பெற வான் கழி தான் கெழுமி - திருவடிக்கணுண்டாகிய பற்றுத்தரும் முத்தியை யாம் பெறும்வண்ணம் எல்லாப்பொருளையும் அகப்படுத்தி நிற்கும் ஆகாயத்தையுங் கடந்து நின்ற தான் ஒரு வடிவு கொண்டுவந்து பொருந்தி—பொங்கும் புனற் கங்கை தாங்கி - பொங்கும் புனலையுடைய கங்கையைச் சூடி—பொலி கலிப் பாறு உலவு துங்கம் மலி தலை ஏந்தலின்-மிக்க ஆரவாரத்தையுடைய பாறுகிய புட்கள் சூழாநின்ற உயர்வுமிக்க தலையோட்டை யேந்துதலின், எனத் தில்லைவானவற்கேற்பவும் உரைக்க.

வான்கழி சிவலோகமெனினுமமையும். குறைநயப்பாற் றலைமகனிலைமைகேட்ட தலைமகள் பெருநாணினளாகலின், மறுமொழி கொடாது பிறிதொன்று கூறியவாறு. ஒருசொற்றொடர் இரு

பொருட்குச் சிலேடையாயினவாறுபோலத் தோழிக்கும் ஓர்ந்து ணரப்படும். ஓர்ந்துணர்தலாவது இவ்வொழுக்கங் களவொழுக்க மாகையாலும், தலைமகள் பெருநாணினளாகையாலும், முன்மொழி யாற் கூறப்பட்ட கூற்றுகட்கு வெளிப்படையாக மறுமொழி கொடாது, ஓர்ந்துகூட்டினுல் மறுமொழியாம்படி கடலின்மேல் வைத்துக்கூறினுள். என்னை, முன்னர் நீ புரிசேர்சடையோன் புத ல்வனென்றும் பூங்கணைவேளென்றும் உயர்த்துக்கூறியவெல்லாம் அவனுக்குரிய, அங்ஙனம் பெரியவன் தன்மாட்டுண்டான புணர்ச்சி யான பேரின்பத்தை நாம்பெறுகை காரணமாக இங்ஙன மெளி வந்து உன்னைவந்துசேர்ந்தான், அஃதென்போலவெனின், பெறு தற்கரிய சங்கு தருகிற முத்தை நாம் பெறுவான் எளிதாகக் கடல் பெரியகழியைவந்து பொருந்தினுற்போல, இனி உனக்கு வேண் டியது செய்வாயாகவென மறுமொழியாயிற்று. மெய்ப்பாடு மரு ட்கை. தோழிசொன்ன குறையறியாள் போறலிற் பயன் அறி யாள்போறல். (அரு)

## வஞ்சித்துரைத்தல்.

வஞ்சித்துரைத்தலென்பது நாணினுற் குறைநேரமாட்டாது வருந்தாநின்ற தலைமகள் இவளும் பெருநாணினளாதலின் என்னை க்கொண்டே சொல்லுவித்துப்பின் முடிப்பாளாயிரா நின்முள், இதற்கியானென்றுஞ் சொல்லாதொழிந்தால் எம்பெருமான் இறந் துபடுவனென உட்கொண்டு, தன்னிடத்து நாணினைவிட்டு, பாங் கற்கூட்டம் பெற்றுத் தோழியிற் கூட்டத்திற்குத் துவளாநின்மு னென்பதுதோன்ற, பின்னும் வெளிப்படக் கூறமாட்டாது மாய வன்மேல்வைத்து வஞ்சித்துக் கூமுநிற்றல். அதற்குச்செய்யுள்—

புரங்கடந்தானடிகாண்பான்புவிவிண்டுபுக்கறியா
திரங்கிடெந்தாயென்றிரப்பத்தன்னீரடிக்கென்னிரண்டு
கரங்கடந்தானென்றுகாட்டமற்றுங்கதுங்காட்டிடென்று
வரங்கிடந்தான்றில்லையம்பலமுன்றிலம்மாயவனே.

நெஞ்சநெகிழ்வகை வஞ்சித்திவையிவை
செஞ்சடையோன்புகழ் வஞ்சிக்குரைத்தது.

இ - ள். புரம் கடந்தான் அடி காண்பான் - புரங்களைக் கட ந்தவனது அடிகளைக் காணவேண்டி—புவி விண்டு புக்கு அறியாது இரங்கிடு எந்தாய் என்று இரப்ப - நெறியல்லா நெறியான் நிலத் தைப் பிளந்துகொண்டு புக்குக் காணுது பின் வழிபட்டுநின்று எந் தாய் அருளவேண்டு மென்றிரப்ப—தன் ஈரடிக்கு என் இரண்டு

கரங்கள் தந்தான் ஒன்று காட்ட - தன்னுடைய இரண்டு திருவடி களையுந் தொழுதற்கு என்னுடைய இரண்டுகரங்களையுந் தந்தவனு கிய அவன் சிறிதிரங்கி ஒருதிருவடியைக் காட்ட—மற்று ஆங்கதும் காட்டிடு என்று தில்லை அம்பல முன்றில் அம் மாயவன் வரம் கிடந்தான் - மற்றதனையுங் காட்டிடல்வேண்டுமென்று தில்லையம் பலமுற்றத்தின்கண் முன்னர் அவ்வாறு யானென்னுஞ் செருக் காற் காணலுற்ற மாயவன் வரங்கிடந்தாற்போலும். எ - று.

விண்டெனபதற்கு முன்னுரைத்ததேயுரைக்க. மாயவன் முத லாயினோர்க்கு அவ்வாறரியவாயினும் எம்மனோர்க்கு இவ்வாறெளி வந்தனவென்னுங் கருத்தால், தன்னடிக்கெண்ணிரண்டு கரங்கடந் தானென்றார். ஆங்கதென்பது ஒருசொல். இன்னும் வரங்கிடக்கி ன்றானாகலின், முன்கண்டது ஒன்றுபோலுமென்பது கருத்து. புரங்கடந்தானடிகளைக் காணுமாறு வழிபட்டுக் காண்கையாவது அன்னத்திற்குத் தாமரையும், பன்றிக்குக் காடுமாதலால், இவரிங் ஙனந் தத்தநிலைப்பரிசே தேடுதல். இவ்வாறு தேடாது தமதகங்கா ரத்தினான் மாறுபட்டுப் பன்றி தாமரையும் அன்னங் காடுமாகப் பட்டுத் தேடுதலாற்கண்டிலர். இது நெறியல்லா நெறியாயின வாறு. இனி இது தோழிக்குத் தலைவி மறுமொழியாகக் கூறியவா று: என்னை? ஒன்று காட்டவென்றது முன்னர்ப் பாங்கற்கூட்டம் பெற்றான் அதன்பின் நின்னினாய கூட்டம்பெறுகை காரணமாக நின்னிடத்து வந்திரந்து குறையுறாநின்றான், அஃதென்போலவெ னின், மற்றாங்கதுங் காட்டிடென்று மால் வரங்கிடந்தாற்போல என்றவாறு. வஞ்சித்தல் மறுமொழியை வெளிப்படையாகக் கொ டாது பிறிதொன்றாகக் கூறுதல். இவையிவை-முன்னர்ப்பாட்டும் இப்பாட்டும். இதனைத் தோழி கூற்றாகவுரைப்பாருமுளர். இவை யிவையென்று மடுக்கானும் இனி "உள்ளப்படுவன வுள்ளி" எனத் தலைமகளோடு புலந்து கூறுகின்றமையானும், இவ்விரண்டு திருப் பாட்டும் தலைமகள் கூற்றாதலே பொருத்தமுடைத்தென்பதறிக. ()

## புலந்துகூறல்.

புலந்து கூறலென்பது வெளிப்படக் கூறாது வஞ்சித்துக் கூறு தலான் என்னோடிதனை வெளிப்படக் கூறாயாயின் நின்காதற்றோ ழியர்க்கு வெளிப்படச்சொல்லி அவரோடு சூழ்ந்து நினக்குற்றது செய்வாய்; யான்சொன்ன அறியாமையை நின்னுள்ளத்துக் கொள் ளாது மறப்பாயாக; யான் வேண்டுவ திதுவேயெனத் தோழி தலை மகளோடு புலந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள் —

உள்ளப்படுவனவுள்ளியுரைத்தக்கவர்க்குரைத்து
மெள்ளப்படிறு துணிதுணியேலிதுவேண்டுவல்யான்
கள்ளப்படிறர்க்கருளாவரன்றில்லைகாணலர்போற்
கொள்ளப்படாதுமறப்பதறிவிலென்கூற்றுக்களே.

திருந்தியசொல்லிற் செவ்விபெறாது
வருந்தியசொல்லின் வருத்துரைத்தது.

இ - ள். உள்ளப் படுவன உள்ளி - இதன்கண் ஆராயப்படுவனவற்றை ஆராய்ந்து—உரைத்தக்கவர்க்கு உரைத்து - இதனை வெளிப்பட வுரைத்தற்குத் தக்க நின் காதற்றோழியர்க்குரைத்து—படிறு மெள்ளத் துணி - அவரோடுஞ் சூழ்ந்து நீ படிறென்று கருதிய இதனை மெள்ளத் துணிவாய்—துணியேல் - அன்றித் துணியாதொழிவாய்—கள்ளப் படிறர்க்கு அருளா அரன் தில்லை காணலர் போல் - நெஞ்சிற் கள்ளத்தையுடைய வஞ்சகர்க்கு அருள் செய்யாத அரனது தில்லையை ஒருகாற் காணாதாரைப்போல—அறிவிலென் கூற்றுக்கள் கொள்ளப்படாது - அறிவில்லாதேன் சொல்லிய சொற்களை உள்ளத்துக் கொள்ளத்தகாது—மறப்பது - அவற்றை மறப்பாயாக—யான் வேண்டுவல் இது - யான் வேண்டுவது இதுவே. எ - று.

தில்லைகாணலர் தோழிகூற்றிற்குவமை. கொள்ளப்படாதென்பது வினைமுதன்மேலுஞ் செயப்படுபொருண் மேலுமன்றி வினைமேனின்ற முற்றுச்சொல், "அகத்தின்னா வஞ்சரை யஞ்சப்படும்" * என்பதுபோல. மறப்பதென்பது வியங்கோள். வருந்திய சொல்லின்-வருத்தத்தை வெளிப்படுக்குஞ் சொல்லான். சொல்லியென்பதூஉம் பாடம். வருத்துரைத்தது வெளிப்படச் சொல்லவேண்டுஞ் சொற்கேட்குமளவுஞ் சொல்லுஞ்சொல். அஃதாவது நீ சொல்லத்தகுங் காதற்றோழியர்க்கு வெளிப்படச் சொல்லென்று புலந்து கூறியது. (அஎ)

## வன்மொழியாற்கூறல்.

வன்மொழியாற் கூறலென்பது புலந்து கூறாநின்ற தோழி அக்கொடியோன் அருளுறாமையான் மெய்யிற் பொடியுங் கையிற் கிழியுமாய் மடலேறத் துணியாநின்றான்; அக்கிழி தான் நின்னுடைய வடிவென்று உரையுமுளதாயிருந்தது; இனி நீயும் நினக்குற்றது செய்வாயாக; யானறியேனென வன்மொழியாற் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

* திருக்குறள் - கூடாநட்பு. ௫.

மேவியந்தோ லுடுக்குந்தில்லையான்பொடிமெய்யிற்கையி
லோவியந்தோன் றுங்கிழிநின்னெழிலென் றுரையுளதாற் [ன்
றூவியந்தோகையன்னுயென்னபாவஞ்சொல்லாடல்செய்யா
பாவியந்தோபனைமாமடலேறக்கொல்பாவித்ததே.

கடலுலகறியக் கமழலந்துறைவன்
மடலேறும்மென வன்மொழிமொழிந்தது.

இ - ள். மெய்யில் மேவி அந்தோல் உடுக்கும் தில்லையான் பொடி - மெய்க்கட் பூசியது விரும்பி நல்ல தோலைச் சாத்துந் தில்லையானுடைய நீறு—கையில் ஓவியம் தோன்றும் கிழி - கையின்கணுண்டாகியது சித்திரம் விளங்குங் கிழி—நின் எழில் என்று உரை உளது - அக்கிழிதான் நின் வடிவென்று உரையுமுளதாயிருந்தது—தூவி அம் தோகை அன்னாய் - தூவியையுடைய் வழகிய தோகையை யொப்பாய்—என்ன பாவம் - இதற்குக் காரணமாகிய தீவினை யாதென்றறியேன்!—சொல் ஆடல் செய்யான் - ஒன்றுமுரையாடான்—பாவி - இருந்தவாற்றான் அக்கொடியோன்— அந்தோ பனை மா மடல் ஏறக் கொல் பாவித்தது - அந்தோ! பனையினது பெரிய மடலேறுதற்குப்போலு நினைந்தது. எ - று.

கிழியென்றது கிழிக்கணெழுதிய வடிவை. தன்குறையுறவு கண்டு உயிர்தாங்கலேனாக அதன்மேலும் மடலேறுதலையுந் துணியாநின்றானென்னுங் கருத்தால், பாவியென்றாள். எனவே, அவனாற்றாமைக்குத் தானாற்றாளாகின்றமை கூறினாளாம். கமழலந்துறைவனென்பதற்கு, கூம்பலங் கைத்தலமென்பதற் குரைத்தது உரைக்க. இவை மூன்றற்கும் மெய்ப்பாடு இளிவரலைச்சார்ந்த பெருமிதம். பயன் வலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தல். (அஅ)

## மனத்தொடுநேர்தல்.

மனத்தொடு நேர்தலென்பது ஆற்றாமையான் மடலேறத்துணியாநின்றானெனத் தோழியால் வன்மொழி கூறக்கேட்ட தலைமகள் அதற்குத் தானாற்றாளாய், தலைமகனைக் காண வேண்டித் தன் மனத்தொடு கூறி நேராநிற்றல். அதற்குச்செய்யுள்—

பொன்னார்சடையோன்புலியூர்புகழாரெனப்புரிநோ
யென்னாலறிவில்லையா னென்றுரைக்கிலன்வந்தயலார்
சொன்னாரெனுமித்துரிசுதன்னமைத் துணைமனனே
யென்னாழ்துயர்வல்லையேற்சொல்லுநீர்மையினியவர்க்கே.

அடல்வேலவ ஞற்ருனெனக்
கடலமிழ்தன்னவள் காணலுற்றது.

இ-ள். பொன் ஆர் சடையோன் புலியூர் புகழார் என - பொன்போலும் நிறைந்த சடையை யுடையவனது புலியூரைப் புகழாதாரைப்போல வருந்த—புரி நோய் என்னால் அறிவு இல்லை - எனக்குப் புரிந்த நோய் என்னாலறியப்படுவதில்லை—யான் ஒன்று உரைக்கிலன் - ஆயினும் இதன்றிறத்து யாதொன்றுரைக்க மாட்டேன்—துணை மனனே - எனக்குத் துணையாகிய மனனே—வந்து அயலார் சொன்னார் எனும் இத் துரிசு துன்னமை-அயலார் சொன்னாரென்று இவள் வந்து சொல்லுகின்ற இக்குற்றம் என்கண்வாராமல்—என் ஆழ் துயர் வல்லையேல் - அவராற்றாமை கூறக்கேட்டலானுண்டாகிய எனதாழ்துயரை உள்ளவாறு சொல்ல வல்லையாயின்— நீர்மை இனியவர்க்குச் சொல்லு - நீர்மையையுடைய இனியவர்க்கு நீ சொல்லுவாயாக. எ - று.

புரிதல் மிகுதல். அயலார் சொன்னாரென்றது ஓவியந்தோன்றுங்கிழி நின்னெழிலென் றுரையுளதாம் என்றதனைப்பற்றி. அயலார் சொன்னாரென்பதற்கு யானறியாதிருப்ப அவராற்றாமையை அயலார்வந்து சொன்னாரென்னும் இக்குற்றமென்றுரைப்பினுமமையும். இப்பொருட்கு அயலாரென்றது தோழியை நோக்கி. ஆழ்துயர் ஆழ்தற்கிடமாந்துயர். இவ்வாறு அவராற்றாமைக்கு ஆற்றாளாய் நிற்றலின், தோழி குறைநேர்ந்தமை யுணருமென்பது பெற்றாம், ஆகவே இது தோழிக்கு வெளிப்பட மறுமொழி கூறியவாறாயிற்று. சொல்லு நீர்மையினியவர்க்கென்றவதனால் தன்றுயரமும் வெளிப்படக்கூறி மடலால் வருங்குற்றமுந் தன்னிடத்து வாராமல் விலக்கச் சொன்னாளாயிற்று. மெய்ப்பாடு அச்சம். ஆற்றானெனக் கேட்டலிற் பயன் குறைநேர்தல். (அகூ)

குறைநயப்பித்தல் முற்றிற்று.



# சேட்படை.



சேட்படையென்பது தலைமகளைக் குறைநயப்பித்துத் தன்னிறுய கூட்டங் கூட்டலுறுந்தோழி தலைமகளது பெருமையுந் தனதுமுயற்சியதருமையும் தோன்றுதல் காரணமாகவும், இத்துணையரு

மையுடையாள் இனிநமக்கெய்துதற் கருமையுடையளென இதுவே புணர்ச்சியாக நீட்டியாது விரைய வரைந்துகோடல் காரணமாக வும், தலைமகனுக்கியைய மறுத்துக் கூறுநிற்றல். அதுவருமாறு—

தழைகொண்டுசேற றகாதென்றுமறுத்த
னிலத்தின்மைகூற னினைவறிவுகூறல்
படைத்துமொழிதலொடு பனிமதிநுதலியை
யெடுத்துநாணுரைத்த லிசையாமைகூறல்
செவ்வியிலளென்றல் சேட்படநிறுத்த
லவ்வினியமொழிநீ யவட்குரையென்றல்
குலமுறைகிளத்தல் கோதண்டத்தொழில்
வலிசொல்லிமறுத்தன் மற்றவற்கிரங்கல்
சிறப்பின்மைகூறல் சிறியளென்றுரைத்தன்
மறைத்தமைகூறி நகைத்துரைசெய்த
னகைகண்டுமகிழ்த லனவடன்னை
யறியேனென்ற லவயவங்கூறல்
கண்ணயந்துரைத்தல் கையுறையெதிர்தன்
முகப்புகவுரைத்தன் முகங்கண்டுகூறல்
வகுத்துரைத்தலொடு வண்டமைழபவட்கு
மிகுத்துரைசெய்து விரும்பிக்கொடுத்த
றழைவிருப்புரைத்த ருனிருபத்தா
றிழைவளர்முலையா யிவைசேட்படையே.

இ-ள். தழைகொண்டுசேறல், சந்தனத்தழை தகாதென்றுமறுத்தல், நிலத்தின்மைகூறிமறுத்தல், நினைவறிவுகூறிமறுத்தல், படைத்துமொழியான்மறுத்தல், நாணுரைத்துமறுத்தல், இசையாமைகூறிமறுத்தல், செவ்வியிலளென்றுமறுத்தல், காப்புடைத்தென்று மறுத்தல், நீயேகூறென்றுமறுத்தல், குலமுறைகூறிமறுத்தல், நகையாடிமறுத்தல், இரக்கத்தொடுமறுத்தல், சிறப்பின்மைகூறிமறுத்தல், இளமைகூறிமறுத்தல், மறைத்தமைகூறி நகைத்துரைத்தல், நகைகண்டுமகிழ்தல், அறியாள்போன்றுநினைவுகேட்டல், அவயவங் கூறல், கண்ணயந்துரைத்தல், தழையெதிர்தல், குறிப்பறிதல், குறிப்பறிந்துகூறல், வகுத்துரைத்தல், தழையேற்பித்தல், தழைவிருப் புரைத்தல் என விவையிருபத்தாறும் சேட்படையாம் எ - று. அவற்றுள்—

## தழைகொண்டுசேறல்.

தழைகொண்டுசேறலென்பது மேற்சேட்படை கூறத் துணியாநின்ற தோழியிடைச்சென்று, அவளது குறிப்பறிந்து, பின்னுங் குறையுறவு தோன்றநின்று, நம்மாலருளத்தக்காரை அலையாதே இத்தழை வாங்கிக்கொண்டு என்குறை முடித்தருளுவீராமென்று, மறுத்தற்கிடமற, சந்தனத்தழைகொண்டு தலைமகன் செல்லாநிற்றல். அதற்குச்செய்யுள்—

தேமென்கிளவிதன்பங்கத்திறையுறைதில்லையன்னீர்
பூமென்றழையுமம்போதுங்கொள்ளீர்தமியேன்புலம்ப
வாமென்றருங்கொடும்பாடுகள்செய்துநுங்கண்மலராங்
காமன்கணைகொண்டலைகொள்ளவோமுற்றக்கற்றதுவே.

கொய்ம்மலர்க்குழலி குறைநயந்தபின்
கையுறையோடு காளைசென்றது.

இ - ள். தே மென் கிளவி தன் பங்கத்து இறை உறை தில்லை அன்னீர்-தேன்போலும் மெல்லிய மொழியையுடையாடனது கூற்றையுடைய இறைவனுறையுந் தில்லையை யொப்பீர்—பூ மெல் தழையும் அம் போதும் கொள்ளீர் - யான் கொணர்ந்த பூவையுடைய மெல்லிய தழையையும் அழகிய பூக்களையுங் கொள்கின்றிலீர்—தமியேன் புலம்ப அரும் கொடும்பாடுகள் ஆம் என்று செய்து - உணர்விழந்த யான்றனிமைப்படச் செய்யத்தகாத பொறுத்தற்கரிய கொடுமைகளைச் செய்யத்தகுமென்று துணிந்துசெய்து—நும் கண் மலர் ஆம் காமன் கணை கொண்டு அலை கொள்ளவோ முற்றக் கற்றது - நுங்கண்மலராகின்ற காமன் கணைகொண்டு அருளத்தக்காரை அலைத்தலையோ முடியக் கற்கப்பட்டது, நும்மால் அருளுமாறு கற்கப்பட்டதில்லையோ! எ - று.

பங்கத்துறையிறை யென்பதூஉம் பாடம். தமியேன் புலம்ப வென்பதற்குத் துணையிலாதேன் வருந்தவெனினு மமையும். மேற்சேட்படை கூறுகின்றமையின் அதற்கியைவுபட ஈண்டுங் குறையுறவு கூறினான். மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்றாமையுணர்த்துதல். அவ்வகை தோழிக்குக் குறைநேர்ந்த நேரத்துத் தலைமகன் கையுறையோடுஞ் சென்று இவ்வகை சொன்னானென்பது. (கூ0)

## சந்தனத்தழைதகாதென்றுமறுத்தல்.

சந்தனத்தழை தகாதென்று மறுத்தலென்பது தலைமகன் சந்தனத்தழைகொண்டு செல்ல, அது வழியாக நின்று, சந்தனத்தழை

இவர்க்கு வந்தவாறென்னோவென்று ஆராயப்படுதலான் இத்தழை எமக்காகாதெனத் தோழி மறுத்துக் கூறுநிற்றல். அதற்குச் செய்யுள்—

**ஆரத் தழையரா ப்பூண்டம்பலத்தனலாடியன்பர்க்**
**காரத்தழையன்பருளிநின்ரேன்சென்றமாமலயத்**
**தாரத்தழையண்ணறந்தாலிவையவளல்குற்கண்டா**
**லாரத்தழைகொடுவந்தாரெனவருமையுறவே.**

பிறைநுதற்பேதையைக் குறைநயப்பித்தபின்
வாட்படையண்ணலைச் சேட்படுத்தது.

இ-ள். ஆரத் தழை அராப் பூண்டு அம்பலத்து அனலாடி - ஆரமாகிய தழைந்த அரவைப் பூண்டு அம்பலத்தின்கண் அனலோடாடி—அன்பர்க்கு ஆரத் தழை அன்பு அருளி நின்றோன் - அன்பரானோர்க்குத் தானும் மிக்க அன்பைப் பெருகச்செய்து நின்றவன்—சென்ற மா மலயத்து ஆரத் தழை அண்ணல் தந்தால் - சேர்ந்த பெரிய பொதியின் மலையிடத்துளவாகிய சந்தனத்தழைகளை அண்ணல் தந்தால்—இவை அவள் அல்குற் கண்டால் - இத்தழைகளைப் பிறர் அவளல்குற்கட்காணின்--அத் தழை கொடுவந்தார் ஆர் என ஐயுறவு வரும் - ஈண்டில்லாத அத்தழை கொண்டுவந்தார் யாவரென ஐயமுண்டாம்; அதனால் இவை கொள்ளேம். எ - று.

ஆரத்தழையரா-பூண்டகாலத்து ஆரத்தழைத்த அரவெனினுமமையும். அன்பர்க்காரத்தழையன்பருளி நின்றோனென்பதற்கு அன்பர்க்கு அவர் நுகரும்வண்ணம் மிக்க அன்பைக்கொடுத்தோனெனினுமமையும். அன்பான் வருங்காரியமேயன்றி அன்புதானும் ஓரின்பமாகலின் நுகர்ச்சியாயிற்று. அண்ணலென்பது ஈண்டு முன்னிலைக்கண் வந்தது. அத்தழையென்றது அம்மலயத்தழை என்றவாறு. (கூக)

## நிலத்தின்மைகூறிமறுத்தல்.

நிலத்தின்மைகூறி மறுத்தலென்பது சந்தனத்தழை தகாதென்றதல்லது மறுத்துக் கூறியவாறன்றென மற்றொருதழை கொண்டுசெல்ல, அதுகண்டு, இக்குன்றிலில்லாத தழையை எமக்கு நீர்தந்தால் எங்குடிக்கு இப்பொழுதே பழியாம்; ஆதலான் அத்தழையெமக்காகாதென்று மறுத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**முன்றகர்த்தெல்லாவிமையோரையும் பின்னைத்தக்கன்முத்தீ**
**ச், சென்றகத்தில்லாவகைசிதைத்தோன்றிருந்தம்பலவன்**

குன்றகத்தில்லாத் தழையண்ணறந் தாற்கொடிச்சியருக்
கின்றகத்தில்லாப்பழிவந் தூமூடுமென்றெள்குதுமே.

கொங்கலர்தாரோய் கொணர்ந்தகொய்தழை
எங்குலத்தாருக் கேலாதென்றது.

இ - ள். முன் எல்லா இமையோரையும் தகர்த்து - முன் வேள்விக்குச் சென்ற எல்லாத் தேவர்களையும் புடைத்து—பின்னைச் சென்று தக்கன் முத் தீ அகத்து இல்லாவகை சிதைத்தோன் - பின்சென்று தக்கனுடைய மூன்று தீயையும் குண்டத்தின்கண் இல்லையாம்வண்ணம் அழித்தவன்--திருந்து அம்பலவன் - திருந்திய வம்பலத்தையுடையான்—குன்றகத்து இல்லாத் தழை அண்ணல் தந்தால் - அவனுடைய இம்மலையிடத்தில்லாத தழையை அண்ணல் தந்தால்--கொடிச்சியருக்கு அகத்து இல்லாப் பழி இன்று வந்து மூடும் என்று எள்குதும் - கொடிச்சியருக்கு இல்லின்கண் இல்லாதபழி இன்றுவந்து மூடுமென்று கூசுதும்; அதனால் இத்தழை கொணரற்பாலீரல்லீர். எ - று.

குன்றகத்தில்லாத் தழையென்றது குறிஞ்சிநிலத்தார்க்கு உரியவல்லாத தழையென்றவாறு. அண்ணலென்பது முன்னிலைக்கண்ணும், கொடிச்சியரென்பது தன்மைக்கண்ணும் வந்தன. இல்லாவென்பது பாடமாயின், இல்லையாம்வண்ணம் முன்றகர்த்தென்றுரைக்க. (கூஉ)

## நினைவறிவுகூறிமறுத்தல்.

நினைவறிவுகூறி மறுத்தலென்பது இத்தழை தந்நிலத்துக்குரித்தன்றென்றதல்லது மறுத்துக்கூறியவாறன்றென உட்கொண்டு, அந்நிலத்திற்குரிய தழைகொண்டுசெல்ல, அதுகண்டு தானுடம்பட்டாளாய், யான் சென்று அவனினைவறிந்தால் நின்னெதிர்வந்து கொள்வேன்; அதுவல்லது கொள்ள அஞ்சுவேனென மறுத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

யாழார்மொழிமங்கைபங்கத்திறைவனெறிதிரைநீ
ரேழாயெழுபொழிலாயிருந்தோனின்றதில்லையன்ன [தாற்
சூழார்குழலெழிற்றொண்டைச்செவ்வாய் நவ்விசொல்லறிந்
றுழாதெதிர்வந்துகோடுஞ்சிலம்பதருந்தழையே.

மைதழைக்கண்ணி மனமறிந்தல்லது
கொய்தழைதந்தாற் கொள்ளேமென்றது.

இ - ள். யாழ் ஆர் மொழி மங்கை பங்கத்து இறைவன் - யாழோசைபோலும் மொழியையுடைய மங்கையது கூற்றையுடைய இறைவன்—எறி திரை நீர் ஏழ் ஆய் எழு பொழில் ஆய் இருந்தோன் - எறியாநின்ற திரையையுடைய கடலேழுமாய் ஏழுபொழிலுமாயிருந்தவன்--நின்ற தில்லை அன்ன சூழ் ஆர் குழல் தொண்டை எழில் செவ்வாய் நவ்வி சொல் அறிந்தால் - அவனின்ற தில்லையை ஒக்குஞ் சுருண்ட நிறைந்த குழலினையுந் தொண்டைக் கனிபோலும் எழிலையுடைய செவ்வாயினையுமுடைய நவ்விபோல்வாளது மாற்ற மறிந்தால்—சிலம்ப தரும் தழை தாழாது எதிர் வந்து கோடும் - பின் சிலம்பனே நீ தருந்தழையைத் தாழாது நின்னெதிர் வந்து கொள்வேம்; அவள்சொல்வது அறியாது கொள்ள வஞ்சுதும். எ - று.

சூழாரென்புழிச் சூழ்தல் சூழ்ந்து முடித்தலெனினுமமையும். தில்லையன்ன நவ்வியெனவியையும். (கூகு)

## படைத்துமொழியான்மறுத்தல்.

படைத்து மொழியான் மறுத்தலென்பது நினைவறிந்தல்லது ஏலேமென்றது மறுத்துக்கூறியவாறன்று; நினைவறிந்தால் ஏற்பேமென்றவாறுமென உட்கொண்டுநிற்ப, சிறிது புடைபெயர்ந்து அவனினை வறிந்தாளாகச்சென்று, இத்தழை யானேயன்றி அவளும் விரும்பும்; ஆயினும் இது குற்றாலத்துத் தழையாதலான் இத்தழை இவர்க்கு வந்தவாறு என்னோவென்று ஆராயப்படும்; ஆதலான் இத்தழை யெமக்காகாதென்று மறுத்துக்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

எழில்வாயிளவஞ்சியும்விரும்பும்மற்றிறைகுறையுண
டழல்வாயவிரொளியம்பலத்தாடுமஞ்சோதியந்தீங் [ப்
குழல்வாய்மொழிமங்கைபங்கன்குற்றாலத்துக்கோலப்பிண்டி
பொழில்வாய்தடவரைவாயல்லதில்லையிப்பூந்தழையே.

அருந்தழைமேன்மேற் பெருந்தகைகொணரப்
படைத்துமொழிகிளவியிற் றடுத்தவண்மொழிந்தது.

இ - ள். எழில் வாய் இள வஞ்சியும் விரும்பும் - நின்பாற்றழை கோடற்கு யானேயன்றி எழில் வாய்த்த இளையவஞ்சியையொப்பாளும் விரும்பும்—மற்று இறை குறை உண்டு - ஆயினுஞ் சிறிது குறையுண்டு—அழல்வாய் அவிர் ஒளி - அழலிடத்துளதாகிய விளங்கு மொளியாயுள்ளான்—அம்பலத்து ஆடும் அஞ்சோதி - அம்ப

லத்தின்கணும் அழகிய சோதி—அம் தீம் குழல் வாய் மொழி மங்கை பங்கன் - அழகிய வினிய குழலோசைபோலும் மொழியையுடைய மங்கையது கூற்றையுடையான்—குற்றாலத்துக் கோலப் பிண்டிப் பொழில் வாய் - அவனது குற்றாலத்தின்கணுளதாகிய அழகையுடைய அசோகப்பொழில் வாய்த்த—தட வரைவாய் அல்லது இப் பூந் தழை இல்லை - பெரிய தாழ்வரையிடத்தல்லது வேறோரிடத்து இப்பூந்தழையில்லை; அதனால் இத்தழை இவர்க்கு வந்தவாறென்னென்று ஆராயப்படும், ஆதலான் இவை கொள்ளேம். எ - று.

இத்தழையை யிளவஞ்சியும் விரும்புமெனினுமமையும். அவிரொளியையுடைய அஞ்சோதியென்றியைப்பினு மமையும். பிறவிடத்துமுள்ளதனை அவ்விடத்தல்லது இல்லையென்றமையின், படைத்துமொழியாயிற்று. (கூச)

## நாணுரைத்துமறுத்தல்.

நாணுரைத்து மறுத்தலென்பது பலபடியுந் தழைகொண்டு செல்ல மறுத்துக்கூறியவழி, இனித் தழையொழிந்து கண்ணியைக் கையுறையாகக் கொண்டுசென்றால் அவள் மறுக்கும்வகையில்லையெனக் கழுநீர்மலரைக் கண்ணியாகப் புனைந்துகொண்டு செல்ல, அதுகண்டு, செவிலியர் சூட்டிய கண்ணியின்மேல் யாதொன்று சூட்டினும் நாணுநிற்பள்; நீர்கொணர்ந்த இந்தக்கண்ணியை யாங்ஙனஞ் சூடுமெனத் தலைமகள் நாணுரைத்து மறுத்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

உறுங்கண்ணிவந்தகணையுரவோன்பொடியாயொடுங்கத்
தெறுங்கண்ணிவந்தசிற்றம்பலவன்மலைச்சிற்றிலின்வாய்
நறுங்கண்ணிசூட்டினுநாணுமென்வாணுதனைகத்தொண்பூங்
குறுங்கண்ணிவேய்ந்திளமந்திகணுணுமிக்குன்றிடத்தே.

வாணுதற் பேதையை
நாணுத லுரைத்தது.

இ - ள். நிவந்த உறும் கள் கணை உரவோன் பொடியாய் ஒடுங்க - எல்லார்கணையினும் உயர்ந்த மிகுந்த தேனையுடைய மலர்க்கணையையுடைய பெரிய வலியோன் நீறாய்க்கெட—தெறும் கண் நிவந்த சிற்றம்பலவன் - தெறவல்ல கண்ணோங்கிய சிற்றம்பலவனது—மலைச் சிற்றிலின் வாய் - மலைக்கணுண்டாகிய சிற்றிலிடத்து—நறுங் கண்ணி சூடினும் என் வாணுதல் நாணும் - செவிலியர் சூட்டிய கண்ணிமேல் யாதோர் நறுங்கண்ணியைச் சூட்டினும் அத்

துணையானே என்னுடைய வாணுதல் புதிதென்று நாணுநிற்கும்—இக் குன்றிடத்து நாகத்து ஒண் பூங் குறுங் கண்ணி வேய்ந்து இள மந்திகள் நாணும் - மகளிரைச் சொல்லுகின்றதென்! இக்குன்றிடத்து நாகமரத்தினது ஒள்ளிய பூக்களானியன்ற குறுங் கண்ணியைச் சூடி அச்சூடுதலான் இளமந்திகளும் நாணுநிற்கும். எ-று.

கண்ணிவந்தவென்பதற்குக் கள் மிக்க கணையெனினுமமையும். தேறுங்கண்ணிவந்தவென்றார், அக்கண் மற்றையவற்றிற்கு மேலாய்நிற்றலின். மேனோக்கி நிற்றலானெனினுமமையும். முதலொடு சினைக்கொற்றுமையுண்மையான் நிவந்தவென்னும் பெயரெச்சத்திற்குச் சிற்றம்பலவனென்பது வினைமுதற் பெயராய்நின்றது. மந்திகணுணுமென்பது பெயரெச்சமாக மலைக்கண் இக்குன்றிடத்துச் சிற்றிலின்வாயெனக் கூட்டியுரைப்பினுமமையும். இப்பொருட்குக் குன்றென்றது சிறுகுவட்டை. யாமென்று சூட்டினும் நாணும் பெருநாணினாள் நீர்கொணர்ந்த இக்கண்ணியை யாங்ஙனஞ் சூடுமென்பது கருத்து. நாணுதலுரைத்ததென்னுஞ் சொற்கள் ஒரு சொன்னீர்மைப்பட்டு இரண்டாவதனையமைத்தன. (கூரு)

## இசையாமைகூறிமறுத்தல்.

இசையாமைகூறி மறுத்தலென்பது தலைமகனுணுரைத்து மறுத்ததோழி அவனுணங்கிடக்க யாங்கள் வேங்கைமலரல்லது தெய்வத்திற்குரிய வெறிமலர்சூட அஞ்சுதும்; ஆதலான் இக்கண்ணி எங்குலத்திற் கிசையாதென மறுத்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்

நறமனைவேங்கையின்பூப்பயில்பாறையைநாகநண்ணி
மறமனைவேங்கையெனநனியஞ்சுமஞ்சார்சிலம்பா
குறமனைவேங்கைச்சுணங்கொடணங்கலர்கூட்டுபவோ
நிறமனைவேங்கையதளம்பலவனெடுவரையே.

வசைதீர் குலத்திற்
கிசையா தென்றது.

இ - ள். நற மனை வேங்கையின் பூப் பயில் பாறையை நாகம் நண்ணி - தேனிற்கிடமாகிய வேங்கைப் பூக்கள் பயின்ற பாறையை யானை சென்றணைந்து—மறம் மனை வேங்கை என நனி அஞ்சும் மஞ்சு ஆர் சிலம்பா - அதனைத் தறுகண்மைக்கிடமாகிய புலியென்று மிகவுமஞ்சும் மஞ்சாருஞ் சிலம்பையுடையாய்—நிறம் மன் வேங்கை அதள் அம்பலவன் நெடுவரை - நிறந்தங்கிய புலியதளையுடைய அம்பலவனது நெடிய இவ்வரைக்கண்--குற மனை வேங்கைச்

சுணங்கொடு அணங்கு அலர் கூட்டுபவோ - குறவர் மனையிலுள வாகிய வேங்கையினது சுணங்குபோலும் பூவோடு தெய்வத்திற்கு ரிய கழுநீர் முதலாகிய பூக்களைக் கூட்டுவரோ? கூட்டார். எ - று.

நறமனைவேங்கை யென்பதற்கு நறுமிக்கபூ வெனினுமமை யும். குறமனை கூட்டுபவோ வென்பதற்குக் குறக்குடிகள் அவ்வாறு கூட்டுவரோவென் றுரைப்பாருமுளர். நிறமனையென்புழி ஐகாரம் அசைநிலை; வியப்பென்பாருமுளர். நிறம் அத்தன்மைத்தாகிய அத ளெனினுமமையும். ஒன்றனை ஒன்றாக ஓர்க்குநாடனாதலான் அணங் கலர்சூடாத எம்மைச் சூடுவேமாக ஓர்ந்தாயென்பது இறைச்சிப் பொருள். ஒப்புமையான் அஞ்சப்படாததனையும் அஞ்சும் நிலமாக லான் எங்குலத்திற்கேலாத அணங்கலரை யாமஞ்சுதல் சொல்ல வேண்டுமோவென்பது இறைச்சியெனினுமமையும். இப்பொரு ட்கு ஒருநிலத்துத் தலைமகளாகக் கொள்க. வேங்கைப்பூவிற்குச் சுணங்கணிந்திருத்தல் குணமாதலால் சுணங்கணியப் பட்டதனைச் சுணங்கென்றே கூறினாள். (கக)

## செவ்வியிலளென்றுமறுத்தல்.

செவ்வியிலளென்று மறுத்தலென்பது அணங்கலர் தங்குலத் திற் கிசையாதென்றதல்லது மறுத்துக்கூறியவாறன்றெனை மாந்த ழையோடு மலர் கொண்டுசெல்ல, அவை கண்டு உடம்படாளாய், அன்னம் பிணை கிள்ளை தந்தொழில்பயில இன்று செவ்விபெற்றன வில்லை: அதுகிடக்க என்னுழை நீர்வந்தவாறும் யானுமக்குக் குறை நேர்ந்தவாறும் இன்னுமறிந்திலள்; அதனாற் செவ்விபெற்றாற் கொ ணருமென மறுத்துக்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள் —

கற்றில கண்டன்னமென்னடைகண்மலர்நோக்கருளப்
பெற்றிலமென்பிணைபேச்சுப்பெறுகிள்ளைபிள்ளையின்றுான்
றுற்றிலளுற்றதறிந்திலளாகத்தொளிமிளிரும்
புற்றிலவாளரவன்புலியூரன்னபூங்கொடியே.

நவ்வி நோக்கி
செவ்வியில ளென்றது.

இ - ள். கண்டு அன்னம் மெல் நடை கற்றில - புடைபெயர்ந்து விளையாடாமையின் நடைகண்டு அன்னங்கள் மெல்லிய நடை யைக் கற்கப்பெற்றனவில்லை—கண் மலர் நோக்கு அருள மென் பிணை பெற்றில - தம்மாற் குறிக்கப்படுங் கண்மலர்நோக்குக்களை அவள் கொடுப்ப மென்பிணைகள் பெற்றனவில்லை—பேச்சுக் கிள்ளை

பெரு - உரையாடாமையின் தாங் கருதுமொழிகளைக் கிளிகள் பெற்றனவில்லை—பிள்ளை இன்று ஒன்று உற்றிலள் - இருந்தவாற்றான் எம்பிள்ளை இன்றொரு விளையாட்டின்கணுற்றிலள்—ஆகத்து ஒளிமிளிரும் புற்றில வாள் அரவன் - அதுவேயுமன்றி ஆகத்தின்கட் கிடந்தொளி விளங்கும் புற்றின்கண்ணவாகிய ஒளியையுடைய பாம்பையுடையவனது—புலியூர் அன்ன பூங் கொடி - புலியூரையொக்கும் பூங்கொடி—உற்றது அறிந்திலள் - என்னுழை நீர் வந்தவாறும் யானுமக்குக் குறைநேர்ந்தவாறும் இன்னுமறிந்திலள்; அதனாற் செவ்விபெற்றுச் சொல்லல் வேண்டும். எ - று.

கண்டெனென்பது கற்றலோடும், அருளவென்பது பெறுதலோடும் முடிந்தன. புற்றிலவென்பதற்கு வேள்வித்தீயிற் பிறந்து திருமேனிக்கண் வாழ்தலாற் புற்றையுடையவல்லாத அரவென்றுரைப்பினுமமையும். ஆரத்தொளியென்பதூஉம் பாடம். இவை யேழிற்கும் மெய்ப்பாடு அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். முடியாதெனக் கருதுவாளாயின் இறந்துபடுமென்னும் அச்சமும் முடிக்கக் கருதலிற் பெருமிதமுமாயிற்று. பயன் செவ்விபெறுதல். மேற்றலைமகளைக் குறைநயப்பித்து அவளது கருத்துணர்ந்து தன்னிணைகிய கூட்டங்கூட்டலுறுந்தோழி தலைமகன் றெருண்டு வரைந்தெய்துதல் வேண்டி, இவைமுதலாக முன்னர் விண்ணிறந்தாரென்னும் பாட்டீறாக இவையெல்லாங்கூறிச் சேட்படுத்துப் பெறுமென்பது. (௬௭)

## காப்புடைத்தென்றுமறுத்தல்.

காப்புடைத்தென்று மறுத்தலென்பது செவ்வியிலளென்றது செவ்விபெற்றாற் குறையில்லையென்றாளாமென உட்கொண்டு நிற்ப, கதிரவன் மறைந்தான்; இவ்விடம் காவலுடைத்து; நும்மிடமுஞ் சேய்த்து; எம்மையன்மாருங் கடியர்; யாந்தாழ்ப்பின் அன்னையு முனியும்; நீரும் போய் நாளைவாருமென இசைய மறுத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**முனிதருமன்னையுமென்னையர்சாலவுமூர்க்கரின்னே**
**தனிதருமிந்நிலத்தன்மையகுன்றமுந்தாழ்சடைமேற்**
**பனிதருதிங்களணியம்பலவர்பகைசெகுக்குங்**
**குனிதருதிண்சிலைக்கோடுசென்றான்சுடர்க்கொற்றவனே.**

காப்புடைத் தென்று
சேட்படுத்தது.

இ - ள். சுடர்க் கொற்றவன் - சுடர்களுட்டலைவன்—தாழ் சடைமேல் பனிதரு திங்கள் அணி அம்பலவர் - தாழ்ந்த சடை

மேற் குளிர்ச்சியையத்தருந் திங்களைச் சூடிய அம்பலவர்—பகை செருக்கும் குனிதரு திண்சிலைக் கோடு சென்ருன் - பகையைச் செருக்கும் வளைந்த திண்ணிய சிலையாகிய மேருவினது கோட்டையடைந்தான்—அன்னையும் முனிதரும் - இனித் தாழ்ப்பின் அன்னையும் முனியும்—என்னையர் சாலவும் மூர்க்கர் - என்னையன்மாரும் மிகவுமாராயாது எதஞ்செய்யுந் தன்மையர்—இன்னே தனிதரும் - இவ்விடமும் இனி யியங்குவாரின்மையின் இப்பொழுதே தனிமையைத் தரும்—ஐய - ஐயனே—குன்றமும் இந்நிலத்து அன்று - நினது குன்றமும் இந்நிலத்தின்கண்ணதன்று; அதனல் ஈண்டுநிற்கத் தகாது. எ - று.

அம்பலவர் பகைசெருத்தற்குத் தக்க திண்மை முதலாகிய இயல்பு அதற்கெக்காலத்து முண்மையால், செருக்குமென நிகழ் காலத்தாற்கூறினர். இந்நிலத்தன்றென்பது பாடமாயின், இக்குன்றமும் இவ்வாறு மகளிரும் ஆடவருந் தலைப்பெய்து சொல்லாடு நிலைமைத்தன்றெனவுரைக்க. மெய்ப்பாடும் பயனும் அவை. இவ்விடம் மிக்க காவலையுடைத்து இங்குவாரன்மினென்றுளென, இவ்விடத்தருமையை மறையாது எனக்குரைப்பாளாயது என்கட்கிடந்த பரிவினனன்றே; இத்துணையும் பரிவுடையாள் எனதாற்ருமைக் கிரங்கி முடிக்குமென ஆற்றுமென்பது. (கூஅ)

## நீயேகூறென்றுமறுத்தல்.

நீயே கூறென்றுமறுத்தலென்பது இவள் இவ்விடத்து நிலைமையை மறையாது எனக்குரைப்பாளாயது என்கட்கிடந்த பரிவினனன்றே; இத்துணைப் பரிவுடையாள் எனக்கிது முடியாமையில்லையெனத் தலைவன் உட்கொண்டுபோய்ப் பிற்றைஞான்று செல்ல, தோழி யான் குற்றேவன் மகளாகலிற் றுணிந்துசொல்ல மாட்டுகின்றிலேன்; இனி நீயே சென்று நின்குறையுள்ளது சொல்லெனத்தானுடம்படாது மறுத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

அந்தியின்வாயெழிலம்பலத்தெம்பரனம்பொன்வெற்பிற்
பந்தியின்வாய்ப்பலவின்சுளைபைந்தேனொடுங்கவென்
மந்தியின்வாய்க்கொடுத்தோம்புஞ்சிலம்பமனங்கனிய
முந்தியின்வாய்மொழிநீயேமொழிசென்றம்மொய்குழற்கே.

அஞ்சுதும்பெரும பஞ்சின்மெல்லடியைக்
கூறுவநீயே கூறுகென்றது.

இ - ள். அந்தியின்வாய் எழில் அம்பலத்து எம் பரன் அம் பொன் வெற்பில் - அந்தியின்கணுண்டாகிய செவ்வானெழிலைபு

டைய அம்பலத்தின்கணுள்ளனாகிய எம்முடைய எல்லாப்பொரு ட்கும் அப்பாலாயவனது அழகிய பொன்னையுடைய வெற்பிட த்து—பந்தியின்வாய்ப் பைந் தேனொடும் பலவின் சுளை - பந்தியா கிய நிரையின்கட் செவ்வித்தேனோடும் பலாச்சுளையை—கடுவன் மந்தியின்வாய்க் கொடுத்து ஓம்பும் சிலம்ப-கடுவன் மந்தியின் வாயின் அருந்தக்கொடுத்துப் பாதுகாக்குஞ் சிலம்பையுடையாய்—மனம் கனிய முந்தி இன் வாய்மொழி அம் மொய் குழற்கு நீயே சென்று மொழி - அவள் மனநெகிழ விரைந்து இவ்வினிய வாய்மொழிகளை அம்மொய்த்தகுழலையுடையாட்கு நீயேசென்று சொல்லுவாயாக. எ - று.

எல்லாப்பொருளையுங் கடந்தானாயினும் எமக்கண்ணியனென் னுங் கருத்தான், எம்பரனென்றார். வெற்பிற்சிலம்பெனவே வினை யும். பந்தி பலாநிரையென்பாருமுளர். சிலம்பென்றது வெற்பி னொருபக்கத்துளதாகிய சிறுகுவட்டை. வாய்மொழி மொழியென் னுந் துணையாய் நின்றது. மனங்கனியுமென்பதூஉம், நின்வாய் மொழியென்பதூஉம் பாடம். மந்தி உயிர்வாழ்வதற்குக் காரணமா கியவற்றைக் கடுவன் தானேகொடுத்து மனமகிழ்வித்தாற்போல அவள் உயிர்வாழ்வதற்குக் காரணமாகிய நின்வார்த்தைகளை நீயே கூறி அவளை மனமகிழ்விப்பாயாகவென உள்ளுறையுவமங் கண்டு கொள்க. மெய்ப்பாடும் பயனும் அவை. (கூகூ)

## குலமுறைகூறிமறுத்தல்.

குலமுறைகூறி மறுத்தலென்பது நீயே கூறெனச் சொல்லக் கேட்டு, உலகத்து ஒருவர்கண் ஒருவர் ஒருகுறை வேண்டிச்சென் றால் அக்குறை நீயே முடித்துக்கொள்ளென்பாரில்லை; அவ்வாறன்றி இவளிந்நாளெல்லாம் என்குறைமுடித்துத் தருவேனென்று என்னை யவமே யுழற்றி, இன்று நின்குறை நீயே முடித்துக்கொள்ளென்று நின்றாளெனத் தலைமகன் ஆற்றாதுநிற்ப, அவனையாற்றுவிப்பது காரணமாக, நீர் பெரியீர்; யாஞ்சிறியேம்; ஆகலான் எம்மோடு நும க்குச் சொல்லாடுதல் தகாதெனக் குலமுறைகூறி மறுத்துரையா நிற்றல். அதற்குச்செய்யுள்—

**தெங்கம்பழங்கமுகின்குலைசாடிக்கதலிசெற்றுக்**
**கொங்கம்பழனத்தொளிர்குளிர்நாட்டினைநீயுமைகூர்**
**பங்கம்பலவன்பரங்குன்றிற்குன்றன்னமாபதைப்பச்**
**சிங்கந்திரிதருசீறூர்ச்சிறுமியெந்தேமொழியே.**

தொழுகுலத்தீர் சொற்காகேம்
இழிகுலத்தே மெனவுரைத்தது.

இ - ள். தெங்கம்பழம் கமுகின் குலே சாடி - மூக்கூழ்த்து விழுகின்ற தெங்கம்பழம் கமுகினதுகுலேயை உதிரமோதி—கதலி செற்று - வாழைகளை முறித்து—கொங்கம் பழனத்து ஒளிர் குளிர் நாட்டினை நீ - பூந்தாதையுடைய பழனத்துக்கிடந்து விளங்கும் குளிர்ந்த நாட்டினுள்ளாய் நீ—எம் தேமொழி - எம்முடைய தே மொழி—உமை கூர் பங்கு அம்பலவன் பரங் குன்றில் - உமை சிறந்த பாகத்தையுடைய அம்பலவனது பரங்குன்றிடத்து--குன்று அன்ன மா பதைப்பச் சிங்கம் திரிதரும் சீறூர்ச் சிறுமி - மலேபோலும் யானைகள் நடுங்கச் சிங்கங்கள் வேட்டந்திரியுஞ் சீறூர்க்கணுள்ளாள் ஓர் சிறியாள்; அதனால் எம்மோடு நீ சொல்லாடுதல் தகாது எ - று.

நாட்டினை யென்பதற்கு நாட்டையிடமாகவுடையையென இரண்டாவதன் பொருள்பட உரைப்பினுமமையும். பரங்குன்றிற் சீறூரெனவியையும். பெருங்காட்டிற் சிறுகுரம்பை யென்பது போதர, சிங்கந்திரிதரு சீறூரென்றான். மெய்ப்பாடும் பயனும் அவை. (க00)

## நகையாடிமறுத்தல்.

நகையாடி மறுத்தலென்பது இவள் குலமுறைகிளத்தலான் மறுத்துக்கூறியவாறன்றென மனமகிழ்ந்துநிற்ப,இனியிவனாற்றுவா னென உட்கொண்டு, பின்னுந்தழையெதிராது, எம்மையன்மாரே வுங்கண்டறிவேம்; இவ்வையர் கையிலேப்போலக் கொலேயாற்றிண்ணியதுகண்டறியேமென அவனேவாடல் சொல்லி நகையொடு மறுத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**சிலேயொன்றுவாணுதல்பங்கன்சிற்றம்பலவன்கயிலே, மலே**
**யொன்றுமாமுகத்தெம்மையரெய்கணேயுண்குளிக்குங், கலே**
**யொன்றுவெங்கணேயோடுகெடுகிட்டதென்னிற்கெட்டேன்**
**கொலேயொன்றுதிண்ணியவாறையர்கையிற்கொடுஞ்சிலேயே.**

வாட்டழையெதிராது சேட்படுத்தற்கு
மென்னகைத்தோழி யின்னகைசெய்தது.

இ - ள். சிலே ஒன்று வாணுதல் பங்கன் - சிலேயையொக்கும் வாணுதலேயுடையாளது கூற்றையுடையான்—சிற்றம்பலவன் - சிற்றம்பலவன்—கயிலே மலே ஒன்று மா முகத்து எம் ஐயர் எய் கணே

மண் குளிக்கும் - அவனது கைலைக்கண் மலையையொக்கும் யானை முகத்து எம்மையன்மார் எய்யுங்கணை அவற்றையுருவி மண்ணின் கட் குளிப்பக்காண்டும்---கலை ஒன்று வெம் கணையோடு கடுகிட்டது என்னில் - அவ்வாறன்றி ஒருகலை இவரெய்த வெய்ய வம்பினோடு விரைந்தோடிற்றாயின்—ஐயர் கையில் கொடுஞ் சிலை கெட்டேன் கொலை ஒன்று திண்ணிய ஆறு - இவ்வையர் கையில்வளைந்த சிலை, கெட்டேன், கொலையாகியவொன்று திண்ணியவாறென்! எ - று.

கைலைக்கண் மண்குளிக்குமெனவியையும். கொடுஞ்சரமென் பதூஉம் பாடம். (கO௩)

## இரக்கத்தொடுமறுத்தல்.

இரக்கத்தொடு மறுத்தலென்பது இவள் என்னுடனே நகையாடுகின்றது தழைவாங்குதற்பொருட்டெனை உட்கொண்டு நிற்ப, பின்னையுந் தழையேலாது, இவ்வையர் இவ்வாறுமயங்கிப் பித்தழையாநிற்றற்குக் காரணமென்னோவென்று அதற்கிரங்கி மறுத்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மைத்தழையாநின்றமாமிடற்றம்பலவன்கழற்கே
மெய்த்தழையாநின்றவன்பினர்போலவிதிர்விதிர்த்துக்
கைத்தழையேந்திக்கடமாவினாய்க்கையில்வில்லின்றியே
பித்தழையாநிற்பராலென்னபாவம்பெரியவரே.

கையுறையெதிராது காதற்றோழி
மையணீபெரி தயர்த்தனையென்றது.

இ - ள். மை தழையாநின்ற மா மிடற்று அம்பலவன் கழற்கே - கருமை மிகாநின்ற கரியமிடற்றையுடைய அம்பலவனது கழற்கண்ணே—தழையாநின்ற மெய் அன்பினர் போல விதிர் விதிர்த்து - பெருகாநின்ற மெய்யன்பையுடையவரைப்போல மிக நடுங்கி—கைத் தழை ஏந்தி - கைக்கண்ணே தழையை ஏந்தி—கடமா வினாய் - இதனோடு மாறுபடக் கடமாவை வினவி--கையில் வில் இன்றி - தங்கையில் வில்லின்றியே—பெரியவர் பித்தழையா நிற்பர் - இப்பெரியவர் பித்தழையாநின்றார்—என்ன பாவம் - இஃ தென்ன தீவினையோ! எ - று.

மா கருமை. மாமிடறென்பது பண்புத்தொகையாய் இன்னதிதுவென்னுந் துணையாய் நிற்றலானும், மைத்தழையாநின்ற வென்பது அக்கருமையது மிகுதியை உணர்த்தி நிற்றலானும், கூறியது கூறலாகாமையறிக. அது "தாமரைமீமிசை' எனவும், "குழிந்தாழ்ந்த கண்ண" எனவும், இத்தன்மையபிறவும் வருவனபோல. மெய்

த்தழையாநின்றவன்பென்பதற்கு மெய்யாற்றழையாநின்ற அன்பெ னினுமமையும். பித்தென்றது ஈண்டுப் பித்தாற்பிறந்த அழைப்பை. அழைப்பு பொருள் புணராவோசை. (௧0௨)

## சிறப்பின்மைகூறிமறுத்தல்.

சிறப்பின்மைகூறி மறுத்தலென்பது என்வருத்தத்திற்குக் கவலாநின்றனள் இவளாதலின் எனக்கிதுமுடியாமை யில்லையென உட்கொண்டுநிற்ப, தோழி இக்குன்றிடத்து மாவுஞ் சுனையும் இவள் வடிவுக்கஞ்சி மலர்ந்தறியா; ஆதலான் ஈண்டில்லாதனவற்றை யாமணியிற் கண்டார் ஐயுறுவரென மறுத்துக் கூறுநிற்றல். அதற்குச் செய்யுள்—

அக்குமரவுமணிமணிக்கூத்தன்சிற்றம்பலமே
யொக்குமிவளதொளிருருவஞ்சிமஞ்சார்சிலம்பா
கொக்குஞ்சுனையுங்குளிர்தளிருங்கொழும்போதுகளு
மிக்குன்றிலென்றுமலர்ந்தறியாதவியல்பினவே.

மாந்தளிரு மலர்நீலமும்
ஏந்தலிம்மலை யில்லையென்றது.

இ - ள். மஞ்சு ஆர் சிலம்பா - மஞ்சார்ந்த சிலம்பையுடையாய்—அக்கும் அரவும் அணி மணிக் கூத்தன் சிற்றம்பலம் ஒக்கும் இவளது ஒளிர் உரு அஞ்சி - அக்கையும் அரவையும் அணியும் மாணிக்கம்போலுங் கூத்தனது சிற்றம்பலத்தையொக்கும் இவளது விளங்காநின்ற வடிவையஞ்சி— கொக்கும் சுனையும் - மாக்களுஞ் சுனைகளும்—குளிர் தளிரும் கொழும் போதுகளும் - குளிர்ந்த தளிர்களுங் கொழுவிய போதுகளும்—இக் குன்றில் என்றும் மலர்ந்து அறியாத இயல்பின - இக்குன்றில் எக்காலத்தும் விரிந்தறியாத தன்மையையுடைய; அதனால் ஈண்டில்லாத இவற்றை யாமணியிற் கண்டார் ஐயுறுவர். எ - று.

தளிர்மலர்ந்தறியாத வென்னுஞ் சினைவினை முதன் மேலேறியும், போதுமலர்ந்தறியாத வென்னும் இடத்து நிகழ்பொருளின் வினை இடத்து மேலேறியும் நின்றன. (௧0௩)

## இளமைகூறிமறுத்தல்.

இளமைகூறி மறுத்தலென்பது அவளது வடிவுக்கஞ்சி மலர்ந்தறியாவென்றதல்லது மறுத்துக்கூறியவாறன்று;சிறப்பின்மை கூறியவாறெனை உட்கொண்டு, சிறப்புடைத் தழை கொண்டுசெல்ல,

அதுகண்டு, குழலும் முலையுங் குவியாத குதலைச்சொல்லிக்கு நீ சொல்லுகின்றகாரியம் சிறிதுமியையுடைத்தன்றென அவளதிளமை கூறி மறுத்துரையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

உருகுதலைச்சென்றவுள்ளத்துமம்பலத்துமொளியே
பெருகுதலைச்சென்றுநின்றோன்பெருந்துறைப்பிள்ளைகள்ளார்
முருகுதலைச்சென்றகூழைமுடியாமுலைபொடியா
வொருகுதலைச்சின்மழலைக்கென்னோவையவோதுவதே.

முளையெயிற் றரிவை
விளைவில ளென்றது.

இ - ள். உருகுதலைச் சென்ற உள்ளத்தும் - அன்பருடைய உருகுதலையடைந்த உள்ளத்தின்கண்ணும்—அம்பலத்தும் - அம்பலத்தின்கண்ணும்—ஒளி பெருகுதலைச் சென்று நின்றோன் - இரண்டிடத்துமொப்ப ஒளிபெருகுதலையடைந்து நின்றவனது—பெருந்துறைப் பிள்ளை - பெருந்துறைக்கணுளளாகிய எம்பிள்ளையுடைய—கள் ஆர் முருகு தலைச்சென்ற கூழை முடியா - தேனார்ந்த நறுநாற்றம் தம்மிடத்தடைந்த குழல்கள் முடிக்கப்படா—முலை பொடியா - முலைகள் தோன்றா—ஒரு குதலைச் சின் மழலைக்கு - ஒருகுதலைச் சின்மழலை மொழியாட்கு—ஐய - ஐயனே—ஓதுவது என்னோ - நீ சொல்லுகின்றவிது யாதாம்! சிறிதுமியையுடைத்தன்று. எ - று.

ஏகாரம் அசைநிலை. கள்ளார்கூழையென வியையும். குதலைமை விளங்காமை. மழலை இளஞ்சொல். சின்மழலை திறத்தென நான்காவது ஏழாவதன்பொருட்கண் வந்ததெனினுமமையும். இவை நான்கற்கும் மெய்ப்பாடும் பயனும் அவை. (க0ச)

## மறைத்தமைகூறிநகைத்துரைத்தல்.

மறைத்தமைகூறி நகைத்துரைத்தலென்பது இவளதிளமை கூறுகின்றது தழைவாங்குதற்பொருட்டன்றாகவேண்டும்; அதுவன்றி இந்நாளெல்லாமியைய மறுத்து இப்பொழுது இவளிளையளென்று இயையாமைகூறி மறுக்கவேண்டியதென்னை? இனி யிவ்வொழுக்கம் இவளையொழிய வொழுகக்கடவேனென உட்கொண்டு நிற்ப, நீ யென்னை மறைத்தகாரியம் இனி நினக்கு முடியாதென அவனொடு நகைத்துக்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பண்டாலியலுமிலைவளர்பாலகன்பார்கிழித்துத்
தொண்டாலியலுஞ்சுடர்க்கழலோன்றொல்லைத்தில்லையின்

வாய், வண்டாலியலும்வளர்பூந்துறைவமறைக்கினென்னைக்
கண்டாலியலுங்கடனில்லைகொல்லோகருதியதே.

என்னை மறைத்தபி னெண்ணியதரிதென
நன்னுதற்றோழி நகைசெய்தது.

இ - ள். பண்டு ஆல் இயலும் இலை வளர் பாலகன் - முற்கால த்து ஆலின்கணுளதாம் இலையின்கட்டுயின்ற பாலகனாகிய மாயோன்—பார் கிழித்துத் தொண்டால் இயலும் சுடர்க் கழலோன்-நிலத்தைக்கிழித்துக் காணாமையிற்பின்றொண்டாலொழுகுஞ் சுடர்க்கழலையுடையானது—தொல்லைத் தில்லையின்வாய் வண்டு - பழையதாகிய தில்லைவரைப்பினுண்டாகிய வண்டுகள்—ஆல் இயலும் வளர் பூந் துறைவ - ஆலிப்போடு திரிதரும் மிக்க பூக்களையுடைய துறையையுடையாய்—கண்டால் - ஆராய்ந்தால்—என்னை மறைக்கின் கருதியது இயலும் கடன் இல்லை கொல் - என்னை மறைப்பின் நீ கருதியது முடியுமுறைமை யில்லைபோலும். எ - று.

பண்டுதொண்டாலியலுமெனவும், தில்லைவரைப்பிற்றுறையெனவு மியையும். தில்லைக்கட் டுறைவனெனினுமமையும். மெய்ப்பாடு அச்சத்தைச்சார்ந்த நகை. இவள் நகுதலான் என்குறை யின்னதென உணர்ந்த ளொன்று தானே முடிக்குமென நினைந்து ஆற்றுவானவது பயன். (கo௫)

## நகைகண்டுமகிழ்தல்.

நகைகண்டுமகிழ்தலென்பது இவள் தன்னை மறைத்தால் முடியாதென்றது மறையாதொழிந்தால் முடியுமென்றுளாமெனத் தலைமகன் உட்கொண்டு நின்று, உன்னுடைய சதுரப்பாட்டைச்சேர்ந்த மெல்லென்ற நோக்கமன்றோ எனக்குச் சிறந்த துணை; அல்லது வேறு துணையுண்டோவென அவளது நகை கண்டு மகிழாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மத்தகஞ்சேர்தனிநோக்கினன்வாக்கிறந்தூறமுதே, யொத்தகஞ்சேர்ந்தென்னையுய்யநின்றோனுறைதில்லையொத்திலங்கு,முத்தகஞ்சேர்மென்னகைப்பெருந்தோளிமுகமதியின், வித்தகஞ்சேர்மெல்லெனோக்கமன்றோவென்விழுத்துணையே.

இன்னகைத்தோழி மென்னகைகண்டு
வண்ணக்கதிர்வே லண்ணலுரைத்தது.

இ - ள். மத்தகம் சேர் தனி நோக்கினன் - நெற்றியைச் சேர்ந்த தனிக்கண்ணையுடையான்—வாக்கு இறந்து ஊறு அமுது ஒத்து அகம் சேர்ந்து என்னை உய்ய நின்றோன் - சொல்லளவைக் கடந்து ஊறுமமுதத்தையொத்து மனத்தைச் சேர்ந்து என்னையுய்யநின்றவன்—தில்லை ஒத்து இலங்கு - அவனது தில்லையையொத்திலங்கும்—முத்து அகம் சேர் மெல் நகைப் பெருந் தோளி - முத்துப்போலும் எயிறுகளுள்ளடங்கிய மூரன்முறுவலையுடைய பெருந்தோளியது—முகமதியின் வித்தகம் சேர் மெல் என் நோக்கம் அன்றோ என்விழுத்துணை - முகமாகிய மதியின்கணுண்டாகிய சதுரப் பாட்டைச்சேர்ந்த மெல்லென்ற நோக்கமன்றோ எனது சிறந்த துணை? அதனால் ஆற்றத்தகும். எ - று.

வாக்கிறந்தென்பதூஉம், அமுதொத்தென்பதூஉம், அகஞ்சேர்ந்தென்பதூஉம் ஒருசொன்னீர்மைப்பட்டு இரண்டாவதற்கு முடிபாயின. உய்ய நின்றோனென்னுஞ் சொற்கள் உய்வித்தோனென்னும் பொருளவாய், ஒருசொன்னீர்மைப்பட்டு இரண்டாவதற்கு முடிபாயின. இலங்குமுகமதியென வியையும். மறுத்தாளாயினும் நங்கண் மலர்ந்தமுகத்தளென்னுங் கருத்தான் இலங்குமுகமதியினென்றான். உள்ளக்குறிப்பை நுண்ணிதின் விளக்கலின், வித்தகஞ்சேர்மெல்லெனோக்கமென்றான். உள்ளக்குறிப்பென்றவாறென்னை? முன்னர்ச் சின்மழலைக்கென்னோவையவோதுவதென்று இளையளென மறுத்தவிடத்து, இந்நாளெல்லாமியைய மறுத்து இப்பொழுது இவளிளையளென்று இயையாமை மறுத்தாள்; இவ்வொழுக்கம் இனி இவளையொழிய வொழுகக்கடவேனென்று தலைமகன் தன்மனத்திற் குறித்தான்; அக்குறிப்பைத் தோழி அறிந்து கூறினமையின் வித்தகஞ்சேர் மெல்லெனோக்கமன்றோ எனக்குச் சிறந்ததுணை பிறிதில்லையெனத் தனதாற்றாமை தோன்றக் கூறினான். மெய்ப்பாடு உவகை. பயன் ஆற்றாமைநீங்குதல். (கOசு)

## அறியாள்போன்றுநினைவுகேட்டல்.

அறியாள்போன்று நினைவுகேட்டலென்பது தலைமகனது மகிழ்ச்சிகண்டு இவன் வாடாமற் றழைவாங்குவேனென உட்கொண்டு, நின்னுடைய தோழியர் எண்ணிறந்தாருளர்; அவருள் நின்னுடைய நினைவு யார்கண்ணதோவெனத் தானறியாதாள்போன்று அவனினைவு கேளாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**விண்ணிறந்தார்நிலம்விண்டவரென்றுமிக்காரிருவர்**
**கண்ணிறந்தார்தில்லையம்பலத்தார்கழுக்குன்றினின்று**

**தண்ணறுந்தாதிவர்சந்தனச்சோலைப்பந்தாடுகின்றா**
**ரெண்ணிறந்தாரவர்யார்கண்ணதோமன்னநின்னருளே.**

வேந்தன்சொன்ன மாந்தளிர்மேனியை
வெறியார்கோதை யறியேனென்றது.

இ - ள். விண் இறந்தார் நிலம் விண்டவர் என்று மிக்கார் இருவர் கண் இறந்தார் - விண்ணைக்கடந்தவர் நிலத்தைப் பிளந்தவரென்று சொல்லப்படும் பெரியோரிருவருடைய கண்ணைக்கடந்தார் — தில்லை அம்பலத்தார் - தில்லையம்பலத்தின் கண்ணார் — கழுக்குன்றில் நின்று தண் நறுந் தாது இவர் சந்தனச் சோலைப் பந்து ஆடுகின்றார் எண் இறந்தார் - அவரது கழுக்குன்றின்கணின்று தண்ணிதாகிய நறிய தாது பரந்த சந்தனச்சோலையிடத்துப் பந்தாடுகின்றார் இறப்பப்பலர் — மன்ன - மன்னனே — நின் அருள் அவர் யார் கண்ணதோ - நினதருள் அவருள் யார்கண்ணதோ? கூறுவாயாக. எ - று.

விண்டவரென்பதற்கு முன்னுரைத்ததுரைக்க. அன்னோர்க்கு அரியராயினும் எம்மனோர்க்கு எளியரென்னுங்கருத்தால் தில்லையம்பலத்தாரென்றார். சோலைக்கணின்றென்று கூட்டினுமமையும். எண்ணிறந்தார் பலரென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு மருட்கையைச்சார்ந்த பெருமிதம். நும்மாற் கருதப்படுவாளை அறியேனென்றாளாக, என்குறை இன்னாள்கண்ணதென அறிவித்தால் இவள் முடிக்குமென நினைந்து ஆற்றுவானுமென்பது பயன். (க0எ)

## அவயவங்கூறல்.

அவயவங்கூறலென்பது இன்னும் அவளை யிவள் அறிந்திலள்; அறிந்தாளாயிற் றழைவாங்குவாளென உட்கொண்டு நின்று, என்னாற்கருதப்பட்டாளுக்கு அவயவம் இவையெனத் தோழிக்குத் தலைமகன் அவளுடைய அவயவங் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள் —

**குவவினகொங்கைகுரும்பைகுழல்கொன்றைகொவ்வைசெ**
**வ்வாய், கவவினவாணகைவெண்முத்தங்கண்மலர்செங்கழுநீர்**
**தவவினைதீர்ப்பவன்றாழ்பொழிற்சிற்றம்பலமனையாட்**
**குவவினநாண்மதிபோன்றொளிர்கின்றதொளிமுகமே.**

அவயவ மவளுக்
கிவையிவை யென்றது.

இ - ள். தவவினை தீர்ப்பவன் தாழ் பொழில் சிற்றம்பலம் அனையாட்கு - விரதங்களான் வருந்தாமற் றவத்தொழிலை நீக்கி

அன்பர்க்கு இன்புறு நெறியருளியவனது தாழ்ந்தபொழிலையுடைய சிற்றம்பலத்தை யொப்பாட்கு—குவவின கொங்கை குரும்பை - குவிந்த கொங்கைகள் குரும்பையையொக்கும்—குழல் கொன்றை-குழல் கொன்றைப்பழத்தை யொக்கும்—செவ்வாய் கொவ்வை - செய்யவாய் கொவ்வைக்கனியையொக்கும்——கவவின வாள் நகை வெண் முத்தம் - அதனகத்திடப்பட்ட வாணகை வெண்முத்தை யொக்கும்—கண் மலர் செங்கழுநீர் - கண்மலர்கள் செங்கழுநீரை யொக்கும்—ஒளிமுகம் உவவின நாள் மதிபோன்று ஒளிர்கின்றது - ஒளிமுகம் உவாவின்கணுளதாகிய செவ்விமதிபோன்றொளிராநின்றது. எ - று.

தவவினைதீர்ப்பவனென்பதற்கு மிகவும் வினைகளைத் தீர்ப்பவனெனினுமமையும். உவவினநாண்மதியென்றது "காலகுருகு" * என்பதுபோலப் பன்மையொருமைமயக்கம். எப்பொழுதுந் தன்னுள்ளத்திடையறாது விளங்குதலின், ஒளிர்கின்றதெனை நிகழ்காலத்தாற் கூறினான். உவவினமதி பலகலைகள்கூடி நிறைந்த தன்மையையுடைய மதி. நாண்மதி உவாவான நாளின்மதி. (க0அ)

## கண்ணயந்துரைத்தல்.

கண்ணயந்துரைத்தலென்பது அவயவங் கூறியவழிக் கூறியும் அமையாது, தனக்கு அன்று தோழியைக் காட்டினமை நினைந்து, பின்னுங்கண்ணயந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஈசற்கியான்வைத்தவன்பினகன்றவன்வாங்கியவென்
பாசத்திற்காரென்றவன்றில்லையின்னொளிபோன்றவன்றோள்
பூசத்திருநீறெனவெளுத்தாங்கவன்பூங்கழல்யாம்
பேசத்திருவார்த்தையிற்பெருநீளம்பெருங்கண்களே.

கண்ணிணை பிறழ்வன
வண்ண முரைத்தது.

இ - ள். ஈசற்கு யான் வைத்த அன்பின் அகன்று - ஈசனிடத்து யான் வைத்த அன்புபோல அகன்று—அவன் வாங்கிய என் பாசத்தின் கார் என்று - அவனால் வாங்கப்பட்ட எனது பாசம் போலக் கறுத்து—அவன் தில்லையின் ஒளி போன்று - அவனது தில்லையினொளியையொத்து—அவன் தோள் பூசு அத் திருநீறு என வெளுத்து - அவன்றோள்களிற்சாத்தும் அத்திருநீறுபோல வெளுத்து—அவன் பூங்கழல் யாம் பேசு அத்திரு வார்த்தையின்

* குறுந்தொகை. உசு.

பெருநீளம் பெருங்கண்கள் - அவளுடைய பூப்போலுந் திருவடிகளை யாம்பேசும் அத்திருவார்த்தைபோல மிகவு நெடியவாயிருக்கும் என்னாற் காணப்பட்டவளுடைய பெரிய கண்கள். எ-று.

அன்பினகன்றென்பதற்குப் பிறிதுரைப்பாருமுளர். தில்லையினொளிபோறல் தில்லையினொளிபோலும் ஒளியையுடைத்தாதல். ஆகவே தில்லையே உவமையாம். பூசத் திருநீறு வெள்ளிதாய்த்தோன்றுமாறுபோல வெளுத்தென்றும், பேசத் திருவார்த்தை நெடியவாயினாற்போலப் பெருநீளமாமென்றும், வினையெச்சமாக்கி, சில சொல் வருவித்துரைப்பினும் அமையும். பெருநீளமாமென ஆக்கம் வருவித்துத் தொழிற்படவுரைக்க. கண்களாற்பெரிது மிடர்ப்பட்டானாகலானும், தோழியைத் தனக்குக்காட்டின பேருதவியையுடையனவாகலானும், முன்னர்க்கண்மலர் செங்கழுநீரென்றும் அமையாது, பின்னும் இவ்வாறுகூறினான். கண்ணிற்குப் பிறிது வகையான் உவமங்கூறாது இங்ஙனம்*அகலமுதலாயின கூறவேண்டியது எற்றிற்கெனின், அவை கண்ணிற்கிலக்கணமுங் காட்டியவாறும். என்னை இலக்கணமாமாறு? "கண்ணிற் கியல்பு கசடறக் கிளப்பின்—வெண்மை கருமை செம்மை யகல—நீள மொளியென நிகழ்த்துவர் புலவர்." ஆயின் இதனுட் செம்மை கண்டிலேமென்பார்க்குச் செம்மையுங் கூறிற்று. அவன்றோளிற்பூசத் திருநீறென்றதனால் சிவப்புஞ் சொல்லியதாயிற்று. அது செம்மையாற் றோன்றும் வரியெனவறிக. யான்பேசத் திருவார்த்தையென்னாது யாமென்ற தென்னையெனின், திருவார்த்தை பேசுமன்பர் பலராகலான் யாமென்று பலராகக்கூறினார். இவையிரண்டற்கும் மெய்ப்பாடு உவகையைச்சார்ந்த பெருமிதம். பயன் ஐயமறுத்தல். (க0கூ)

## தழையெதிர்தல்.

தழையெதிர்தலென்பது கண்ணயந்துரைப்பக்கேட்ட தோழி இவ்வாறு ஏற்றல் எங்குடிக்கேலாவாயினும் நீ செய்தவுதவிக்கும் நின்பேரன்புக்கும் ஏலாநின்றேனெனக் கூறித் தலைமகன்மாட்டுத் தழையெதிராநிற்றல். அதற்குச்செய்யுள்—

**தோலாக்கரிவென்றதற்குந்துவள்விற்குமில்லின்றொன்மைக்**
**கேலாப்பரிசுளவேயன்றியேலேமிருஞ்சிலம்ப**
**மாலார்க்கரியமலர்க்கழலம்பலவன்மலையிற்**
**கோலாப்பிரசமன்னாட்கையநீதந்தகொய்தழையே.**

அகன்றவிடத் தாற்றாமைகண்டு
கவன்றதோழி கையுறையெதிர்ந்தது.

இ - ள். இருஞ் சிலம்ப - இருஞ்சிலம்பா—தோலாக் கரி வென்றதற்கும் - எம்மை யேதஞ்செய்யவருந் தோலாக்கரியை நீ வென்றதற்கும்—துவள்விற்கும் - யான் குறைமறுப்பவும் போகாது பேரன்பினையுடையையாய் நீவிடாது துவண்ட துவட்சிக்கும்—இல்லின் தொன்மைக்கு ஏலாப் பரிசு உளவே - எமது குடியின் பழமைக்கேலாத இயல்பையுடையவென்று எம்மாற் செய்யப்படாதனவுளவே—ஐய - ஐயனே—மாலார்க்கு அரிய மலர்க் கழல் அம்பலவன் மலையில் - மாலார்க்குமரிய மலர்போலுங் கழலையுடைய அம்பலவனது மலையின்கண்—கோலாப் பிரசம் அன்னாட்கு நீ தந்த கொய்தழை - வைக்கப்படாத தேனையொப்பாட்கு நீ தந்த கொய்தழையை—அன்றி ஏலேம் - பிறிதோராற்றானேலேம். எ - று.

உளவேயென்னுமேகாரம் எதிர்மறை. அஃதென்போலவெனின், "தூற்றாதே தூர விடல்"* என்றது தூற்றுமென்று பொருள்பட்டவாறுபோலவென்றறிக. அன்றியும், ஏலாப்பரிசுளவே யென்பதற்கு நாங்கள் இத்தழை வாங்குவதன்றென்றது கருத்து. எமது குடிப்பிறப்பின் பழைமைபற்றி அது சுற்றத்தார்கூடி வாங்குவதொழிந்து நாங்களாக வாங்கினாற் குடிப்பிறப்புக்குப் பழிவருமென்பதனைப்பற்றியென்றவாறு. வழிபட்டுக்காணலுற்றமையின், மாலாரென இழித்துக்கூறினாரெனினுமமையும். உளவேலன்றியேலேமென்பது பாடமாயின், தழைவாங்குகின்றுழி என்பொருட்டால் நீர் நுங்குடிக்கேலாதனவற்றைச் செய்யாநின்றீரென்று தலைமகன் கூறியவழி, நீ செய்ததற்குக் கைம்மாறு செய்யவேண்டுதுமாதலின் இற்பழியாங்குற்றம் இதற்குளவாயினல்லது இதனையேலேமென்று கூறினாளாகவுரைக்க. என்றது இற்பழியாங்குற்றம் இதற்குளவாகலான் ஏற்கின்றேம் நீ செய்தவுதவியைப்பற்றி அல்லதேலேமென்றவாறெனவறிக. கோலாற்பிரசமென்பது பாடமாயின், கோலிடத்துப்பிரசம்: என்றது கோற்றேன். இது சுவைமிகுதியுடைமை கூறியவாறெனவுரைக்க. தோலாக்கரிவென்றது முதலாயின நிகழ்ச்சி செய்யுளின்கட் கண்டிலேமென்பார்க்கு இயற்கைப்புணர்ச்சியது நீக்கத்தின்கண் நிகழ்ந்தனவெனவுரைக்க. அன்றியும்படைத்து மொழி வகுத்துரையென்பனவற்றானுமறிக. அகறல் அவன்கருத்திற்ககறல். மெய்ப்பாடு அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். பயன் குறைநேர்தல். (கக0)

* நாலடி. பொறையுடைமை. ௩.

## குறிப்பறிதல்.

குறிப்பறிதலென்பது தலைமகன் மாட்டுத் தழை யெதிர்ந்த தோழி இவளுக்குத் தெற்றெனக் கூறுவேனாயின் இவள் மறுக்க வுங்கூடுமெனா உட்கொண்டு, இந்நாள்காறுந் தழையேலாமைக்குத் தக்க பொய்சொல்லி மறுத்தேன்; இன்று அவனது நோக்கங்கண்ட பின் பொய்சொல்லுநெறி அறிந்திலேன்; இனியவனுக்குச் சொல்லு மாறென்னோவெனத் தழையேற்பித்தற்குத் தலைமகளது குறிப் பறியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**கழைகாண்டலுஞ்சுளியுங்களியானையன்னான்கரத்திற்,றழை**
**காண்டலும்பொய்தழைப்பமுன்காண்பனின்றம்பலத்தா,னு**
**ழைகாண்டலுநினைப்பாகுமென்னோக்கி மன்னோக்கங்கண்டா**
**லிழைகாண்பணைமுலையாயறியேன்சொல்லுமீடவற்கே.**

தழையெதிரா தொழிவதற்கோர்
சொல்லறியேனெனப் பல்வளைக்குரைத்தது.

இ - ள். கழை காண்டலும் சுளியும் களி யானை அன்னான் - குத்துக்கோலைக் காண்டலும் வெகுளுங் களியானையை யொப்பானு டைய—கரத்தில் தழை காண்டலும் பொய் முன் தழைப்பக் காண் பன் - கையிற் றழையைக்காண்டலும் அப்பொழுது சொல்லத்த கும் பொய்யை முன்பெருகக் காண்பேன்—அம்பலத்தான் உழை காண்டலும் நினைப்பு ஆகும் மெல் நோக்கி - அம்பலத்தானுடைய கையிலுழைமானைக் காண்டலும் நினைவுண்டாம் மெல்லிய நோக் கத்தையுடையாய்—மன் நோக்கம் கண்டால் - அம்மன்னனுடைய புன்கணோக்கத்தைக் கண்டால்—இழை காண் பணை முலையாய் - இழைவிரும்பிக் காணப்படும் பெரிய முலையையுடையாய்—இன்று அவற்குச் சொல்லும் ஈடு அறியேன் - இன்று அவற்குப் பொய் சொல்லுநெறி யறிகின்றிலேன்; இனி யாதுசெய்வாம்? எ - று.

குத்துக்கோல்வரைத்தன்றி யானை களிவரைத்தாயினாற்போலக் கழறுவார் சொல்வயத்தனன்றி வேட்கைவயத்தனாயினானென்பது போதரக் கழைகாண்டலுஞ் சுளியுங்களியானை யன்னானென்றாள். ஈண்டுக்கழறுவாரென்றது தோழி தன்னை. அஃதாவது கையுறை பலவற்றையும் ஆகாவென்று தான் மறுத்ததனைநோக்கி. தலைமகளை முகங்கோடற்கு இழைகாண் பணைமுலையாயெனப் பின்னும் எதிர் முகமாக்கினாள். தழையெதிர்ந்தாளாயினும் தலைமகளது குறிப்பறி யாமையின், அவனைக் கண்டிலள்போலக் கண்டாலெனா எதிர்கா

லத்தாற் கூறினாள். இதனை முகம்புக வுரைத்தலெனினும் குறிப் பறிதலெனினு மொக்கும். (கககூ)

## குறிப்பறிந்துகூறல்.

குறிப்பறிந்து கூறலென்பது குறிப்பறிந்து முகங்கொண்டு, அதுவழியாகநின்று, யானை கடிந்த பேருதவியார் கையிற்றழை யுந்துவளத்தகுமோ? அது துவளாமல் யாம் அவரது குறைமுடிக்க வேண்டாவோவெனத் தோழி நயப்பக் கூறாநிற்றல். அதற்குச் செய்யுள்—

**தவளத்தநீறணியுந்தடந்தோளண்ணறன்னொருபா**
**லவளத்தனாமகனாந்தில்லையானன்றுரித்ததன்ன**
**கவளத்தயானைகடிந்தார்கரத்தகண்ணார்தழையுந்**
**துவளத்தகுவனவோசுரும்பார்குழற்றூமொழியே.**

ஏழைக் கிருந்தழை
தோழிகொண் டுரைத்தது.

இ - ள். சுரும்பு ஆர் குழல் தூ மொழி - சுரும்பார்ந்த குழலை யுடைய தூமொழியாய்—தவளத்த நீறு அணியும் தடந் தோள் அண்ணல்-வெண்மையையுடைய நீற்றைச் சாத்தும் பெரிய தோள் களையுடைய அண்ணல்—தன் ஒரு பாலவள் அத்தன் ஆம் மகன் ஆம் தில்லையான் - தனதொரு பாகத்துள்ளாளாகிய அவட்குத் தந்தை யுமாய் மகனுமாந் தில்லையான்—அன்று உரித்தது அன்ன கவளத்த யானை - அவன் அன்றுரித்த யானையையொக்குங் கவளத்தையு டைய யானையை—கடிந்தார் கரத்த கண் ஆர் தழையும் துவளத் தகுவனவோ - நம்மேல் வாராமற் கடிந்தவருடைய கையவாகிய கண்ணிற்காருந் தழையும் வாடத்தகுவனவோ? தகா. எ - று.

தவளத்தநீறு கவளத்தயானை என்பன பன்மையொருமை மயக்கம். சிவதத்துவத்தினின்றுஞ் சத்திதத்துவந் தோன்றலின் அவளத்தனென்றும், சத்திதத்துவத்தினின்றுஞ் சதாசிவதத்து வந்தோன்றலின் மகனென்றும் கூறினார். "இமவான்மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன் றகப்பன்" * என்பதூஉம் அப்பொ ருண்மேல் வந்தது. கவளத்தயானை யென்பதனால் தான் விரும்புங் கவளமுண்டு வளர்ந்த யானையென்பதூஉம் கூறப்பட்டதாம். அது ஒருவராற் கட்டப்பட்டு மிடிபட்டதன்றாகலான், அதனை வெல்வ தரிது;அப்படிப்பட்ட யானையையும் வென்றவர். அங்ஙனம் யானை

* திருவாசகம், திருப்பொற்சுண்ணம். கரு.

கடிந்த பேருதவியார் கையணவுந் துவளத்தகுவனவோ வென்றத னால், அவருள்ளமுந் துவளாமற் குறைமுடிக்கவேண்டுமென்பது குறிப்பாற்கூறினாள். உம்மை சிறப்பும்மை. எழைக்குரைத்ததென வினையும். இவையிரண்டற்கும் மெய்ப்பாடு அழுகையைச் சார்ந்த பெருமிதம். பயன் குறைநயப்பித்தல். (ககஉ)

## வருத்துரைத்தல்.

வருத்துரைத்தலென்பது உதவிகூறவும் பெருநாணினளாத லின் தழை வாங்கமாட்டாதுநிற்ப, அக்குறிப்பறிந்து, இருவகை யானும் நமக்குப் பழியேறும்; அதுகிடக்க நமக்குதவி செய்தாற்கு நாமுமுதவி செய்யுமாறென்னோவெனத் தலைமகள் தழையேற்கு மாறு வருத்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஏறும்பழிதழையேற்பின்மற்றேலாவிடின்மடன்மா
வேறுமவனிடபங்கொடியேற்றிவந்தம்பலத்து
ளேறுமரன்மன்னுமீங்கோய்மலைநம்மிரும்புனங்காய்ந்
தேறுமலைதொலைத்தாற்கென்னையாஞ்செய்வதேந்திழையே.

கடித்தழைகொணர்ந்த காதற்றோழி
மடக்கொடிமாதர்க்கு வருத்துரைத்தது.

இ-ள். ஏந்திழை - ஏந்திழாய்—தழை ஏற்பின் பழி ஏறும் - தழையையேற்பின் தாமேயொரு நட்புச்செய்தாரென்று பிறரிட த்து நமக்குப் பழியேறும்—ஏலாவிடின் அவன் மடன்மா ஏறும் - அதனையேலாதொழியின் பிறிதோருபாயமில்லையென்று அவன் மடலாகிய மாவையேறும்—இடபம் கொடி ஏற்றி வந்து அம்பலத் துள் ஏறும் - தருமவடிவாகிய இடபத்தைக் கொடியின்கண்வை த்து நமது பிறவித்துன்பத்தை நீக்க ஒருப்பட்டுவந்து அம்பலத்தி ன்கணேறும்—அரன் மன்னும் ஈங்கோய் மலை - அரன்றங்கும் ஈங் கோய்மலையின்—நம் இரும் புனம் காய்ந்து - நமது பெரிய புனத் தையழித்து—ஏறும் மலை தொலைத்தாற்கு - நம்மைநோக்கி வந்தே றும் மலைபோலும் யானையைத் தோற்பித்தவற்கு—யாம் செய்வது என்னை-யாஞ்செய்வதென்னோ? அதனை யானறிகின்றிலேன். எ-று.

மற்று வினைமாற்று. மடன்மாவேறுமவனென்று தழையேலா விடினும் பழியேறுமென்பதுபடக் கூறினமையானும், ஏறுமலை தொலைத்தாற்கென அவன்செய்த உதவி கூறினமையானும், தழை யேற்பதே கருமமென்பது படக்கூறினாளாம். அன்றியுந் தழையே ற்றால் நமக்கேறும்பழியை அறத்தொடுநிலைமுதலாயின கொண்டு

தீர்க்கலாமென்றும், ஏலாவிடின் அவன் மடன்மாவை யேறுதலான் வரும்பழி ஒன்றானுந் தீர்க்கமுடியாதென்றும், கூறியவாறாயிற்று. வருத்துரைத்தல் தழையேற்றலே கருமமென்று கூறுபடுத்துச் சொல்லுதல். (கக௩)

## தழையேற்பித்தல்.

தழையேற்பித்தலென்பது தழையேலாதொழியினும் பழியேறுமாயிற் றழையேற்பதே காரியமென உட்கொண்டு நிற்ப, அக்குறிப்பறிந்து, இத்தழை நமக்கெளியதொன்றன்று; இதனை யேற்றுக்கொள்வாயாகவெனத் தோழி தலைமகளைத் தழையேற்பியா நிற்றல். அதற்குச்செய்யுள்—

தெவ்வரைமெய்யெரிகாய்சிலையாண்டென்னையாண்டுகொண்
டசெவ்வரைமேனியன்சிற்றம்பலவன்செழுங்கயிலை
யவ்வரைமேலன்றியில்லைகண்டாயுள்ளவாறருளா
னிவ்வரைமேற்சிலம்பன்னெளிதிற்றந்தவீர்ந்தழையே.

கருங்குழன்மடந்தைக் கரும்பெறற்றோழி
இருந்தழைகொள்கென விரும்பிக்கொடுத்தது.

இ - ள். அருளான் - நம்மாட்டுண்டாகிய அருளான்—இவ்வரைமேல் சிலம்பன் எளிதில் தந்த ஈர்ந்தழை - இம்மலைக்கட் சிலம்பன் எளிதாகக்கொணர்ந்து தந்த வாடாத இத்தழை—செழுங்கயிலை அவ்வரைமேல் அன்றி இல்லை - வளவிய கைலையாகிய அம்மலையிடத்தல்லது பிறிதோரிடத்தில்லை; இதனைக் கொள்வாயாக. எ - று.

உள்ளவாறென்பது யான்கூறிய இது மெய்ம்மையென்றவாறு.

தெவ்வரை மெய் எரி காய் சிலை ஆண்டு - பகைவரை மெய்யெரித்த வரையாகிய காய்சிலையைப் பணிகொண்டு—என்னை ஆண்டுகொண்ட - பின் என்னை யடிமைக்கொண்ட—செவ்வரை மேனியன் சிற்றம்பலவன் செழுங்கயிலை - செவ்வரைபோலுந் திருமேனியையுடையனாகிய சிற்றம்பலவனது செழுங்கைலையெனக் கூட்டுக.

மெய் எரியென்பன ஒருசொல்லாய்த் தெவ்வரையென்னும் இரண்டாவதற்கு முடிபாயின. மெய்யெரித்த காய்சிலை மெய்யெரி காய்சிலையென வினைத்தொகையாயிற்று. காய்சிலை சாதியடை. ஐகாரத்தை அசைநிலையாக்கித் தெவ்வர்மெய்யெரித்தற்குக் காரணமாஞ்சிலையெனினுமமையும். வலியனவற்றை வயமாக்கிப் பயின்று

பின் என்னையாண்டானென்பது போதர, காய்சிலையாண்டென்னை யாண்டுகொண்டவென்றார். என்னைத் தனக்கடிமைகொள்ளுதல் காரணமாகப் பிறிதொன்றின் மேலிட்டுக் கல்லை வளைத்தான்; என்னெஞ்சை வளைத்தல் காரணமாக அல்லது தனக்கொரு பகையுண்டாய்ச் செய்ததன்றுபோலும் என்பது கருத்து. "கல்லை மென்கனி யாக்கும் விச்சைகொண் டென்னை நின்கழற் கன்பனுக்கினாய்" * என்பதுமது. கைலைத்தழையை எளிதிற்றந்தானென்றதனான் வரைவு வேண்டியவழித் தமர் மறுப்பின் வரைந்து கொள்ளுந் தாளாண்மையனென்பது கூறினாளாம். கண்டாயென்பது முன்னிலையசைச்சொல். இவையிரண்டற்கும் மெய்ப்பாடு பெருமிதம். பயன் கையுறையேற்பித்தல். (கககு)

## தழைவிருப்புரைத்தல்.

தழைவிருப்புரைத்தலென்பது தலைமகளைத் தழையேற்பித்துத் தலைமகனுழைச்சென்று, நீதந்த தழையை யான்சென்று கொடுத்தேன்; அதுகொண்டு அவள் செய்தது சொல்லிற் பெருகுமெனத் தலைமகளது விருப்பங் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**பாசத்தளையறுத்தாண்டுகொண்டோன்றில்லையம்பலஞ்சூழ்**
**தேசத்தனசெம்மனீதந்தனசென்றியான்கொடுத்தேன்**
**பேசிற்பெருகுஞ்சுருங்குமருங்குல்பெயர்ந்தரைத்துப்**
**பூசிற்றிலளன்றிச்செய்யாதனவில்லைபூந்தழையே.**

விருப்பவ டோழி
பொருப்பற் குரைத்தது.

இ - ள். பாசத்தளை அறுத்து - பாசமாகிய தளையிற்பட்டுக் கிடப்ப அத்தளையையறுத்து—ஆண்டு கொண்டோன் தில்லையம்பலம் சூழ் தேசத்தன - தனக்குக் குற்றேவல்செய்ய என்னை யடிமைக்கொண்டவனது தில்லையம்பலத்தைச் சூழ்ந்த தேசத்தின்கணுள்ளன—செம்மல் நீ தந்தன - அச்சிறப்பேயன்றிச் செம்மால் நின்னாற்றரப்பட்டன—சென்று யான் கொடுத்தேன் - அவற்றைச் சென்று யான் கொடுத்தேன்—பேசில் பெருகும் - கொடுப்ப ஆண்டு நிகழ்ந்தனவற்றைச் சொல்லுவேனாயிற் பெருகும்—சுருங்கு மருங்குல் - சுருங்கிய மருங்குலையுடையாள்--பூந்தழை-அப்பூந்தழையை—அரைத்துப் பூசிற்றிலள் அன்றிப் பெயர்ந்து செய்யாதன இல்லை - அரைத்துத் தன்மேனியெங்கும் பூசிற்றிலளல்லது பெயர்த்துச் செய்யாதனவில்லை. எ - று.

---

* திருவாசகம், திருச்சதகம். கூசு.

என்றது இவை வாடுமென்று கருதாது அரைத்துப் பூசினாற்போலத் தன்மேனிமுழுதும் படுத்தாள் என்றவாறு. பெயர்த்தென்பது பெயர்க்கென மெலிந்துநின்றது. பிசைந்தரைத்தென்று பாடமோதுவாருமுளர். மெய்ப்பாடு உவகை. பயன் தலைமகனை யாற்றுவித்தல். (கக௫)

சேட்படைமுற்றிற்று.



# பகற்குறி.



பகற்குறியென்பது தலைமகளைத் தழையேற்பித்த தோழி தலைமகனுடன் அவளைப் பகற்குறிக்கட் டலைப்பெய்வியாநிற்றல். அது வருமாறு—

குறியிடங்கூற லாடிடம்படர்தல்
குறியிடைச்சேற லிடத்துய்த்துநீங்க
லுவந்துரைத்தலொடு மருங்கணைதல்லே
யறிவறிவித்த லவனுண்மகிழ்த
லாயத்துய்த்த றோழிவந்துகூட
லாடிடம்புகுத றனிகண்டுரைத்த
றடமென்முலையாள் பருவங்கூறி
வரவுவிலக்கன் வரைவுடம்படாது
மிகுத்துரைத்தலொடு மெய்ம்மையுரைத்தல்
வருத்தங்கூற றுயச்சங்கூற
விற்செறிவறிவித்த றமர்நினைவுரைத்த
லெதிர்கோள்கூற லேறுகோள்கூற
லேதிலார்தம்முரை கூறலவளொடு
கூறுவாள்போன்று தினைமுதிர்வுரைத்தல்
பகல்வரல்விலக்கல் வையுளெய்தித்
தினையொடுவெறுத்தல் சிறைப்புறமாக
வேங்கையொடுவெறுத்தல் வெற்பமர்நாடற்குக்
கழுமலுற்றிரங்கல் கடிப்புனங்கையறக்
கொய்தமைகூறல் பிரிவருமைகூறன்
மயிலொடுகூறல் வறும்புனங்காண்டல்

பயில்பதிநோக்கிப் பதிமிகவாடல்
சொன்னநாலெட்டுந் தோன்றுமியற்கை
மன்னியபகற்குறி வகையாகும்மே.

இ-ள். குறியிடங்கூறல், ஆடிடம்படர்தல், குறியிடத்துக்கொண்டுசேறல், இடத்துய்த்துநீங்கல், உவந்துரைத்தல், மருங்கணைதல், பாங்கியறிவுரைத்தல், உண்மகிழ்ந்துரைத்தல், ஆயத்துய்த்தல், தோழிவந்துகூடல், ஆடிடம்புகுதல், தனிகண்டுரைத்தல், பருவங்கூறிவரவுவிலக்கல், வரைவுடம்படாதுமிகுத்துக்கூறல், உண்மைகூறிவரைவுகடாதல், வருத்தங்கூறிவரைவுகடாதல், தாயச்சங்கூறிவரைவுகடாதல், இற்செறிவறிவித்துவரைவுகடாதல், தமர்நினைவுரைத்துவரைவுகடாதல், எதிர்கோள்கூறிவரைவுகடாதல், ஏறுகோள்கூறிவரைவுகடாதல், அயலுரையுரைத்துவரைவுகடாதல், தினைமுதிர்வுரைத்துவரைவுகடாதல், பகல்வரல்விலக்கிவரைவுகடாதல், தினையொடுவெறுத்துவரைவுகடாதல், வேங்கையொடுவெறுத்து வரைவுகடாதல், இரக்கமுற்றுவரைவுகடாதல், கொய்தமைகூறி வரைவுகடாதல், பிரிவருமைகூறிவரைவுகடாதல், மயிலொடுகூறி வரைவுகடாதல், வறும்புனங்கண்டுவருந்தல், பதிநோக்கிவருந்தல் என விவ்வுமுப்பத்திரண்டும் பகற்குறியாம். எ-று. அவற்றுள்—

## குறியிடங்கூறல்.

குறியிடங் கூறலென்பது தழைவிருப்புரைத்த தோழி ஆங்கவள் விளையாடுமிடத்து ஒரு கரியபொழில் கதிரவன் நுழையாவிருளாய் நடுவண் ஓர் பளிக்குப்பாறையை யுடைத்தாயிருக்கும்; அவ்விடத்து வருவாயாகவென்று தலைமகனுக்குக் குறியிடங் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வானுழைவாளம்பலத்தரன் குன்றென்றுவட்கிவெய்யோன்
றானுழையாவிருளாய்ப்புறநாப்பண்வண்டாரகைபோற்
றேனுழைநாகமலர்ந்துதிகழ்பளிங்கான்மதியோன்
கானுழைவாழ்வுபெற்றுங்கெழில்காட்டுமோர்கார்ப்பொழிலே

வாடிடத்தண்ணல் வண்டழையெதிர்ந்தவள்
ஆடிடத்தின்னியல் பறியவுரைத்தது.

இ - ள். ஓர் கார்ப் பொழில் - ஒரு கரியபொழில்—புறம் வெய்யோன் தான் நுழையா இருளாய் - புறமெங்கும் கதிரோன் றான் சென்று நுழையாதவிருளாய்—நாப்பண் வண் தாரகை போல் தேன் நுழை நாகம் மலர்ந்து - நடுவண் வளவிய வான்மீன்போலத்

தேன்கள் நுழையும் நாகப்பூ மலர்ந்து—திகழ் பளிங்கான் - திகழும் பளிங்கால்—மதியோன் கான் உழை வாழ்வு பெற்றாங்கு எழில் காட்டும் - திங்கட்கடவுள் வானிடத்து வாழ்க்கையொழிந்து கானிடத்து வாழ்தலைப் பெற்றாற்போலத் தனதெழிலைப் புலப்படுத்தும். எ - று.

வான் உழை வாள் - இருட்கு அப்பாலாகிய வானிடத்துண்டாகிய ஒளி—அம்பலத்து அரன் - இவ்வண்ணஞ் சேயனாயினும் அணியனாய் அம்பலத்தின்கணுள்ளனாகிய அரன்—குன்று என்று வட்கி வெய்யோன் தான் நுழையா - அவனது மலையென்று கூசினாற்போல வெய்யவன் நுழையாவெனக்கூட்டுக.

"அண்ட மாரிரு ளூடு கடந்தும்ப—ருண்டு போலுமோரொண் சுடர்" * என்பதூஉம் அப்பொருண்மேல் வந்தது. வட்கியென்பதனால் முன் பற்றறியுண்டாதல் விளங்கும். வானுழைவாளென்பதற்குக் கற்பவிறுதிக்கண் தோன்றிய முறையானே வான் சென்றொடுங்கும் ஒளியென்றுரைப்பாருமுளர். புறம் இருளாயெனவும், நாகமலர்ந்தெனவும், சினைவினை முதன்மேலேறி நின்றன. புறம் இருளாயென்பது இடத்து நிகழ்பொருளின்வினை இடத்தின்மேலேறி நின்றது. இது குறிப்பெச்சமாதலான், ஆண்டு வாவென்பது கருத்து. மெய்ப்பாடு உவகை. பயன் குறியிடமுணர்த்துதல். (ககசு)

## ஆடிடம்படர்தல்.

ஆடிடம்படர்தலென்பது தலைமகளுக்குக் குறியிடங் கூறின தோழி யாம் புனத்தின்கட்போய் ஊசலாடி அருவியேற்று விளையாடுவேம் போதுவாயாகவெனத் தலைமகளை ஆயத்தொடுங் கொண்டுசென்று ஆடிடம் படராநிற்றல். அதற்குச்செய்யுள்—

புயல்வளருசன்முன்னாடிப்பொன்னேபின்னைப் போய்ப்பொலியு, மயல்வளர்குன்றினின்றேற்றுமருவிதிருவுருவிற்
கயல்வளர்வாட்கண்ணிபோதருகாதரந்தீர்த்தருளுந்
தயல்வளர்மேனியனம்பலததான்வரைத்தண்புனத்தே.

வண்டமையெதிர்ந்த வொண்டொடிப்பாங்கி
நீடமைத்தோளியொ டாடிடம்படர்ந்தது.

இ - ள். பொன்னே - பொன்னே—காதரம் தீர்த்து அருளும் தையல் வளர் மேனியன் - பிறவி காரணமாகவரு மச்சத்தை நீக்கி

* திருநாவுக்கரசுநாயனார்தேவாரம், சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை, உ.

அருள்செய்யுந் தையல்தங்குந் திருமேனியை யுடையவனுகிய—அம்பலத்தான் வரைத் தண் புனத்து - அம்பலத்தானது மலையிற் குளிர்ந்த புனத்தின்கண்—புயல் வளர் ஊசல் முன் ஆடி-புயல்தங்கு மூசலைமுன்னுடி—பின்னைப் போய்-பின்போய்—அயல் பொலியும் வளர் குன்றில் நின்று அருவி ஏற்றும் - அதற்கயலாகிய பொலியும் உயர்ந்த குன்றின்கணின்று அருவியை ஏற்போம்—திரு உருவின் கயல் வளர் வாள் கண்ணி போதரு - திருப்போலும் உருவினையும் கயல்போலும் வாட்கண்ணையுமுடையாய், நீ போதுவாயாக. எ-று.

உயர்ந்தவமைழமரத்திற் ெறுடுத்தலால், புயல்வளருசலென்றுள். வளர்கண்ணெனவியையும். ஈண்டு வளரென்பது உவமையுருபு. வாள் உவமை. ஒளியெனினுமமையும். தண்புனத்துப் போதருவெண இயைப்பினுமமையும். மெய்ப்பாடு பெருமிதம்; உவகையுமாம். பயன் குறியிடத்துப் போதருதல். (கசஎ)

## குறியிடத்துக்கொண்டுசேறல்.

குறியிடத்துக்கொண்டு சேறலென்பது ஆடிடம்படர்ந்த தோழி தலைமகனுக்குத் தான்சொன்ன குறியிடத்து இவளைக்கொண்டு சென்றுய்க்கும்பொழுது, ஆயத்தாரைத் தம்மிடத்தினின்று நீக்கவேண்டுதலின் தினைகாத்தல் முதலாகிய விளையாட்டுக்களைத் தான் கூறவே அவ்வவ்விளையாட்டிற்குரியார் தலைமகள் அவ்வவ்விடங்களிலே வருவளென்று கருதித் தோழி சொன்னவகையே அவ்வவ் விளையாட்டுவிருப்பினுன் எல்லாரும் பிரிவர்; அவ்வகை ஆயவெள்ளத்தைப் பிரிவித்து, தமியளாய் நின்ற தலைமகளையுங் கொண்டு, யாமும்போய் மயிலாடல்காண்பேமெனா அக்குறியிடத்துச் செல்லாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**தினைவளங்காத்துச்சிலம்பெதிர்கூஉய்ச்சிற்றின் முற்றிழைத்**
**துச்,சுனைவளம்பாய்ந்துதுணைமலர்கொய்துதொழுதெழுவார்**
**வினைவளநீறெழநீறணியம்பலவன்றன்வெற்பிற்**
**புனைவளர்கொம்பரன்னுயன்னகாண்டும்புனமயிலே.**

அணிவளராடிடத் தாயவெள்ள
மணிவளர்கொங்கையை மருங்ககன்றது.

இ - ள். தொழுது எழுவார் வினை வளம் நீறு எழ - தொழாநின்று துயிலெழுவாருடைய வினையினது பெருக்கம் பொடியாக—நீறு அணி அம்பலவன்றன் வெற்பில் - தன்றிருமேனிக்கண் நீற்றையணியும் அம்பலவனது வெற்பில்—புனை வளர் கொம்பர்

அன்னாய் - கைபுனையப்பட்ட வளர்கொம்பையொப்பாய்—தினை வளம் காத்து - தினையாகிய வளத்தைக் காத்து—சிலம்பு எதிர் கூஉய் - சிலம்பிற் கெதிரழைத்து—சிற்றின் முற்று இழைத்து - சிற்றிலை மிகவுமிழைத்து—சுனை வளம் பாய்ந்து - சுனைப்புனலிற் பாய்ந்து—துணை மலர் கொய்து - ஒத்தமலர்களைக் கொய்து—அன்ன புனமயில் காண்டும் - அத்தன்மையவாகிய புனமயிலைக் காண்பேம் யாம். எ - று.

மலைக்கு வளமாதலானுக்கித் தினைவளமென்றாள். தினையினது மிகுதியெனினுமமையும். தொழுதெழுவாரென்றது துயிலெழுங் காலத்தல்லது முன்னுணர்வின்மையான் உணர்வுள்ள காலத்து மறவாது நினைவார் என்றவாறு. நீறணிந்தகோலம் நெஞ்சம் பிணிக்கு மெழிலுடைமையான் அக்கோலந் தொழுதெழுவாருள்ளத்து நீங்காது நிற்றலான் ஆண்டுள்ளவினை நீறுமென்னுங் கருத்தான், வினைவளநீறெழநீறணியம்பலவனென்றார். புதல்வனது பிணிக்குத் தாய் மருந்துண்டாற்போலத் தொழுதெழுவார் வினைக்குத் தானீறணிந்தானென்பாருமுளர். வெற்பினென்புழி வெற்பைத் தினைகாத்தல் முதலாகிய தொழிற்கு இடமாகவுரைப்பினுமமையும். அத்தன்மையவாகிய மயிலென்றது பொருளதிகாரத்திற் கூறப்பட்ட தலைமகள் தான்றமியளாய் நின்று கண்ட மயிலை. இயற்கைப்புணர்ச்சிய திறு திக்கட்டோழி தனது வாட்டத்தை வினவியபோது யானோரிள மயிலாலுவது கண்டேன்; அதனை நீயுங் காணப் பெற்றிலையென வாடினேனென்று உரைப்பக் கேட்டாளாதலான், அதனைப்பற்றி அம்மயிலைக் காண்டுமென்றாளாயிற்று. மெய்ப்பாடு அது. பயன் ஆயம்பிரிதல். (௧௧௮)

## இடத்துய்த்துநீங்கல்.

இடத்துய்த்துநீங்கலென்பது குறியிடைக் கொண்டு சென்ற தோழி யான் அவ்விடத்துச்சென்று நின்குழற்குப் பூக்கொய்து வருவேன்; அவ்விடம் வேய் முத்துதிர்தலான் நினதுமெல்லடிக்குத் தகாதாதலான் நீ என்னோடு வாராது இங்கேநின்று பூக்கொய்வாயாகவெனத் தலைமகளைக் குறியிடத்து நிறுத்தித் தானீங்காநிற்றல்.

அதற்குச்செய்யுள்—

நரல்வேயினநின தோட்குடைந் துக்கநன் முத்தஞ்சிந்திப்
பரல்வேயறையுறைக் கும்பஞ்சடிப்பரன் றில்லையன்னாய்
வரல்வேய்தருவனிங் கேநி லுங்கேசென் றுன்வார்குழற்கீர்ங்
குரல்வேயளிமுரல் கொங்கார் தடமலர் கொண்டுவந்தே.

மடத்தகைமாதரை யிடத்தகத்துய்த்து
நீங்கலுற்ற பாங்கிபகர்ந்தது.

இ - ள். உங்கே சென்று-யான் உவ்விடத்தேசென்று—ஈர்ங்குரல் வேய் அளி முரல் கொங்கு ஆர் தடமலர் கொண்டு வந்து - தேனுணீரிய பூங்கொத்தைமூடிய அளிகள் முரலுந் தாதுநிறைந்த பெரியமலர்களைக் கொய்துகொண்டுவந்து—உன் வார் குழற்கு வேய்தருவன் - நின்னுடைய நெடியகுழற்கண் வேய்வேன்—பரன் தில்லை அன்னாய் - பரனது தில்லையையொப்பாய்—நரல் வேய் இனம் நின தோட்கு உடைந்து உக்க நல் முத்தம் சிந்தி - காற்றானொன்றோடொன்று தேய்ந்து நரலும் வேய்த்திரள் உன்னுடைய தோள்கட்கஞ்சிப் பிளத்தலான் உக்க நல்ல முத்துக்கள் சிதறுதலால்—பரல் வேய் அறை பஞ்சு அடி உறைக்கும் - பரல்மூடிய பாறை நினது பஞ்சடிக்கணுறைக்கும்—வரல் இங்கே நில் - அதனான் என்னோடு ஆண்டு வரற்பாலையல்லை, ஈண்டு நிற்பாயாக. எ-று.

யான்றருவன் நீ வேயென்றும் பிறவாற்றானு முரைப்பாருமுளர். குரலென்றது பூங்கொத்தை. தடமலரென்பதற்குத் தடத்து மலரென்றுரைப்பாருமுளர். பரல்வேயறையுறைக்கும் வரல்; வேய்தருவன்; இங்கேநில்லென்று தலைமகளைத் தோழி கூறி இவ்விடத்தே நில்லென்றாள். மெய்ப்பாடு அது. பயன் தலைமகளைக் குறியிடத்துய்த்து நீங்குதல். (கசக)

## உவந்துரைத்தல்.

உவந்துரைத்தலென்பது தோழி தலைமகளைக் குறியிடை நிறுத்தி நீங்காநிற்பத் தலைமகன் சென்றெதிர்ப்பட்டு, இக்குவட்டை மாசுணப்பள்ளியாகவும் என்னைத் திருமாலாகவும் நினைந்தோ நீ யிப்பொழிற்கண் வந்து நின்றதெனத் தலைமகளை உவந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

படமாசுணப்பள்ளியிக்குவடாக்கியப்பங்கயக்க
ணெடுமாலெனவென்னைநீநினைந்தோநெஞ்சத்தாமரையே
யிடமாவிருக்கலுற்றோதில்லைநின்றவனீர்ங்கயிலை
வடமார்முலைமடவாய்வந்துவைகிற்றிவ்வார்பொழிற்கே.

களிமயிற்சாயலை யொருசிறைக்கண்ட
ஒளிமலர்த்தாரோ னுவந்துரைத்தது.

இ - ள். வடம் ஆர் முலை மடவாய் - வடமார்ந்த முலையையுடைய மடவாய்—தில்லை நின்றவன் ஈர்ங் கயிலை வார் பொழிற்கு

வந்து வைகிற்று - தில்லைக்கணின்றவனது குளிர்ந்த கைலைக்கண் நீண்ட இப்பொழிலிடத்துவந்து தங்கியது—இக் குவடு பட மாசுணப் பள்ளி ஆக்கி - இக்குவட்டைப் படத்தையுடைய மாசுணமாகிய பள்ளியாக்கி—என்னைப் பங்கயக் கண் அந் நெடுமால் என நீ நினைந்தோ - என்னை அம்மாசுணப்பள்ளியிற் றங்கும் பங்கயம் போலுங் கண்ணையுடைய அந்நெடியமாலென்று நீ நினைந்தோ— நெஞ்சத் தாமரையே இடம் ஆ இருக்கல் உற்றோ - நெடுமாலின் மார்பினன்றித் தாமரையினுமிருத்தலான் யான் நீங்கினும் என்னெஞ்சமாகிய தாமரையே நினக்கிடமாக இருக்க நினைந்தோ? கூறுவாயாக. எ - று.

மாசுணப்பள்ளி மாசுணத்தானியன்ற பள்ளியெனினுமமையும். என்னெஞ்சத் தாமரைக்கணிருக்கலுற்றோவென்றதனான், இப்பொழிற்கண்வந்து நின்றநிலை ஒருஞான்றும் என்னெஞ்சினின்று நீங்காதென உவந்துகூறினானும். கைலைமடவாயென்றியைப்பினுமமையும். வான்பொழிலென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு உவகை. பயன் தலைமகளைக்கண்டு தன் காதன்மிகுதியாற் றோன்றிய பேருவகையை ஆற்றகில்லான் ஆற்றுதல்; தலைமகளை மகிழ்வித்தலுமாம்.

## மருங்கணைதல்.

மருங்கணைதலென்பது உவந்துரைப்பக் கேட்ட தலைமகள் பெருநாணினளாதலிற் கண்புதைத்து ஒருகொடியினொதுங்கி வருந்தாநிற்ப, சென்றுசார்தலாகாமையிற் றலைமகன் அவ்வருத்தந் தணிப்பான்போன்று, முலையொடுமுனிந்து அவளிறுமருங்குறுங்கியணையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

தொத்தீன்மலர்ப்பொழிற்றில்லைத்தொல்லோனருளென்னமுன்னி, முத்தீன்குவளைமென்காந்தளின்மூடித்தன்னேரளப்பா, ளொத்தீர்ங்கொடியினொதுங்குகின்றாண்மருங்குன்னெருங்கப், பித்தீர்பணைமுலைகாளென்னுக்கின்னும்பெருக்கின்றதே.

வாணுதலரிவை நாணுதல்கண்ட
கோதைவேலவ னோதரவுரைத்தது.

இ - ள். தொத்து ஈன் மலர்ப் பொழில் தில்லைத் தொல்லோன் அருள் என்ன முன்னி - கொத்துக்களையீனு மலர்ப்பொழிலையுடைய தில்லையிற் றொல்லோனதருள்போல வந்தெதிர்ப்பட்டு— முத்து ஈன் குவளை மென் காந்தளின் மூடி - கண்ணீர்த்துளியாகிய

முத்தைவிடாநின்ற கண்ணாகிய குவளைகளைக் கையாகிய மெல்லிய காந்தட்பூவான் மூடி—தன் ஏர் அளப்பாள் ஒத்து - அதனோடுசார்த்தித் தன்னெழிலை யளவிடுவாள்போன்று—ஈர்ங் கொடியின் ஒதுங்குகின்றாள் மருங்குல் நெருங்க - குளிர்ந்த கொடியின்கண் நாணி மறைகின்றவளது மருங்குலடர்ப்புண்ண—பித்தீர் பணைமுலைகாள் - பித்தையுடையீர் பணைமுலைகாள்—இன்னும் பெருக்கின்றது என்னுக்கு - நும்பெருமைமேல் இன்னு நீர்பெருக்கின்ற தெற்றிற்கு? இது நன்றன்று. எ - று.

தமக்காதாரமென்று கருதாது அடர்க்கின்றமைநோக்கி,பித்தீரென்றான். பெருக்கின்ற தெற்றிற்கு நீர் பித்தையுடையீரென வினைக்குறிப்பு முற்றாகவுரைப்பினுமமையும். இவ்வாறு தானதரவுரைத்து இறுமருங்குறுங்குவானாய்ச் சென்று சாருமென்பது. ஈன்கொடி ஈன்பணைமுலை யென்பனவும் பாடம். ஈன்கொடி மலரீன்றகொடி. அரிவையை யென்பது பாடமாயின் நாணுதல் கண்டவென்பனவற்றை ஒருசொல்லாக்கிமுடிக்க. மெய்ப்பாடு அது. பயன் சார்தல். (கஉக)

## பாங்கியறிவுரைத்தல்.

பாங்கியறிவுரைத்தலென்பது மருங்கணைவிறுதிக்கட் டலைமகளதையந்திர, அவளைக்கோலஞ்செய்து, இது நின்றோழி செய்த கோலமே; நீ கலங்காதொழிகெனத் தலைமகன் றான்றோழியொடு தலைப்பெய்தமை தோன்றக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

அளிநீடளகத்தினட்டியதாதுமணியணியு
மொளிநீள்சுரிகுழற்சூழ்ந்தவொண்மாலையுந்தண்ணறவுண்
களிநீயெனச்செய்தவன்கடற்றில்லையன்னாய்கலங்க
றெளிநீயனையபொன்னேபன்னுகோலந்திருநுதலே.

நெறிகுழற் பாங்கி
யறிவறி வித்தது.

இ - ள். நீ தண் நறவு உண் களி எனச் செய்தவன் கடல் தில்லை அன்னாய் - நீ குளிர்ந்த நறவையுண்ணுங் களிமகனென்று பிறர் சொல்லும்வண்ணம் ஓரின்பத்தை யெனக்குச் செய்தவனது கடலையுடைய தில்லையையொப்பாய்—அளி நீடு அளகத்தின் அட்டிய தாதும் - அளிகள் விடாது தங்கு மளகத்தின்கண் இட்டதாதும்—அணி அணியும் - அணிந்தவணிகளும்—ஒளி நீள் சுரிகுழற் சூழ்ந்த ஒண் மாலையும் - ஒளியையுடைய நீண்ட சுரிகுழலிடத்துச்

சுற்றிய நல்லமாலையும் இவையெல்லாம்—நீ அனைய பொன்னே பன்னு கோலம் - நின்னோடொருதன்மையளாகிய நின்றோழி யாரா ய்ந்துசெய்யுங் கோலமே.—திரு நுதலே - திருநுதலாய்—கலங்கல்- யான்பிறிதோர் கோலஞ்செய்தேனென்று கலங்கவேண்டா— தெளி - தெளிவாயாக. எ - று.

தண்ணறவுண்களி நீயெனச் செய்தவனென்பதற்குப் பிறிதுரைப்பாருமுளர். பொன்னேயென்னுமேகாரம் பிரிநிலையேகாரம். அணிமணியுமென்பதூஉம்பாடம். பாங்கியறிவு-பாங்கியவ்வொழுக் கத்தை யறிந்தவறிவு. மெய்ப்பாடு பெருமிதம். பயன் பாங்கியறிந் தமை தலைமகட்குணர்த்துதல். (கஉஉ)

## உண்மகிழ்ந்துரைத்தல்.

உண்மகிழ்ந்துரைத்தலென்பது பாங்கியறிவுரைப்பக் கேட்ட தலைமகள், இனிநமக்கொரு குறையில்லையென வுட்கொண்டு முக மலராநிற்ப, அம்முகமலர்ச்சிகண்டு, அவளைக் கழுநீர்மலராகவும், தான் அதனினறவைப் பருகும் வண்டாகவும் புனைந்து, தலைமகன் றன்னுண்மகிழ்ந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

செழுநீர்மதிக்கண்ணிச்சிற்றம்பலவன்றிருக்கழலே [த
கெழுநீர்மையிற்சென்றுகிண்கிணிவாய்க்கொள்ளுங்கள்ளகத்
கழுநீர்மலரிவள்யானதன்கண்மருவிப்பிரியாக்
கொழுநீர்நறப்பருகும்பெருநீர்மையளிகுலமே.

தண்மலர்க் கோதையை
யுண்மகிழ்ந் துரைத்தது.

இ - ள். செழுநீர் மதிக் கண்ணிச் சிற்றம்பலவன் திருக் கழலே- வளவிய நீர்மையையுடைய மதியாகிய கண்ணியையுடைய சிற்றம்ப லவனது திருக்கழல்களையே—கெழு நீர்மையின் சென்று கிண் கிணி வாய்க் கொள்ளும் - பொருந்து நீர்மையான் உண்மகிழ்ந்து முகமலர்வதுபோலப் போதாகிய நிலைமையைவிட்டு மலராம் நிலை மையையடைந்து சிறிதே மலரத்தொடங்கும்—கள் அகத்த கழுநீர் மலர் இவள் - தேனை யகத்துடைய கழுநீர்மலர் இவள்—யான் அதன்கண் மருவிப் பிரியாக் கொழுநீர் நறப் பருகும் - யான் அக் கழுநீர்மலர்க்கண் மருவி ஒருகாலும் பிரியாத கொழுவிய நீர்மை யையுடைய அந்நறவைப்பருகும்—பெரு நீர்மை அளிகுலம் - பெரு ந்தன்மையையுடையதோரளிசாதி. எ - று.

செழுநீர்மதிக்கண்ணி யென்பதற்கு வளவியநீருமதியாகிய கண்ணியுமென்பாருமுளர். திருக்கழலே யென்னுமேகாரம் பிரிநிலையேகாரம். செழுநீர்மையையுடைய கழுநீர்மலரென்றியைப்பினுமமையும். சென்று இண்கிணிவாய்க் கொள்ளுமென்பதனால், பேதைப்பருவங்கடந்து இன்பப்பருவத்த ளாயினாளென்பது விளங்கும். கள்ளகத்தவென்பதனால், புலப்படா துண்ணிறைந்த காதலளென்பது விளங்கும். கள்ளகத்தகழுநீர் மலரென்பது "காலகுருகு" * என்பதுபோல நின்றது; பெயரெச்சமெனினு மமையும். யான் மருவிப்பிரியாத அளிகுலமெனினுமமையும். நரு குறுகின்றது. பெரு நீர்மையளிகுலமென்றான், கழுநீர்மலரல்லதூதாமையின். அதனால், பிறிதோரிடத்துந் தன்னுள்ளஞ்செல்லாமை விளங்கும். மெய்ப்பாடு உவகை. பயன் நயப்புணர்த்துதல். (கஉக)

## ஆயத்துய்த்தல்.

ஆயத்துய்த்தலென்பது மலரளிமேல்வைத்து மகிழ்வுற்றுப் பிரியலுறாநின்ற தலைமகன், யாமித்தன்மையேமாதலின், நமக்குப் பிரிவில்லை, இனியழகிய பொழிலிடத்து விளையாடும் ஆயம் பொலிவுபெறச்சென்று, அவரோடுசேர்ந்து விளையாடுவாயெனத் தலைமகளையாயத்துச் செலுத்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

கொழுந்தாரகைமுகைகொண்டலம்பாசடைவிண்மடுவி
லெழுந்தார்மதிக்கமலம்மெழிறந்தெனவிப்பிறப்பி
லழுந்தாவகையெனையாண்டவன்சிற்றம்பலமனையாய்
செழுந்தாதவிழ்பொழிலாயத்துச்சேர்கதிருத்தகவே.

கலைகடலன்ன கார்மயிற்கணத்துப்
புலைமடமானைப் புகவிட்டது.

இ - ள். இப் பிறப்பில் அழுந்தாவகை எனை ஆண்டவன் சிற்றம்பலம் அனையாய்-இப்பிறவியின்கணழுந்தாதவண்ண மென்னையடிமைக்கொண்டவனது சிற்றம்பலத்தை யொப்பாய்--கொழுந் தாரகை முகை கொண்டல் பாசடை விண் மடுவில் - கொழுவிய தாரகையாகிய முகையையுங் கொண்டலாகிய பசிய விலையையுமுடைய விண்ணாகிய மடுவின்கண்—எழுந்து ஆர் மதிக் கமலம் எழில் தந்தென - எழுந்து நிறைந்த மதியாகிய வெண்டாமரைப் பூத் தனதெழிலைப் புலப்படுத்தினாற்போல—செழுந் தாது அவிழ் பொழில் ஆயத்துத் திருத்தகச் சேர்க - வளவிய தாதவிழாநின்ற

* குறுந்தொகை. உசு.

பொழிற்கண் விளையாடுகின்ற ஆயத்தின்கட் பொலிவுதக இனிச் சேர்வாயாக. எ - று.

முகையோடு தாரகைக்கொத்தபண்பு வெண்மையும் வடிவும் பன்மையும். தாரகையோ டாயத்தார்க்கொத்தபண்பு பன்மையும் ஒன்றற்குச் சுற்றமாய் அதனிற்குழ்ந்து நிற்றலும். கமலத்தோடு மதிக்கொத்த பண்பு வெண்மையும் வடிவும் பொலிவும். மதியோடு தலைமகட்கொத்தபண்பு கட்கினிமையும் சுற்றத்திடை அதனின் மிக்குப் பொலிதலும். இவ்வாறொத்தபண்பு வேறுபடுதலான் உவமைக்குவமை யாகாமையறிந்துகொள்க. கொண்டலம் பாசடையென்புழி அம்முச்சாரியை யல்வழிக்கண் வந்தது; அம் அழகெனினுமமையும். புனைமடமான்-கைபுனையப்பட்டமான். மெய்ப்பாடு பெருமிதம். பயன் புறத்தாரறியாமைப்பிரிதல். (கஉச)

## தோழிவந்துகூடல்.

தோழிவந்து கூடலென்பது தலைமகனைப் பிரிந்த தலைமகடானும் பூக்கொய்யாநின்றாளாகப் பிரிவாற்றாமையானும் பெருநாணினானுந் தடுமாறி மொட்டுக்களைப் பறியாநிற்ப, யானின் குழற்காம் பூக்கொண்டுவந்தேன், நீ விரல்வருந்த மொட்டுக்களைப் பறிக்க வேண்டாவெனத் தோழிவந்து கூடாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**பொன்னனையான்றில்லைப்பொங்கரவம்புன்சடைமிடைந்த**
**மின்னனையானருண்மேவலர்போன்மெல்விரல்வருந்த**
**மென்னனையாய்மறியேபறியேல்வெறியார்மலர்க**
**ளின்னனயான்கொணர்ந்தேன்மணந்தாழ்குழற்கேய்வனவே.**

நெறியுறுகுழலியை நின்றிடத்துய்த்துப்
பிறைநுதற்பாங்கி பெயர்ந்தவட்குரைத்தது.

இ - ள். ஆய் மறியே-அசைந்த மான்மறிபோல்வாய்—பொன் அனையான் - பொன்னையொப்பான்—தில்லைப் பொங்கு அரவம் புன்சடை மிடைந்த மின் அனையான் - தில்லைக்கணுளனாகிய வெகுளாநின்ற வரவம் புல்லிய சடைக்கண்மிடைந்த மின்னையொப்பான்—அருள் மேவலர் போல் மெல் விரல் வருந்த - அவனதருளைப் பொருந்தாதாரைப்போல மெல்லிய விரல்கள் வருந்த—மெல் நனை பறியேல் - மென்னனைகளைப் பறியாதொழிவாயாக—மணம் தாழ் குழற்கு ஏய்வன வெறி ஆர் மலர்கள் இன்னன யான் கொணர்ந்தேன் - நின்மணந்தங்கிய குழற்குப் பொருந்துவனவாகிய நறுநாற்றநிறைந்த மலர்களித்தன்மையனவற்றை யான் கொணர்ந்தேன். எ - று.

மிடைந்தவென்னும் பெயரெச்சம் மின்னனையானென்னு நில ப்பெயர்கொண்டது. அரவஞ்சடைமிடைதலை மின்மேலேற்றி, இல் பொருளுவமையாக வுரைப்பாருமுளர். இல்பொருளுவமையெனி னும் அபூதவுவமையெனினு மொக்கும். இவள் மலரைப்பறியாமல் மொட்டைப்பறிப்பானேனென்பதுகடா. அதற்குவிடை இவள் தலைமகனைப் பிரிந்து அப்பிரிவாற்றுமையானும், தலைமகன் புணர் ச்சிநீக்கத்துக்கட் டன்னைக்கோலஞ்செய்த அக்கோலத்தைத்தோ ழிகாணுநின்றுளென்னும் பெருநாணினானும் ஆற்றுளாய், மலரைப் பறிக்கின்றவள் மயங்கி மொட்டைப் பறித்தாளெனவறிக. மெல் லிய மொட்டுக்களைப் பறியாதொழி, இத்தன்மைய நறுமலரை நின் குழற்கணிதற்கு யான்கொணர்ந்தேனென்பதனன்,இவ்வொழுக்கம் யானறியப்பட்டது காணென்றுடம்பாடு கூறியவாறுயிற்று. என் னனையாய் கொணர்ந்தேனென்பதூஉம் பாடம். நின்றிடத்துய் த்து-இடத்துய்த்து நீங்கிநின்று. பெயர்ந்து-மீண்டுசென்று.(கஉரு)

## ஆடிடம்புகுதல்.

ஆடிடம் புகுதலென்பது கொய்துவந்த மலருங் குழற்கணி ந்து, இனி நின்சிறுமருங்குல் வருந்தாமல் மெல்லச்செல்வாயாக வெனத் தோழி தலைமகளையுங்கொண்டு ஆடிடம் புகாநிற்றல். அத ற்குச்செய்யுள்—

அறுகானிறைமலரைம்பானிறையணிந்தேனணியார்
துறுகான்மலர்த்தொத்துத்தோகைதொல்லாயமெல்லப்புகுக
சிறுகான்மருங்குல்வருந்தாவகைமிகவென்சிரத்தி
னுறுகால்பிறர்க்கரியோன்புலியூரன்னவொண்ணுதலே.

தனிவிளையாடிய தாழ்குழற்றோழி
பனிமதிநுதலியொ டாடிடம்படர்ந்தது.

இ-ள். என் சிரத்தின் உறுகால் பிறர்க்கு மிக அரியோன் புலியூர் அன்ன ஒண்ணுதலே - என்றலைக்கணுற்றகால் பிறர்க்கு மிகவரியவனது புலியூரை யொக்குமொண்ணுதலாய்—அணி ஆர் துறு கான் மலர்த் தொத்து-அழகார்ந்த நெருங்கிய நறுநாற்றத்தை யுடைய மலர்க்கொத்துக்களை—அறுகால் நிறை மலர் ஐம்பால் நிறை அணிந்தேன் - வண்டுகணிறைந்த மலரையுடைய நின்னைம் பாற்கண் நிறையவணிந்தேன்—தோகை-தோகையையொப்பாய்— சிறு கால் மருங்குல் வருந்தாவகை - சிறியவிடத்தையுடைய மரு ங்குல் வருந்தாதவண்ணம்—தொல் ஆயம் மெல்லப் புகுக - பழை யதாகிய ஆயத்தின்கண் மெல்லப்புகுவாயாக. எ-று.

அருகாணிறைமலரை யணிந்தேனென்றும், மலர்க்கொத்துக் களையுடைய தோகாயென்றும், உரைப்பாருமுளர். நிறையவென்பது குறைந்துநின்றது. காலென்னுஞ்சினை பிறர்க்கரியோனெனத் தன்வினைக்கேலாவெழுத்துக் கொண்டது. இவையிரண்டற்கு மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகளையாற்றுமை நீக்குதல்.(கஉசு)

## தனிகண்டுரைத்தல்.

தனிகண்டுரைத்தலென்பது தலைமகளையாயத்துய்த்துத் தலைமகனுழைச்சென்று, இஃதெம்மூர்; இதன்கண்யாமருந்துந் தேனையுங் கிழங்கையு நீயுமருந்தி, இன்றெம்மோடுதங்கி, நாளை நின்னூருக்குப் போவாயாகென வுலகியல் கூறுவாள்போன்று, வரைவு பயப்பக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

தழங்குமருவியெஞ்சீறூர்பெருமவிதுமதுவுங்
கிழங்குமருந்தியிருந்தெம்மொடின்றுகிளர்ந்துகுன்றர்
முழங்குங்குரவையிரவிற்கண்டேகுகமுத்தன்முத்தி
வழங்கும்பிரானெரியாடிதென்றில்லைமணிநகர்க்கே.

வேயொத்ததோளியை யாயத் துய்த்துக்
குனிசிலையண்ணலைத் தனிகண்டுரைத்தது.

இ - ள். பெரும - பெரும—தழங்கும் அருவி இது எம் சீறூர்- தழங்காநின்ற வருவியையுடைய விஃதெமது சீறூர்—மதுவும் கிழங்கும் அருந்தி இன்று எம்மொடு இருந்து - இதன்கண் யாமருந்துந் தேனையுங் கிழங்கையு நீயுமருந்தி இன்றெம்மோடுதங்கி— குன்றர் கிளர்ந்து முழங்கும் குரவை இரவில் கண்டு மணி நகர்க்கு ஏகுக - குன்றரெல்லாருமெழுந்து முழங்கு மிந்நிலத்து விளையாட்டாகிய குரவையை யிரவிற்கண்டு நாளை நினது நல்லநகர்க்கேகுவாயாக. எ - று.

முத்தன் - இயல்பாகவே முத்தன்—முத்தி வழங்கும் பிரான் - முத்தியையேற்பார்க்கு வழங்குமுதல்வன்—எரியாடி - ஊழித்தீயின்கணாடுவான்—தென் தில்லை மணிநகர் - அவனது தெற்கின்கட் டில்லையாகிய மணிநகரெனக்கூட்டுக.

ஏற்பார்மாட்டொன்றுங் கருதாதுகொடுத்தலின் வழங்குமென்றார். உலகியல் கூறுவாள்போன்று ஒருகானிவந்து போந்துணையாலிவளாற்றுந் தன்மையளல்லளென்பது பயப்பக்கூறி, வரைவு கடாயவாறு. மெய்ப்பாடு பெருமிதம். பயன் குறிப்பினாற் பிரிவாற்றுமைகூறி வரைவுகடாதல். (கஉஎ)

## பருவங்கூறிவரவுவிலக்கல்.

பருவங்கூறி வரவுவிலக்கலென்பது உலகியல் கூறுவாள்போன்று குறிப்பால் வரைவுகடாவி, இனியிவ்வாறொழுகாது வரைவொடு வருவாயாகவெனத் தலைமகளது பருவங்கூறி, தலைமகனைத் தோழி வரவுவிலக்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

தள்ளிமணிசந்தமுந்தித்தறுகட்கரிமருப்புத்
தெள்ளிநறவந்திசைதிசைபாயுமலைச்சிலம்பா
வெள்ளிமலையன்னமால்விடையோன்புலியூர்விளங்கும்
வள்ளிமருங்குல்வருத்துவபோன்றவனமுலையே.

மாந்தளிர்மேனியை வரைந்தெய்தா
தேந்தலிவ்வா றியங்கலென்றது.

இ - ள். மணி தள்ளி - மணிகளைத் தள்ளி—சந்தம் உந்தி - சந்தனமரங்களை நூக்கி—தறுகட் கரி மருப்புத் தெள்ளி - தறுகண்மையையுடைய யானையின் மருப்புக்களைக்கொழித்து—நறவம் திசைதிசை பாயும் மலைச் சிலம்பா - தேன்றிசைதோறும் பரக்கும் மலையையுடைய சிலம்பனே—வெள்ளி மலை அன்ன மால் விடையோன் புலியூர் விளங்கும் - தனது வெள்ளிமலையாகிய கயிலையையொக்கும் பெரியவிடையையுடையவனது புலியூர்போல விளங்கும்—வள்ளி மருங்குல்- கொடிச்சியது மருங்குலை—வனமுலை வருத்துவ போன்றன - நல்லமுலைகள் வளராநின்றபடியால் வருத்துவனபோன்றன; இனி வரைந்தெய்துவாயாக. எ - று.

சிலம்பனென்பது அதனையுடையனென்னும் பொருண்மைக்காது ஈண்டுப்பெயராய் நின்றது. புலியூர்புரையுமென்பதூஉம் பாடம். யாவருமறியாவிவ்வரைக்கண்வைத்த தேன் முதிர்ந்துக்கு அருவிபோன்றெல்லாருங்காணத் திசைதிசை பரந்தாற்போல, கரந்த காமம் இவள் கதிர்ப்பு வேறுபாட்டாற் புறத்தார்க்குப் புலனாய் வெளிப்படாநின்றதென உள்ளுறையுவமையாயினவாறு கண்டுகொள்க. மெய்ப்பாடு அச்சம். இவ்வொழுக்கம் புறத்தாரறியினிவளிறந்துபடும், இறந்துபட விவனுமிறந்துபடுமென்று நினைவினளாதலால், பயன் வரைவுகடாதல். (கஉஅ)

## வரைவுடம்படாதுமிகுத்துக்கூறல்.

வரைவுடம்படாது மிகுத்துக்கூறலென்பது பருவங்கூறி வரைவுகடாய தோழிக்கு, அமராவதிக்கண்ணும் இம்மாதர்க்கொப்பில்லையென நான்முகன் பயந்தபிள்ளையை யான்வரையுந்துணைய

ளியளாக நீ கூறுகின்றதென்னோவெனத் தலைமகன் வரைவுடம் படாது தலைமகளை மிகுத்துக்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மாடஞ்செய்பொன்னகருந்நிகரில்லையிம்மாதர்க்கென்னப்
பீடஞ்செய்தாமரையோன்பெற்றபிள்ளையையுள்ளலரைக்
கீடஞ்செய்தென்பிறப்புக்கெடத்தில்லைநின்றோன்கயிலைக்
கூடஞ்செய்சாரற்கொடிச்சியென்றோநின்றுகூறுவதே.

வரைவுகடாய வாணுதற்றோழிக்கு
விரைமலர்த்தாரோன் மிகுத்துரைத்தது.

இ - ள். மாடம் செய் பொன் நகரும் இம் மாதர்க்கு நிகர் இல்லை என்ன - மாடமாகச் செய்யப்பட்ட பொன்னகராகிய அமராவதிக்கண்ணும் இம்மாதர்க் கொப்பில்லையென்று சொல்லும்வண்ணம்—பீடம் செய் தாமரையோன் பெற்ற பிள்ளையை - பீடமாகச் செய்யப்பட்ட தாமரையையுடைய நான்முகன்பயந்த பிள்ளையை—கயிலைக் கூடம் செய் சாரற் கொடிச்சி என்றோ நின்று கூறுவது - கயிலைமலைக்கட் கூடஞ்செய்யப்பட்ட சாரலிடத்து வாழுங் கொடிச்சியென்றோ நீ நின்றுசொல்லுவது? இவ்வாறு சொல்லற்பாலையல்லை. எ - று.

உள்ளலரைக் கீடம் செய்து - தன்னை நினையாதாரைப் புழுக்களாகச்செய்து—என் பிறப்புக் கெடத் தில்லை நின்றோன் கயிலை- யான்றன்னை நினைவேனாகச்செய்து என்பிறப்புக்கெடத் தில்லைக்கணின்றவனது கயிலையெனக்கூட்டுக.

கூடமென்றது மன்றாகச்செய்யப்பட்ட தேவகோட்டத்தை. கூடஞ்செய்சாரலென்பதற்கு மரத்திரளாற் கூடஞ்செய்தாற்போலுஞ் சாரலெனினுமமையும். கூடஞ்செய்தாற்போலு முழைகளையுடைய சாரலெனினுமமையும். வரைவுடம்படாது மிகுத்துக்கூறியது. மெய்ப்பாடு இளிவரல். பயன் தலைமகனது விருப்புணர்த்துதல். ()

## உண்மைகூறிவரைவுகடாதல்.

உண்மைகூறி வரைவுகடாதலென்பது வரைவுடம்படாது மிகுத்துக்கூறிய தலைமகனுக்கு, எங்களுக்குத் தாயுந் தந்தையுங் கானவர்; யாங்கள் புனங்காப்போஞ்சிலர்; நீர் வரைவுவேண்டாமையி னெம்மைப்புனைந்துகூறல் வேண்டுவதில்லையெனத் தோழி தங்களுண்மைகூறி வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வேய்தந்தவெண்முத்தஞ்சிந்துபைங்கார்வரைமீன்பரப்பிச்
சேய்தந்தவானகமானுஞ்சிலம்பதன்சேவடிக்கே

யாய்தந்தவன்புதந்தாட்கொண்டவம்பலவன்மலையிற்
றாய்தந்தானவரேனலெங்காவலித்தாழ்வரையே.

கல்வரைநாட னில்லதுரைப்ப
ஆங்கவளுண்மை பாங்கிபகர்ந்தது.

இ - ள். வேய் தந்த வெண் முத்தம் சிந்து பைங் கார் வரை மீன் பரப்பி - வேயுண்டாக்கிய வெள்ளிய முத்துக்கள் சிந்திய சோலைகளாற் பசிய கரியதாழ்வரை மீன்களைத் தன்கட்பரப்பி— சேய் தந்த வான் அகம் மானும் சிலம்ப - சேய்மையைப் புலப்படுத்திய வானிடத்தையொக்குஞ் சிலம்பையுடையாய்—தாய் தந்தை- எமக்குத் தாயுந்தந்தையும்—தன் சேவடிக்கே ஆய் தந்த அன்பு தந்து - தன்னுடைய சிவந்த திருவடிக்கே ஆராயப்பட்டவன்பைத் தந்து—ஆட் கொண்ட அம்பலவன் மலையிற் கானவர் - என்னையடிமைக்கொண்ட அம்பலவனது மலையிற்கானவரே—இத் தாழ் வரை ஏனல் எம் காவல் - இத்தாழ்வரையினுண்டாகிய தினை யெமது காவலாயிருக்கும்; அதனானீ வரைவு வேண்டாமையிற் புனைந்து கூறவேண்டுவதில்லை. எ - று.

வினைமுதலல்லாத கருவிமுதலாயின அவ்வினைமுதல் வினைக்குச் செய்விப்பனவாமாதலில், பரப்பியெனச் செய்விப்பதாகக் கூறினார். சேவடிக்கே யன்புதந்தெனவியையும். மெய்ப்பாடு பெருமிதம். பயன் வரைவுகடாதல். (கக0)

## வருத்தங்கூறிவரைவுகடாதல்.

வருத்தங்கூறி வரைவுகடாதலென்பது உண்மையுரைத்து வரைவுகடாயதோழி, வரையாமைநினைந்து அவள் வருந்தாநின்றாள்; வரைவென்று நினைக்க நீயிர் வருந்தாநின்றீர்; இவ்வாறு நும்முள்ளம் மாறுபட நிகழ்தலின் இருவர்க்குமிடையே யான்வருந்தாநின்றேனெனத் தலைமகனுக்கு வருத்தங்கூறி வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மன்னுந்திருவருந்தும்வரையாவிடினீர்வரைவென்
றுன்னுமதற்குத்தளர்ந்தொளிவாடுதிரும்பரெலாம்
பன்னும்புகழ்ப்பரமன்பரஞ்சோதிசிற்றம்பலத்தான்
பொன்னங்கழல்வழுத்தார்புலனென்னப்புலம்புவனே.

கனங்குழைமுகத்தவண் மனங்குழைவுணர்த்தி
நிரைவளைத்தோழி வரைவுகடாயது.

இ-ள். வரையா விடின் மன்னும் திரு வருந்தும் - வரையா தொழியிற் பெரும்பான்மையுந் திருவையொப்பாள் வருந்துவள்— நீர் வரைவு என்று உன்னுமதற்குத் தளர்ந்து ஒளி வாடுதிர் - நீயிர் வரைவென்று நினைக்குமதற்கு மனந்தளர்ந்து மேனியொளிவாடா நின்றீர்—பொன் கழல் வழுத்தார் புலன் என்னப் புலம்புவன் - இவ்வாறு நும்முள்ளம் மாறுபடநிகழ்தலின் யான் பொன்னை யொக்குங்கழலை வாழ்த்தமாட்டாதாரறிவுபோலத் தனிமையுற்று வருந்தாநின்றேன். எ-று.

உம்பர் எல்லாம் பன்னும் புகழ்ப் பரமன் - அறிதற்கருமை யான் உம்பரெல்லாமாராயும் புகழையுடைய பரமன்—பரஞ் சோதி - எல்லாப்பொருட்கும் அப்பாலாகியவொளி—சிற்றம்பலத் தான் - ஆயினும் அன்பர்க்கு இப்பாலாய்ச் சிற்றம்பலத்தின்கண்ணு யவன்—பொன்னங் கழல் - அவனுடைய பொன்னங்கழலெனக் கூட்டுக.

மன்னுமென்பது ஓரிடைச்சொல். நிலைபெறுந்திருவென்று ரைப்பாருமுளர். முன்னர் இவட்குத் திருவையுவமங்கூறுதல் தக்க தன்றென்று, ஈண்டுவமித்ததென்னையெனின், ஆண்டுத்தெளியா மையிற் கூறலாகாமைகூறி, மக்களுள்ளாளென்று தெளிந்தபின்ன ர்க்கூறலாமென்பதனாற் கூறியதெனவுணர்க. பொன்னங்கழலெ ன்பதற்குப் பொன்னுனியன்ற கழலையுடையதென அன்மொழித் தொகைப்பட வுரைப்பினுமமையும். புலனென்ன வென்பதற்குச் சுவைமுதலாகிய தம்பொருள்பெறாது வழுத்தாதாரைம்பொறியும் புலம்புமாறுபோலவெனினுமமையும். இருவருள்ள நிகழ்ச்சியுங் கூறுவாள்போன்று, தலைமகளதாற்றாமைகூறி வரைவுகடாயவாறு. மெய்ப்பாடு அச்சம். பயன் வரைவுகடாதல். (கஙக)

## தாயச்சங்கூறிவரைவுகடாதல்.

தாயச்சங்கூறி வரைவுகடாதலென்பது வருத்தங்கூறி வரைவு கடாயதோழி, எம்முடையவன்னை அவள் முலைமுதிர்வுகண்டு இவள் சிற்றிடைக்கு ஒருபற்றுக் கண்டிலேமென்று அஞ்சாநின்றாள்; இனி மகட்பேசுவார்க்கு மறுதுகொடுக்கவுங் கூடுமெனத் தாயச்சங் கூறி வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**பனித்துண்டஞ்சூடும்படர்சடையம்பலவன்னுலகந்**
**தனித்துண்டவன்றொழுந்தாளோன்கயிலைப்பயில்சிலம்பா**
**கனித்தொண்டைவாய்ச்சிகதிர்முலைப்பாரிப்புக்கண்டழிவுற்**
**றினிக்கண்டிலம்பற்றுச்சிற்றிடைக்கென்றஞ்சு மெம்மனையே.**

மடத்தகைமாதர்க் கடுப்பனவறியா
வேற்கட்பாங்கி யேற்கவுரைத்தது.

இ - ள். பனித் துண்டம் சூடும் படர் சடை அம்பலவன் - பனியையுடைய துண்டமாகிய பிறையைச்சூடும் பரப்பிய சடையையுடையவம்பலவன்—தனித்து உலகம் உண்டவன் தொழும் தாளோன் - எஞ்சுவான்ருனேயாய்த் தானல்லாத உலகமுழுதையுமுண்டவன்றொழுந் தாளையுடையவன்—கயிலைப் பயில் சிலம்பா - அவனது கயிலைக்கட்பயிலுஞ் சிலம்பனே—தொண்டைக் கனி வாய்ச்சி கதிர்முலைப் பாரிப்புக் கண்டு - தொண்டைக்கனிபோலும் வாயையுடையாளுடைய கதிர்முலைகளது ஒருப்பாட்டைக்கண்டு— அழிவு உற்று - நெஞ்சழிந்து—எம் அன்னை சிற்றிடைக்கு இனிப் பற்றுக் கண்டிலம் என்று அஞ்சும் - எம்மன்னை இவள் சிற்றிடைக்கு இனியொரு பற்றுக்கண்டிலமென்று அஞ்சாநின்ருள்; இனியடுப்பனவறியேன். எ - று.

துண்டம் ஒருபொருளினது கூறு. பாரிப்பு அடியிடுதலெனினுமமையும். இளமைப்பருவம் புகுந்தமையான் மகட்கூறுவார்க்கு அன்னைமருதே கொடுக்கும்; நீ முற்பட்டு வரைவாயாகவென்று தோழியேற்கக்கூறியவாறு. மெய்ப்பாடு அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். பயன் செறிப்பறிவுறுத்து வரைவுகடாதல். (கஙஉ)

## இற்செறிவறிவித்துவரைவுகடாதல்.

இற்செறிவறிவித்து வரைவுகடாதலென்பது தாயச்சங்கூறி வரைவுகடாயதோழி, எம்மன்னை அவளை யுற்றுநோக்கி, திருமலைக்கட்புறம்போய் விளையாடவேண்டாவெனக் கூறினுள்; இனி யிற்செறிப்பாள்போலுமென, இற்செறிவறிவித்து வரைவுகடாவா நிற்றல். அதற்குச்செய்யுள்—

**விளையாடநறவிளைவோர்ந்தெமர்மால்பியற்றும்**
**வேய்விளையாடும்வெற்பாவுற்றுநோக்கியெம்மெல்லியலைப்**
**போய்விளையாடலென்ருளன்னையம்பலத்தான்புரத்திற்**
**றீவிளையாடநின்றேவிளையாடிதிருமலைக்கே.**

விற்செறி நுதலியை
யிற்செறி வுரைத்தது.

இ - ள். விளையாட நறவிளைவு ஓர்ந்து - தேனீக்கள் பறந்து விளையாட அவற்றினது விளையாட்டாற் றேனினது விளைவை

ணிடைநிகழ்ந்தது குறிப்பானறிந்ததாகலின் நீ வரைவுவேண்டுவதன் முன்னே சுற்றம் நினக்கு வயமாயிருக்கும்—பல விளக்கின்றது என் - பல சொல்லுகின்றதென்—சூழி உம்பர் ஏத்தும் அம்பலத்து எம் கூத்தன் - திரண்டு உம்பரானேத்தப்படும் அம்பலத்தின்கணுளனாகிய எம்முடைய கூத்தனது—குற்றாலம் முற்றும் அறியக் கெழி உம்மவே பணைத் தோள் - குற்றாலமுழுது மறியப்பொருந்திய உம்மனவே பணைத்தோள்கள்; ஐயுறவேண்டா. எ - று.

வழியுமென்னுமும்மை எச்சவும்மை, உபாயமாதலேயன்றி என்றவாறு. எந்தையுமென்பது இறந்ததுதழீஇய வெச்சவும்மை. முன்னே வயமென வேறுபடுத்துக் கூறுதலால், சுற்றமுமெனவும்மைகொடாது கூறினாள். நலமுங்குலமு முதலாயினவற்றானேராராயினும், வடுவஞ்சிநேர்வரென்பதுபயப்ப, குற்றாலமுற்று மறியக் கெழீஇயவென்றாள். கெழீஇயவென்பது கெழியெனக் குறைந்து நின்றது. நின்மொழியென்று உம்மவே என்றது "என்னீரறியாதீர் போலவிவைகூற—லின்னீரவல்ல நெடுந்தகாய்" * என்பதுபோல ஈண்டும் பன்மையு மொருமையு மயங்கிநின்றன. குற்றாலமுற்று மறியக் கெழியென்பதற்கு மறைந்தொழுகாதெல்லாருமறிய வரைவொடு வருவாயாகவென் றுரைப்பாருமுளர். இப்பொருட்குக் கெழுமுவென்பது விகாரவகையாற் கெழியெனநின்றது. மெய்ப்பாடும் பயனும் அவை. வரைவின்கட் டலைமகனை யொற்றுமை கொளுவுதலுமாம்.

தழங்குமருவியென்னும் பாட்டுத்தொட் டிதன்காறும்வர இப்பாட்டொன்பதுஞ் செறிப்பறிவுறுத்துவரைவுகடாயினவென்பது. இவையெல்லாந் தோழியிற் கூட்டமுந் தோழியிற் கூட்டத்தின் விகற்பமுமெனவறிக. (கசுரு)

## ஏறுகோள்கூறிவரைவுகடாதல்.

ஏறுகோள்கூறி வரைவுகடாதலென்பது எதிர்கோள்கூறி வரைவுகடாயதோழி, எம்முடைய வையன்மார் அவளுடைய முலையின் பெருமையும் இடையின் சிறுமையுங்கண்டு எம்மூர்க்கண் விடையின் மருப்பைத் திருத்திவிட்டார்; இனியடுப்பன வறியேனென ஏறுகோள்கூறி வரைவுகடாவாநிற்றல். ஈண்டுக்கூறுவானுதலுகின்றது முல்லைத்திணையாகலின், அந்த முல்லைத்திணைக்கு மரபாவது, ஓரிடத்தொரு பெண்பிறந்தால் அப்பெண்ணைப் பெற்றவர் தந்தொழுவில் அன்றுபிறந்த சேங்கன்றுள்ளனவெல்லாந் தன்

* கலித்தொகை, (பாலை - ௫)

னூட்டியாகவிட்டு வளர்த்து அப்பரிசினால்வளர்ந்த வேற்றைத்தழு வினனொருவனுக்கு அப்பெண்ணைக் கொடுத்தல் மரபென்ப. அத ற்குச்செய்யுள்—

படையார்கருங்கண்ணிவண்ணப்பயோதரப்பாரமுநுண்
ணிடையார்மெலிவுங்கண்டண்டர்களீர்முல்லைவேலியெம்மூர்
விடையார்மருப்புத்திருத்திவிட்டார்வியன்றென்புலியூ
ருடையார்கடவிவருவதுபோலுமுருவினதே.

என்னையர் துணி
வின்ன தென்றது.

இ - ள். படை ஆர் கருங்கண்ணி வண்ணப் பயோதரப் பாரமும் - படைக்கலம்போலுங் கரிய கண்ணையுடையாளுடைய நிறத்தையுடைய முலைகளின் பாரத்தையும்—நுண் இடையார் மெலிவும் கண்டு - அப்பாரத்தைத் தாங்கலாற்றாநின்ற நுண்ணியவிடையாரது மெலிவையுங்கண்டு—அண்டர்கள் - என்னையராகிய வாயர்—ஈர் முல்லை வேலி எம்மூர் - ஈரிய முல்லையாகிய வேலியையுடைய எம்மூரின்கண்—விடை ஆர் மருப்புத் திருத்திவிட்டார் - விடையினது நிரம்பியமருப்பைத் திருந்தச்செய்து விட்டார்கள்—வியன் தென் புலியூர் உடையார் கடவி வருவது போலும் உருவினது - அவ்விடை அகன்ற தென்புலியூரையுடையவர் செலுத்திவரும் விடைபோலுமுருவினையுடைத்து; இனியென்னிகழும்! எ - று.

இயல்வது மேற்கொள்ளாமையின் இடையாரென இழித்துக் கூறினாள். முல்லையையுடைய் வேலியெனினுமமையும். அவ்வேறு கோள் நிகழ்வதன்முன் வரைந்தெய்துவாயாக வென்றவாறு. விடையார்மருப்புத் திருத்திவிட்டார் நினக்குற்றது செய்யென் பதனைக் கேட்டுத் தலைமகனுள்ளம் வாடினான்; அஃதெற்றிற்கெனின், ஏறுதழுவிக்கோடல் தங்குலத்திற்கு மரபாகலானும், தமக் குப் பொதுவர் பொதுவியரென்று பெயராகலானும், அவ்வேற் றைத்தன்னின் முற்பட்டானொருவன் றழுவவுந்தகுமென்றுள்ளம் வாடினான். அதனைத்தோழிகண்டு அவ்வேறு புலியூருடையார் கடவிவருவதுபோலு முருவினதென்றாள்: என்றது அதன்வெம்மை சொன்னவாறன்று; இவ்வொழுக்கம் புலியூருடையாரதருளான் வந்ததாகலின், அவ்வேறுநினக்கே வயப்படுவதன்றி மற்றொருத் தரா லணுகுதற்கரிது; நீ கடிதுவிரைந்துசெய்; அஞ்சவேண்டா வென்றாளாயிற்று. இதுமுல்லைத்திணை. மெய்ப்பாடு அது. பயன் ஏறு கோளுணர்த்தி வரைவுகடாதல். (கஙகூ)

## அயலுரையுரைத்துவரைவுகடாதல்.

அயலுரையுரைத்து வரைவுகடாதலென்பது ஏறுகோள்கூறி வரைவுகடாயதோழி, அயலவர் நாளைப் பொன்புனையப்புகுதா நின்றார்; இதற்குத் தீவினையேன்சொல்லுவதென்றோவெனத் தான் முன்னிலைப்புறமொழியாக அயலுரையுரைத்து வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**உருப்பனையன்ன கைக்குன்றொன்றுரித்துரவூரெரித்த, நெருப்பனையம்பலத்தாதியையும்பர்சென்றேத்திநிற்குந், திருப்பனையூரனையாளைப்பொன்னாளைப்புனைதல்செப்பிப், பொருப்பனைமுன்னின்றென்றோவினையேன்யான்புகல்வதுவே.**

கயல்புரை கண்ணியை
யயலுரை யுரைத்தது.

இ - ள். உருப் பனை அன்ன கைக்குன்று ஒன்று உரித்து - வடிவு பனையையொக்குங் கையையுடைய குன்றொன்றையுரித்து—உரவு ஊர் எரித்த நெருப்பனை - வலியையுடைய வூர்களையெரித்த நெருப்பையுடையானை—அம்பலத்து ஆதியை - அம்பலத்தின்கணுளனாகிய வெல்லாப்பொருட்கு முதலாயவனை—உம்பர் சென்று ஏத்தி நிற்கும் திருப்பனையூர் அனையாளை - உம்பர்சென்று வாழ்த்தி நிற்றற்கிடமாந் திருப்பனையூரை யொப்பாளை—நாளைப் பொன் புனைதல் செப்பி - அயலார் நாளைப்பொன்புனைதலைச் சொல்லி—வினையேன் யான் முன் நின்று பொருப்பனைப் புகல்வது என்றோ- தீவினையேனாகிய யான்முன்னின்று பொருப்பனைச் சொல்லுவதெவனோ? எ - று.

உரவூரெரித்தலை நெருப்பின்மேலேற்றுக. எரித்த நெருப்பனென்ற சொற்களினாற்றலான், எரித்தது நெருப்பானென்பது போதரும். புகல்வதென்றது வரைந்தெய்துவாயாகவென்று பின்சொல்லப்படுங் காரியத்தை. இது சிறைப்புறம். பொருப்பனென்பது முன்னிலைக்கண் வந்ததென்று தலைமகன் முன்னிலையாகக் கூறினாளெனினுமமையும். அயலுரை-தலைமகட்கியாது மியைபில்லாதவுரை; அயலாரொருப்பட்ட வுரையெனினுமமையும். மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த பெருமிதம். பயன் வரைவுகடாதல். ()

## தினைமுதிர்வுரைத்துவரைவுகடாதல்.

தினைமுதிர்வுரைத்து வரைவுகடாதலென்பது அயலுரையுரைத்து வரைவுகடாயதோழி, இவ்வேங்கை, தினைப்புனங் கொய்கவெ

ன்று சோதிடம் சொல்லுதலைப்பொருந்தி, எம்மைக்கெடுவித்தது; இனி நமக்கேனல் விளையாட்டில்லையெனச் சிறைப்புறமாகத் தலைமகளோடு கூறுவாள்போன்று, இனைமுதிர்வுரைத்து வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மாதிடங்கொண்டம்பலத்துநின்றோன்வடவான்கயிலைப்,போ
திடங்கொண்டபொன்வேங்கைதினைப்புனங் கொய்கவென்று
தாதிடங்கொண்டுபொன்வீசித்தன்கள்வாய்சொரியநின்று
சோதிடங்கொண்டிதெம்மைக்கெடுவித்ததுதூமொழியே.

எனல்விளையாட் டினியில்லையென
மானற்றோழி மடந்தைக்குரைத்தது.

இ - ள். தூ மொழி - தூய மொழியையுடையாய்—மாது இடம் கொண்டு அம்பலத்து நின்றோன் - மாதை யிடப்பக்கத்துக் கொண்டெல்லாருங்காண அம்பலத்தின்கணின்ற பொருந்தாவொழுக்கத்தையுடையவனது—வட வான் கயிலைப் போது இடங் கொண்ட பொன் வேங்கை - வடக்கின்கணுண்டாகிய பெரிய கைலைமலைக்கணுளதாகிய பொருப்பிடங்கொண்ட பொன்போலுமலரையுடையவேங்கை—தினைப்புனம் கொய்க என்று தாது இடங்கொண்டு - தினைப்புனத்தைக் கொய்கவென்று தாதையிடத்தேகொண்டு—பொன் வீசி - பொன்போலு மலரையெல்லாங்கொடுத்து—தன் கள் வாய் சொரிய நின்று - தனதுதேனைப் பூத்தவிடஞ் சொரியநின்று—சோதிடம் கொண்டு இது எம்மைக் கெடுவித்தது - சோதிடஞ்சொல்லுதலைப் பொருந்தி இஃதெம்மைக்கெடுத்தது; இனியென்செய்தும்? எ - று.

பொன்னைக்கொடுத்துப் பிறர்க்கடிமையாதலைப் பொருந்தித் தானிழிந்தசாதியாதலாற் றனக்குரியகள்ளை வாய்சொரிய நின்றெனச் சிலேடைவகையா னிழித்துக்கூறினாளாகவுமுரைக்க. சோதிடங்கொண்டி தெம்மைக் கெடக்கொண்டதென்பது பாடமாயிற் கெடக்கொண்டதென்னுஞ் சொற்கள் ஒருசொன்னீரவாய்க் கெடுத்ததென்னும் பொருள்பட்டு, எம்மையென்னு மிரண்டாவதனை முடித்தனவாகவுரைக்க. மெய்ப்பாடு அழுகை. பயன் செறிப்பறிவுறுத்தல். (௧௩௮)

## பகல்வரல்விலக்கிவரைவுகடாதல்.

பகல்வரல்விலக்கி வரைவுகடாதலென்பது சிறைப்புறமாகத் தினைமுதிர்வுரைத்து வரைவுகடாயதோழி, எதிர்ப்பட்டுநின்று, இப்

பெருங்கணியார் நமக்குநோவுதகப் பருவஞ் சொல்லுவாராயிருந் தார்; எம்மையன்மார் இவர்சொற்கேட்டு இத்தினையைத் தடிவாரா யிருந்தார்; எமக்குமினித்தினைப்புனங்காவலில்லை; நீரினிப்பகல்வ ரல் வேண்டாவெனப் பகல்வரல்விலக்கி வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வடிவார்வயற்றில்லையோன்மலயத்துநின் றும்வருதேன்
கடிவார்களிவண்டுநின்றலர் தூற்றப்பெருங்கணியார்
நொடிவார்நமக்கினிநோதகயானுமக்கென்னுரைக்கேன்
றடிவார்தினையெமர்காவேம்பெருமவித்தண்புனமே.

அகல்வரை நாடனைப்
பகல்வர லென்றது.

இ - ள். வடிவு ஆர் வயல் தில்லையோன் மலயத்து நின்றும் - அழகார்ந்த வயல்சூழ்ந்த தில்லையையுடையவனது பொதியிற்க ணின்று வைத்தும்—வரு தேன் கடிவார் களிவண்டு நின்று அலர் தூற்ற-நறுநாற்றத்தால் வாராநின்ற தேன்களும் நாற்றத்தைத்தேரு நெடிய களிவண்டுகளும் நின்று அலர்களைக் குடைந்து தூற்ற— பெருங்கணியார் இனி நமக்கு நோதக நொடிவார் - வேங்கையா கிய பெருங்கணியார் இப்பொழுது நமக்கு நோவுதகப் பருவஞ் சொல்லுவாராயிருந்தார்—யான் உமக்கு என் உரைக்கேன்-யானு மக்கென்சொல்லுவேன்—எமர் தினை தடிவார் - கணியார்சொல் லுதலால் எமர்தினையைத் தடிவாராயிருந்தார், அதனால்—பெரும- பெரும—இத்தண்புனம் காவேம் - இத்தண்புனத்தை யாமினிக்கா வேம்; நீ பகல்வரவேண்டா. எ - று.

வடிவார்தில்லை யென்றியைப்பினுமமையும். மலயத்துவாழ்வார் பிறர்க்கு வருத்தஞ் செய்யாராகலின், மலயத்து நின்றுமென்னும் மைகொடுத்தார். மலயத்துநின்றும் வருந்தேனென்றுரைப்பாரு முளர். இப்பொருட்கு வேங்கைமலயத்தையணைந்ததோரிடத்து நின்றதாகவுரைக்க. கடி புதுமையுமாம். வண்டொழுங்கினது நெடு மைபற்றி வார்களிவண்டென்றுள். இதுவுமதுவாகலான், அலர்தூ ற்றவென்பதற்குத் தன்னோடெயின்றுரைக் கண்ணோட்டமின்றி வருத்தாநின்றதென்று புறங்கூறவென்றுமுரைக்க. மெய்ப்பாடு அது. பயன் பகற்குறிவிலக்கல். (கஆகூ)

## தினையொடுவெறுத்துவரைவுகடாதல்.

தினையொடுவெறுத்து வரைவுகடாதலென்பது பகல்வரல்வில க்கி வரைவுகடாயதோழி, இத்தினைக்காவறலைக்கீடாக நாமவனை

யெதிர்ப்படலாமென்று நினைந்து தினையைவித்திக்காத்தோம்; அது போய்த் தீவினையைவித்திக்காத்து அதன்விளைவையுமுண்டதாகி முடிந்ததெனச் சிறைப்புறமாகத் தினையொடுவெறுத்து வரைவு கடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**நினைவித்துத்தன்னையென்னெஞ்சத்திருந்தம்பலத்துநின்று**
**புனைவித்தவீசன்பொதியின்மலைப்பொருப்பன்விருப்பிற்**
**றினைவித்திக்காத்துச்சிறந்துநின்றேமுக்குச்சென்றுசென்று**
**வினைவித்திக்காத்துவிளைவுண்டதாகிவிளைந்ததுவே.**

தண்புனத்தோடு தளர்வுற்றுப்
பண்புனைமொழிப் பாங்கிபகர்ந்தது.

இ-ள். என் நெஞ்சத்து இருந்து தன்னை நினைவித்து - தானேவந்திருந்து திருத்தவேண்டுதலின் என்னெஞ்சத்துப் புகுந்திருந்து தன்னை யானினையும் வண்ணஞ்செய்து—அம்பலத்து நின்று - அம்பலத்தின்கட்டன்றிருமேனி காட்டிநின்று—புனைவித்த ஈசன் பொதியின்மலைப் பொருப்பன் விருப்பின் - என்றற்றன்னைப் புகழ்வித்துக்கொண்ட ஈசனது பொதியின் மலைக்கணுளனாகிய பொருப்பன்மேல்வைத்த விருப்பினால்—தினை வித்திக் காத்துச் சிறந்து நின்றேமுக்கு - தினையைவித்தி அதனைக்காத்து உள்ளமலிந்து நின்ற எங்கட்கு—சென்று சென்று வினை வித்திக் காத்து விளைவு உண்டதாகி விளைந்தது - அத்தினையை வித்திக்காத்த காவல்போய்த் தீவினையைவித்தி அதனைக்காத்து அதன்விளைவையுமுண்டதாகி முடிந்தது. எ - று.

நினைவித்துத் தன்னை யென்னெஞ்சத்திருந்தென்பதற்கு ஒருகாற்றன்னை நினைவேனாகவுஞ்செய்து அந்நினைவே பற்றுக்கோடாகத் தான் புகுந்திருந்தெனினுமமையும். பொருப்பன் விருப்பென்பதனை நீர் வேட்கைபோலக்கொள்க. தினைவித்தியஞான்று இத்தினைக்காவல் தலைக்கீடாக அவனை யெதிர்ப்படலாமென்று மகிழ்ந்து அதற்குடம்பட்டாராகலிற் றும்வித்தினார்போலக் கூறினாள். புனத்தோடுதளர்வுற்று-புனத்தாற்றளர்வுற்று. (கசுO)

## வேங்கையொடுவெறுத்துவரைவுகடாதல்.

வேங்கையொடுவெறுத்து வரைவுகடாதலென்பது தினையொடு வெறுத்து வரைவுகடாயதோழி, இவ்வேங்கையரும்பிய ஞான்றே அரும்பறக் கொய்தேமாயின் இவர் இன்றுநம்மைக் கெடுப்பான் வேண்டி இத்தினைகெட முயலுமாறுமுண்டோ? யாமதுசெய்யப்

பொருப்பன் விருப்பு : ஐங். 313

பெற்றிலேமென வேங்கையொடு வெறுத்து வரைவுகடாவாநிற்றல்.
அதற்குச்செய்யுள்—

கனைகடற்செய்தநஞ்சுண்டுகண்டார்க்கம்பலத்தமிழ்தாய்
வினைகெடச்செய்தவன்விண்டோய்கயிலைமயிலனையாய்
நனைகெடச்செய்தனமாயினமைக்கெடச்செய்திடுவான்
றினைகெடச்செய்திடுமாறுமுண்டோவித்திருக்கணியே.

நீங்குகவினி நெடுந்தகையென
வேங்கைமேல்வைத்து விளம்பியது.

இ - ள். கனை கடற் செய்த நஞ்சு உண்டு - ஒலியாநின்ற கடலின்கணுண்டாக்கப்பட்ட நஞ்சையுண்டுவைத்து—அம்பலத்துக் கண்டார்க்கு அமிழ்தாய் - அம்பலத்தின்கணின்று கண்டார்க்கு அமிழ்தமாய்—வினைகெடச் செய்தவன் விண் தோய் கயிலை மயில் அனையாய் - நம் வினைகெடும்வண்ணஞ் செய்தவனது விண்ணைத் தோயாநின்ற கைலையின் மயிலையொப்பாய்—நனை கெடச் செய்தனம் ஆயின் - அரும்பியஞான்றே நனையைக்கெடும் வண்ணஞ் செய்தேமாயின்—நமைக் கெடச் செய்திடுவான் இத்திருக்கணி தினை கெடச் செய்திடுமாறும் உண்டோ - நம்மைக் கெடுப்பான் வேண்டி இத்திருவாகிய கணி தினைகெட முயலுமாறுமுண்டோ? யாமது செய்யப்பெற்றிலேம். எ - று.

கனைகடற்செய்தவென்றதனான் நஞ்சின்பெருமை கூறினார். செய்யாதநஞ்சிற் செய்தநஞ்சு கொடிதாகலின், அதன்கொடுமை விளங்க, செய்தநஞ்சென்றார். அமிழ்தாதல் அமிழ்தின்காரியத்தைச்செய்தல். கண்டார்க்கென்றதனான், அல்லாதவமிழ்தோடு இவ்வமிழ்திற்கு வேற்றுமை கூறியவாறாம். கெடச்செய்திடுவானென்னுஞ் சொற்கள் ஒருசொன்னீரவாய், கெடுப்பானென்னும் பொருள்பட்டு, நம்மையென்னு மிரண்டாவதற்கு முடிபாயின. வினைகெடச்செய்தவனென்பது முதலாயினவற்றிற்கு மிவ்வாறுரைப்பினுமமையும். திரு சாதிப்பெயர். கணி தொழிற்பெயர். நல்லகணியென்றிழித்துக் கூறினாளாக வுரைப்பாருமுளர். (கசுக)

## இரக்கமுற்றுவரைவுகடாதல்.

இரக்கமுற்று வரைவுகடாதலென்பது வேங்கையொடு வெறுத்து வரைவுகடாயதோழி, யாமவனை யெதிர்ப்படலாமென் றின்புற்று வளர்த்ததினைத்திரள் இப்புனத்தின்கணில்லாவாயிருந்தன; இனி

நாமவனை யெதிர்ப்படுமாறென்னோவெனச் சிறைப்புறமாகத் தலைமகனுக்கிரக்கமுற்று வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**வழுவாவியலெம்மலையர்விதைப்பமற்றியாம்வளர்த்த**
**கொழுவார்தினையின்குழாங்களெல்லாமெங்குழாம்வணங்குஞ்**
**செழுவார்கழற்றில்லைச்சிற்றம்பலவரைச்சென்றுநின்று**
**தொழுவார்வினைநிற்கிலேநிற்பதாவதித்தொல்புனத்தே.**

செழுமலை நாடற்குக்
கழுமலுற் றிரங்கியது.

இ - ள். வழுவா இயல் எம் மலையர் விதைப்ப - விதைக்கும் பருவத்துங் கொய்யும்பருவத்தும் வழுவாதுசெய்யு மியல்பையுடைய எந்தமராகிய மலையர் விதைப்ப—யாம் வளர்த்த கொழுவார் தினையின் குழாங்களெல்லாம் - யாம்வளர்த்த கொழுவிய நெடிய தினையின்திரட்களெல்லாம்—எங்குழாம் வணங்கும் செழுவார் கழல் தில்லைச் சிற்றம்பலவரை - எமது குழாஞ்சென்றுவணங்கும் வளவிய நெடிய கழலையுடைய தில்லையிற் சிற்றம்பலத்தையுடையானை—சென்று நின்று தொழுவார் வினை நிற்கிலே - சென்றுநின்று தொழுவாருடைய வினை அவர்கண் நிற்கிலே—இத் தொல் புனத்து நிற்பது ஆவது - இப்பழைய புனத்தினிற்பதாவது; இனிநில்லா. எ - று.

குழாங்களெல்லா நிற்பதாவதெனக்கூட்டுக. நிற்பதென்பது நிற்றலென்னும்பொருட்டு. நிற்பதாவவென்பது பாடமாயின், ஆவவென்பதிரங்கற்குறிப்பாகவுரைக்க. நிற்பவென்பதூஉம் பாடம். குழுவார்தினையென்பதூஉம் பாடம். (௧௯௨)

## கொய்தமைகூறிவரைவுகடாதல்.

கொய்தமைகூறி வரைவுகடாதலென்பது இரக்கமுற்று வரைவுகடாயதோழி எதிர்ப்பட்டு நின்று, இப்புனத்துத்தினையுள்ளது இன்றுதொடர்பறக்கொய்தற்றது; எமக்குமினிப்புனங்காவலில்லை; யாமுமக்கறிவு சொல்லுகின்றேமல்லேம்; நீரேயறிவீரெனத் தினைகொய்தமைகூறி வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**பொருப்பர்க்கியாமொன்றுமாட்டேம்புகலப்புகலெமக்காம்**
**விருப்பர்க்கியாவர்க்குமேலர்க்குமேல்வருமூரெரித்த**
**நெருப்பர்க்குநீடம்பலவருக்கன்பர்குலநிலத்துக்**
**கருப்பறுவிட்டெனக்கொய்தற்றதின்றிக்கடிப்புனமே.**

நீடிரும்புனத்தினி யாடேமென்று
வரைவுதோன்ற வுரைசெய்தது.

இ - ள். எமக்குப் புகலாம் விருப்பர்க்கு-எமக்குப் புகலிடமா தற்குக் காரணமாகிய விருப்பத்தையுடையவர்க்கு—யாவர்க்கும் மேலர்க்கு - எல்லார்க்கு மேலாயவர்க்கு—மேல் வரும் ஊர் எரித்த நெருப்பர்க்கு - ஆகாயத்தின்கட் செல்லுமூர்களையெரித்த நெருப்பையுடையவர்க்கு—நீடு அம்பலவருக்கு - நிலைபெற்ற வம்பலத்தையுடையவர்க்கு—அன்பர் குலம் நிலத்துக் கருப்பற்று விட்டென - அன்பராயினோருடைய குலங்கள் உலகத்துப் பிறவிக்காரணத்தைப் பற்றுவிட்டகன்றாற்போல—இக் கடிப்புனம் இன்று கொய்தற்றது - இக்காவலையுடைய புனம் இப்பொழுது தொடர்பறக் கொய்தற்றது; அதனால்—பொருப்பர்க்கு யாம் ஒன்றும் புகல மாட்டேம் - பொருப்பர்க் கியாமொன்றுஞ் சொல்லமாட்டேம். எ - று.

யாமொருகுணமுமில்லேமாயினுந் தமது விருப்பினாலெமக்குப் புகலிடமாயினாரென்னுங் கருத்தால், புகலெமக்காம் விருப்பர்க்கென்றார். எம்மால் விரும்பப்படுவார்க்கென்பாருமுளர். வீட்டெனவென்பதூஉம் பாடம். (கசங)

## பிரிவருமைகூறிவரைவுகடாதல்.

பிரிவருமைகூறி வரைவுகடாதலென்பது கொய்தமைகூறி வரைவுகடாயதோழி, இப்புனத்துப் பயின்ற கிளிகள் தமக்குத் துப்பாகாக்காலத்துந் தினைத்தாளைவிடாதிராநின்றன; நாம் போனால் நங்காதலரிவ்விடத்தே வந்துநின்று நம்மைத்தேடுவர் கொல்லோவெனச் சிறைப்புறமாகப் பிரிவருமைகூறி வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பரிவுசெய்தாண்டம்பலத்துப்பயில்வோன்பரங்குன்றின்வா
யருவிசெய்தாழ்புனத்தைவனங்கொய்யவுமிவ்வனத்தே
பிரிவுசெய்தாலரிதேகொள்கபேயொடுமென்னும்பெற்றி
யிருவிசெய்தாளினிருந்தின்றுகாட்டுமிளங்கிளியே.

மறைப்புறக் கிளவியிற்
சிறைப்புறத் துரைத்தது.

இ - ள். பரிவு செய்து ஆண்டு - எம்மைப் பரிந்தாண்டு—அம்பலத்துப் பயில்வோன் பரங்குன்றின்வாய் - அம்பலத்தின்கட் பயில்வானது பரங்குன்றினிடத்து—அருவி செய் தாழ் புனத்து ஐ

வனம் கொய்யவும் - அருவிநீராற் செய்யப்பட்ட தாழ்ந்த புனத்தின்கணுண்டாகிய ஐவனத்தைக்கொய்யவும் —இவ் வனத்து இருவி செய் தாளின் இருந்து - இக்காட்டின்கண் இருவியாகச் செய்யப்பட்ட தாளிலேயிருந்து—செய்தால் பேயொடும் பிரிவு அரிது- நட்புச்செய்தாற் பேயோடாயினும் பிரிவரிது—கொள்க என்னும் பெற்றி - இதனையுள்ளத்துக் கொள்கவென்னுந் தன்மையை— இளங்கிளி இன்று காட்டும் - இளங்கிளிகள் இப்பொழுது காட்டாநின்றன. எ - று.

பேயோடாயினும் பிரிவுசெய்தாலாற்றுதலரிதென் றுரைப்பினுமமையும். இருவியென்பது கதிர்கொய்த தட்டை. தாளென்பது கதிர்கொய்யாதமுன்னுஞ் சொல்வதோர்பெயர். இப்புனத்துப் பயின்ற கிளிகள் தமக்குத் துப்பாகாக்காலத்து மிதனைவிடாதிராநின்றன;இனி நங்காதலர் நம்மாட்டென்செய்வரென்னுங் கருத்தான், மறைப்புறமாயிற்று. சிறைப்பட வுரைத்ததென்பது பாடமாயின், சிறைக்கண்வந்து நிற்பவென்றுரைக்க. (கசுசு)

## மயிலொடுகூறிவரைவுகடாதல்.

மயிலொடுகூறி வரைவுகடாதலென்பது பிரிவருமைகூறிவரைவுகடாயதோழி, பிரிவாற்றாமையோடு தலைமகளையுங்கொண்டு புனங்காவலேறிப்போகா நின்றாள், கணியார்நினைவு இன்றுமுடிந்தது; யாங்கள் போகாநின்றேம்; இப்புனத்தொருவர் வந்தால் இங்குநின்றும்போனவர்கள் துணியாதன துணிந்துபோனாரென்று அவர்க்குச் சொல்லுமினென மயிலொடுகூறி வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**கணியார்கருத்தின் றுமுற்றிற்றியாஞ்சென் றுங்கார்ப்புனமே**
**மணியார்பொழில்காண்மறத்திர்கண்டீர்மன்னுமம்பலத்தோ**
**னணியார்கயிலைமயில்காளயில்வேலொருவர்வந்தாற்**
**றுணியாதனதுணிந்தாரென்னுநீர்மைகள்சொல்லுமினே.**

நீங்கரும்புனம்விடு நீள்பெருந்துயரம்
பாங்கிபகர்ந்து பருவரலுற்றது.

இ - ள். கணியார் கருத்து இன்று முற்றிற்று - கணியாரது நினைவு இன்று முடிந்தது—யாம் சென்றும் - யாங்கள் போகாநின்றேம்—கார்ப் புனமே - கரியபுனமே—மணி ஆர் பொழில்காள் - மணிகளார்ந்த பொழில்காள்—மறத்திர் கண்டீர் - வேங்கையொடு பயின்றீராகலின் நீரெம்மைமறப்பீர்—மன்னும் அம்பலத்தோன்

அணி ஆர் கயிலை மயில்காள் - நிலைபெறு மம்பலத்தையுடையவனது அழகார்ந்த கைலையினின்றும்வந்த மயில்காள்—அயில் வேல் ஒருவர் வந்தால் - அயில்வேல் துணையாகத் தனிவருமவர் ஈண்டுவந்தால்—துணியாதன துணிந்தார் என்னும் நீர்மைகள் சொல்லுமின்- அன்புடையார் துணியாதனவற்றை அவர்துணிந்தாரென்னு நீர்மைகளை யவர்க்குச் சொல்லுமின். எ - று.

நீர்மை ஈண்டுவியப்பு. நீரிவ்வாறுசொன்னால் அவராற்றுவாரென்பதுகருத்து. பேரருளினோன் கைலையினுள்ளீராகலின் நீர் கண்ணோட்டமுடையீரென்பது கருத்து. கார்ப்புனமென்பதற்குக் கார்காலத்துப் பொலியும் புனமெனினுமமையும். துணியாதனவாவன பிரிதலும் வரையுந்துணையுமாற்றி யிருத்தலும். புனமே பொழில்காள் மயில்காள் என்றுகூட்டி, நீரெம்மை மறப்பீராயினும் மறவாது சொல்லுமினென் றுரைப்பாருமுளர். இவையாறற்கும் மெய்ப்பாடும் பயனும் அவை. (௧௪௫)

## வறும்புனங்கண்டுவருந்தல்.

வறும்புனங்கண்டு வருந்தலென்பது தலைமகளும் தோழியும் புனங்காவலேறிப் போகாநிற்ப, தலைமகன் புனத்திடைச் சென்று நின்று, இப்புனம் யாமுன்பயின்றதன்றோ? இஃதின்றிருக்கின்றவா றென்னோவென்று, அதன் பொலிவழிவுகூறித் தலைமகளைத்தேடி வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பொதுவினிற்றீர்த்தென்னையாண்டோன்புலியூரரன் பொருப்
பே, யிதுவெனிலென்னின்றிருக்கின்றவாறெம்மிரும்பொழி
லே, யெதுநமக்கெய்தியதென்னுற்றனிரறையீண்டருவி
மதுவினிற்கைப்புவைத்தாலொத்தவாமற்றிவ்வான்புனமே.

மென்புனம்விடுத்து மெல்லியல்செல்ல
மின்பொலிவேலோன் மெலிவுற்றது.

இ - ள். பொதுவினில் தீர்த்து என்னை ஆண்டோன் - அதுவோவிதுவோ வழியென்றுமயங்கிப் பொதுவாக நின்ற நிலைமையை நீக்கி என்னையாண்டவன்—புலியூர் அரன் - புலியூரிலரன்—பொருப்பே எனில் இது இன்று இருக்கின்றவாறு என் - அவனது பொருப்பாய் யான்முன்பயின்ற விடமேயாயின் இஃதின்றிருக்கின்றவாறென்—எம் இரும் பொழிலே - எம்முடைய பெரியபொழிலே—நமக்கு எய்தியது எது - நமக்குத்தான் இன்றுவந்ததியாது—என் உற்றனிர் - நீரென்னுற்றீர்—இவ் வான் புனம் -

இதுவேயுமன்றி இப்பெரிய புனம்—அறை ஈண்டு அருவி மதுவி னில் கைப்பு வைத்தால் ஒத்தவா - ஒலியாநின்ற பெருகிய வருவி யாய்விழும் மதுவின்கண் அதனின்சுவையை மாற்றிக் கைப்பாகிய சுவையைவைத்தாலொத்தவாறென்! எ - று.

மற்றென்பதசைநிலை. எல்லாரையுமாளும் பொதுவாகிய முறைமையினின்று நீக்கி என்னை யுளநெகிழ்விப்பதோருபாயத்தானுண் டவனென் றுரைப்பினுமமையும். இன்பஞ்செய்வதுந் துன்பஞ் செய்வது மொன்றாகமாட்டாதென்னுங் கருத்தாற் புலியூரரன் பொருப்பேயிதுவெனிலென்றான். அறையீண்டருவிகாள் நீரென் னுற்றீரென்றும், அறையீண்டருவிப் புனமென்றும், உரைப்பாரு முளர். (கசசு)

## பதிநோக்கிவருந்தல்.

பதிநோக்கி வருந்தலென்பது வறும்புனத்திடை வருந்தா நின்ற தலைமகன், இவ்வாறணித்தாயினும் நம்மாற் செய்யலாவதொ ன்றில்லையென்று அவளிருந்த பதியைநோக்கித் தன்னெஞ்சோடு சாவி வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஆனந்தமாக்கடலாடுசிற்றம்பலமன்னபொன்னின்
றேனுந்துமாமலைச்சீறூரிதுசெய்யலாவதில்லை
வானுந்துமாமதிவேண்டியழுமழப்போலுமன்னே
நானுந்தளர்ந்தனனீயுந்தளர்ந்தனைநன்னெஞ்சமே.

மதிநுதலரிவை பதிபுகலரிதென
மதிநனிகலங்கிப் பதிமிகவாடியது.

இ - ள். ஆனந்த மாக் கடல் ஆடு சிற்றம்பலம் அன்ன - ஆன ந்தமாகிய நீரானிறைந்ததோர் பெரியகடல் நின்றாடுஞ் சிற்றம்பல த்தையொக்கும்—பொன்னின் தேன் உந்து மாமலைச் சீறூர் இது- பொன்னினது தேன்றத்திப்பாயும் பெரியமலைக்கணுண்டாகிய சீறூரிது—செய்யலாவது இல்லை - இவ்வாறணித்தாயினு நம்மாற் செய்யலாவதொன்றில்லை, அதனால்--வான் உந்தும் மாமதி வேண்டி அழும் மழப் போலும் - வானின்கட்செல்லும் பெரிய மதியைக் கொள்ளவேண்டி அதனருமையறியா தழுங்குழவிபோல எய்துதற் கரியாளைவிரும்பி—நல் நெஞ்சமே - நல்லநெஞ்சமே—நீயும் தளர்ந்தனை - நீயுந் தளர்ந்தாய்—நானும் தளர்ந்தனன் - நீயவ்வரும்பொருள்விரும்புதலான் யானுந்தளர்ந்தேன். எ - று.

தேனையுமிழுமாமலையெனினு மமையும். மழவை நெஞ்சத்திற் கேயன்றித் தலைமகற்குவமையாக வுரைப்பினுமமையும். நெஞ்சத்தைத் தன்னோடுபடுத்தற்கு நன்னெஞ்சமெனப் புனைந்துகூறினான். இது தலைமகளை இற்செறிவிக்கின்றகாலத்து ஆற்றானாகிய தலைமகன் றோழிகேட்பத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது. மன்னுமோவுமசைநிலை. பதி-தலைமகன். இவையிரண்டற்கும் மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்றாமைநீங்குதல். (கசஎ)

பகற்குறிமுற்றிற்று.

# இ ர வு க் கு றி.

இரவுக்குறிவருமாறு. பகற்குறிபுணர்ந்து விலக்கப்பட்ட தலைமகன் தெருண்டுவரைதறலை. தெருளானாயிற் பின்னையுந்தோழியைத் தலைப்பட்டு இரவுக்குறிவேண்டிச்சென்று எய்துதன்முறைமையென்ப. என்னை "களவினுட் டவிர்ச்சி கிழவோற் கில்லை" * என்றாராகலின்.

இரவுக்குறிவேண்ட லாற்றருமைகூற
னின்றுநெஞ்சுடைத னிலைகண்டுநேர்த
லுட்கோள்வினாத லுட்கொண்டுவினாதல்
குறியிடங்கூறல் குறியேற்பித்த
லிரவரவுரைத்த லேதங்கூறல்
குறைநேர்தலோடு குறைநயப்புரைத்தன்
மயின்மேலிசைத்து வரவுணர்ந்துரைத்த
றாய்துயிலறித றலைவிதுயிலெடுத்த
லிடத்துய்த்துநீங்க றளர்வகன்றுரைத்தன்
மருங்கணைதலோடு முகங்கண்டுமகிழ்தல்
பள்ளியிடத்துய்த்தல் பள்ளியிடத்துய்த்து
வரைவுகடாவி வரவுவிலக்கல்
வரைவுடம்படா தாற்றாதுரைத்த
லதரிடைச்செலவிற் கிரக்கங்கூற
லிருளறநிலவு வெளிப்படவருந்தல்
வேற்றுக்குறிகூறல் கடலிடைவைத்துத்

* இறையனாரகப்பொருள். ௩௩.

துயரறிவித்த றோழியுமின்றித்
தானேகிடந்து தனிமையுற்றாற்றுங்
காமமிக்க கழிபடர்கிளவி
காப்புச்சிறைமிக்க கையறுகிளவி
யாறுபார்த்துற்ற வச்சக்கிளவி
தன்னுட்கையா றெய்திடுகிளவி
நிலைகண்டுரைத்த னெடுங்கடற்சேர்த்த
லலரறிவித்தலோ டாறைம்மூன்று
மிரவுக்குறியிவை யென்றிசினோரே.

இ-ள். இரவுக்குறிவேண்டல், வழியருமைகூறிமறுத்தல், நின்றுநெஞ்சுடைதல், இரவுக்குறிநேர்தல், உட்கொளவினுதல், உட்கொண்டுவினுதல், குறியிடங்கூறல், இரவுக்குறியேற்பித்தல், இரவரவுரைத்தல், ஏதங்கூறிமறுத்தல், குறைநேர்தல், குறைநேர்ந்தமைகூறல், வரவுணர்ந்துரைத்தல், தாய்துயிலறிதல், துயிலெடுத்துச்சேறல், இடத்துய்த்துநீங்கல், தளர்வகன்றுரைத்தல், மருங்கணைதல், முகங்கண்டுமகிழ்தல், பள்ளியிடத்துய்த்தல், வரவுவிலக்கல், ஆற்றாதுரைத்தல், இரக்கங்கூறிவரைவுகடாதல், நிலவுவெளிப்படவருந்தல், அல்லகுறியறிவித்தல், கடலிடைவைத்துத்துயரறிவித்தல், காமமிக்ககழிபடர்கிளவி, காப்புச்சிறைமிக்ககையறுகிளவி, ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி, தன்னுட்கையாறெய்திடுகிளவி, நிலைகண்டுரைத்தல், இரவுறுதுயரங்கடலொடுசேர்த்தல், அலரறிவுறுத்தல் எனவிவை முப்பத்துமூன்று மிரவுக்குறியாம். எ - று. அவற்றுள்—

## இரவுக்குறிவேண்டல்.

இரவுக்குறி வேண்டலென்பது பதிநோக்கி வருந்தாநின்ற தலைமகன், இற்றையிரவிற்கியானுங்கள் சீறூர்க்கு விருந்து; என்னையேற்றுக்கொள்வாயாகவெனத் தோழியை யிரவுக்குறி வேண்டாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**மருந்துநம்மல்லற்பிறவிப்பிணிக்கம்பலத்தமிர்தா**
**யிருந்தனர்குன்றினின்றேங்குமருவிசென்றோர்திகழப்**
**பொருந்தினமேகப்புதைந்திருடூங்குப்புனையிறும்பின்**
**விருந்தினன்யானுங்கள்சீறூரதனுக்குவெள்வளையே.**

நள்ளிருட்குறியை வள்ளனினைந்து
வீங்குமென்முலைப் பாங்கிக்குரைத்தது.

இ - ள். வெள்வளை - வெள்வளையையுடையாய்--குன்றினின்று எங்கும் அருவி சென்று ஏர் திகழ மேகம் பொருந்தின - குன்றின் கணின்றொலிக்கு மருவிகள்பாய்ந் தழகுவிளங்கும் வண்ணம் மேகம்வந்து பொருந்தின, அதனால்—புதைந்து இருள் தூங்கும் புனை இறும்பின் உங்கள் சீறூரதனுக்கு யான் விருந்தினன் - அம்மேகத்தின்கட் புதைந்திருள்செறியுஞ் செய்காட்டையுடைய நுமது சீறூரதற்கியான் விருந்தினன்; என்னை யேற்றுக்கொள்வாயாக. எ - று.

நம் அல்லற் பிறவிப் பிணிக்கு மருந்து - நம்முடையவல்லலைச் செய்யும் பிறவியாகிய பிணிக்கு அருந்துமருந்தாய்வைத்தும்—அம்பலத்து அமிர்தாய் இருந்தனர் குன்றின் - அம்பலத்தின்கட் சுவையானமிர்தமுமாயிருந்தவரது குன்றினெனக் கூட்டுக.

மேகம்வந்து பொருந்தினவென்றதனால், தன்னூர்க்குப் போதலருமை கூறுவான்போன்று இரவுக்குறிமாட்சிமைப்படுமென்றுணும். இருளேங்கும் புனையிறும்பென்றதனால், யாவருங் காணாராகலினுண்டுவந்து நிற்கின்றேனென்றுணும். மாலைவிருந்தினரை மாற்றுதலறனன்றென்பது தோன்ற விருந்தினனென்றான். குன்றினின்றேங்கு மருவியேர்திகழச்சென்று பொருந்தினமேகமென்க. அருவியேர்பெற மேகம்பொருந்தினவூர் நின்னூராகலான் என்னினைப்பற்று யானுமேர்பெற நின்னைவந்துசேர்ந்தேனென்பது போதரும். மெய்ப்பாடு பெருமிதம். பயன் இரவுக்குறிநேர்வித்தல்.

## வழியருமைகூறிமறுத்தல்.

வழியருமைகூறி மறுத்தலென்பது தலைமகனிரவுக்குறிவேண்டிநிற்ப, யாங்கள்வாழும்பதி ஏற்றிழிவுடைத்தாகலின் அவ்விடத்து நினக்குச்சிந்தைக்கு மேறற்கரிதெனத் தோழி வழியருமைகூறி மறுத்துக்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**விசும்பினுக்கேணிநெறியன்னசின்னெறிமேன்மழைதூங்**
**கசும்பினிற்றுன்னியளைநுழைந்தாலொக்குமையமெய்யே**
**யிசும்பினிற்சிந்தைக்குமேறற்கரிதெழிலம்பலத்துப்**
**பசும்பனிக்கோடுமிலைந்தான்மலயத்தெம்வாழ்பதியே.**

இரவரலேந்தல் கருதியுரைப்பப்
பருவரற்பாங்கி யருமையுரைத்தது.

இ - ள். ஐய - ஐயனே—விசும்பினுக்கு ஏணி நெறி அன்ன சின்னெறிமேல் - விசும்பிற்கிட்டதோ ரேணிநெறிபோலுஞ் சிறு நெறிமேல்—மழை தூங்கு அசும்பினில் துன்னி அளை நுழைந்தால் ஒக்கும் - மழையிடையறுது நிற்றலான் இடையிடையுண்டாகிய அசும்பின்கட்சென்று பொருந்தி யேறுமிடத்து இட்டிமையால் அளைநுழைந்தாற் போன்றிருக்கும்—எம் வாழ்பதி இசும்பினில் சிந்தைக்கும் ஏறற்கு அரிது - அதுவேயுமன்றி, எம்வாழ்பதி வழுக்கின்றன் மெய்யே சிந்தைக்குமேறுதற்கரிது; அதனாலாண்டுவரத் தகாது. எ - று.

எழில் அம்பலத்துப் பசும் பனிக் கோடு மிலைந்தான் மலயத்து எம் வாழ்பதி - எழிலையுடைய வம்பலத்தின்கணுள்ளனாகிய குளிர்ந்த பனியையுடைத்தாகிய பிறையைச்சூடியவனது மலயத்தின்கணுண்டாகிய வெம்வாழ்பதியெனக்கூட்டுக.

இசும்பு ஏற்றிழிவுமுதலாயின குற்றமென்பாருமுளர். அசும்பு சிறுதிவலை. இசும்பினிற் சிந்தைக்கு மேறற்கரிதென்றவதனன், எம் துவாழ்பதி யிவ்வொழுக்கத்தைச் சிறிதறியுமாயிற் சிந்தையாலு நினைத்தற்கரிய துயரத்தைத் தருமாதலால், தாஞ்செத் துலகாள் வாரில்லை; அதுபோல விவ்வொழுக்க மொழுகற்பாலீரல்லீரென்று மறுத்துக்கூறியவாறாயிற்று. பசுமை செவ்வியுமாம். அதனைக்கோட்டின்மேலேற்றுக. கோட்டையுடைமையாற் கோடெனப்பட்டது. மெய்ப்பாடு இளிவரல். பயன் இரவுக்குறிமறுத்தல். (கசுக)

## நின்றுநெஞ்சுடைதல்.

நின்றுநெஞ்சுடைதலென்பது வழியருமை கூறக்கேட்ட தலைமகன், எய்துதற்கரியாளைவிரும்பி நீ மெலியாநின்றவிதற்கு யானாற்றேனெனக்கூறி, தனதிறந்துபாடு தோன்றநின்று தன்னெஞ்சுடைந்து வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**மாற்றேனெனவந்தகாலனையோலமிடவடர்த்த**
**கோற்றேன் குளிர்தில்லைக்கூத்தன்கொடுங்குன்றினீள்குடுமி**
**மேற்றேன் விரும்புமுடவனைப்போலமெலியுநெஞ்சே**
**யாற்றேனரியவரிவைக்குநீவைத்தவன்பினுக்கே.**

பாங்கிவிலங்கப் பருவரைநாட
னீங்கிவிலங்காது நெஞ்சுடைந்தது.

இ - ள். மாற்றேன் என வந்த காலனை - ஒருவரானு மாற்றப்படேனென்று வழிபடுவோன துயிரைவௌவ வந்தகாலனை—

ஓலமிட அடர்த்த கோற்றேன் - அவளோலமிடும்வண்ண மடர்த்த கோற்றேன்—குளிர் தில்லைக் கூத்தன் - குளிர்ந்த தில்லைக்கணுளனாகிய கூத்தன்—கொடுங் குன்றின் நீள் குடுமிமேல் தேன் விரும்பும் முடவனைப் போல - அவனுடைய கொடுங்குன்றினது நீண்ட குடுமியின்மேலுண்டாகிய தேனைவிரும்பு முடவனைப்போல—மெலியும் நெஞ்சே-எய்துதற்கருமையை நினையாது மெலிகின்ற நெஞ்சமே—அரிய அரிவைக்கு நீ வைத்த அன்பினுக்கு ஆற்றேன் - அரியளாகிய வரிவையிடத்து நீயுண்டாக்கிய அன்பால் யானாற்றேன். எ - று.

மாற்றேனென்பது செயப்படுபொருட்கண்வந்தது. மாறேனென்பது விகாரவகையான் மாற்றேனென நின்றதெனினுமமையும். சுவைமிகுதியுடைமையிற் கோற்றேனென்றார். நீவன்கண்மையையாதலின் இவ்வாறுமெலிந்து முயிர்வாழ்தி, யானத்தன்மையேனல்லேன் இறந்துபடுவேனென்னுங் கருத்தான், மெலியுநெஞ்சே யானாற்றேனென்றான். நீங்கிவிலங்காது-நீங்கியுள்ளஞ் செல்கின்ற செலவினின்றும் விலங்காது. மெய்ப்பாடு இளிவரல். பயன் இரவுக்குறி நயப்பித்தல். (கருO)

## இரவுக்குறிநேர்தல்.

இரவுக்குறி நேர்தலென்பது தலைமகனெஞ்சுடைந்து வருந்தாநிற்பக்கண்டு, இவனிறந்துபடவுங்கூடுமென வுட்கொண்டு, நீ யாளி கணிரைத்துநின் றியானைகளைத்தேடு மிராவழியின்கண்வந்து மீள்வேனென்னுநின்றாய்; இதற்குத் தீவினையேன் சொல்லுவதெவனோ வென்று மறுத்தவாய்பாட்டாற் றோழி யிரவுக்குறி நேராநிற்றல். அதற்குச்செய்யுள்—

கூளிநிரைக்கநின் றம்பலத்தாடிகுரைகழற்கீழ்த்
தூளிநிரைத்தசுடர்முடியோயிவடோணசையா
லாளிநிரைத்தடலானைகடேருமிரவில்வந்து
மீளியுரைத்திவினையேனுரைப்பதென்மெல்லியற்கே.

தடவரைநாடன் றளர்வுதீர
மடநடைப்பாங்கி வகுத்துரைத்தது.

இ - ள். கூளி நிரைக்க நின்று - கூத்தின்கட் சுவையாற் பேய்களும் போகாது நிரைத்துநிற்ப நின்று—அம்பலத்தாடி குரை கழற்கீழ்த் தூளி நிரைத்த சுடர் முடியோய் - அம்பலத்தின்கணுடுவானது ஒலிக்குங் கழலையுடைய திருவடிக்கணுண்டாகிய தூளிமொ

ய்த்த சுடர்முடியையுடையோய்—இவள் தோள் நசையால் - இவ டோண்மேலுண்டாகிய விருப்பினால்—ஆளி நிரைத்து அடல் ஆனைகள் தேரும் இரவின் வந்து மீளி உரைத்தி - ஆளிகள் ஊடு போக்கற நிரைத்து வலியையுடைய யானைகளைத்தேடு மிரவின்கண் வந்து மீளுதலைச் சொல்லாநின்றாய்—மெல்லியற்கு வினையேன் உரைப்பதென் - இனி மெல்லியற்குத் தீவினையேன் சொல்லுவ தென்? உடம்படுவாயென்பேனோ மறுப்பாயென்பேனோ? எ - று.

இரவுக்குறி யுடம்பட்டாளாகலின், தூளி நிரைத்த சுடர்முடி யோயென்றதனால், அரையிருளின்வருதலான் வருமேதத்தை அத் தூளி காக்குமென்று கூறினாளாம். குரைகழல் அன்மொழித்தொ கை. மருடல் வெருடலென்பன மருளி வெருளியென நின்றாற் போல, மீடலென்பது மீளியெனநின்றது. வந்து மீளியென்பத ற்கு, வந்து மீடலையுடைய விரவுக்குறியென் றுரைப்பாருமுளர். உடம்படவு மறுக்கவுமாட்டாதிடைநின்று வருந்துதலின், வினை யேனென்றாள். ஆளி நிரைக்குமாற்றின்கண் நீ வருதற்குடம்படுத றகாதாயினுந் தோணசையாற் கூறுகின்ற விதனைமறுப்பின் நீ யாற் றாயென்பதனா லுடம்படாநின்றேனென்பதுபடக் கூறினமையால், வருத்துரைத்தலாயிற்று. மெய்ப்பாடு அச்சம். பயன் இரவுக்குறி நேர்தல். இறந்தகாலவுட்கோள் குறிப்புநுட்பம். (கறுக)

## உட்கோள்வினாதல்.

உட்கொள வினாதலென்பது இரவுக்குறிநேர்ந்த தோழி, தங் கணிலத்துமக்கள் கோலத்தனாய்வருதற்கு அவனுட்கொள்வது கார ணமாக, நின்னூரிடத்தார் எம்மலர்சூடி எச்சாந்தணிந்து எம்மர நிழலின்கீழ் விளையாடுபவெனத் தலைமகனை வினவாநிற்றல். அதற் குச்செய்யுள்—

**வரையன்றொருகாலிருகால்வளையநிமிர்த்துவட்கார்**
**நிரையன்றழலெழவெய்துநின்றோன்றில்லையன்னநின்னூர்**
**விரையென்னமென்னிழலென்னவெறியுறுதாதிவர்போ**
**துரையென்னவோசிலம்பாநலம்பாவியொளிர்வனவே.**

நெறிவிலக்குற்றவ னூறுதுயர்நோக்கி
யாங்கொருகுழல் பாங்கிபகர்ந்தது.

இ - ள். சிலம்பா - சிலம்பா—நின் ஊர் நலம் பாவி ஒளிர்வன விரை என்ன - நின்னூரின் நலம்பரந்து விளங்குவனவாகிய ஆண் டையார் பூசும் விரையெத்தன்மைய—மென்னிழல் என்ன - அவர்

விளையாடு மெல்லிய நிழலெத்தன்மைய—வெறி உறு தாது இவர் போது என்ன - அவர்சூடு நறுநாற்றம்பொருந்திய தாதுபரந்த போதுகளைத்தன்மைய—உரை - உரைப்பாயாக. எ - று.

அன்று ஒருகால் வரை இருகால் வளைய நிமிர்த்து - அன் ஞொருகால் வரையை யிரண்டுகாலும் வளையும்வண்ண மார்பையுந் தோளையுநிமிர்த்து—வட்கார் நிரை அழல் எழ அன்று எய்து நின் றோன் இல்லை அன்ன நின் ஊர் - பகைவரது நிரையை யழலெழும் வகை யன்றெய்து நின்றவனது இல்லையையொக்கு நின்னூரெனக் கூட்டுக.

மெல்லிய நிலத்தையுடைய நிழலை மென்னிழலென்றாள். நலம் பாவியொளிர்வன என்பதனை யெல்லாவற்றோடுங் கூட்டுக. அன்று நிமிர்த்தெனவும், அன்றெய்து நின்றோனெனவுமியையும். இது குறிப்பெச்சம். வன்றழலென்பதூஉம் பாடம். இவ்வாறு வினவத் தலைமகனென்றனை யுட்கொள்ளுமென்று கருதிக் கூறினமையால், ஆங்கொரு சூழலென்றாள். மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலை மகற்குக் குறியிடமுணர்த்துந் தோழி யவனூற் றன்னை வினவு வித்தல். (கரு௨)

## உட்கொண்டுவினாதல்.

உட்கொண்டு வினாதலென்பது கேட்டவினாவையுட்கொண்டு அந்நிலத்துமக்கள் கோலத்தனாய்ச் செல்வானாக, நின்னூரிடத்து இராப்பொழுது நுமர் எம்மலரைச்சூடி எச்சாந்தையணிந்து என்னமரநிழலின்கீழ் விளையாடுபவெனத் தலைமகன் றோழியை வினவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

செம்மலராயிரந் தூய்க்கருமாறிருக்கண்ணணியு
மொய்ம்மலரீர்ங்கழலம்பலத்தோன்மன்னுதென்மலயத்
தெம்மலர்சூடிநின்றெச்சாந்தணிந்தென்னநன்னிழல்வா
யம்மலர்வாட்கணல்லாயெல்விவாய்நுமராடுவதே.

தன்னை வினவத் தானவள்குறிப்பறிந்
தென்னை நின்னூட் டிகலணியென்றது.

இ - ள். அம் மலர் வாள் கண் நல்லாய் - அழகியமலர்போலு மொளியையுடையவாகிய கண்ணையுடையநல்லாய்—செம்மலர் ஆயி ரம் தூய்க் கருமால் திருக்கண் அணியும் - செய்யதாமரைமலர்க ளாயிரத்தைத்தூவி முன்வழிபட்டு ஒருநான்று அவற்றுளொன்று குறைதலாற் கரியமால் அவற்றோடொக்குந் தனது திருக்கண்ணை

யிடந்தணியும்—மொய்ம் மலர் ஈர்ங் கழல் அம்பலத்தோன் மன்னு தென் மலயத்து - பெரிய மலர்போலும் நெய்த்தநிறத்தையுடைய வாகிய திருவடியையுடைய வம்பலத்தான்றங்குந் தென்மலயத்திடத்து—எல்லிவாய் நுமர் ஆடுவது - இராப்பொழுதின்கண் நுமர்விளையாடுவது—எம்மலர் சூடி நின்று - எம்மலரைச் சூடிநின்று—எச்சாந்து அணிந்து - எச்சாந்தையணிந்து—என்ன நல் நிழல்வாய் - என்ன நன்னிழற்கீழ்? கூறுவாயாக. எ - று.

வாள் உவமையெனினுமமையும். நுமரென்றது அவரோடொரு நிலத்தாராகியமக்களை. திருமாலென்பதூஉம் பாடம். நிழல் அணியன்றெனினும், பண்மைபற்றி யணியென்றார். மெய்ப்பாடு அது. பயன் குறியிடமுணர்த்துதல். (கஙுரு)

## குறியிடங்கூறல்.

குறியிடங்கூறலென்பது உட்கொண்டுவினவிய தலைமகனுக்கு, யாங்கள் சந்தனச்சாந்தணிந்து, சுனைக்காவிகள்சூடி, தோகைகடுயில்செய்யும் வேங்கைப்பொழிற்கண் விளையாடுவேம்; அவ்விடத்து நின்வரவறியமயிலெழுப்புவாயாகவெனத் தோழி குறியிடங்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

பனைவளர்கைம்மாப்படாத்தம்பலத்தரன்பாதம்விண்ணோர்
புனைவளர்சாரற்பொதியின்மலைப்பொலிசந்தணிந்து
சுனைவளர்காவிகள்சூடிப்பைந்தோகைதுயில்பயிலுஞ்
சினைவளர்வேங்கைகள்யாங்கணின்றாடுஞ்செழும்பொழிலே.

இரவுக்குறியிவ ணென்றுபாங்கி
யரவக்கழலவற் கறியவுரைத்தது.

இ - ள். பனை வளர் கைம் மாப் படாத்து அம்பலத்து அரன் பாதம் - பனைபோலுநெடிய கையையுடைய மாவினுரியாகிய படாத்தையுடைய வம்பலத்தரன்பாதங்களை—விண்ணோர் புனை வளர் சாரல் பொதியின்மலை - விண்ணோர் பரவுதற்கிடமாகிய வளருஞ் சாரலையுடைய பொதியின்மலைக்கண்—பொலி சந்து அணிந்து - பொலியுஞ் சந்தனச்சாந்தையணிந்து—சுனை வளர் காவிகள் சூடி - சுனைக்கண்வளருங் காவிகளைச்சூடி—யாங்கள் நின்று ஆடும் செழும்பொழில் - யாங்கணின்றாடும் வளவியபொழில்—பைந்தோகை துயில் பயிலும் சினை வளர் வேங்கைகள் - பசியமயில்கள் துயில்செய்யுங் கோடுவளரும் வேங்கைப்பொழில். எ - று.

வேங்கையின்கீழ் இரவுக்குறி : குறள். ~~154~~ 266

என்றது சந்தனச்சாந்தணிந்து சுனைக்காவிசூடி வேங்கைப் பொழிற்கண் நீவந்துநின்று நின்வரவறிய மயிலெழுப்புவாயாக வென்றவாறு. மெய்ப்பாடு அது. பயன் இரவுக்குறியிடமுணர்த்துதல். (கருச)

## இரவுக்குறியேற்பித்தல்.

இரவுக்குறி யேற்பித்தலென்பது தலைமகனுக்குக் குறியிடங் கூறித் தலைமகளுழைச்சென்று, அந்திக்காலத்தோரலவன் றன்பெடையோடு பயிலக்கண்டு ஒருபெரியோன் வருத்தமிக்குச் சென்றான்; அதற்குப்பின் அவன் சேர்துயிலறிந்திலேனெனத் தோழி அவனதாற்றாமைகூறித் தலைமகளை யிரவுக்குறி யேற்பியாநிற்றல். அதற்குச்செய்யுள்

மலவன்குரம்பையைமாற்றியம்மான்முதல் வானர்க்கப்பாற், செல்வன்பர்க்கோக்குஞ்சிவன்றில்லைக்கானலிற்சீர்ப் பெடையோ, டலவன்பயில்வதுகண்டஞர்கூர்ந்தயில்வேலுரவோன், செலவந்திவாய்க்கண்டனனென்னதாங்கொன்மன் சேர்துயிலே.

அரவக்கழலவ னாற்றானென
விரவுக்குறி யேற்பித்தது.

இ - ள். மல வன் குரம்பையை மாற்றி - மலங்களையுடைய வலியயாக்கையாகிய குரம்பையைமாற்றி—மால் முதல் அவ் வானர்க்கு அப்பால் செலவு அன்பர்க்கு ஓக்கும் - மான்முதலாகிய அவ் வானவர்க்கப்பாற் செல்லுஞ் செலவை அன்பராயினார்க்கென் றாக்கிவைக்கும்—சிவன் தில்லைக் கானலில் - சிவனது தில்லையைச்சூழ்ந்த கானலிடத்து—சீர்ப் பெடையோடு அலவன் பயில்வது கண்டு - நல்லபெடையோடலவன்பயின்று விளையாடுவதனைக்கண்டு—அஞர் கூர்ந்து - வருத்தமிக்கு—அயில் வேல் உரவோன் - அயில்வேலையுடையவுரவோன்—அந்திவாய்ச் செலக் கண்டனன் - அந்திப்பொழுதின்கட்செல்ல அவனைக்கண்டேன்—மன் சேர் துயில் என்னதாங் கொல் - பின் அம்மன்னனது சேர்துயிலெத்தன்மைத்தாம்! அறியேன். எ - று.

அப்பாற்செலவு மான்முதலாயினார்க்கு மேலாகிய பதங்கள். அன்பருட் போகவேட்கையுடையார் அவற்றைப்பெற்றுப் போகந் துய்ப்பாராதலிற் செலவன்பர்க் கோக்குமென்றார். பெடையொடும்பயிலு மலவனைக்கண்டு முயிர்தாங்கிச் சென்றானாதலின் உரவோனென்றாள். (கருரு)

## இரவரவுரைத்தல்.

இரவரவுரைத்தலென்பது அலவன்மேல்வைத் திரவுக்குறி யேற்பித்து முகங்கொண்டு அதுவழியாகநின்று, வேட்கைமிகவால் யானைகணடுங்கச் சிங்கந்திரியுமலைச்சாரியிடத்து வரவேண்டிச் சொல்லாநின்றான்; இதற்கியான் செய்வதென்னோவெனத் தோழி தலைமகளுக்குத் தலைமகனிரவரவு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மோட்டங்கதிர்முலைப்பங்குடைத்தில்லைமுன்னோன்கழற்கே
கோட்டந்தருநங்குருமுடிவெற்பன்மழைகுழுமி
நாட்டம்புதைத்தன்னநள்ளிருள்கணடுங்கச்சிங்கம்
வேட்டந்திரிசரிவாய்வருவான்சொல்லுமெல்லியலே.

குரவரு குழலிக்
கிரவர வுரைத்தது.

இ - ள். மெல்லியல் - மெல்லியலாய்—மோட்டு அம் கதிர் முலைப் பங்கு உடைத் தில்லை முன்னோன் கழற்கே - பெரிய வழகிய கதிர்முலையையுடையதோர் கூற்றையுடைய தில்லைக்கணுள்ளாகிய எல்லாப்பொருட்கு முன்னாயவனுடைய திருவடியொன்றற்குமே—கோட்டம் தரும் குருமுடி நம் வெற்பன் - வணங்குதலைச்செய்யுங் குருமுடியையுடைய நம்வெற்பன்—மழை குழுமி நாட்டம் புதைத் தன்ன நள் இருள் - முகில்கள் திரளுதலான் நாட்டத்தைப் புதைத்தாற்போன்றிருக்குஞ் செறிந்த விருட்கண்—நாகம் நடுங்கச் சிங்கம் வேட்டம் திரி சரிவாய் - யானைகணடுங்கச் சிங்கம் வேட்டந்திரியு மலைச்சரியிடத்து—வருவான் சொல்லும் - வரவேண்டிச் சொல்லாநின்றான்; இனியென்செயத்தகும்? எ - று.

குரு நிறம். முன்னோன்கழற்கல்லது பிறிதோரிடத்துந் தாழ்ந்துநில்லாப் பெரியோன் தாழ்ந்து வேண்டுவதனை மறுத்தலரிதென்பதுபோதர, முன்னோன்கழற்கே கோட்டந்தரு நங்குருமுடி வெற்பனென்றாள். ஆற்றின்கண் வருமேத மறியினும் அவனது வேட்கைமிகுதியா லென்னொலொன்றுங்கூறுவ தரிதாயிற்றென்பது போதர, நள்ளிரு ளுகணடுங்கச் சிங்கம்வேட்டந்திரி சரிவாயென்றாள். குரவெனவும் இரவெனவும் விகாரவகையாற் குறுகிநின்றது. இவையிரண்டற்கும் மெய்ப்பாடு அச்சத்தைச்சார்ந்த விளிவரல். பயன் தலைமகளை யிரவுக்குறி நேர்வித்தல். (கரு௬)

## ஏதங்கூறிமறுத்தல்.

ஏதங்கூறி மறுத்தலென்பது தலைமகனிரவரவுகேட்ட தலைமகள் தனக்கவன்செய்த தலையளியுமுதவியு நினையாநின்ற வுள்ளத்த

ளாய், அரிதிரண்டுநின் றியானைவேட்டஞ்செய்யும் வல்லிருட்கண் வள்ளலை வாவென்று சொல்லத்தகுமோவென ஏதங்கூறி மறுத்துரையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**செழுங்கார்முழவதிர்சிற்றம்பலத்துப்பெருந்திருமால்**
**கொழுங்கான்மலரிடக்கூத்தயர்வோன்கழலேத்தலர்போன**
**முழங்காரரிமுரண்வாரணவேட்டைசெய்மொய்யிருள்வாய்**
**வழங்காவதரின்வழங்கென்றுமோவின்றெம்வள்ளலையே.**

இழுக்கம்பெரி திரவரினென
அழுக்கமெய்தி யரிவையுரைத்தது.

இ - ள். செழுங்கார் முழவு அதிர் சிற்றம்பலத்து - வளவிய கார்போலக் குடமுழாமுழங்குஞ் சிற்றம்பலத்தின்கண்ணே—பெருந் திருமால் கான் கொழு மலர் இட - பெரிய திருமால் நறுநாற்றத்தையுடைய கொழுவிய மலரையிட்டுப் பரவ—கூத்து அயர்வோன் கழல் ஏத்தலர்போல் - கூத்தைவிரும்பிச் செய்வானுடைய கழல்களை யேத்தாதாரைப்போல வருந்த—முழங்கு ஆர் அரி முரண் வாரணவேட்டை செய் மொய் இருள்வாய் - முழங்காநின்ற கிட்டுதற்கரிதாகிய சீயம் முரணையுடைய வாரணவேட்டையைச்செய்யும் வல்லிருட்கண்—வழங்கா அதரின் வழங்கு எம் வள்ளலை இன்று என்றுமோ - யாவரும் வழங்காத வழியிடத்து வழங்குவாயாகவென்று எம்முடையவள்ளலை யின்றுசொல்லுதுமோ! இவ்வாறு சொல்லற் றகுமோ! எ - று.

ஏத்தலரை யானைக்குவமையாகவுரைக்க. ஏத்தலர்போல் வழங்கென்றுமோவென்று கூட்டியுரைப்பாருமுளர். முழங்காரரியென்பதற்கு முழங்குதலார்ந்த வரியென்பாருமுளர். தனக்கவன்செய்த தலையளியுமுதவியு நினையாநின்ற வுள்ளத்தளாகலின், வள்ளலென்றாள். மைந்தனையென்பது பாடமாயின், ஆண்மைத்தன்மை தோன்ற நின்றதாகவுரைப்பாருமுளர். ஆற்றினேதமுணர்ந்து மறுத்தாள் அவருழை யாஞ்சேறலொழிந்து அவரை வரச் சொல்லக் கடவேமோ வென்றவாறு. அலங்காரம் எதிர்காலக் கூற்றிடத்துக் காரியத்தின்கண்வந்த இரங்கல்விலக்கு, உபாயவிலக்கு. மெய்ப்பாடு அச்சம். பயன் இரவுக்குறிமறுத்தல். (கஙஎ)

## குறைநேர்தல்.

குறைநேர்தலென்பது ஏதங்கூறிமறுத்த தலைமகள், அவனுற்றுறுகிய நிலைமைகேட்டு, யான் புனலிடைவீழ்ந்து கெடப்புக என்

னுயிர் தந்த பெரியோர்க்குச் சிறியேன் சொல்லுவதறியேனென உடம்பட்டு நேராநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஓங்குமொருவிடமுண்டம்பலத்தும்பருய்யவன்று
தாங்குமொருவன்றடவரைவாய்த்தழுங்கும்மருவி
வீங்குஞ்சுனைப்புனல்வீழ்ந்தன்றழுங்கப்பிடித்தெடுத்து
வாங்குமவர்க்கறியேன்சிறியேன்சொல்லும்வாசகமே.

அலைவேலண்ண லிலைமைகேட்டுக்
கொலைவேற்கண்ணி குறைநயந்தது.

இ - ள். ஓங்கும் ஒரு விடம் உண்டு - உலகமுழுதையுஞ் சுடுங்வண்ணம் மேன்மேலும் வளராநின்றதோர் விடத்தைத் தானுண்டு—உம்பர் உய்ய அன்று தாங்கும் அம்பலத்து ஒருவன் தடவரைவாய் - உம்பரெல்லாமுய்ய அன்றுதாங்கு மம்பலத்தொருவனது பெரியவரையிடத்து—தழுங்கும் அருவி வீங்கும் சுனைப்புனல்-ஒலியாநின்ற வருவியாற் பெருகுகின்ற சுனைப்புனற்கண் — அன்று வீழ்ந்து அழுங்கப் பிடித்தெடுத்து வாங்குமவர்க்கு - அன்றி யான்விழுந்து கெடப்புகப் பற்றியெடுத்துக் கரைக்கணுய்த்த பெரியோருக்கு — சிறியேன் சொல்லும் வாசகம் அறியேன் - சிறியேனாகிய யான் சொல்லுவதோர் மாற்றமறியேன். எ - று.

ஒருநஞ்சென்பதற்கு ஒப்பில்லாத நஞ்செனினுமமையும். தடவரைவாய்வீழ்ந்தழுங்கவென வியையும். சுனையென்றியைப்பினுமமையும். சுனைப்புனல்வாய் வீழ்ந்தழுங்க வன்று தாமே வந்தெடுத்துய்வித்தாற்போல வழங்காதவதரிற் ரும் வருதலான் எனக்கு வருமிடுக்கணையுந் தாமே நீக்கினல்லது யானறிவதொன்றில்லை யென்னுங்கருத்தால், சுனைப்புனல்வீழ்ந்தன்றழுங்கப் பிடித்தெடுத்து வாங்குமவர்க்கென்ருள். ஆற்றின்கணேத நினைந்திரவுக்குறி மறுத்த தலைமகள் அவன்செய்த வுதவிநினைந்து பின்னுடம்பட்டாளாதல் பொருந்தாமையறிந்துகொள்க. இக்கருத்தேபற்றி யுதவிநினைந்து குறைநயந்ததென்னது அவனதாற்ருமை நிலைமைகேட்டுக் குறைநயந்ததென்ருர். அவன்செய்த பேருதவி சொல்லுகையால் அவன் செய்த வுதவிக்குக் கைம்மாருவது நானவனுழைச்சேறலே யென்றுடம்பாடாயிற்று. பிறவிக் குட்டத்தியான் விழுந்து கெடப்புகத் தாமேவந்து பிடித்தெடுத்து அதனினின்றும் வாங்கிய பேருதவியார்க்குச் சிறியேனாகிய யான்சொல்வதறியேனென்று வேறுமொரு பொருடோன்றியவாறு கண்டுகொள்க. மெய்ப்பாடு அழுகை. பயன் இரவுக்குறிநேர்தல். (கடுஅ)

## குறைநேர்ந்தமைகூறல்.

குறைநேர்ந்தமை கூறலென்பது தலைமகளைக் குறைநயப்பித்துத் தலைமகனுழைச்சென்று, இற்றையாமத்தெல்லாம் நின்னருண் மேனிற்கவேண்டித் துன்பமுற்றேன்; நீ கருதியதூஉமுடிந்ததெனத் தோழி தலைமகனுக்கு அவள்குறை நேர்ந்தமை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஏனற்பசுங்கதிரென்றூழ்க்கழியவெழிலியுன்னிக்
கானக்குறவர்கள்கம்பலைசெய்யும்வம்பார்சிலம்பா
யானிற்றையாமத்துநின்னருண்மேனிற்கலுற்றுச்சென்றேன்
றேனக்ககொன்றையன்றில்லையுரூர்செல்லுஞ்செல்லல்களே.

குறைநயந்தன ணெறிகுழலியென
எறிவேலண்ணற் கறியவுரைத்தது.

இ - ள். ஏனற் பசுங்கதிர் என்றூழ்க்கு அழிய - தினையினது பசியகதிர் கோடையாலழிய—எழிலி உன்னி - அஃதழியாமன் மழைபெறக் கருதி—கானக் குறவர்கள் கம்பலை செய்யும் வம்பு ஆர் சிலம்பா - கானத்துவாழுங் குறவர்கள் தெய்வத்திற்குப் பலி கொடுத் தாரவாரிக்கும் வம்பார்ந்த சிலம்பையுடையாய்—இற்றை யாமத்து யான் நின் அருண்மேல் நிற்கல் உற்று - இற்றையிரவின் கண் யான் நின்னேவன்மேனிற்கவேண்டி—தேன் நக்க கொன் றையன் தில்லை உரூர் செல்லும் செல்லல்கள் சென்றேன் - தேனோ டுமலர்ந்த கொன்றையையுடையானது தில்லையைப்பொருந்தாதா ரடையுந் துன்பத்தையடைந்தேன்; நீ கருதியதூஉமுடிந்தது. எ-று.

வம்பு காலமல்லாதகாலத்து மழை. யாமமுமென்பது பாடமாயிற் பகலேயன்றி யிரவுமெனவுரைக்க. யாமமுநின்னருளே என்பதூஉம் பாடம். கானக்குறவர்கள் தமக்குணவாகிய தினைக்கதிர் கோடையாலழியத் தெய்வத்தைப்பராவி மழைபெய்விக்க முயல்கின்றாற்போல, நினக்குத் துப்பாகிய இவணலம், அலர்முதலாயினவற்றாற் றொலையும்வழி அது தொலையாமன் முயன்று பாதுகாப்பாயென உள்ளுறையாமாறுகாண்க. மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகற்குக் குறைநயந்தமை யுணர்த்துதல். (கஙிகூ)

## வரவுணர்ந்துரைத்தல்.

வரவுணர்ந்துரைத்தலென்பது தலைமகனுக்குக் குறைநயப்புக் கூறியதோழி, யாம் விளையாடாநின்ற பொழிலிடத்து வேங்கைமே

லுண்டாகிய மயிலினமின்புற்றுத் துயில்பெயராநின்றன; இதற்குக் காரணமென்னோவென அவன்வரவறிந்து கூறுநிற்றல். அதற்குச் செய்யுள்—

**மூன்னுமொருவரிரும்பொழின்மூன்றற்குமுற்றுமிற்றாற்**
**பின்னுமொருவர்சிற்றம்பலத்தார்தரும்பேரருள்போற்**
**றுன்னுமொரின்பமென்றோகைதந்தோகைக்குச் சொல்லுவ**
**போன், மன்னுமரவத்தவாய்த்துயில்பேருமயிலினமே.**

வளமயிலெடுப்ப விளமயிற்பாங்கி
செருவேலண்ணல் வரவுரைத்தது.

இ - ள். இரும் பொழில் மூன்றற்கு முன்னும் ஒருவர் - பெரியவுலகங்கண் மூன்று முளவாதற்குமுன்னுந் தாமொருவருமே யாகியுள்ளார்—முற்றும் இற்றால் பின்னும் ஒருவர் - அவ்வுலகமுழுது மாய்ந்தாற் பின்னுந் தாமொருவருமேயாகியுள்ளார்—சிற்றம்பலத்தார் - சிற்றம்பலத்தின்கண்ணார்—தரும் பேரருள் போல் - அவர் தரும் பெரிய வருள்போல—ஒரு இன்பம் துன்னும் என்று தம் தோகைக்கு ஓகை சொல்லுவ போல் - இவ்வில்லின்கண் ஓரின்பம் வந்து பொருந்துமென்று தம்முடைய தோகைகட் கோகைசொல்லுவனபோல—மன்னும் அரவத்தவாய் மயில் இனம் துயில் பேரும் - இடைவிடாது நிகழு மாரவாரத்தையுடையவாய் மயிலினந் துயில்பெயராநின்றன; இஃதென்னோ! எ - று.

சிற்றம்பலத்தாரென்பதற்கு, உலகங்களுளவாய்ச் செல்லுங் காலத்துச் சிற்றம்பலத்தின் கண்ணாரென்றுரைப்பினு மமையும். தன்றோகைக்கென்பது பாடமாயிற் பன்மையொருமை மயக்கமாகக் கொள்க. ஒருகால்வெருவித் தாமே துயிலெழுந்துணையன்று; இஃதவன் செய்த குறியென்பது போதர, மன்னுமரவத்தவா யென்றாள். மெய்ப்பாடு அது. பயன் தலைமகன் வரவுணர்த்துதல். (கசுo)

## தாய்துயிலறிதல்.

தாய்துயிலறிதலென்பது தலைமகன் வரவுணர்ந்து தலைவியைக் கொண்டுசெல்லக் கருதாநின்றதோழி, யாம் விளையாடாநின்ற பொழிலிடத்து ஓர் யானை நின்று ஊசலைத்தள்ளாநின்றது; அதற்கி யாஞ் செய்வதென்னோவெனத் தாயது துயிலறியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**கூடாரரணெரிகூடக்கொடுஞ்சிலைகொண்டவண்டன்**
**சேடார்மதின்மல்லற்றில்லையன்னாய்சிறுகட்பெருவெண்**

கோடார்கரிகுருமாமணியூசலைக்கோப்பழித்துத்
தோடார்மதுமலர்நாகத்தைநூக்குநஞ்சூழ்பொழிற்கே.

ஊசன்மிசைவைத் தொள்ளமளியிற்
றூயதுதுயி றுணறிந்தது.

இ - ள். கூடார் அரண் எரி கூட - கூடாதாருடைய வரண்க
ளையெரிசென்றுகூட - கொடுஞ்சிலை கொண்ட அண்டன் சேடு
ஆர் மதில் மல்லல் தில்லை அன்னாய் - வளைந்த சிலையைக் கைக்கொ
ண்ட அண்டனது பெருமையார்ந்த மதிலையும் வளத்தையுமுடைய
தில்லையையொப்பாய்—சிறுகண் பெரு வெண் கோடு ஆர் கரி -
சிறியகண்ணையுடைய பெரிய வெண்கோடுநிரம்பிய யானை—நம்
சூழ் பொழிற்கு - நமது சூழ்பொழிற்கண்—குரு மா மணி ஊசலைக்
கோப்பு அழித்து - நிறத்தையுடைய வுயர்ந்தமணிகளாற் செய்யப்ப
ட்ட வூசலைச் சிரழித்து—தோடு ஆர் மதுமலர் நாகத்தை நூக்கும் -
இதழார்ந்த மதுமலர்களையுடைய அவ்வூசலைத்தொடுத்த நாகமர
த்தை நூக்காநின்றது; இதற்கென்செய்வேம்? எ - று.

சூழ்பொழிற்கென்னு நான்கனுருபு ஏழாவதன்பொருட்கண்
வந்தது. சூழ்பொழிலேயென்பதூஉம்பாடம். இவ்வாறு கூறவும்,
வாளாகிடப்பிற் றுய்துயின்றுளென்றறிதல் பயன். அலங்காரம்
பரியாயம். மெய்ப்பாடு அது. பயன் இடையீடாராய்தல். (கசுக)

## துயிலெடுத்துச்சேறல்.

துயிலெடுத்துச் சேறலென்பது தாய்துயிலறிந்ததோழி, குவ
ளைப்பூக்கண் மலராநின்றன; அவை நின்கண்ணை யொக்குமாயிற்
காண்பாயாகவெனத் துயிலெடுத்துச் செல்லாநிற்றல். அதற்குச்
செய்யுள்—

விண்ணுக்குமேல்வியன்பாதலக்கீழ்விரிநீருடுத்த
மண்ணுக்குநாப்பணயந்துதென்றில்லைநின்றோன்மிடற்றின்
வண்ணக்குவளைமலர்கின்றனசினவாண்மிளிர்நின்
கண்ணுக்குமேற்கண்டுகாண்வண்டுவாழுங்கருங்குழலே.

தாய்துயிலறிந் தாய்தருபவண்
மெல்லியற்குச் சொல்லியது.

இ - ள். வண்டு வாழும் கருங்குழல் - வண்டுகள்வாழுங் கரிய
குழலையுடையாய்—விண்ணுக்கு மேல் - எல்லாப்பொருட்கு மேலா
கிய விண்ணுக்கு மேலாயவன்—வியன் பாதலக் கீழ் - எல்லாப்

பொருட்கும் கீழாகிய அகன்றபாதாலத்திற்குங் கீழாயவன்—விரி நீர் உடுத்த மண்ணுக்கு நாப்பண் - நடுவாகிய கடலையுடுத்த மண்ணி ற்கு நடுவாயவன்—நயந்து தென் தில்லை நின்றோன் - விரும்பித் தென்றில்லைக்கணின்றோன்—மிடற்றின் வண்ணக் குவளை மலர் கின்றன - அவனது மிடற்றின் வண்ணத்தையுடைய குவளைப்பூக் கண் மலர்கின்றவை—சினை வாள் மிளிர் நின் கண் ஒக்குமேல் கண்டுகாண் - சினைவாண் மிளிருமாறுபோல மிளிருநின்கண்களை யொக்குமாயிற் காண்பாயாக. எ - று.

பாதாலம் பாதலமெனக் குறுகிநின்றது. மண்ணினுள்ளு முள்ளாதலின், மண்ணுக்கு நாப்பணென்றார். மண்முழுதுக்கு மிடைத் தில்லையைநயந்து அதன்கணின்றோனென் றுரைப்பாருமுளர். சினைவாண்மிளிர் நின்கண்ணொக்குமேலென்புழி ஒத்தபண்பு வேறுபட்டமையான் உவமைக்குவமையன்றென்க. கண்டுகாணென்பதொரு சொல். ஆய்தருபவள்-புறத்துக்கொடுபோ முபாயமாராய்பவள். மெய்ப்பாடு அது. பயன் தலைமகளைக் குறியிடத்துய்த்தல். அலங்காரம் புகழுவமை. (கசுஉ)

## இடத்துய்த்துநீங்கல்.

இடத்துய்த்து நீங்கலென்பது துயிலெடுத்துக்கொண்டு சென்று அக்குறியிடத்து நிறுத்தி, இவை நின்கண்கள் வென்ற குவளை மலர்; இவற்றைக்காண்பாயாக; யானின்குழற்குச் சந்தனத்தழை கொய்யாநின்றேனெனத் தான் சிறிதகலாநிற்றல். அதற்குச்செய்யுள்—

நந்தீவர மென்னுநாரணனாண்மலர்க்கண்ணிற்கெஃகந்
தந்தீவரன்புலியூரனையாய்தடங்கண்கடந்த
விந்தீவரமிவைகாணின்னிருள்சேர்குழற்கெழில்சேர்
சந்தீவரமுறியும்வெறிவீயுந்தருகுவனே.

மைத்தடங்கண்ணியை யுய்த்திடத்தொருபா
னீங்கலுற்ற பாங்கிபகர்ந்தது.

இ - ள். நந்தி வரம் என்னும் நாரணன் நாள் மலர்க் கண்ணிற்கு - கண்ணையிடந்திட்டு நந்தி வரந்தரவேண்டுமென்னு நாரணனது அந்நாண்மலர்போலுங் கண்ணிற்கு—எஃகம் தந்து ஈ வரன் புலியூர் அனையாய் - ஓரெஃகத்தைப் படைத்துக் கொடுத்த தலைவனது புலியூரையொப்பாய்—இவை தடங் கண் கடந்த இந்தீவரம் - இவை நின்பெரியகண்கள் கடந்த நீலங்கள்—காண் - இவற்றைக்

காண்பாயாக—நின் இருள் சேர் குழற்கு-நினது கருமைசேர்ந்த குழற்கு—சந்து ஈ எழில் சேர் வர முறியும் வெறி வீயும் தருகுவன்-சந்தனமரந்தரும் எழில்சேர்ந்த நல்லமுறிகளையும் நறுநாற்றத்தையுடைய மலர்களையும் யான்கொணர்ந்து தருவேன்; நீ நீலப்பூக்களையுங்கண்டு ஈண்டு நிற்பாயாக. எ - று.

நந்தியென்பது ஒரு திருநாமம். அனையாயுடைய தடங்கண்களென்றுரைப்பாருமுளர். இந்தீவரமிவை காணென்பதற்கு நின் கண்களைவென்ற இந்தீவரமாவண விவைகாணென்றுரைப்பினுமமையும். இது குறிப்பெச்சம். உய்த்திடத்து-இடத்துய்த்து. மெய்ப்பாடு அது. பயன் தலைமகளைக் குறியிடத்து நிறீஇநீங்குதல். (கசரு)

## தளர்வகன்றுரைத்தல்.

தளர்வகன்றுரைத்தலென்பது தோழி குறியிடைநிறுத்தி நீங்காநிற்ப, தலைமகனெதிர்ப்பட்டு, நும்முடைய கமலக்கோயில் கதிரவன் வருவதன்முன் நீரே திறந்துகொண்டோ போந்தது? இப்பொழிலிடைவந்து நயந்ததென்னோவெனத் தலைமகளைப் பெரும்பான்மைகூறித் தன்றளர்வு நீங்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

காமரைவென்றகண்ணோன்றில்லைப்பல்கதிரோனடைத்த
தாமரையில்லினிதழ்க்கதவந்திறந்தோதமியே
பாமரைமேகலைபற்றிச்சிலம்பொதுக்கிப்பையவே
நாமரையாமத்தென்னோவந்துவைகிநயந்ததுவே.

வடுவகிரனைய வரிநெடுங்கண்ணியைத்
தடுவரியன்பொடு தளர்வகன்றுரைத்தது.

இ - ள். காமரை வென்ற கண்ணோன் தில்லை - நிறையழிக்கவந்த காமனைவென்ற கண்ணையுடையவனது தில்லைக்கண்—பல்கதிரோன் அடைத்த தாமரை இல்லின் - பல்கதிரோனாகிய வாயிலோன் அடைத்துவைத்த தாமரையாகிய நும்மில்லின்கண்—இதழ்க் கதவம் திறந்தோ - இதழாகிய கதவத்தை அவ்வாயிலோன் வருவதன்முன் நீரே திறந்துகொண்டோ போந்தது? இதுகிடக்க—பாம் அரை மேகலை பற்றி - பரந்தவரையின்மேகலையை யொலியாமற்பிடித்து—சிலம்பு ஒதுக்கி - சிலம்புகளை மேலேறக் கடுக்கி—தமியே பைய அரையாமத்து நாம் வந்து வைகி நயந்தது என்னோ - தனியே பைய அரையாமத்தின்கண் நாம் ஈண்டுவந்து தங்கி விரும்பியதென்னோ? இதனைக்கூறுவீராமின். எ - று.

*காமரென்னும் ரகரவீறு இழிவின்கண் வந்தது. தில்லைத் தாமரையெனவியையும். கதவந் திறந்தோவென்னு மோகாரத்தை அசைநிலையாக்கி யுரைப்பாருமுளர். பாவுமென்னு மீற்றுமிசை உக ரம் மெய்யொடுங்கெட்டுக் காலமயக்கமாய் நின்றது. எல்லாரானுந் திருமகணயக்கப்படினல்லது திருமகடன்னு னயக்கப்படுவ தொன் றில்லை யென்னுங் கருத்தான், நாம் நயந்ததென்னோவென்றான். நாமென்னு முன்னிலை யுளப்பாட்டுத்தன்மை உயர்வுதோன்ற முன் னிலைக்கண் வந்தது. தடு தடுத்தல். அரியன்பு பரியரைபோலப் பண்புத்தொகையாய் நின்றது. தடையருமன்பென்று பாடமோது வாருமுளர். கண்ணியை யுரைத்ததெனவியையும். மெய்ப்பாடு உவ கை. பயன் தலைமகளைக்கண்டு தோன்றிய வுவகையைப் பரிக்கலா ற்றாத தலைமகனாற்றுதல்; தலைமகளை மகிழ்வித்தலுமாம். (கசுச)

## மருங்கணைதல்.

மருங்கணைதலென்பது பெரும்பான்மை கூறக்கேட்ட தலைம கள் பெருநாணினளாதலிற் றன்முன்னிற்கலாது நாணித் தலையி றைஞ்சி வருந்தாநிற்ப, சென்று சார்தலாகாமையிற் றனதாதரவுமி கவால் அவ்வருத்தந்தணிப்பான்போன்று,முலையொடுமுனிந்து,அவ ளிறுமருங்குருங்கிச் சென்றணையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

அகிலின்புகைவிம்மியாய்மலர்வேய்ந்தஞ்சனமெழுதத்
தகிலும்தனிவடம்பூட்டத்தகாள்சங்கரன்புலியூ
ரிகலுமவரிற்றளருமித்தேம்பலிடைஞெமியப்
புகிலுமிகவிங்ஙனனேயிறுமாக்கும்புணர்முலையே.

அன்புமிகுதியி னளவளாயவளைப்
பொன்புனைவேலோன் புகழ்ந்துரைத்தது.

இ - ள். அகிலின் புகை விம்மி ஆய் மலர் வேய்ந்து - குழற்க ணகிற்புகைவிம்ம ஆராயப்பட்ட மலர்களை வேய்ந்து—அஞ்சனம் எழுதத் தகிலும் - கண்மலர்க் கஞ்சனமெழுதத் தகுவளாயினும்—, தனிவடம் பூட்டத் தகாள் - ஒருதனிவடத்தைப் பூட்டத் தகுவா ளல்லள்—சங்கரன் புலியூர் இகலும் அவரின்-அதனைப் பூட்டுதலே யன்றி, சங்கரனது புலியூரின்பெருமையையுணராது அதனோடு மாறுபடுவாரைப்போல—தளரும் இத்தேம்பல் இடை ஞெமியப் புகிலும் - தளராநின்ற இத் தேய்தலையுடைய இடை நெரிந் தொடி யப்புகிலும்—புணர் முலை இங்ஙனே மிக இறுமாக்கும் - அதனையு ணராது இப்புணர்ந்த முலைகள் இவ்வண்ணமே மிகவும் விம்மாநி ன்றன; இஃதென்னைமுடியும்! எ - று.

தேம்பலிடை இருபெயர்ப்பண்புத் தொகையெனினுமமை யும். ஆய்மலராய்க்தென்பது பாடமாயின்,ஆராய்ந்து சூட்டியெனச் சூட்டுதலை ஆற்றலான் வருவித்துரைக்க. புகலுமென்பது பாடமா யிற் புகுதலுமெனவுரைக்க. பிறபாடமோதுவாருமுளர். அளவளா வென்பது மிகுதிக்கணிரட்டித்து வந்தது. அளாவென்பதனைச் செய்தென்னும் பொருட்டாக்கி அளவுதலைச் செய்தென்றுரைப்பாரு முளர். மெய்ப்பாடு அது. பயன் தலைமகளைச் சார்தல். (கசரு)

## முகங்கண்டுமகிழ்தல்.

முகங்கண்டு மகிழ்தலென்பது மருங்கணைவிறுதிக்கட் டலை மகளது முகமகிழ்ச்சிகண்டு, இவளும் யானும் மலருமதியுமெனத் தலைமகன்றன்னயப்புணர்த்தி மகிழாநிற்றல். அதற்குச்செய்யுள்—

அழுந்தேனரகத்தியானென்றிருப்பவந்தாண்டுகொண்ட
செழுந்தேன்றிகழ்பொழிற்றில்லைப்புறவிற்செறுவகத்த [ண்
கொழுந்தேன்மலர்வாய்க்குமுதமிவள்யான்குரூஉச்சுடர்கொ
டெழுந்தாங்கதுமலர்த்தும்முயர்வானத்திளமதியே.

முகையவிழ்குழலி முகமதிகண்டு
திகழ்வேலண்ணன் மகிழ்வுற்றது.

இ - ள். யான் நரகத்து அழுந்தேன் என்று இருப்ப-யானினி நரகத்திற் புக்கழுந்தேனென்று செம்மாந்திருக்கும்வண்ணம்— வந்து ஆண்டு கொண்ட செழுந்தேன் திகழ் பொழில் தில்லைப் புற வில் - தானேவந் தாண்டுகொண்ட செழுந்தேன் போல்வானது விளங்கும் பொழிலையுடைய தில்லையைச்சூழ்ந்த இளங்காட்டில்— செறுவகத்த கொழுந்தேன் மலர் வாய்க் குமுதம் இவள் - செய் யின் கண்ணவாகிய கொழுவியதேனையும் மலராநின்ற வாயையுமு டைய குமுதமலர் இவள்—யான் குரூஉச் சுடர் கொண்டு எழுந்து ஆங்கது மலர்த்தும் உயர் வானத்து இளமதி - யான் நிறத்தையு டைய நிலாவைக்கொண்டெழுந்து அக்குமுதத்தை மலர்த்தும் உய ர்ந்தவானத்தின்கட் டிகழும் முதிராமதி. எ - று.

நரகமென்றது ஈண்டுப்பிறவியை. வீடுபேற்றின்பத்தோடு சார் த்த நரகமுஞ் சுவர்க்கமுமொருநிகரனவாகலின், நரகமென்றார். ஆண்டுகொண்டானென்பது பாடமாயிற் செழுந்தேனைப் பொழி லின்மேலேற்றுக. செறு நீர்நிலையுமாம். வாய் முகம். மலர்வாய்க்கு முதமென்றது கிண்கிணிவாய்க்கொள்ளு நிலைமையை. அதனாலிவ ளதுபருவம் விளங்கும். குரூஉச்சுடர்கொண்டு மலர்த்துமெனக் கூட்டிக் குரூஉச்சுடரான் மலர்த்துமென் றுரைப்பினுமமையும்.

அதனால், தலைப்பெய்தமையானன்றிக் கண்டதுணையா னவண்மகி ழ்தலைக் கூறினாளும். இவ்வின்பம் வழிமுறையாற்பெருகுமென்பது போதர, இளமதியென்றான். மெய்ப்பாடு அது. பயன் நயப்புணர் த்துதல். (கசுசு)

## பள்ளியிடத்துய்த்தல்.

பள்ளியிடத்துய்த்தலென்பது மலர்மதிவேல்வைத்துக் கூறி மகிழ்வுற்றுப் பிரியலுறாநின்றவன், இப்பொழிலிடை யினித்தனியே நின்று நீலப்பூக்களைக் கொய்யாது, நின்னரியதோழியோடு ஆயத் திடைச்சென்று துயில்பயில்வாயெனத் தலைமகளைப் பள்ளியிடத் துச் செலுத்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சுரும்புறுநீலங்கொய்யற்றமிநின்றுதுயில்பயின்மோ, வரும் பெறற்றோழியொடாயத்துநாப்பணமரரொன்னா, ரிரும்புறு மாமதில்பொன்னிஞ்சிவெள்ளிப்புரிசையன்றோர்,துரும்புறச் செற்றகொற்றத்தெம்பிரான்றில்லைச்சூழ்பொழிற்கே.

பிரிவதுகருதிய பெருவரைநாட
னொள்ளிழைப்பாங்கியொடு பள்ளிகொள்கென்றது.

இ-ள். அமரர் ஒன்னார் இரும்பு உறு மா மதில் பொன் இஞ்சி வெள்ளிப் புரிசை - அமரர்க்குப் பகைவராயினாருடைய இரும்பு பொருந்திய பெரிய மதிலையுடையவூரும் பொன்னிஞ்சியையுடைய வூரும் வெள்ளிப்புரிசையையுடையவூரும்—அன்று ஓர் துரும்பு உறச் செற்ற கொற்றத்து எம்பிரான் தில்லைச் சூழ் பொழிற்கு - அன்று ஓர் துரும்பின்றன்மையையுற எரித்த வெற்றியையுடைய வெம்பிரானது தில்லைக்கட் சூழ்ந்த பொழிலிடத்து—தமி நின்று - தனியே நின்று—சுரும்பு உறு நீலம் கொய்யல் - சுரும்பு பொரு ந்து நீலப்பூக்களைக் கொய்யாதொழி—அரும் பெறல் தோழியொடு ஆயத்து நாப்பண் துயில் பயில் - அரிய பெறுதலையுடைய நின்றோ ழியோடு ஆயத்தினிடைத் துயிலைப்பயில்வாயாக. எ - று.

மோ அசை. சுரும்புறுநீலம் மேலாற்சுரும்புவந்து பொருந்து நீலமலர். எதிர்காலவினை. "மென்னனையாய் மறியேபறியேல்" * என்றதுபோலக்கொள்க. சூழ்பொழில் தில்லையைச்சூழ்ந்த பொ ழில். பொழிற்கென்பது வேற்றுமைமயக்கம். பொழிலேயென்ப தூஉம்பாடம். மெய்ப்பாடு பெருமிதம். பயன் புறத்தாரறியாமைப் பிரிதல். (கசுஎ)

* திருக்கோவையார். கஉ௫.

## வரவுவிலக்கல்.

வரவுவிலக்கலென்பது தோழி தலைமகளைப் பள்ளியிடத்துச் சேர்த்திச்சென்று, இக்கல்லதர் இவள் காரணமாக நினக்கெளிதாயிற்று; ஆயினும் இனியிவ்வாறொழுகற்பாலையல்லையென வரைவுபயப்பக்கூறித் தலைமகனை வரவுவிலக்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

**நற்பகற்சோமனெரிதருநாட்டத்தன்றில்லையன்ன**
**விற்பகைத்தோங்கும்புருவத்திவளின்மெய்யேயெளிதே**
**வெற்பகச்சோலையின்வேய்வளர்தீச்சென்றுவிண்ணினின்ற**
**கற்பகச்சோலைகதுவுங்கன்னாடவிக்கல்லதரே.**

தெய்வமன்னனைத் திருந்தமளிசேர்த்தி
மைவரைநாடனை வரவுவிலக்கியது.

இ - ள். வெற்பகச் சோலையின் வேய் வளர் தீ - வெற்பிடத்துச் சோலையின்கணுண்டாகிய வேய்க்கட் பிறந்துவளருந்தீ—விண்ணின் நின்ற கற்பகச் சோலை சென்று கதுவும் கல் நாட - விண்ணின்கணின்ற கற்பகச்சோலையைச் சென்று பற்று மலைநாடனே — இக் கல் அதர் - இக்கல்லையுடைய சிறுநெறி—நல் பகல் சோமன் எரி தரு நாட்டத்தன் தில்லை அன்ன - நல்லஞாயிறுந் திங்களுந் தீயுமுண்டாக்கிய மூன்று நாட்டத்தையுமுடையவனது தில்லையொக்கும்—வில் பகைத்து ஓங்கும் புருவத்து இவளின் - வில்லைப் பகைத்து அதனின்மிகும் புருவத்தையுடைய இவள்காரணமாக—மெய்யே எளிது - மெய்யாக வெளிதாயிற்று; ஆயினும், இனிநீ வரற்பாலையல்லை. எ - று.

செவ்வெண்ணின்றொகை விகாரவகையாற் றொக்குநின்றது. உம்மைத்தொகை யெனினுமமையும். தில்லையன்னவிவளென வியையும். இவளின்மெய்யே யெளிதேயென்பதற்கு இவள் காரணமாக வெளிதாமோ எளிதன்றெனை வெதிர்மறையாக்கி யுரைப்பினுமமையும். வேயிற்பிறந்ததீ ஆண்டடங்காதுசென்று தேவருலகத்தினின்ற கற்பகச்சோலையைக் கதுவினாற்போல நின்வரவினால் அயலாரிடத்துப்பிறந்த அலர்பெருகி நின்னூருமறியப் பரந்து நின் பெருமையைச் சிதைக்குமெனை உள்ளுறைவகையான் அலரறிவுறுத்தவாறு கண்டுகொள்க. இவனுக்குப் பெருமையாவது இவன் வழியிற் பிதிர்கள் கொண்டாட்டம். சிதைத்தலாவது இகலோக பரலோக மிரண்டையுஞ் சிதைத்தல். மூங்கிலிற்பிறந்ததீத் தன்னை

யுஞ்சுட்டு தன்னுடைய சுற்றத்தையுஞ் சுட்டுக் கற்பகச்சோலையைக் கதுவினாற்போல வென்க. கற்பகற்சோமன் விகாரவகையான் வலிந்துநின்றது. மெய்ப்பாடு அச்சம். பயன் வரவுவிலக்கி வரைவு கடாதல். (கசுஅ)

## ஆற்றாதுரைத்தல்.

ஆற்றாதுரைத்தலென்பது வரைவுகடாவி வரவுவிலக்கின தோழிக்கு வரைவுடம்படாது, பின்னுங் களவொழுக்கம்வேண்டி, யான் முன்செய்த தவப்பயனால் எனக்கெய்தலாம்வண்ணந் திருமகளிவ்வாறு கொடிச்சியாயிருந்தாளெனக் கருதியே எனதின்னுயிர் நிற்பது; இத்தன்மையாளை யான்வரையுந் துணையெளியளாக நீ கூறுகின்றதென்னெனத் தலைமகன் றனதாற்றாமைதோன்றக் கூறி நிற்றல். அதற்குச்செய்யுள்—

பைவாயரவரையம்பலத்தெம்பரன்பைங்கயிலைச் [யை
செவ்வாய்க்கருங்கட்பெரும்பணைத்தோட் சிற்றிடைக்கொடி
மொய்வார்கமலத்துமுற்றிழையின்றென்முன்னைத்தவத்தா
லிவ்வாறிருக்குமென்றேநிற்பதென்றுமென்னின்னுயிரே.

வரைவுகடாய வாணுதற்றோழிக்
கருவரைநாட னாற்றாதுரைத்தது.

இ - ள். பை வாய் அரவு அரை - படத்தையும் பெரியவாயை யுமுடைய அரவையணிந்த வரையையுடைய—அம்பலத்து எம் பரன் பைங் கயிலை - அம்பலத்தின்கணுள்ளானாகிய எம்முடைய பரனது சோலையாற் பசிய கைலைக்கணுள்ளாகிய—செவ்வாய்க் கருங் கண் பெரும்பணைத் தோள் சிற்றிடைக் கொடியை—செய்யவாயையுங் கரியகண்ணையும் பெரியபணைபோலுந் தோள்களையுஞ் சிறியவிடையையுமுடைய கொடிபோல்வாளை—மொய் வார் கமலத்து முற்றிழை - பெரியதாகிய தாளானெடிய கமலத்துவாழுந் திருமகளாகிய முற்றிழை—என் முன்னைத் தவத்தால் - முற்பிறப்பின் கணுண்டாகிய எனது தவப்பயனால்—இன்று இவ்வாறு இருக்கும் என்றே - எனக்கெய்தலாம்வண்ணம் இன்றிவ்வாறு கொடிச்சியாயிருக்குமென்று கருதியே—என் இன் உயிர் என்றும் நிற்பது - என்னின்னுயிர் என்றும் நிற்பது; இத்தன்மையாளை யான்வரையுந் துணையெளியளாக நீ கூறுகின்றதென்! எ - று.

எம்பரனென்பதற்கு முன்னுரைத்ததுரைக்க. கைலைக்கொடியெனவிளையும். கொடியையென்னு மிரண்டாவது என்று கருதி

யென வெஞ்சிகின்ற வினையொடு முடியும். மெய்ப்பாடு உவகை. பயன் வரைவுடம்படாமை. (கசுகூ)

## இரக்கங்கூறிவரைவுகடாதல்.

இரக்கங்கூறி வரைவுகடாதலென்பது களவுவிரும்பி வரைவுடம்படாத தலைமகனுக்கு, நீ செல்லுநெறிக்கண் நினக்கிடையூறுண்டாமென்னு மச்சத்தால் அவளழுதிரங்கா நின்றாளென்று, நீ சென்றமையறிய நின்குறி காட்டுவாயெனத் தலைமகளிரக்கங் கூறி வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**பைவாயரவுமறியுமழுவும்பயின்மலர்க்கை**
**மொய்வார்சடைமுடிமுன்னவன்றில்லையின்முன்னினக்காற்**
**செவ்வாய்கருவயிர்ச்சேர்த்திச்சிறியாள்பெருமலர்க்கண்**
**மைவார்குவளைவிடுமன்னநீண்முத்தமாலைகளே.**

அதிர்கழலவ னகன்றவழி
யெதிர்வதறியா திரங்கியுரைத்தது.

இ - ள். மன்ன - மன்னனே—இச் சிறியாள் பெரு மலர்க்கண் மை வார் குவளை - நீ செல்லுநெறிக்கண் நினக்கிடையூறுண்டாமென்னு மச்சத்தால் இச்சிறியாளுடைய பெரியமலர்போலுங் கண்களாகிய கருமையையுடைய நெடியகுவளைகள்—நீள் முத்த மாலைகள் விடும்-நீண்ட முத்தமாலைகளைப் புறப்படவிடாநிற்கும், அதனான் நினக்கிடையூறின்மையை யிவளறிய—தில்லையின் முன்னினக் கால்-நின்பதியாகிய தில்லையெல்லையிற் சென்றுகிட்டிஞல்— செவ்வாய் கரு வயிர்ச் சேர்த்து - நின்செவ்வாயைக் கரியகொம்பின்கட் சேர்த்தி யூதவேண்டும். எ - று.

பை வாய் அரவும் மறியும் மழுவும் பயில் - படத்தையும் பெரியவாயையுமுடைய அரவும் மான்மறியும் மழுவாளும் விடாது நிகழும்—மலர்க் கை மொய் வார் சடை முடி முன்னவன் தில்லை - மலர்போலுங் கையையும் நெருங்கிய நெடியசடைகளானியன்ற முடியையுமுடைய எல்லாப்பொருட்கு முன்னுயவனது தில்லையெனக்கூட்டுக.

குறிஞ்சிநிலத்திற்குரியமக்கள் கோலத்தனுய் வருமாதலின், வயிர் கூறப்பட்டது. மலர்க்கணென்பது உவமை கருதாது கண்ணென்னுந் துணையாய்நின்றது. கண்ணுகிய குவளைப்பெருமலரென்று கூட்டுவாரும் மலர்தலையுடைய கண்ணென்பாருமுளர். மெய்ப்பாடு அச்சம். பயன் வரைவுகடாதல். **(கஎ0)**

## நிலவுவெளிப்படவருந்தல்.

நிலவு வெளிப்பட வருந்தலென்பது இரக்கங்கூறி வரைவு கடாயதோழி, பிற்றைஞான்று அவனிரவுக்குறியிடை வந்துநிற்ப, நிலவு வெளிப்பாட்டாற் சென்றெதிர்ப்படமாட்டாமற் றாங்கள் வருந்தாநின்றமை சிறைப்புறமாக மதியொடு புலந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

நாகந்தொழவெழிலம்பலநண்ணிநடநவில்வோ
ஞகமிதுமதியேமதியேநவில்வேற்கையெங்க
ணாகம்வரவெதிர்நாங்கொள்ளுநள்ளிருள்வாய்நறவார்
நாகமலிபொழில்வாயெழில்வாய்த்தநின்னுயகமே.

தனிவேலவற்குத் தந்தளர்வறியப்
பனிமதிவிளக்கம் பாங்கிபகர்ந்தது.

இ - ள். நவில் வேற் கை எங்கள் நாகம் வர - பயிலப்பட்ட வேலையேந்திய கையையுடைய எங்கள் யானைவர—நாம் எதிர் கொள்ளும் நள் இருள்வாய்—நாங்களெதிர்கொள்ளுஞ் செறிந்த விருளிடத்து—நற ஆர் நாகம் மலி பொழில்வாய் எழில் வாய்த்த நின் நாயகம் - அவ்விருளைச் சிதைத்துத் தேனூர்ந்த நாகமலர் மலிந்த பொழிலிடத்துநின்று நீசெய்கின்ற அழகுவாய்த்த நினதுமுதன்மை—மதியே - திங்காள்—மதியே - நினக்கறிவே— நாகம் தொழ எழில் அம்பலம் நண்ணி நடம் நவில்வோன் நாகம் இது - பதஞ்சலியாகிய நாகந்தொழ எழிலையுடைய வம்பலத்தை நண்ணிக் கூத்தைப்பயில்வானது மலைகாணிஃது; இதனைக் கடைப்பிடிப்பாயாக. எ - று.

நாகத்தான் விழுங்கப்படுநீ நாகந்தொழவம்பலத்து நடம் பயில்வோனது மலைக்கட்புகுந்து விளங்கி வீற்றிருத்தல் நினக்கு நன்றி பயவாதென்பது கருத்து. அறிவென்பது ஈண்டறிந்து செய்யப்படும் காரியத்தை. தனிநாயகமென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு வெகுளி. பயன் இடையீடறிவித்தல். (௧௭௧)

## அல்லகுறியறிவித்தல்.

அல்லகுறி யறிவித்தலென்பது குறியல்லாத குறி யெதிர்ப்பட்டு மீண்டமை,பிற்றைஞான்று தலைமகன் சிறைப்புறம் வந்துநிற்ப, தோழி தலைமகளுக்குக் கூறுவாள்போன்று, அன்னத்தின்மேல் வைத்து அறிவியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மின்னங்கலருஞ்சடைமுடியோன்வியன் றில்லையன்ன
யென்னங்கலமரலெய்தியதோவெழின்முத்தந்தொத்திப்
பொன்னங்கலர்புன்னைச்சேக்கையின்வாய்ப்புலம்புற்றுமுற்று
மன்னம்புலருமளவுந்துயிலாதழுங்கினவே.

வல்வியன்னவ ளல்லகுறிப்பா
டறைப்புனற்றுறைவற்குச் சிறைப்புறத்துரைத்தது.

இ - ள். மின் அங்கு அலரும் சடைமுடியோன் வியன் தில்லை அன்னாய் - ஒளி யவ்விடத்துவிரியுஞ் சடையாணியன்ற முடியையுடையவனது அகன்ற தில்லையையொப்பாய்—எழில் முத்தம் தொத்தி - எழிலையுடைய அரும்பாகிய முத்தந்தொத்தி—அங்கு பொன் அலர் புன்னைச் சேக்கையின்வாய்-அவ்விடத்துத் தாதாகிய பொன் மலரும் புன்னைக்கணுண்டாகிய தஞ்சேக்கையிடத்து—அன்னம் முற்றும் புலம்புற்றுப் புலரும் அளவும் துயிலாது அழுங்கின - அன்னமெல்லாம் துன்புற்றுப் புலருமளவுந் துயிலாது ஆரவாரித்தன—அங்கு எய்தியது அலமரல் என் - அவ்விடத்தெய்தியதாகிய அலமரலென்னோம்? அறிகின்றிலேன். எ - று.

மின்னங்கலருமென்பதற்கு மின்னவ்விடத்தலர்ந்தாற் போலுஞ் சடையெனினுமமையும். என்னங்கலமரலெய்தியதோ வென்பதற்கு என்னவலமரலாண்டெய்திற்றோ வென்று கூட்டியுரைப்பினுமமையும். இப்பொருட்கு என்னவென்பது கடைக்குறைந்து நின்றது. முத்தந்தொத்துதலும் பொன்மலர்தலுமாகிய உறுப்பின் றெழில் முதன்மேலேறிநின்றன. சேக்கையின்வாயழுங்கினவென வியையும். நெடும்பொழுது துயின்றிலவென்பாள் புலருமளவுமென்றாள். பிறைதொன்று பகற்குறிவந்துநிற்பக் கூறினாளெனினுமமையும். அழுங்கல் இரக்கமெனினுமமையும். அறைப்புனல்-அறைதலையுடைய புனல். மெய்ப்பாடு அழுகை. பயன் அல்லகுறிப்பட்டமை தலைமகற்குணர்த்துதல். இனித் திணைநெய்தல். (கஎ௨)

## கடலிடைவைத்துத்துயரறிவித்தல்.

கடலிடைவைத்துத் துயரறிவித்தலென்பது தலைமகளிரவுறு துயரம், தலைமகன் சிறைப்புறமாக, இவள்வாட நீ யிரையாநின்றாய்; இது நினக்கு நன்றோவெனத் தோழி கடலொடுபுலந்து கூறா நிற்றல். அதற்குச்செய்யுள்—

சோத்துன்னடியமென்றோரைக்குழுமித்தொல்வானவர்சூழ்
ந், தேத்தும்படிநிற்பவன் றில்லையன்னாளிவடுவள

வார்த்துன்னமிழ்துந்திருவுமதியுமிழந்தவநீ
பேர்த்துமிரைப்பொழியாய்பழிநோக்காய்பெருங்கடலே.

ஏறிகடன்மேல்வைத் திரவருதுயரம்
அறைகழலவற் கறியவுரைத்தது.

இ - ள். பெருங்கடலே-பெருங்கடலே—ஆர்த்து உன் அமிழ்தும் திருவும் மதியும் இழந்து-முற்காலத்து மிவ்வாறொலித்து உன்னமிர்தத்தையுந் திருவையுந் திங்களையுமிழந்துவைத்தும்—நீ பேர்த்தும் அவம் இவள் துவள இரைப்பு ஒழியாய் - பெயர்த்து மொருபயனின்றியே இவள்வாட இரையாநின்றாய்—பழி நோக்காய் - காரணமின்றிப் பிறரை வருத்துதலான் வரும்பழியையு நோக்குகின்றிலை; நினக்கிதுநன்றோ? எ - று.

சோத்து உன் அடியம் என்றோரை - சோத்தம் உன்னடியமென்றொருகாற் சொன்னோரை—தொல் வானவர் குழுமிச் சூழ்ந்து ஏத்தும்படி நிற்பவன் தில்லை அன்னாள் இவள் - பழையராகிய வானவர் குழுமிப் பரிவாரமாய்ச் சூழ்ந்துநின் றேத்தும்வண்ணம் நிற்குமவனது தில்லையன்னாளாகிய இவளெனக்கூட்டுக.

சோத்தம் இழிந்தார்செய்யு மஞ்சலி;அது சோத்தெனக்கடைக்குறைந்து நின்றது. சோத்தமடியமென்பதூஉம், அடியமெனிற் குழுமித் தொல்லை வானவ ரென்பதூஉம், குழீஇத்தொல்லை வானவர்சூழ்ந் தேத்தும்படிவைப்பவனென்பதூஉம் பாடம். திருவு மதியு மென்பது செல்வமு மறிவுமென வேறுமொருபொருடோன்ற நின்றதென்பாருமுளர். இரா குறுகின்றது. மெய்ப்பாடும் பயனும் அவை. (௧௭௩)

## காமமிக்ககழிபடர்கிளவி.

காமமிக்க கழிபடர்கிளவியென்பது தலைமகனைக் காணலுற்று வருந்தாநின்ற தலைமகள், தனது வேட்கைமிகவாற் கேளாதனவற்றைக் கேட்பனவாக விளித்து, நீங்கள் என்னை எதுற்றழிகின்றாயென்று ஒருகால் வினவுகின்றிலீர்;இதுவோ நுங்காதன்மையெனா அவற்றொடு புலந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

மாதுற்றமேனிவரையுற்றவில்லிதில்லைநகர்சூழ்
போதுற்றபூம்பொழில்காள்கழிகாளெழிற்புள்ளினங்கா
ளேதுற்றழிதியென்னீர்மன்னுமீர்ந்துறைவர்க்கிவளோ
தீதுற்றதென்னுக்கென்னீரிதுவோநன்மைசெப்புமினே.

தாமமிக்க தாழ்குழலேழை
காமமிக்க கழிபடர்கிளவி.

இ - ள். மாது உற்ற மேனி வரை உற்ற வில்லி தில்லைநகர் சூழ் - மாதுபொருந்திய மேனியையுடைய வரையாகிய மிக்கவில்லை யுடையவனது தில்லைநகரைச்சூழ்ந்த—போது உற்ற பூம்பொழில்காள் - போதுபொருந்திய மலரினையுடைய பொழில்காள்—கழிகாள் - அப்பொழிலைச்சூழ்ந்த கழிகாள்—எழிற் புள்ளினங்காள் - அக்கழிகளிற்பயிலு மெழிலையுடைய புள்ளினங்காள்—ஏது உற்று அழிதி என்னிர் - என்னை நீங்கள் யாதனையுற்றழிகின்றாயென்று ஒருகாற் கூறுகின்றிலீர்—ஈர்ந்துறைவர்க்கு இவள் தீது உற்றது என்னுக்கு என்னீர் - குளிர்ந்த துறைவர்க்கு இவள் தீதுற்றதெற்றிற்கென்று கூறுகின்றிலீர்—இதுவோ நன்மை - இதுவோ நம்மாட்டு நுங்காதன்மை—செப்புமின் - சொல்லுமின். எ - று.

மாதுற்ற மேனியென்பது ஆகுபெயராய் மேனியையுடையான்மே னின்றதெனினுமமையும். வரையுற்றவில்லி யென்பதற்கு வரைத்தன்மையைப் பொருந்திய வில்லையுடையானெனினு மமையும். வரைத்தன்மையைப் பொருந்துதல் வரையாயிருத்தல். போது பேரரும்பு. மன்னுமென்பதூஉம் இவளோவென்னு மோகாரமும் அசைநிலை. மன்னுந் தீதுற்றதெனக்கூட்டி மிகுதிக்கண் வந்ததென் பாருமுளர். இதுவோ நன்மையென்பதற்குத் தில்லையைச் சூழ்ந்தவிடத்துள்ளீராகலின் உமக்குண்டாகிய சிறப்புடைமை யிதுவோவெனினுமமையும். அழுதியென்பதூஉம் பாடம். ஏழையதுகிளவியென வியையும். (கஎச)

## காப்புச்சிறைமிக்ககையறுகிளவி.

காப்புச்சிறைமிக்க கையறுகிளவியென்பது காமமிக்கெதிர்ப்பட விரும்பாநின்ற தலைமகள், இவ்விடையீடெல்லா நீந்தி ஒருவழியான் வந்தாராயினும் இஞ்ஞாளி குரைதரா நின்றமையின் யாமிவரை யெதிர்ப்படுதலரிதெனக் காப்புச்சிறைமிக்கு வருந்தா நிற்றல். அதற்குச்செய்யுள்—

**இன்னறவார்பொழிற்றில்லைநகரிறைசீர்விழவிற்**
**பன்னிறமாலைத்தொகைபகலாம்பல்விளக்கிருளின்**
**றுன்னறவுய்க்குமில்லோருந்துயிலிற்றுறைவர்மிக்க**
**கொன்னிறவேலொடுவந்திடின்ஞாளிகுரைதருமே.**

மெய்யுறு காவலிற்
கையறு கிளவி.

இ - ள். இன் நறவு ஆர் பொழில் தில்லைநகர் இறை சீர் விழவில் - இனிய நறவார்ந்த பொழிலையுடைய தில்லைநகர்க்கிறைவனுடையவனது சீரையுடைய விழவின்கண்—பல் நிற மாலைத் தொகை பகலாம் - மாணிக்கமுதலாயினவற்றாற் பலநிறத்தையுடையவாகிய மாலைகளின்றொகைகளான் இராப்பொழுதும் பகலாகாநிற்கும்—பல் விளக்கு இருளின் துன் அற உய்க்கும் - அதுவேயுமன்றிப் பலவாகிய விளக்கு இருளின் பொருந்துதலறத் துரக்கும்—இல்லோரும் துயிலின் - இவ்விடையீடேயன்றி ஒருபொழுதும் துயிலாத இல்லோரு மொருகாற்றுயில்வராயின்—துறைவர் கொன் மிக்க நிற வேலொடு வந்திடின்-துறைவர் அச்சத்தைச்செய்யு மிக்க நிறத்தையுடைய வேலோடொருகால் வருவராயின்—ஞாளி குரை தரும் - அப்பொழுது நாய்குரையாநிற்கும்; அதனால், அவரைநாமெதிர்ப்படுதலரிதுபோலும். எ - று.

மாலைத்தொகையும் இராப் பகலாகாநிற்கும் பல்விளக்கும் இருளைத் துரக்குமென் றுரைப்பினுமமையும். இல்லோருந் துயிலினென்றதனான், அதுவுமோரிடையீடு கூறப்பட்டதாம். மிக்கவேலென்றியைப்பினுமமையும். மெய்யுறுகாவல்-பிழையாத மிக்ககாவல். இவையிரண்டற்கும் மெய்ப்பாடு அழுகை. இவற்றைத் தலைமகன் கேட்பின் வரைவானும்; தோழி கேட்பின் வரைவுகடாவுவாளாம்; யாருங் கேட்பாரில்லையாயின் அயர்வுயிர்த்துத் தானே ஆற்றுதல் பயன். (களரு)

## ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி.

ஆறுபார்த்துற்றவச்சக்கிளவியென்பது சிறைப்புறமாகத் தலைமகள் ஆற்றாமை கூறக்கேட்ட தலைமகன், குறியிடைச்சென்று நிற்ப, தோழி யெதிர்ப்பட்டு, நீகான்யாறுபலவு நீந்திக் கைவேல்துணையாக அஞ்சாது வந்தால், யாங்களிச்சோலையிடத் துண்டாகிய தெய்வத்துக்கஞ்சுவேம்; அதனாலிவ்விருளிடை வரற்பாலையல்லையெனத் தங்களச்சங்கூறி வரவுவிலக்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

**தாருறுகொன்றையன் றில்லைச்சடைமுடியோன்கயிலை**
**நீருறுகான்யாறளவிலநீந்திவந்தானினது**
**போருறுவேல்வயப்பொங்குருமஞ்சுகமஞ்சிவருஞ்**
**சூருறுசோலையின்வாய்வரற்பாற்றன் றுதூங்கிருளே.**

நாறுவார்குழ னவ்விநோக்கி
யாறுபார்த்துற்ற வச்சக்கிளவி.

இ - ள். தார் உறு கொன்றையன் - தாராகிய மிக்க கொன்றையையுடையவன்—தில்லைச் சடைமுடியோன் - தில்லைக்கணுளனாகிய சடையானியன்ற முடியையுடையவன்—கயிலை நீர் உறு கான் யாறு அளவில நீந்தி வந்தால் - அவனது கைலையின் நீரான் மிக்க கான்யாறுகளெண்ணிறந்தனவற்றை நீந்திவந்தால்—வயப் பொங்கு உரும் நினது போர் உறு வேல் அஞ்சுக - அவ்விடத்து வலியையுடைய பொங்குமிடியேறு நினதுபோர்மிக்க வேலையஞ்சி நின்பால் வாராதொழிக—மஞ்சு இவரும் சூர் உறு சோலையின் வாய் தூங்கு இருள் வரற்பாற்று அன்று - ஆயினும் மஞ்சுபரக்குந் தெய்வம்பொருந்துஞ் சோலையிடத்துச் செறிந்தவிருட்கண் வரும்பான்மைத்தன்று; அத்தெய்வங்களை யாமஞ்சுதும். எ - று.

தாருறை கொன்றையனென்பது பாடமாயின், தார்தங்கு கொன்றையனென முதலாகிய தன்பொருட்கேற்ற வடையடுத்து நின்றதாகவுரைக்க. இப்பாடத்திற்கு ஏனைமூன்றடியும் உறையென்றே முடிப. வரற்பாற்றன்றென்பது வினைமேனின்றது. நவ்விநோக்கியது கிளவியென வியையும். மெய்ப்பாடு அச்சம். பயன் வரைவு கடாதல். (கஎசு)

## தன்னுட்கையாறெய்திடுகிளவி.

தன்னுட்கையாறெய்திடுகிளவியென்பது தலைமகனைக் காணலுற்று வருந்தாநின்ற தலைமகள், இக்கண்டல் சான்றாகக்கொண்டு இப்புன்னையிடத்துக் கலந்த கள்வரை இவ்விடத்து வரக்கண்டிலையோ? துணையில்லாதேற்கு ஒருசொல்லருளாயென்று, தன்னுட்கையாற்றை மதியொடுகூறி விளாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**விண்டலையாவர்க்கும்வேந்தர்வண்டில்லைமெல்லங்கழிசூழ்**
**கண்டலையேகரியாக்கன்னிப்புன்னைக்கலந்தகள்வர் ।**
**கண்டிலையேவரக்கங்குலெல்லாமங்குல்வாய்விளக்கு**
**மண்டலமேபணியாய்தமியேற்கொருவாசகமே.**

மின்னுப்புரையு மருண்மருங்கு
றன்னுட்கையா றெய்திடுகிளவி.

இ - ள். கங்குல் எல்லாம் மங்குல் வாய் விளக்கும் மண்டலமே - கங்குன்முழுது மாகாயத்திடத்தை விளக்குமண்டலமே—விண் தலை யாவர்க்கும் வேந்தர் வண் தில்லை - விண்ணிடத்துள்ளாராகிய வெல்லார்க்கும் வேந்தராயுள்ளாரது வளவிய தில்லைவரைப்பின்—மெல்லங் கழி சூழ் கண்டலே கரியா - மெல்லிய கழிசூழ்ந்த

கண்டலேசான்ருக—கன்னிப் புன்னைக் கலந்த கள்வர் - இளைய புன்னைக்கண் என்னைக்கலந்தகள்வர்—வரக் கண்டிலேயே - ஒரு கால்வரக் கண்டிலேயோ—தமியேற்கு ஒரு வாசகம் பணியாய் - துணையில்லாதேற் கொருசொல் லருளாய். எ - று.

மெல்லங்கழியென்பதூஉமொரு பண்புத்தொகை முடிபு. மென்மை நிலத்தின் மென்மை. கழிசூழ்புன்னையெனக் கூட்டுக. கண்டலையென்னு மைகாரம் அசைநிலை. கரியாகக்கொண்டெனவொரு சொல் வருவித்து இரண்டாவதாக வுரைப்பினு மமையும். எஞ்ஞான்று மனத்ததொன்ருகத் தாமொன்று மொழிந்தாரென்னுங் கருத்தாற் கள்வரென்ருள். கள்வர்க்கண்டிலேயே யென்பது பாடமாயின் உருபுவிரிக்க. கங்குலெல்லாங் கண்டிலேயேயென்று கூட்டியுரைப்பினுமமையும். கண்டேகூறுகின்றிலையென்னு முணர்வினளாகலின், எய்திடுகிளவியாயிற்று. அந்நுண்மருங்குல்கிளவியென்றியையும். மெய்ப்பாடு அழுகை. பயன் அயர்வுயிர்த்தல். (கஎஎ)

## நிலைகண்டுரைத்தல்.

நிலைகண்டுரைத்தலென்பது தலைமகள் தன்னுட்கையாற்றைமதியொடுகூறி வருந்தாநின்றமை சிறைப்புறமாகக்கேட்ட தலைமகன், ஆற்ருமையான் இல்வரைப்பின்கட் புகுந்துநிற்ப, தோழியெதிர்ப்பட்டு, நீயிவ்வா றில்வரைப்பின்கட் புகுந்துநின்ருற் கண்டவர் நின்னைப் பெரும்பான்மை நினையாது மற்ருென்று நினைப்பராயின் அவளுயிர்வாழ வல்லளோ? இனியிவ்வாருெழுகற்பாலையல்லையென வரைவுதோன்றக் கூருநிற்றல். அதற்குச்செய்யுள்—

பற்ருென்றிலார்பற்றுந்தில்லைப்பரன்பரங்குன்றினின்ற
புற்ருென்றரவன்புதல்வனெனநீபுகுந்துநின்ருன்
மற்றுன்றுமாமலரிட்டுன்னைவாழ்த்திவந்தித்தலன்றி
மற்ருென்றுசிந்திப்பரேல்வல்லளோமங்கைவாழ்வகையே.

நின்னினழிந்தனண் மின்னிடைமாதென
வரைவுதோன்ற வுரைசெய்தது.

இ - ள். பற்று ஒன்று இலார் பற்றும் - துறக்கப்படுவனவற்றின்மேற் பற்ருென்றுமில்லாதவர்கள் அறிந்து பற்றும்—தில்லைப் பரன் பரங்குன்றில் நின்ற - தில்லைக்கணுளனுகிய பரனது பரங்குன்றின்கணின்ற—புற்று ஒன்று அரவன் புதல்வன் என - அப்புற்ருென்றரவனுடைய புதல்வனுகிய முருகவேளைப்போல—நீ புகுந்து நின்ருல் - நீ யில்வரைப்பிற் புகுந்துநின்ருல்—மல் துன்று மாமலர் இட்டு உன்னை வாழ்த்தி வந்தித்தல் அன்றி - கண்டவர்கள்

இந்நிலத்திற்குரியனாகிய முருகனென்றுகருதி வளத்தையுடைய நெருங்கிய பெரியமலர்களை யிட்டுவாழ்த்தி நின்னை வணங்காதே— மற்று ஒன்று சிந்திப்பரேல் - பிறிதொன்றை நினைவராயின்— மங்கை வாழ் வகை வல்லளோ - மங்கை யுயிர்வாழும்வகை வல்லளோ? அதனாலிவ்வாறொழுகற்பாலையல்லை. எ - று.

பரங்குன்றினின்ற புதல்வனென விளையும். மல்லல் கடைக்குறைந்து நின்றது. மற்றொன்று சிந்தித்தல் இவள்காரணமாக வந்தானென்று கருதுதல். முருகனென்றலே பெரும்பான்மையாகலின், உண்மையுணர்தலை மற்றொன்றென்றாள். ஏதஞ்செய்யக் கருதுதலென்பாருமுளர். மெய்ப்பாடு அச்சம். பயன் வரைவுகடாதல்.

## இரவுறுதுயரங்கடலொடுசேர்த்தல்.

இரவுறுதுயரங் கடலொடுசேர்த்தலென்பது தலைமகனை யெதிர்ப்படமாட்டாது வருந்தாநின்ற தலைமகள், இற்றையிரவெல்லாம் என்னைப்போல நீயுந் துன்பமுற்றுக் கலங்கித் தெளிகின்றிலை; இவ்விடத்து நின்னையுமகன்று சென்றாருளரோவெனத் தானுறு துயரங் கடலொடுசேர்த்திக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பூங்கணைவேளைப்பொடியாய்விழவிழித்தோன்புலியூ
ரோங்கணைமேவிப்புரண்டுவிழுந்தெழுந்தோலமிட்டுத்
தீங்கணைந்தோரல்லுந்தேறாய்கலங்கிச்செறிகடலே
யாங்கணைந்தார்நின்னையும்முளரோசென்றகன்றவரே.

எறிவேற்கண்ணி யிரவுறுதுயரஞ்
செறிகடலிடைச் சேர்த்தியுரைத்தது.

இ - ள். பூங் கணை வேளை-பூவாகிய கணையையுடையவேளை— பொடியாய் விழ விழித்தோன் புலியூர் செறி கடலே - பொடியாய்விழும் வண்ணம் விழித்தவனது புலியூர்வரைப்பிற் செறிந்த கடலே—ஓங்கு அணை மேவிப் புரண்டு விழுந்து எழுந்து ஓலமிட்டு - நீ யோங்கியவணைந்தகரையைப்பொருந்திப் புரண்டுவிழுந்தெழுந்து கூப்பிட்டு—தீங்கு அணைந்து ஓர் அல்லும் கலங்கித் தேறாய்-துன்பமுற்று ஓரிரவுங்கலங்கித் தெளிகின்றிலை, அதனால்—அணைந்தார் நின்னையும் சென்று அகன்றவர் ஆங்கு உளரோ - அணைந்தவர் நின்னையுமகன்று சென்றார் அவ்விடத்துளரோ? உரைப்பாயாக. எ - று.

பொடியாய்விழ விழித்தோனென்னுஞ் சொற்கள் ஒருசொன்னீரவாய்ப் பொடியாக்கினானென்னும் பொருளவாய், வேளை

யென்னுமிரண்டாவதற்கு முடிபாயின. புலியூர்க்கடலே கலங்கித் தேறுயென்று கூட்டினுமமையும். செறிகடலென்புழிச் செறிவு எல்லேகடவாநிலைமை. பிரிவாற்ருதார்க்கு அணைமேவுதல் பஞ்சி யணைமேவுதல். அணைந்தாரென்பதூஉம் சென்றகன்றவரென்ப தூஉம் அடுக்காய் உளரோவென்னும் பயனிலேகொண்டன. ஆங்கு அசைநிலேயுமாம். மெய்ப்பாடு அழுகை. பயன் அயர்வுயிர்த்தல். ()

## அலரறிவுறுத்தல்.

அலரறிவுறுத்தலென்பது தலைமகளிரவுறுதுயரங் கடலொடு சேர்த்தி வருந்தாநின்றமை சிறைப்புறமாகக் கேட்ட தலைமகன், குறியிடைச்சென்று நிற்ப, தோழி .யெதிர்ப்பட்டு, நின்னருளாய் நின்றவிது எங்களுக் கலராகாநின்றது; இனி நீயிவ்வாறொழுகா தொழியவேண்டுமென அலரறிவுறுத்தி வரவுவிலக்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

அலராயிரந்தந்துவந்தித்துமாலாயிரங்கரத்தா
லலரார்கழல்வழிபாடுசெய்தாற்களவில்லொளிக
ளலராவிருக்கும்படைகொடுத்தோன்றில்லேயானருள்போன்
றலராய்விளைகின்றதம்பல்கைம்மிக்கையமெய்யருளே.

அலேவேலண்ணன் மனமகிழருள்
பலராலறியப் பட்டதென்றது.

இ-ள். மால் அலர் ஆயிரம் தந்து வந்தித்து - மால் தாமரை மலராயிரத்தைக் கொண்டு சென்றிட்டுவணங்கி—ஆயிரம் கரத்தால் அலர் ஆர் கழல் வழிபாடு செய்தாற்கு - தன்னுயிரங்கையானுமலர்போலுங் கழலே வழிபடுதலைச் செய்தவற்கு—அளவில் ஒளிகள் அலராவிருக்கும் படை கொடுத்தோன் - அளவில்லாதவொளிகள் விரியாநிற்கும் ஆழியாகிய படையைக்கொடுத்தவன்—தில்லேயான் - தில்லேக்கண்ணுன்—அருள் போன்று - அவனதருள் போல—ஐய - ஐயனே—மெய் அருள் - நின்னுடைய மெய்யாகிய வருள்—அம்பல் கைம்மிக்கு அலராய் விளைகின்றது - அம்பல்கைம்மிக்கலராய் விளையாநின்றது; இனித்தக்கது செய்வாயாக. எ-று.

அலராவிருக்குமென்பது ஓர் நிகழ்காலச்சொல். தில்லேயானருள் பெற்ருர் உலகியல்பினராய் நில்லாமையின், அவ்வருளுலகத்தார்க் கலராமென்பது கருத்து. "நாடவர் நந்தம்மை யார்ப்ப வார்

ப்ப" * என்பதூஉ மக்கருத்தேபற்றி வந்தது. அம்பல் பரவாத களவு;என்னை?"அம்பலு மலருங் களவு" † என்றுராகலின்.(கஅ0)

இரவுக்குறிமுற்றிற்று.

# ஒருவழித்தணத்தல்.

இவ்வாறிரவுக்குறிபுணர்ந்து, அலரெழுந்ததென்று விலக்கப் பட்ட பின்னர்த் தெருண்டுவரைதறலே. தெருளாறாயின், அவ்வல ரடங்கச் சிலநா ளொருவழித்தணந்துறைதல், உடன்கொண்டு போதல், தோழியான் வரைவுமுடுக்கப்பட்டு அருங்கலம்விடுத்து வரைந்துகோடல் இம்மூன்றினுளொன்று முறைமையென்ப. அவ ற்றுள் ஒருவழித்தணத்தல் வருமாறு:—

அகன்றணைவுகூற லாழியொடுகேட்ட
லாழியொடுபுலத்த லன்னமோடாய்த
லாழிக்குரைத்த லாழியிழைத்தல்
சுடரொடுபுலம்பல் பொழுதுகண்டுமயங்கல்
பையுளெய்தல் பரிவுற்றுரைத்த
லன்னமோடழிதல் வரவுணர்ந்துரைத்தல்
வருத்தங்கூறல் வருபதின்மூன்றுந்
திருத்தியவொருவழித் திறனாகும்மே.

இ-ள். அகன்றணைவுகூறல், கடலொடுவரவுகேட்டல், கட லொடுபுலத்தல், அன்னமோடாய்தல், தேர்வழிநோக்கிக்கடலொடு கூறல், கூடலிழைத்தல், சுடரொடுபுலம்பல், பொழுதுகண்டுமயங் கல், பறவையொடுவருந்தல், பங்கயத்தோடு பரிவுற்றுரைத்தல், அன்னமோடழிதல், வரவுணர்ந்துரைத்தல், வருத்தமிகுதிகூறல், எனவிவை பதின்மூன்று மொருவழித்தணத்தலாம். எ - று. அவற்றுள்—

## அகன்றணைவுகூறல்.

அகன்றணைவு கூறலென்பது அலரறிவுறுத்ததோழி, இத்தன் மையை நினைந்து நீ சிலநாளகன்றணைவையாயின் அம்பலுமலரு

* திருவாசகம், திருப்பொற்சுண்ணம். எ.

† இறையனாரகப்பொருள். உஉ.

மடங்கி இப்பொழுதே அவளுக்குப் பழியில்லையாமெனத் தலைமக னுக்கிசைய அகன்றணைவு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**புகழும்பழியும்பெருக்கிற்பெருகும்பெருகிநின்று**
**நிகழுநிகழாநிகழ்த்தினல்லாலிதுநீநினைப்பி**
**னகழுமதிலுமணிதில்லையோனடிப்போதுசென்னித்**
**திகழுமவர்செல்லல்போலில்லையாம்பழிசின்மொழிக்கே.**

வழிவேறு படமன்னும்
பழிவேறு படுமென்றது.

இ-ள். புகழும் பழியும் - காரணவசத்தாற்பிறந்த புகழும் பழியும்—பெருக்கின் பெருகும்-அக்காரணங்களை மிகச் செய்தொருவன் வளர்க்குமாயிற் றாம்வளரும்—நிகழ்த்தின் - அக்காரணங் களை யிடையறாமற்செய்து நிகழ்த்துவனாயின்—பெருகி நின்று நிகழும் - அவ்வாறு வளர்ந்துநின்று மாயாதுளவாய்ச்செல்லும்—அல்லால் நிகழா - இவ்வாறல்லது அவைதாமாக நிகழா, அதனான்— இது நீ நினைப்பின் - இப்பெற்றியை நீ கருதுவையாயின்—அகழும் மதிலும் அணி தில்லையோன் அடிப்போது - அகழையு மதிலை யுமணிந்த தில்லைக்கண்ணானுடைய அடியாகிய போதுகள்—சென்னித் திகழுமவர் செல்லல் போல் - தஞ்சென்னிக்கண் விளங்கும் பெரியோரது பிறவித்துன்பம்போல—சில் மொழிக்குப் பழி இல் லையாம் - இச்சின்மொழிக்குப்பழி யிப்பொழுதேயில்லையாம்; நீ நினையாமையிற் பழியாகாநின்றது. எ - று.

நிகழுநிகழா நிகழ்த்தினல்லாலென்புழி நிரனிறையாகக் கூட் டப்பட்டது. அகழுமதிலு மலங்காரநீர்மையவென்பது போதர, அணிதில்லையென்றார். அகழுமதிலுமழகுசெய்தவென எழுவாயாக்கி யுரைப்பினுமமையும். வழிவேறுபடுதல் - இவளையெய்து முபாயங் களவன்றி வரைவாய் வேறுபடுதல். மன்னும் அசைநிலை. பழி வேறுபடுதல்-பழித்தன்மை திரிந்து கெடுதல். இவை யிரண்டற் கும் மெய்ப்பாடு அச்சம். பயன் அலரறிவுறீஇ வரைவுகடாதல். ()

## கடலொடுவரவுகேட்டல்.

கடலொடுவரவுகேட்டலென்பது ஒருவழித்தணத்தற் காற் றாது வருந்தாநின்ற தலைமகள், நம்மைவிட்டுப்போனவர் மீண்டு வரும்பரி சுனக்குரைத்தாரோவெனக் கடலொடு தலைமகன்வரவு கேளாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஆரம்பரந்துதிரைபொருநீர்முகின்மீன்பரப்பிச்
சீரம்பரத்திற்றிகழ்ந்தொளிதோன்றுந்துறைவர்சென்றார்
போரும்பரிசுபுகன்றனரோபுலியூர்ப்புனிதன்
சீரம்பர்சுற்றியெற்றிச்சிறந்தார்க்குஞ்செறிகடலே.

மணந்தவரொருவழித் தணந்ததற்கிரங்கி
மறிதிரைசேரு மெறிகடற்கியம்பியது.

இ - ள். புலியூர்ப் புனிதன் சீர் அம்பர் சுற்றி-புலியூர்க்கணுளனாகிய தூயோனது புகழையுடைய அம்பரைச்சூழ்ந்து—எற்றி - கரையைமோதி—சிறந்து ஆர்க்கும் செறி கடலே - மிக்கொலிக்கும் வரையிகவாத கடலே—ஆரம் பரந்து திரை பொரு நீர் - முத்துப்பரந்து திரைக டம்முட்பொருங் கடனீர்—முகில் மீன் பரப்பிச் சீர் அம்பரத்தின் திகழ்ந்து - முகிலையு மீனையுந் தன்கட்பரப்பிச் சீர்த்தவாகாயமேபோல விளங்கி—ஒளிதோன்றும் துறைவர் - ஒளிபுலப்படுத்துந் துறையையுடையவர்—சென்றார் - நம்மைவிட்டுச் சென்றவர்—போரும் பரிசு புகன்றனரோ - மீண்டுவரும்பரிசு உனக்குக்கூறினரோ? உரை. எ - று.

பரப்பியென்னும் வினையெச்சம் சீரம்பரமென்னும் வினைத்தொகையின் முன்மொழியோடு முடிந்தது. பரப்பி விளங்குமென ஒருசொல் வருவித்து முடிப்பினுமமையும். பரப்பி யென்பதற்கு முன் மீன்பரப்பியென்பதற்குரைத்ததுரைக்க. திகழ்ந்தென்றதனான் ஒளிமிகுதிவிளங்கும். போதருமென்பது போருமென இடைக்குறைந்து நின்றது. ஈண்டேனையுவமமுண்மையின், உள்ளுறையுவமமின்மையறிக. (கஅ௨)

## கடலொடுபுலத்தல்.

கடலொடு புலத்தலென்பது கடலொடு வரவுகேட்ட தலைமகள், அது தனக்கு வாய்திறவாமையின் என்னவனை கொண்டுபோனார் திறம் யான்கேட்க நீ கூறுதொழிகின்றதென்னெனப் பின்னும் அக்கடலொடு புலந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

பாணிகர்வண்டினம்பாடப்பைம்பொன்றருவெண்கிழிதுஞ்
சேணிகர்காவின்வழங்கும்புன்னைத்துறைச்சேர்ப்பர்திங்கள்
வாணிகர்வெள்வளைகொண்டகன்றார்திறம்வாய்திறவாய்
பூணிகர்வாளரவன்புலியூர்சுற்றும்போர்க்கடலே.

செறிவளைச் சின்மொழி
யெறிகடற் கியம்பியது.

இ-ள். பூண் நிகர் வாள் அரவன் புலியூர் சுற்றும் போர்க் கடலே - பூணையொக்குமொளியையுடைய அரவையணிந்தவனது புலியூரைச்சூழ்ந்த கரைபொருதலையுடைய கடலே—பாண் நிகர் வண்டினம் பாட -'பாணரையொக்கும் வண்டினங்கள் சென்று பாட—பைம்பொன் தரு வெண் கிழி - தாதாகிய பசும்பொன்னைப் புலப்படுத்தாநின்ற போதாகிய வெண்கிழியை—தம் சேண் நிகர் காவின் வழங்கும் புன்னைத் துறைச் சேர்ப்பர் - தமது சேய்மைக் கண் விளங்குங் காவினின்று அவற்றிற்குக் கொடுக்கும் புன்னைகளையுடைய துறையையணைந்த சேர்ப்பையுடையராகிய—திங்கள் வாள் நிகர் வெள் வளை கொண்டு அகன்றார் திறம் - திங்களினொளி போலு மொளியையுடைய என்வெள்வளையைத் தம்மொடு கொண்டுபோனவரது திறத்தை—வாய் திறவாய் - எமக்குக் கூறுகின்றிலை? நீ கூறுதொழிகின்றதென்! எ - று.

கிழிதமென்று கிழிக்குப்பெயராக வுரைப்பாருமுளர். வாய் திறவாயென்பதற்குக் கூறுவாயாகவென் றுரைப்பினுமமையும். ()

## அன்னமோடாய்தல்.

அன்னமோடாய்தலென்பது கடலொடுபுலந்து கூறிய தலைமகள், புன்னையொடுபுலந்து, அகன்றவர் அகன்றேயொழிவரோ? யானறிகின்றிலேன்; நீயாயினுஞ் சொல்லுவாயாகவென அன்னமோடாய்ந்து வரவுகேளாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பகன்றாமரைக்கண்கெடக்கடந்தோன்புலியூர்ப்பழனத்
தகன்றாமரையன்னமேவண்டுநீலமணியணிந்து, முகன்றாழ்
குழைச்செம்பொன்முத்தணிபுன்னையின்னும்முரையா
தகன்றாரகன்றேயொழிவர்கொல்லோநம்மகன்றுறையே.

மின்னிடை மடந்தை
யன்னமோ டாய்ந்தது.

இ-ள். பகன் தாமரைக் கண் கெட-பகனென்னும் பெயரையுடைய வாதித்தனது தாமரைபோலுங் கண்கெட—கடந்தோன் புலியூர்ப் பழனத்து அகன் தாமரை அன்னமே - அவனைவென்றவனது புலியூரைச்சூழ்ந்த பழனத்தின்கணுண்டாகிய அகன்றதாமரைக்கண்வாழும் அன்னமே—வண்டு நீல மணி அணிந்து - வண்டாகிய நீலமணியை யணிந்து—செம்பொன் முத்து அணி - தாதாகிய செம்பொன்னையும் அரும்பாகிய முத்தையுமணிந்த—முகன் தாழ் குழைப் புன்னை - முகத்துத் தாழ்ந்த குழையையுடைய புன்

னை—இன்னும் உரையாது - இந்நிலைமைக்கண்ணு மொன்றுசொல்லுகின்றதில்லை—அகன்றார் நம் அகன்றுறை அகன்றே ஒழிவர் கொல்லோ - அகன்றவர் நமதகன்றதுறையை யகன்றேவிடுவரோ? அறியேன்; நீயுரை. எ - று.

முகன்றாழ்குழையென்பது இருபொருட்படநின்றது. யாளித் தன்மையேனுகவும் மணியணிந்தின்புற்று நிற்கின்றபுன்னை எனக் கொன்று சொல்லுமோ? அன்னமே, எனக்கு நீ கூறென்பதுகருத்து. ஈண்டு நம்மோடு தாம் விளையாடும் விளையாட்டை மறந்தேவிடுவரோ வென்னுங்கருத்தான், நம்மகன்றுறையை யகன்றேயொழிவர்கொல்லோ வென்றாள். (கஅச)

## தேர்வழிநோக்கிக்கடலொடுகூறல்.

தேர்வழிநோக்கிக் கடலொடுகூறலென்பது அன்னமொடு வரவுகேட்ட தலைமகள், அதுவும் வாய்திறவாமையின், இனியவர் வருகின்றாரல்லர்;எம்முயிர்க்குப் பற்றுக்கோடினியிதுவே; இதனை நீ யழியாதொழிவாயென அவன்சென்ற தேர்வழி நோக்கிக் கடலொடு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

உள்ளுமுருகியுரோமஞ்சிலிர்ப்பவுடையவனாட்
கொள்ளுமவரிலொர்கூட்டந்தந்தான்குனிக்கும்புலியூர்
விள்ளும்பரிசுசென்றார்வியன்றேர்வழிதூரற்கண்டாய்
புள்ளுந்திரையும்பொரச்சங்கமார்க்கும்பொருகடலே.

மீன்றோய்துறைவர் மீளுமளவு
மான்றேர்வழியை யழியேலென்றது.

இ - ள். புள்ளும் திரையும் பொரச் சங்கம் ஆர்க்கும் பொருகடலே - புள்ளுந்திரையுந் தம்முட்பொரச் சங்கொலிக்குங் கரை பொருங்கடலே—உள்ளும் உருகி உரோமம் சிலிர்ப்ப - உள்ளுமுருகி மெய்ம்மயிர் சிலிர்ப்ப—உடையவன் ஆட் கொள்ளுமவரில் ஓர் கூட்டம் தந்தான் குனிக்கும்-உடையவனாகியதா னாட்கொள்ளுமடியாருள் எமக்கோர் கூட்டத்தைத் தந்தவன் நின்றுகூத்தாடும்—புலியூர் விள்ளும் பரிசு சென்றார் வியன் தேர் வழி - புலியூரைநீங்கும்வண்ணஞ் சென்றவரது பெரிய தேர்போன வழியை—தூரல் கண்டாய் - நின்றிரைகளாற் றூராதொழியவேண்டும்; எம்முயிர்க்குப் பற்றுக்கோடினியிதுவே. எ - று.

உள்ளுமென்ற வும்மையாற் புறத்துக்கண்ணீர் தழுவப்பட்டது. ஆட்கொள்ளுமவர் பெருமை தோன்ற உடையவனென

அவன்பெருமை விளக்கும் பெயராண்டுக்கூறினார். விள்ளுதல் செல வான்வருங் காரியமாதலின், விள்ளும் பரிசென்றாரென்றாள். கண் டாயென்பது முன்னிலையசைச்சொல். குனிக்கும் புலியூர் நுகர்ச் சியை நினையாது நீங்கிய வன்கண்மையார் இனிவருவரென்னு நசை யிலம்; அவர் தேர்ச்சுவடாயினும் யாங்காண நீ யதனையழியாதொழி யென்பது கருத்து. விள்ளும்பரிசு சென்றாரென்பதற்குப் புலியூரை நீங்கினாற்போல யான்றுன்புறும்வண்ணமெனினு மமையும். விள்ளு தல் வாய்திறத்தலென்று, அலர்கூறி நகும்வண்ணஞ் சென்றவரெ னினுமமையும். பொரச்சங்கமார்க்குமென்புழிப் பொருஞ்சங்கொ லியுமென வொருபொருடோன்றியவாறு கண்டுகொள்க. கூட்டந் தந்தாரென்று பாடமோதி ஆட்கொள்ளுமவரைப்போ லின்புற எமக்கோர் புணர்ச்சியைத் தந்தாரெனத் தலைமகன் மேலேற வுரை ப்பாருமுளர். அலங்காரம் அல்பொருட்டற்குறிப்பேற்றம். (௧௮௫)

## கூடலிழைத்தல்.

கூடலிழைத்தலென்பது தேர்வழிநோக்கிக் கடலொடு கூறு நின்ற தலைமகள், இம்மணற்குன்றின்கண் நீத்தகன்றவள்ளலை உள் ளத்தை நெகிழ்த்து இவ்விடத்தே தர வல்லையோவெனக் கூடற் றெய்வத்தை வாழ்த்திக் கூடலிழைத்து வருந்தாநிற்றல். அதற்குச் செய்யுள்—

ஆழிதிருத்தும்புலியூருடையானருளினளித்
தாழிதிருத்துமணற்குன்றினீத்தகன்றார்வருகென்
றூழிதிருத்திச்சுழிக்கணக்கோதிநையாமலைய
வாழிதிருத்தித்தரக்கிற்றியோவுள்ளம்வள்ளலையே.

நீடலந் துறையிற்
கூட லிழைத்தது.

இ-ள். ஆழி திருத்தும் புலியூர் உடையான் அருளின் அளி த்து - ஆழிசூழ்ந்த மண்முழுதையுந் திருத்தும் புலியூரையுடைய வன தருள்போல இன்புறவளித்து—ஆழி திருத்தும் மணற்குன் றின் நீத்து அகன்றார் வருகென்று - கடல்வந்து திருத்து மணற்கு ன்றின்கண் என்னை நீத்தகன்றவர் வரவேண்டுமென்று—ஆழி திரு த்திச் சுழிக் கணக்கு ஒதி நையாமல் - கூடலையிழைத்துச் சுழிக்க ணக்கைச்சொல்லி யான்வருந்தாமல்—ஐய - ஐயனே—வாழி-வாழ் வாயாக—உள்ளம் திருத்தி வள்ளலைத் தரக்கிற்றியோ - அவனுள் ளத்தை நெகிழ்த்து வள்ளலைமீண்டுத்தர வல்லையாயின் யானிரக்கி ன்றேன். எ-று.

முதற்கணுழி ஆகுபெயர். ஆழிதிருத்தும் புலியூரென்பதற்குப் பிறவுமுரைப்ப. திரைவந்து பெயரும் பெருமணலடைகரையைப் பின்னினையாத கொடியோர் இனிவருதல் யாண்டையதென்னுங் கருத்தான், ஆழிதிருத்து மணற்குன்றி னீத்தகன்றாரென்றாள். ஐயவென்றது கூடற்றெய்வத்தை. கீடலந்துறை யென்பதற்குக் கமழலந்துறைக்குரைத்த துரைக்க. (கஅசு)

## சுடரொடுபுலப்பல்.

சுடரொடு புலம்பலென்பது கூடலிழைத்து வருந்தாநின்ற தலைமகள், துறைவர்போக்கும் அவர் குளறவும் என்னை வருத்தா நின்றன; அதன்மேல் நீயுமேகாநின்றாய்; யானினியுய்யுமாறென்னோ வெனச் செல்லாநின்ற சுடரொடு புலம்பாநிற்றல். அதற்குச் செய்யுள்—

கார்த்தரங்கந்திரைதோணிசுறாக்கடன்மீனெறிவோர்
போர்த்தரங்கந்துறைமானுந்துறைவர்தம்போக்குமிக்க
தீர்த்தரங்கன்றில்லைப்பல்பூம்பொழிற்செப்பும்வஞ்சினமு
மார்த்தரங்கஞ்செய்யுமாலுய்யுமாறென்கொலாழ்சுடரே.

> குணகடலெழுசுடர் குடகடற்குளிப்ப
> மணமலிகுழலி மனம்புலம்பியது.

இ - ள். கார்த் தரங்கம்-கரியதிரையும்—திரை தோணி-திரை பாநின்றதோணியும்—சுறா - சுறாவும்—மீன் எறிவோர் - மீனெறி வோரும்—கடல் - கடலும்—போர்த் தரு அங்கம்-போரைத்தரு மங்கங்களையும்——துறை - அக்களத்தையும்——மானும் துறைவர் போக்கும் - ஒக்குந் துறையையுடையவரது பிரிவும்—மிக்க தீர்த்தர் அங்கன் தில்லைப் பல் பூம் பொழில் செப்பும் வஞ்சினமும்-சிறந்த தூயோராகிய அரியயர்களுடைய வெண்மையணிந்தவனது தில்லைவ ரைப்பினுண்டாகிய பல்பூம்பொழிற்கண் நின்னிற்பிரியேனென்று சொல்லும் வஞ்சினமும்—ஆர்த்தர் அங்கம் செய்யும் - என்மே னியை நோயுற்றார்மேனியாகச் செய்யாநின்றன—ஆழ் சுடரே - வீழாநின்றசுடரே—உய்யுமாறு என் கொல் - யானுய்யுநெறியெ ன்னோ? கூறுவாயாக. எ - று.

குதிரைத்திரள் தரங்கத்திற்கும், தேர் தோணிக்கும், யானை சுறாவிற்கும், காலாள் மீனெறிவோர்க்கும், போர்க்களங் கடற்கு முவமையாக வுரைக்க. தரங்கமுதலாயினவற்றாற் போரைத்தரு மங்கத்தையுடைய களத்தையொக்குந் துறையென மூன்றாவது

விரித்துரைப்பாருமுளர். இதற்கு அங்கத்துறை யென்றது மெலிந்து நின்றது. போரைத்தருமங்கமென்பதனைத் தொகுக்கும்வழித் தொகுத்தார். துறைவர்போக்கும் இல்லவரைப்பிற் சூளறவும் என்றுமென்னு மச்சத்தளாய், ஆர்த்தரங்கஞ் செய்யுமென்றுள்.

## பொழுதுகண்டுமயங்கல்.

பொழுதுகண்டு மயங்கலென்பது சுடரொடு புலம்பாநின்றவள், கதிரவன் மறைந்தான்; காப்பவர்சேயர்; அதன்மேலிவ்விடத்து மீனுண்ட வன்னங்களும் போய்த் தஞ்சேக்கைகளை யடைந்தன; இனி யானுற்றுமாறென்னேவென மாலைப்பொழுதுகண்டு மயங்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

பகலோன்கரந்தனன்காப்பவர்சேயர்பற்றற்றவர்க்குப்
புகலோன்புகுநர்க்குப்போக்கரியோனெவரும்புகலத்
தகலோன்பயில்தில்லைப்பைம்பொழிற்சேக்கைகணோக்கினவா
லகலோங்கிருங்கழிவாய்க்கொழுமீனுண்டவன்னங்களே.

மயறருமாலை வருவதுகண்டு
கயறருகண்ணி கவலையுற்றது.

இ - ள். பகலோன் கரந்தனன் - கதிரவன் மறைந்தான்— காப்பவர் சேயர் - இம்மாலைக்காலத்துவருந் துன்பத்தைக் காக்குமவர் சேயராயிருந்தார்—அகல் ஓங்கு இருங் கழிவாய்க் கொழுமீன் உண்ட அன்னங்கள் சேக்கைகள் நோக்கின - அதுவேயுமன்றி இவ்வகலோங்கிருங்கழியிடத்துக் கொழுமீனையுண்ட வன்னங்கடாமும் இவ்விடத்தைவிட்டுத் தஞ்சேக்கைகளை நோக்கின; இனியென்செய்வேன்! எ - று.

பற்று அற்றவர்க்குப் புகலோன்-புலன்களிற் பற்றற்றவர்க்குப் புகலிடமாயுள்ளான்—புகுநர்க்குப் போக்கு அரியோன் - தன்கட் புகுவார்க்குப் பின்போதர வரியவன்—எவரும் புகலத் தகலோன்- எல்லாருமேத்தத் தகுதலையுடையவன்—பயில் தில்லைப் பைம்பொழிற் சேக்கைகள் - அவன்பயிலுந் தில்லைவரைப்பிற் பைம்பொழில்களினுளவாகிய சேக்கைகளெனக் கூட்டுக.

ஓங்குதல் ஓதமெறிநீருயர்தல். கொழுமீனென்பது ஓர்சாதி.

## பறவையொடுவருந்தல்.

பறவையொடு வருந்தலென்பது பொழுதுகண்டு மயங்காநின்ற தலைமகள், இந்நிலைமைக்கண்ணும் என் னுண்ணோயறியாது

கண்ணோட்டமின்றித் தம் வயிறோம்பாநின்றன; இஃதென்னை பாவமென வண்டானப் பறவையொடு வருந்திக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**பொன்னுமணியும்பவளமும்போன்றுபொலிந்திலங்கி**
**மின்னுஞ்சடையோன்புலியூர்விரவாதவரினுண்ணோ**
**யின்னுமறிகிலவாலென்னைபாவமிருங்கழிவாய்**
**மன்னும்பகலேமகிழ்ந்திரைதேரும்வண்டானங்களே.**

செறிபிணிகைம்மிகச் சிற்றிடைப்பேதை
பறவைமேல்வைத்துப் பையுளெய்தியது.

இ - ள். இருங் கழிவாய்ப் பகலே மகிழ்ந்து இரை தேரும் வண்டானங்கள் - என்னுற்றாமைக்குப் பரிகாரமாவதியாதுஞ் சிந்தியாது இருங்கழியிடத்துப் பகலேபுகுந்து விரும்பித் தமக்குணவு தேடும் வண்டானங்களாகிய குருகுகள்—உள் நோய் இன்னும் அறிகில - என்னுண்ணோயை யிந்நிலைமைக்கண்ணு மறிகின்றனவில்லை—என்னை பாவம் - இஃதென்னை பாவம்! எ - று.

பொன்னும் மணியும் பவளமும் போன்று பொலிந்து இலங்கி மின்னும் - பொன்போலப் பொலிந்து மாணிக்கம்போலவிட்டு விளங்கிப் பவளம்போலமின்னும்—சடையோன் புலியூர் விரவாதவரின் [உறும்] உள் நோய் - சடையையுடையவனது புலியூரைக் கலவாதாரைப்போல யானுறுமுண்ணோ யெனக்கூட்டுக.

உறுமென வொருசொல் வருவித்துரைக்கப்பட்டது. முன்னறிந்தனவில்லையாயினும் இனியறியவேண்டுமென்பது கருத்து. புலியூரை விரவாதார் கண்ணோட்டமிலராகலிற் புலியூரை விரவாதவரினின்னுமறிகில வென்றியைத்துரைப்பினு மமையும். நிரனிறையாகக் கொள்ளாது எல்லாமெல்லாவற்றின்மேலு மேறவுரைப்பினு மமையும். மன்னும் அசைநிலை. (கஅக)

## பங்கயத்தோடுபரிவுற்றுரைத்தல்.

பங்கயத்தோடு பரிவுற்றுரைத்தலென்பது பறவையொடு வருந்தாநின்றவள், இவையென்வருத்தங்கண்டு இவள் வருந்தாமல் விரைய வரவேண்டுமென்று ஞாயிற்றைநோக்கித் தங்கை குவியாநின்றன; ஆதலால் என்மாட்டன்புடையனபோலு மெனப் பங்கயத்தோடு பரிவுற்றுக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**கருங்கழிகாதற்பைங்கானலிற்றில்லையெங்கண்டர்விண்டா**
**ரொருங்கழிகாதரமூவெயில்செற்றவொற்றைச்சிலைசூழ்**

**தருங்கழிகாதமகலுமென்றூழென்றலந்துகண்ணீர்**
**வருங்கழிகாதல்வனசங்கள்கூப்புமலர்க்கைகளே.**

முருகவிழ் கான
லொடுபெரி வுற்றது.

இ - ள். தில்லை எம் கண்டர் - தில்லைக்கணுளராகிய எம்மு டையகண்டர்—விண்டார் ஒருங்கு அழி காதர மூவெயில் செற்ற- பகைவரொருங்கேயழியு மச்சத்தையுடைய மூவெயிலைச்செற்ற— ஒற்றைச் சிலை சூழ்ந்து - தனிவில்லைச்சூழ்ந்து—அருங் கழி காதம் அகலும் என்றூழ் - அரியவாகிய மிக்ககாதங்களைப் போகாநின் றது என்றூழ்—என்று - இனி யிவளெங்ஙனமாற்றுமென்று வரு ந்தி—கருங் கழி காதற் பைங் கானலின் அலந்து கண்ணீர் வரும் - கருங்கழியின்கண்ணுங்காதலையுடைய பைங்கானலின்கண்ணுமுள வாகித்துன்புற்றுக் கண்ணீர்வாராநின்ற—கழி *காதல் வனசங் கள் - கழிகாதலையுடைய தாமரைகள்—மலர்க் கைகள் கூப்பும் - விரைந்துவரவேண்டுமென்று அஞ்ஞாயிற்றைநோக்கித் தம்மலரா கிய கைகளைக்கூப்பி யிரவாநின்றன; இவையென்மாட் டன்புடை யன போலும். எ - று.

கானலின் வனசங்களெனவும், தில்லையெங்கண்டர் செற்ற வெனவுங் கூட்டுக. கானலிற் கைகூப்புமென வியைப்பினுமமை யும். கானற்பொய்கையின் வனசம் கானலின் வனசமெனப்பட் டன. அலந்து கண்ணீர்வருமென்பது இருபொருட்டாகலின், மல ர்ந்து கள்ளாகிய நீர் வருமென்றுரைக்க. இப்பொருட்கு அலர்ந் தென்பதிடைக்குறைந்து நின்றதாகக்கொள்க. கதிரோன்றம்மைப் பிரிய வாற்றாது கடிது வரவேண்டுமென வனசங்கள் கைகூப்பா நின்றனவென்று அவற்றிற்கிரங்கினளாக வுரைப்பினுமமையும். அலர்ந்தவென்பது பாடமாயின், அலர்ந்த வனசமெனவியையும். ()

## அன்னமோடழிதல்.

அன்னமோடழிதலென்பது பங்கயத்தை நோக்கிப் பரிவுறு நின்றவள், உலகமெல்லாந் துயிலாநின்ற விந்நிலைமைக்கண்ணும் யான்றுயிலாமைக்குக் காரணமாகிய என்வருத்தத்தைச் சென்று அவர்க்குச் சொல்லாது தான்றன் சேவலைப்பொருந்திக் கவற்சியி ன்றித் துயிலாநின்றதெனை அன்னத்தோடழிந்து கூறுநிற்றல். அத ற்குச்செய்யுள்—

**மூவறழீஇயவருண்முதலோன்றில்லைச்செல்வன்முந்நீர்**
**நாவறழீஇயவிந்நானிலந்துஞ்சுநயந்தவின்பச்**

*சேவறழீஇச்சென்றுதான்றுஞ்சும்யான்றுயிலாச்செயிரெங்*
*காவறழீஇயவர்க்கோதாதளியகளியன்னமே.*

இன்னகையவ ளிரவருதுயர
மன்னத்தோ டழிந்துரைத்தது.

இ - ள். மூவல் தழீஇய அருள் முதலோன் - மூவலைப்பொருந்திய அருளையுடைய முதல்வன்—தில்லைச் செல்வன் - தில்லைக்கணுளனாகிய செல்வன்—முந்நீர் நாவல் தழீஇய இந் நானிலம் துஞ்சும் - அவனுடைய கடலாற்சூழப்பட்ட நாவலைப்பொருந்திய இந் நானிலமுழுதுந் துஞ்சாநின்றது—யான் துயிலாச் செயிர் எம் காவல் தழீஇயவர்க்கு ஓதாது - இப்பொழுதினும் யான்றுயிலாமைக்குக் காரணமாகிய வருத்தத்தை எமது காவலைப்பொருந்தினவருக் குரையாதே—அளிய களி அன்னம் - அளித்தாகிய களியன்னம்—சென்று - இவ்விடத்து நின்றும்போய்—நயந்த இன்பச் சேவல் தழீஇத் தான் துஞ்சும் - தானயந்த வின்பத்தைச் செய்யுஞ் சேவலைத்தழுவி ஒருகவற்சியின்றித் தான்றுயிலாநின்றது; இனியிது கூறுவார் யாவர்? எ - று.

மூவலென்பது ஒரு திருப்பதி. பாலைக்குநிலமின்மையின், நானிலமெனப்பட்டது. நயந்த சேவலைப்பொருந்திய களிப்பால் அன்னஞ்சென்றுரையாமையல்லது அவரெம்மைக்காவாது விடாரென்னுங் கருத்தான், எங்காவறழீஇயவர்க்கென்றாள். ஓதாதென்பதனை முற்றாகவுரைப்பினு மமையும். [நெய்தற்றிணைகூறுவார் சோத்துன்னடியமென்பது தொட்டுப் புகழும் பழியுமென்னுங்காறும் வரப்பாட்டொன்பதும் இரங்கனிமித்தமாகக் கூறி, ஒருவழித்தணத்தற்றுறையிடத்து ஆரம்பரந்தென்பது தொட்டு இதன்காறும்வர இப்பாட்டுப் பத்தும் இரங்கலே கூறுதலான் திணை நெய்தல்; என்னை? வாட்டம் உரிப்பொருளாதலின்] கைகோள் கற்பு. மெய்ப்பாடு அழுகை. பயன் அயர்வுயிர்த்தல். (௧௬௯)

## வரவுணர்ந்துரைத்தல்.

வரவுணர்ந்துரைத்தலென்பது தலைமகளன்னத்தோடழிந்து வருந்தாநிற்ப, தலைமக னொருவழித்தணந்துவந்தமை சிறைப்புறமாகவுணர்ந்த தோழி, வளைகள் நிறுத்த நிற்கின்றனவில்லை; நெஞ்சம் நெகிழ்ந்துருகாநின்றது; கண்கள் துயிலின்றிக் கலுழாநின்றன; இவையெல்லாம் யான் சொல்லவேண்டுவதில்லை; நீயே கண்டாய்; இதனைச்சென்று அவர்க்குச் சொல்லுவாயென மதியொடு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

நில்லாவளைநெஞ்சநெக்குருகுங்நெடுங்கண்டுயிலக்
கல்லாகதிர்முத்தங்காற்றுமெனக்கட்டுரைக்கதில்லைத்,தொல்
லோனருள்களில்லாரிற்சென்றூர்சென்றசெல்லல்கண்டா
யெல்லார்மதியேயிதுநின்னையானின்றிரக்கின்றதே.

சென்றவர்வரவுணர்ந்து நின்றவணிலைமை
சிறப்புடைப்பாங்கி சிறைப்புறத்துரைத்தது.

இ - ள். எல் ஆர் மதியே - ஒளியார்ந்த மதியே—தில்லைத் தொல்லோன் அருள்கள் இல்லாரின் சென்றூர் சென்ற செல்லல் கண்டாய் - தில்லைக்கணுளனாகிய தொல்லோனது அருளுடையா ரல்லாதாரைப்போலக் கண்ணோட்டமின்றிப் போனவர்போதலா லுண்டாகிய இன்னாமையை நீயேகண்டாய் யான்சொல்லவேண்டு வதில்லை—வளை நில்லா-வளைகணிறுத்த நிற்கின்றனவில்லை—நெஞ் சம் நெக்கு உருகும் - நெஞ்சுநெகிழ்ந் துருகாநின்றது—நெடுங் கண் துயிலக்கல்லா கதிர் முத்தம் காற்றும்-நெடுங்கண்க டுயிலாவா ய்க் கண்ணீர்த்துளியாகிய கதிர்முத்தங்களை விடாநின்றன—எனக் கட்டுரைக்க - என்று அவர்க்குச் சொல்வாயாக—நின்னை யான் இன்று இரக்கின்றது இது - நின்னை யானின்றிரக்கின்றதிது. எ-று.

துயிலக்கல்லாவென்பது ஒருசொல். முத்தங்காலு மென்ப தூஉம் பாடம். எல்லாமதியே யென்பது பாடமாயிற் செல்லலெல் லாமென்று கூட்டியுரைக்க. மெய்ப்பாடு அச்சம். பயன் வரைவு கடாதல். (கஅஉ)

## வருத்தமிகுதிகூறல்.

வருத்தமிகுதி கூறலென்பது சிறைப்புறமாக மதியொடு வருத் தங்கூறிச் சென்றெதிர்ப்பட்டு வலஞ்செய்துநின்று, நீ போய், அவள் படாநின்ற வருத்தம் என்னாற்சொல்லுமளவல்லவென வரைவுதோன்றத் தலைமகளது வருத்தமிகுதி தோழி கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வளருங்கறியறியாமந்திதின்றுமம்மர்க்கிடமாய்த்
தளருந்தடவரைத்தண்சிலம்பாதனதங்கமெங்கும்
விளரும்விழுமெழும்விம்முமெலியும்வெண்மாமதிநின்
றொளிருஞ்சடைமுடியோன்புலியூரன்னவொண்ணுதலே.

நீங்கி யணைந்தவற்குப்
பாங்கி பகர்ந்தது.

இ - ள். வளரும் கறி அறியா மந்தி தின்று - வளராநின்ற மிளகுகொடியைத் தமக்கேற்றவுணவென்றறியாத இளையமந்தி தின்று—மம்மர்க்கு இடமாய்த் தளரும் தடவரைத் தண் சிலம்பா- வருத்தத்திற்கிடமாய் நிலைதளரும் பெரியவரைகளையுடைய தண்சி லம்பையுடையாய்—வெண் மா மதி நின்று ஒளிரும் சடைமுடி யோன் புலியூர் அன்ன ஒள் நுதல் - வெள்ளிய பெரியமதிநின்று விளங்குஞ் சடையானியன்ற முடியையுடையவனது புலியூரையொ க்குமொண்ணுதல்—தனது அங்கம் எங்கும் விளரும் - தன்மேனி முழுதும் பசக்கும்—விழும் - அமளிக்கண் விழாநிற்கும்—எழும் - எழாநிற்கும்—விம்மும் - பொருமாநிற்கும்—மெலியும் - நின்வன் கண்மையைநினைந்து மெலியாநிற்கும்; அதனாலின்னநிலைமையளெ ன்றென்னாற் சொல்லப்படாது. எ - று.

வளருமிளங்கறி கண்ணிற்கினிதாயிருத்தலின் இது நமக்குத் துய்க்கப்படாதென்றுணராத இளமந்தி அதனைத்தின்று வருந்து மாறுபோலக் கண்ணுமனமுமகிழ் முருவினையாகிய நின்னை நின் பெருமையுணராதெதிர்ப்பட்டு வருந்தாநின்றாளென வுள்ளுறை காண்க. மெய்ப்பாடும் பயனும் அவை.

இவ்வா ஞொருவழித்தணந்துவந்து வரைவுமாட்சிமைப்பட வும் பெறும். அன்றியுமுடன்போக்கு நிகழப்படும். (கசுரு)

ஒருவழித்தணத்தல்முற்றிற்று.



# உடன்போக்கு.

இவ்வாறொருவழித்தணத்தல் நிகழாதாயின், உடன்போக்கு நிகழும். அதுவருமாறு—

பருவங்கூறல் படைத்துமொழிதல்லொடு
மருவமர்கோதையை மகட்பேச்சுரைத்தல்
பொன்னணிவுரைத்தல் பொருள்விலைகூற
லன்னமென்னடையா ளருமைகேட்டழித
றளர்வறிந்துரைத்த றாழ்குழலாட
னுளநினைவுரைத்த லுடன்கொண்டுசேறற்
கருமையுரைத்த லாதரங்கூறன்
மருவியதடங்கயல் வாழாளென்றல்

பொருவருகற்பின் புனைநலனுரைத்த
றுணிந்தமைகூற றுணிவுகேட்ட
றுணிவறிவித்த றெல்லைநாண்விட
றுணிவெடுத்துரைத்தல்கொண் டகலெனவுரைத்த
லடிவழிநினைந்தவன் றவனுளம்வாடல்
கொடியிடையாளைக் கொண்டுசென்றுய்த்த
லோம்படுத்துரைத்தல் வழிப்படுத்துரைத்த
றேம்படுகோதையைத் திறலுடைவேலோன்
பையக்கொண்டேகல் பயங்கெடவுரைத்தன்
மையமர்கண்ணியை வழியயர்வகற்ற
னெறிவிலக்கல்லொடு நெறியிடைக்கண்டவர்
செறிவெடுத்துரைத்தல் சேயிழையாளுடன்
வழிவிளையாடல் வழியெதிர்வருவோ
ரெழினகரணிமை யிதுவெனவுரைத்த
ணகர்காட்டல்லொடு நகரிடைப்புக்குப்
பதிபரிசுரைத்தல் பாங்கியைக்கிட்டி
மதிநுதலாளை வளர்த்தவள்கேட்ட
லறத்தொடுநிற்ற லதுகேட்டழுங்க
திறப்பாடுன்னிச் செவிலிகவன்றுரைத்த
லடிநினைந்திரங்க லதுதாய்க்குரைத்தன்
மடவரல்போக வாடியுரைத்தல்
கிளிமொழிக்கிரங்கல் கிளர்சுடர்ப்பராய்த
லளிபெறுபருவத்திற் கவள்கவன்றுரைத்த
லுடைத்துணித னற்றாய்நயந்தவர்
கூடக்கரையெனக் கொடிக்குறிபார்த்தல்
சோதிடங்கேட்டல் சுவடுகண்டறித
லேதமுற்றவைகண் டிரங்கியுரைத்தல்
வேட்டமாதரைக் கண்டுவினவல்
புறவொடுபுலத்தல் குரவொடுவருந்த
றிறலருந்தவத்தொடு செல்லாநின்ற
மாவிரதியரை வழியிடைவினவல்
வேதியர்தம்மை விரும்பிவினவல்
புணர்ந்துடன்வருவோரைப் பொருந்திவினவன்

மணந்தருகுழலாண் மன்னியநிலையொடு
வேங்கைபட்டது கண்டுவியத்த
லாங்கவரியைபணி யவட்கெடுத்துரைத்தன்
மீளவுரைத்தன் மீளாதவளுக்
கூழ்முறையிதுவென வுலகியல்புரைத்த
லழுங்குதாய்க்குரைத்த லைம்பதோடாறு
முழுங்கொலைவேலோ னுடன்போக்காகும்.

இ-ள். பருவங்கூறல், மகட்பேச்சுரைத்தல், பொன்னணி வுரைத்தல், அருவிலையுரைத்தல், அருமைகேட்டழிதல், தளர்வறிந் துரைத்தல், குறிப்புரைத்தல், அருமையுரைத்தல், ஆதரங்கூறல், இறந்துபாடுரைத்தல், கற்புநலனுரைத்தல், துணிந்தமைகூறல், துணிவொடுவினவல், போக்கறிவித்தல், நாணிழந்துவருந்தல், துணிவெடுத்துரைத்தல், குறியிடங்கூறல், அடியொடுவழிநினைந்த வனுளம்வாடல், கொண்டுசென்றுய்த்தல், ஓம்படுத்துரைத்தல், வழிப்படுத்துரைத்தல், மெல்லக்கொண்டேகல், அடலெடுத்துரை த்தல், அயர்வகற்றல், நெறிவிலக்கிக்கூறல், கண்டவர்மகிழ்தல், வழி விளையாடல், நகரணிமைகூறல், நகர்காட்டல், பதிபரிசுரைத்தல், செவிலிதேடல், அறத்தொடுநிற்றல், கற்புநிலைக்கிரங்கல், கவன்று ரைத்தல், அடிநினைந்திரங்கல், நற்றாய்க்குரைத்தல், நற்றாய்வருந் தல், கிளிமொழிக்கிரங்கல், சுடரோடிரத்தல், பருவநினைந்துகவ றல், நாடத்துணிதல், கொடிக்குறிப்பார்த்தல், சோதிடங்கேட்டல், சுவடுகண்டறிதல், சுவடுகண்டிரங்கல், வேட்டமாதரைக்கேட்டல், புறவொடுபுலத்தல், குரவொடுவருந்தல், விரதியரைவினவல், வேதி யரைவினவல், புணர்ந்துடன்வருவோரைப் பொருந்திவினவல், வியந்துரைத்தல், இயைபெடுத்துரைத்தல், மீளவுரைத்தல், உல கியல்புரைத்தல், அழுங்குதாய்க்குரைத்தல் என விவையைம்பத்தா றும் உடன்போக்காம். எ-று. அவற்றுள்—

## பருவங்கூறல்.

பருவங்கூறலென்பது அலரறிவுறுத்த தோழி, இவண்முலை முதிர்வுகண்டமையான் மகட்பேசுவார்க்கு எமர் மாறாது கொடுக் கவுங்கூடும்; அதுபடாமனிற்ப நீ முற்பட்டு வரைவாயாகவெனத் தலைமகனுக்குத் தலைமகளது பருவங் கூறாநிற்றல். அதற்குச் செய்யுள்—

ஒராகமிரண்டெழிலாயொளிர்வோன்றில்லையொண்ணுதலங்
கராகம்பயின்றமிழ்தம்பொதிந்தீர்ஞ்சுணங்காடகத்தின்

பராகஞ்சிதர்ந்தபயோதரமிப்பரிசேபணைத்த
விராகங்கண்டால்வள்ளலேயில்லையேயெமரெண்ணுவதே.

உருவது கண்டவ
ளருமை யுரைத்தது.

இ - ள். ஒரு ஆகம் இரண்டு எழில் ஆய் ஒளிர்வோன் தில்லை ஒள் நுதல் - ஒருமேனி பெண்ணழகு மாணழகுமாகிய விரண்டழகாய் விளங்குமவனது தில்லைக்கணுளளாகிய வொண்ணுதலுடைய—அங்க ராகம் பயின்று - பூசப்படுவன பயின்று—அமிழ்தம் பொதிந்து - அமிர்தத்தைப் பொதிந்து—ஈர்ஞ் சுணங்கு ஆடகத்தின் பராகம் சிதர்ந்த பயோதரம் - நெய்த்தசுணங்காகிய செம்பொன்னின் பொடியைச் சிதறினமுலைகள்—இப்பரிசே பணைத்த இராகம் கண்டால் - இப்படியே பெருத்த கதிர்ப்பைக்கண்டால்—வள்ளலே - வள்ளலே—எமர் எண்ணுவது இல்லையே - இவண்மாட்டெமர் நினைப்பதில்லையே? சிலவுளவாம். எ - று.

இராகம் வடமொழிச்சிதைவு; ஈண்டுநிறமென்னும்பொருட்டு. இராகம் முடுகுதலென்பாருமுளர். தில்லையொண்ணுத விராகமெனவியையும். மெய்ப்பாடும் பயனும் அவை. (கககசு)

## மகட்பேச்சுரைத்தல்.

மகட்பேச்சுரைத்தலென்பது பருவங்கூறிய தோழி, படைத்துமொழியான் அயலவர் பலரும் மேன்மேலும் பொன்னணியக் கருதாகின்றார்; நீ விரைய வரைவொடு வருவாயாதல் அன்றியுடன் கொண்டுபோவாயாதல் இரண்டினுளொன்று துணிந்துசெய்யக் கருதுவாய்; அதனையின்றே செய்வாயாகவெனத் தலைமகனுக்கு அயலவர்வந்து மகட்பேசல் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மணியக்கணியுமரனஞ்சமஞ்சிமறுகிவிண்ணோர்
பணியக்கருணைதரும்பரன்றில்லையன்னாடிறத்துத்
துணியக்கருதுவதின்றேதுணிதுறைவாநிறைபொன்
னணியக்கருதுகின்றார்பலர்மேன்மேலயலவரே.

படைத்துமொழிகிளவியிற் பணிமொழிப்பாங்கி
யடற்கதிர்வேலோற் கறியவுரைத்தது.

இ - ள். துறைவா - துறைவா—தில்லை அன்னாள் திறத்துத் துணியக் கருதுவது இன்றே துணி - தில்லையையொப்பாடிறத்து நீ துணிந்து செய்யக்கருதுவதனை இன்றே துணிந்துசெய்வாயாக—

அயலவர் நிறை பொன் மேன்மேல் அணியக் கருதுகின்றார் பலர் - அயலவர் நிறைந்த பொன்னை மேன்மேலு மணியக்கருதுகின்றார் பலர். எ - று.

மணி அக்கு அணியும் அரன் - மணியாகிய அக்கையணியுமரன்—நஞ்சம் அஞ்சி மறுகி விண்ணோர் பணியக் கருணை தரும் பரன் - நஞ்சையஞ்சிக் கலங்கிச்சுழன்று தேவர்சென்றுபணிய அந் நஞ்சான்வருமிடர்க்கு மருந்தாகத் தன்கருணையைக்கொடுக்கும் பரன்—தில்லை - அவனது தில்லையெனக்கூட்டுக.

அக்குமணியெனினுமமையும். அலங்காரம் ஒற்றுமைக்கொளுவுதல். மெய்ப்பாடு பெருமிதம். பயன் அது. (க்கூடு)

## பொன்னணிவுரைத்தல்.

பொன்னணி* வுரைத்தலென்பது படைத்து மொழியான் மகட்பேசல் கூறின தோழி, அறுதியாக முன்றிற்கணின்று முரசொடுபணில முழங்கக் காப்பணிந்து பொன்னணியப் புகுதாநின்றார்; இனி நின்கருத்தென்னோவெனத் தலைமகனுக்கு அயலவர் பொன்னணி வுரையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**பாப்பணியோன்றில்லைப்பல்பூமருவுசில்லோதியைநற்**
**காப்பணிந்தார்பொன்னணிவாரினிக்கமழ்பூந்துறைவ**
**கோப்பணிவான்றோய்கொடிமுன்றினின்றிவையேர்குழுமி**
**மாப்பணிலங்கண்முழங்கத்தழங்குமணமுரசே.**

பலபரிசினாலு மலர்நெடுங்கண்ணியை
நன்னுதற்பாங்கி பொன்னணிவரென்றது.

இ - ள். கமழ் பூந் துறைவ - கமழ்பூந் துறைவனே—பாப்பணியோன் தில்லைப் பல் பூ மருவு சில் ஓதியை - பாம்பாகிய வணியையுடையவனது தில்லைக்கணுளளாகிய பலவாகிய பூக்கள்பொருந்திய நுண்ணியவோதியையுடையாளை—நல் காப்பு அணிந்தார் - நல்லகாப்பை யணிந்தார்கள்—இனிப் பொன் அணிவார் - இனிப் பொன்னையணிவார்—கோப்பு அணி வான் தோய் கொடி முன்றில் நின்று - கலியாணத்துக்குப் பொருந்திய கோப்புக்களை யணிந்த வானைத்தோயுங் கொடிகளையுடைய முன்றிற்கணின்று—மண முரசு இவை ஏர் குழுமி மாப் பணிலங்கள் முழங்கத் தழங்கும் - மணமுரசங்களிவை ஏரொடுகுழுமிப் பெரியசங்கங்கள் முழங்கத் தாமொலியாநின்றன; இனியடுப்பது செய்வாயாக. எ - று.

தில்லைப்பல்பூவென்றியைப்பினுமமையும். காப்பென்றது காவலே. அணிவாரென்றது முற்றுச்சொல். கோப்பணி முன்றிலெனவினையும். மெய்ப்பாடும் பயனும் அவை. (கககூ)

## அருவிலையுரைத்தல்.

அருவிலையுரைத்தலென்பது பொன்னணி வுரைப்பக்கேட்ட தலைமகன் யான் வரைவொடு வருதற்கு நீ முலைப்பரிசங் கூறுவாயாகவெனை, எல்லாவுலகமு நல்கினும் எமர் அவளுடைய சிறிய விடைக்கு விலையாகச் செப்பலொட்டார்; இனிப் பெரிய முலைக்கு நீ விலைகூறுவ தென்னோவெனத் தோழி விலையருமை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

எலும்பாலணியிறையம்பலத்தோனெல்லைசெல்குறுவோர்
நலம்பாவியமுற்றுநல்கினுங்கல்வரைநாடரம்ம
சிலம்பாவடிக்கண்ணிசிற்றிடைக்கேவிலைசெப்பலொட்டார்
கலம்பாவியமுலையின்விலையென்னீகருதுவதே.

பேதையரறிவு பேதைமையுடைத்தென
வாதரத்தோழி யருவிலையுரைத்தது.

இ - ள். சிலம்பா - சிலம்பா—எலும்பால் அணி இறை - எலும்புகளாலலங்கரிக்குமிறைவன்—அம்பலத்தோன் - அம்பலத்தின் கண்ணான்—எல்லை செல்குறுவோர் நலம் பாவிய முற்றும் நல்கினும் - அவனதெல்லைக்கட் செல்லக் கருதுவாரது நன்மைபரந்த வுலகமுழுதையும் நீ கொடுப்பினும்—கல் வரை நாடர் - எம்முடைய தமராகிய கல்வரைநாடர்—வடிக் கண்ணி சிற்றிடைக்கே விலை செப்பல் ஒட்டார் - வடுவகிர்போலுங் கண்ணையுடையாளது சிறியவிடைக்கே விலையாகச் சொல்லுதலையுமார்—கலம் பாவிய முலையின் விலை என் நீ கருதுவது - கலம்பரந்த முலையின்விலையாக யாதனைநீகருதுவது? ஒன்றற்கும் அவருடம்படார். எ - று.

எலும்பாற்செய்த வணியென்று ஒருசொல் வருவித்துரைப்பாருமுளர். எல்லைசேறல் அறிவாலவனையணுகுதல். தில்லையெல்லையெனினு மமையும். அவர் நலம்பாவாவிடமின்மையின் எஞ்சாமை முழுதுமென்பார், நலம்பாவியமுற்றுமென்றார்: என்றது அவர் சீவன்முத்தராயிருத்தல். அஃதாவது சீவனுடனிருக்கும்போதே முத்தியையடைந்திருத்தல். முத்தியாவது எங்குமொக்க வியாத்தியையடைந்திருத்தல். இது அகண்டபரிபூரணரென்றபடி. அம்மகேளென்னுங் குறிப்பின்கண் வந்தது. சிற்றிடைக்கே யென்னு

மேகாரம் பிரிநிலை. இவனுயர்ந்த தலைமகனுதலால், தன்றமரைக் கல்வரைநாடரென்றும், பேதையரென்றும் கூறினுள். மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகளதருமை யுணர்த்தல். (௧௬௭)

## அருமைகேட்டழிதல்.

அருமைகேட்டழிதலென்பது அருவிலைகேட்ட தலைமகன், நீயவளதருமை கருதாது அவளதவயங்களிலுண்டாகிய நயத்தைப் பற்றிவிடாது நடுங்காநின்ருய்; இனி மதியைப்பிடித்துத் தரவேண் டியழும் அறியாக்குழவியைப்போலக் கிடந்தரற்றுவாயாகவெனத் தன்னெஞ்சோடழிந்து கூருநிற்றல். அதற்குச்செய்யுள்—

விசும்புற்றதிங்கட்கழூமழப்போன்றினிவிம்மிவிம்மி
யசும்புற்றகண்ணேடலருய்கிடந்தரன்றில்லையன்னுள்
குயம்புற்றரவிடைகூரெயிற்றூறல்குழன்மொழியி
னயம்பற்றிநின்றுநடுங்கித்தளர்கின்றநன்னெஞ்சமே.

பெருமைநாட் டத்தவ
ளருமைகேட் டழிந்தது.

இ - ள். அரன் தில்லை அன்னுள் குயம் - அரனது தில்லையை யொப்பாளுடையமுலை—புற்று அரவு இடை - புற்றின்கண் வாழும் பாம்புபோலுமிடை—கூர் எயிற்று ஊறல் - கூரிய வெயிற்றின்க ணூறியநீர்—குழல் மொழியின் நயம் பற்றி - குழலோசைபோலு மொழி என விவற்றின்கட்கிடந்த இன்பத்தையேகருதி—நின்று நடுங்கித் தளர்கின்ற நல் நெஞ்சமே - விடாதுநின்று அவளதருமை கருதாயாய்நடுங்கி வருந்தாநின்ற நல்லநெஞ்சமே—விசும்பு உற்ற திங்கட்கு அழூம் மழப் போன்று - விசும்பைப்பொருந்திய திங்க ளைத்தரவேண்டியழூங் குழவியையொத்து—அசும்பு உற்ற கண்ணேடு விம்மி விம்மி இனிக் கிடந்து அலருய் - நீரருமையைப் பொருந்திய கண்ணையுடையையாய்ப் பொருமிப்பொருமி இனிக் கிடந்தலறுவாயாக. எ - று.

குழன்மொழியினென்னும் இன் பலபெயரும்மைத்தொகை யிறுதிக்கண்வந்த சாரியை இன். மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற் ருமை நீங்குதல். (௧௬௮)

## தளர்வறிந்துரைத்தல்.

தளர்வறிந்துரைத்தலென்பது வரைவுமாட்சிமைப் படாதா யின் நீயவளையுடன்கொண்டு போவென்பது பயப்ப, கடலையுங்

கானலையு நோக்கிக் கண்ணீர்கொண்டு தன்னையத்தாரையெல்லாம் புல்லிக்கொண்டாள்; அவள் கருதியதின்னதென்று தெரியாதெனத் தோழி தலைமகளது வருத்தங் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மைதயங்குந்திரைவாரியைநோக்கிமடலவிழ்பூங், கைதை
யங்கானலைநோக்கிக்கண்ணீர்கொண்டெங்கண்டர்தில்லைப்
பொய்தயங்குந்நுண்மருங்குனல்லாரையெல்லாம்புல்லினாள்
பைதயங்கும்மரவம்புரையும்மல்குற்பைந்தொடியே.

தண்டுறைவன் றளர்வறிந்து
கொண்டுநீங்கெனக் குறித்துரைத்தது.

இ - ள். பை தயங்கும் அரவம் புரையும் அல்குற் பைந்தொடி - படம்விளங்கும் பாம்பையொக்கும் அல்குலையுடைய பைந்தொடி—மை தயங்கும் திரை வாரியை நோக்கி - கருமைவிளங்குந் திரையையுடைய கடலையுநோக்கி—மடல் அவிழ் பூங் கைதை கானலை நோக்கி - மடலவிழாநின்ற பூவையுடையவாகிய தாழையையுடைய கானலையுநோக்கி—கண்ணீர் கொண்டு - கண்ணீரைக் கொண்டு—எம் கண்டர் தில்லைப் பொய் தயங்கும் நுண் மருங்குல் நல்லாரை எல்லாம் புல்லினாள் - பின் எம்முடையகண்டரது தில்லைக்கணுளராகிய பொய்யாதல்விளங்கும் நுண்ணிய மருங்குலையுடைய தன்னையத்தாராகிய நல்லாரையெல்லாம் புல்லிக்கொண்டாள்; அவள்கருதியதொன் றுண்டுபோலும். எ - று.

கண்ணீர்கொண்டென்றது பெண்களுக்கியல்பான குணமொன்று, நெடுங்காலங் கூடமருவினாரை விட்டுநீங்குகின்ற துயரத்தாற் றோன்றியதொன்று, இக்காலமெல்லாம் உங்களைச் சேர்ந்துபோந்த பெருநலத்தான் இப்பெருநலம் பெற்றேனென்னு முவகைக்கண்ணீரொன்று. இப்பெருநலமென்றது உடன்போக்கை. ஆதலான், நல்லாரையெல்லாம் புல்லிக்கொண்டு கண்ணீர் கொண்டாள் பொய்போலு மசையுமருங்குலெனினு மமையும். குறித்துரைத்தது-கொண்டு நீங்கென்பது பயப்பவுரைத்தது. (௧௯௯)

## குறிப்புரைத்தல்.

குறிப்புரைத்தலென்பது வருத்தங்கூறிப் போக்குணர்த்தி அதுவழியாக நின்று, என்னைப் புல்லிக்கொண்டு தன்னுடைய பூவையையும் பந்தையும், பாவையையுங் கிளியையும் இன்றென் கைத் தந்தாள்; அது நின்னோடுடன் போதலைக் கருதிப்போலுமெ

ணத் தோழி தலைமகனுக்குத் தலைமகளது குறிப்புரையா நிற்றல். அதற்குச்செய்யுள்—

மாவைவந்தாண்டமென்னோக்கிதன்பங்கர்வண்டில்லைமல்லற், கோவைவந்தாண்டசெவ்வாய்க்கருங்கண்ணிகுறிப்பறியேன், பூவைதந்தாள்பொன்னம்பந்துதந்தாளென்னைப்புல்லிக்கொண்டு,பாவைதந்தாள்பைங்கிளியளித்தாளின்றென்பைந்தொடியே.

நறைக் குழலி
குறிப் புரைத்தது.

இ-ள். என் பைந்தொடி - என்னுடைய பைந்தொடி— இன்று என்னைப் புல்லிக் கொண்டு பூவை தந்தாள் - இன்றென்னைப் புல்லிக்கொண்டு தன்பூவையை யென்கையிற்றந்தாள்— பொன் பந்து தந்தாள் - பின் பொற்றகட்டாற் புனைந்த பந்தைத் தந்தாள்—பாவை தந்தாள் - பின்றன் பாவையைத்தந்தாள்—பைங்கிளி அளித்தாள் - பைங்கிளியையுமளித்தாள்—மாவை வந்து ஆண்ட மெல் நோக்கிதன் பங்கர் - மானைச்சென்றடிமைக்கொண்ட மெல்லிய நோக்கையுடையாளது கூற்றையுடையவரது— வண் தில்லை மல்லல் கோவை வந்து ஆண்ட செவ்வாய்க் கருங்கண்ணி குறிப்பு அறியேன் - வளவியதில்லை வரைப்பினுண்டாகிய வளத்தையுடைய கொவ்வைக்கனியைச் சென்றாண்ட செவ்வாயையுடைய இக்கருங்கண்ணியது கருத்தறிகின்றிலேன்; நின்னுடன் செல்லப்போலும். எ-று.

புல்லிக்கொண்டு பாவையைத் தந்தாளென்றியைத்து, பாவை மேலுள்ளவன்பால் அதனைத் தருவழிப் புல்லிக்கொண்டு தந்தாளென் றுரைப்பாருமுளர். இவையிரண்டற்கும் மெய்ப்பாடு பெருமிதம். பயன் உடன்போக் குணர்த்துதல். (உOO)

## அருமையுரைத்தல்.

அருமையுரைத்தலென்பது குறிப்புரைத்துப் போக்குடம்படுத்திய தோழிக்கு, கொங்கைபொருது நடுங்காநின்ற இடையினையுடையாளது மெல்லியவடிக்கு யான்செல்லும் வெஞ்சுரந்தகாது; அதன்மேலும் எம்பதியுஞ் சேய்த்து; அதனால் நீ கருதுகின்ற காரியமிகவுமருமையுடைத்தெனத் தலைமகன் போக்கருமை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மெல்லியல்கொங்கைபெரியமின்னேரிடைமெல்லடிபூக்
கல்லியல்வெம்மைக்கடங்கடுந்தீக்கற்றுவானமெல்லாஞ்
சொல்லியசீர்ச்சுடர்த்திங்களங்கண்ணித்தொல்லோன்புலியூ
ரல்லியங்கோதைநல்லாயெல்லைசேய்த்தெம்மகனகரே.

கானின்கடுமையு மானின்மென்மையும்
பதியின்சேட்சியு மிதுவெனவுரைத்தது.

இ - ள். வானம் எல்லாம் கற்றுச் சொல்லிய சீர் - வானுலகெங்கும் ஆண்டையரால் கற்றுச்சொல்லப்பட்ட புகழையும்—சுடர்த் திங்கள் கண்ணித் தொல்லோன் புலியூர் - சுடரையுடைய திங்களாகிய கண்ணியையுமுடைய பழையோனது புலியூரில்—அல்லி அம் கோதை நல்லாய் - அல்லியங்கோதையையுடைய நல்லாய்—மெல்லியல் கொங்கை பெரிய - மெல்லியலுடைய கொங்கைகள் பெரிய—இடை மின் நேர் - அவற்றைத்தாங்கு மிடைநுடக்கத்தான் மின்னுக்கு நேராயிருந்தது—மெல் அடி பூ - மெல்லியவடிகள் பூவேயாயிருந்தன—கல் இயல் வெம்மைக் கடம் கடுந் தீ - கல்லின்கணுண்டாகிய வெம்மையையுடைய காடு அவ்வடிக்குத் தகாததாய்க் கடியதீயாயிருந்தது—எம் அகல் நகர் எல்லை சேய்த்து - அதன்மேல் எம்முடைய வகன்றநகரும் எல்லைசேய்த்தாயிருந்தது; அதனான் நீகருதியது பெரிதுமரிது. எ - று.

கல்லானியன்ற கடமென வியைப்பினுமமையும். எல்லை சேய்த்தென்பன ஒரு சொன்னீர்மைப்பட்டு அகனகரென்னு மெழுவாய்க்கு முடிபாயின. வானரெல்லாமென்பதூஉம் பாடம். இது வென்பதனை எல்லாவற்றோடுங் கூட்டுக. மெய்ப்பாடு இளிவரல். பயன் தலைமகணிலைமை யுணர்த்துதல். (உ0க)

## ஆதரங்கூறல்.

ஆதரங்கூறலென்பது போக்கருமை கூறிய தலைமகனுக்கு, நின்னோடு போகப்பெறின் அவளுக்கு வெஞ்சுரமுந் தண்சுரமாம், நீ யருமைகூறாது அவளைக் கொண்டுபோவெனத் தோழி தலைமகளதாதரங் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பிணையுங்கலையும்வன்பேய்த்தேரினைப்பெருநீர்நசையா
லணையுமுரம்புநிரம்பியவத்தமுமையமெய்யே
யிணையுமளவுமில்லாவிறையோனுறைதில்லைத்தண்பூம்
பணையுந்தடமுமன்றேநின்னொடேகினெம்பைந்தொடிக்கே.

அழற்றடம்புரையு மருஞ்சுரமதுவு
நிழற்றடமவட்கு நின்னொடேகினென்றது.

இ - ள். பிணையும் கலையும் - பிணையுங் கலையும்—பெருநீர் நசையால்-மிக்க நீர்வேட்கையால்—வன் பேய்த் தேரினை அணையும் முரம்பு நிரம்பிய அத்தமும் - பெரிய பேய்த்தேரினைச்சென்றணுகும் முரம்பானிரம்பிய சுரமும்—ஐய - ஐயனே—நின்னொடு ஏகின் மெய்யே எம் பைந்தொடிக்கு - நின்னோடு செல்லின் மெய்யாக எம்பைந்தொடிக்கு—இணையும் அளவும் இல்லா இறையோன் உறை தில்லைப் பூம் தண் பணையும் தடமும் அன்றே - ஒப்புமெல்லையுமில்லாத இறையோனுறைகின்ற தில்லைவரைப்பிற் பூக்களையுடைய குளிர்ந்த மருதநிலமும் பொய்கையுமல்லவோ! நீ யிவ்வாறுகூறுவதென்னை. எ - று.

முரம்பு கல்விரவி யுயர்ந்திருக்குநிலம். ஏகினென்னும் வினையெச்சம் பணையுந்தடமுமாமென விரியுமாக்கத்தோடு முடிந்தது. அழற்றடம்-நிக்காய்கலம். விகாரவகையால் தடா தடமென நின்றது. அழலானிறைந்த பொய்கையெனினு மமையும். அலங்காரம் புகழாப்புகழ்ச்சி. (உ0உ)

## இறந்துபாடுரைத்தல்.

இறந்துபாடுரைத்தலென்பது ஆதரங்கூறிய தோழி, நீயுடன் கொண்டு போகாயாகில் அலராலுங் காவன்மிகுதியாலும் நின்னை யெதிர்ப்படுதலரிதாகலின், தடந்துறந்த கயல்போல இறந்து படுமெனத் தலைமகளிறந்துபாடு கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

இங்கயலென்னீ பணிக்கின்றதேதந்தவிணைப்பதில்லாக்
கங்கையஞ்செஞ்சடைக்கண்ணுதலண்ணல்கடிகொடில்லைப்
பங்கயப்பாசடைப்பாய்தடநீயப்படர்தடத்துச்
செங்கயலன்றேகருங்கயற்கண்ணித்திருநுதலே.

கார்த்தடமுங் கயலும்போன்றீர்
வார்த்தடமுலையு மன்னனுமென்றது.

இ - ள். இணைப்பது இல்லாக் கங்கை அம் செஞ்சடைக் கண் நுதல் அண்ணல் கடி கொள் தில்லை - இணைக்கப்படுவதொரு பொருளுமில்லாத கங்கையையுடைய வழகிய செஞ்சடையையுங் கண்ணையுடைய நுதலையுமுடைய வண்ணலது காவலைப்பொருந்திய தில்லைவரைப்பின்—பங்கயப் பாசடைப் பாய்தடம் நீ - பங்கயத்தின் பசியவிலைகளையுடைய பரந்த பொய்கை நீ—கருங்கயல்

கண் இத்திருநுதல் படர் தடத்துச் செங்கயல் அன்றே - கருங்க பல்போலுங் கண்ணையுடைய இத்திருநுதல் அகன்றவப்பொய் கைக்கண்வாழுஞ் செங்கயலன்றே, அதனால்—ஏந்தல்-ஏந்தால்—இங்கு நீ அயல் பணிக்கின்றது என் - நின்னோடேகுமிடத்து வே ரொன்றாலொருதுன்பம் வருவதாக இவ்விடத்து நீயயன்மைகூறு கின்றதென்! செங்கயற்குப் பங்கயத்தடமல்லது வேறுவேண்டப் படுவதொன்றுண்டோ! எ - று.

கண்ணுதலாகிய வண்ணமெனினு மமையும். உடன்கொண்டு போகாயாயின், அலரானும் காவன்மிகுதியானு நின்னைத் தலைப்ப டுதலரிதாகலிற் றடந்துறந்த கயல்போல இவளிறந்துபடுமென்பது கருத்து. இவை யிரண்டற்கும் மெய்ப்பாடு பெருமிதம். பயன் உடன்போக்கு வற்புறுத்தல். (உ0௧)

## கற்புநலனுரைத்தல்.

கற்புநலனுரைத்தலென்பது தலைமகனைப் போக்குடம்படுத் திய தோழி, தலைமகளுழைச்சென்று, மகளிர்க்குப் பாதுகாக்கப் படுவனவற்றுள் நாண்போலச் சிறந்தது பிறிதில்லை; அத்தன்மைத் தாகிய நாணுங் கற்புப்போலச் சீரியதன்றென உலகியல் கூறுவாள் போன்று, அவள் உடன்போக்குத் துணியக் கற்புநலங் கூறாநிற் றல். அதற்குச்செய்யுள்—

**தாயிற்சிறந்தன்றுநாணுடையலாருக்கந்நாணடகைசால்**
**வேயிற்சிறந்தமென்றோளிதிண்கற்பின்விழுமிதன்றீங்**
**கோயிற்சிறந்துசிற்றம்பலத்தாடுமெங்கூத்தப்பிரான்**
**வாயிற்சிறந்தமதியிற்சிறந்தமதிநுதலே.**

பொய்யொத்தவிடை போக்குத்துணிய
வையத்திடை வழக்குரைத்தது.

இ - ள். ஈங்கோயில் சிறந்து சிற்றம்பலத்து ஆடும் - ஈங்கோ யிடத்துப் பொலிந்துமேவிச் சிற்றம்பலத்தின்கணின்றாடும்—எம் கூத்தப்பிரான் வாயிற் சிறந்த மதியிற் சிறந்த மதி நுதல் - எம்மு டைய கூத்தனாகிய பிரானது வாயின்கண் எப்பொழுதும்வந்து சிற த்தற்குக் காரணமாகிய அறிவாற் சிறப்பையுடையையாகிய மதிநு தால்—தையலாருக்கு நாண் தாயிற் சிறந்தன்று - மகளிர்க்குப்பழி நீக்கிப் பாதுகாத்தலில் நாண் தாய்போலச்சிறந்தது—அந்நாண் - அத்தன்மைத்தாகிய நாண்—தகை சால் வேயிற் சிறந்த மென்

தோளி - அழகமைந்த வேய்போலச்சிறந்த மெல்லிய தோள்களையுடையாய்—திண் கற்பின் விழுமிது அன்று - திண்ணிய கற்புப்போலச் சிறிதன்று. எ - று.

தாயினுஞ் சிறந்ததன்று நாணென்றுரைப்பினு மமையும். நாணென்பது ஒருபொருட் குரிமையாகலிற் றுயெனவொருமை கூறினர். "ஏவலிளையர் தாய்வயிறு கரிப்ப" என்பதுபோல அமையுமாறு முடைத்து. அன்றியும், "உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ்—செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" * என்றுராகலின், வாயிற் சிறந்த மதியிற் சிறந்த வென்பதற்குத் தாய்போல நாண்சிறத்தலும் நாணினுங் கற்புச்சிறத்தலுமாகிய இரண்டும் கூத்தப்பிரான்வாயிற் சிறந்த நூல்களிடத்துச் சிறப்புடைய பொருளென்றுரைப்பினு மமையும். இது குறிப்பெச்சம். போக்குத் துணிய போக்குத் துணியும் வண்ணம். மெய்ப்பாடு அது. பயன் தலைமகளை யுடன்போக்கு நேர்வித்தல். (உ௦ச)

## துணிந்தமைகூறல்.

துணிந்தமை கூறலென்பது உலகியல் கூறுவாள்போன்று கற்புவழி நிறுத்தி, எம்பெருமான் நின்னை நீரில்லாத வெய்ய சுரத்தே உடன்கொண்டு போவானாக நினையாநின்றான்; இதற்கு நின் கருத்தென்னோவெனத் தோழி தலைமகளுக்குத் தலைமகனினைவு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**குறப்பாவைநின்குழல்வேங்கையம்போதொடுகோங்கம்விராய்,**
**நறப்பாடலம்புனைவார்நினைவார்தம்பிரான்புலியூர்**
**மறப்பானடுப்பதொர்தீவினைவந்திடிற்சென்றுசென்று**
**பிறப்பானடுப்பினும்பின்னுந்துன்னத்தகும்பெற்றியரே.**

பொருவேலண்ணல் போக்குத்துணிந்தமை
செருவேற்கண்ணிக்குச் சென்றுசெப்பியது.

இ - ள். குறப் பாவை - குறப்பாவாய்—தம்பிரான் புலியூர் மறப்பான் அடுப்பது ஓர் தீவினை வந்திடின் - தம்பிரானது புலியூரை மறக்கக்கூடுவதொரு தீவினைவிளைவுவருமாயின்—சென்று சென்று பிறப்பான் அடுப்பினும் - பலயோனிகளினுஞ் சென்று சென்று பிறக்கக்கூடினும்—பின்னுந் துன்னத்தகும் பெற்றியர் - பின்னுஞ்சென்று சேரத்தகுந் தன்மையையுடையவர்—நின் குழல் வேங்கைப் போதொடு கோங்கம் விராய் - நின்குழலின்கணுண்

* தொல். பொருளதிகாரம், களவியல், உஉ.

டாகிய வேங்கைப்பூவோடு கோங்கம்பூவைவிரவி—நறப் பாடலம் புனைவார் நினைவார் - தேனையுடைய பாதிரிமலரைப் புனைவாராக நினையாநின்றார். எ - று.

புனைவாரென்னு முற்றுச்சொல் செயவெனெச்சமாகத் திரித் துரைக்கப்பட்டது. புனைவாராயுடன்போதலை நினையாநின்றாரென் றுரைப்பினு மமையும். நினைவாரென்னு மெதிர்காலத்து முற்றுச் சொல் நிகழ்காலத்துக்கண் வந்தது. கோங்கம்விராய்ப் பாடலம் புனைவார் நினைவாரென்றதனான், நீரிலாற்றிடை நின்னொடு செல்ல லுற்றாரென்பது கூறினாளாம். புலியூரை யுணர்ந்தார்க்குப் பின்னை மறத்த லரிதென்னுங்கருத்தான், மறப்பானடுப்பதொர் தீவினை வந்திடினென்றாள். புலியூரை யொருகாலுணர்ந்த துணையானே பிறவி கெடுமன்றே; அவ்வாறன்றி யதனைமறந்தவாற்றானே பிறக் கக் கூடினுமென்னுங் கருத்தால், பிறப்பானடுப்பினுமென்றாள். அலர்நாணி உடன்போகாது ஈண் டிற்செறிக்கப்பட்டு அவரை யெதிர்ப்படாதிருத்தல் அன்பன்றென்னுங் கருத்தால், பிறப்பா னடுப்பினும் பின்னுந் துன்னத்தகும் பெற்றியரென்றாள். பெற்றிய ரென்பதனை வினைக்குறிப்பு முற்றாகவுரைப்பினு மமையும். உன் னத்தகும் பெற்றியரென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு அது. பயன் தலைமகன் உடன்போக்கு நேர்ந்தமை யுணர்த்துதல். (உ0டு)

## துணிவொடுவினாவல்.

துணிவொடு வினாவலென்பது தலைமகனினைவு கேட்ட தலை மகள் அவனினைவின்படியே துணிந்து நின்று, இந்நீரில்லாத வெ ய்யசுரத்தே யிப்பொழுதிவர் நம்மையுடன்கொண்டு போகைக்குக் காரணமென்னோவெனத் தோழியை வினாவாநிற்றல். அதற்குச் செய்யுள்—

நிழற்றலை தீநெறிநீரில்லைகானக மோரிகத்து
மழற்றலைவெம்பரற்றென்பரென்னோதில்லையம்பலத்தான்
கழற்றலைவைத்துக்கைப்போதுகள்கூப்பக்கல்லாதவர்போற்
குழற்றலைச்சொல்லிசெல்லக்குறிப்பாகுநங்கொற்றவர்க்கே.

சிலம்பன் றுணிவொடு செல்சுர நினைந்து
கலம்புனைகொம்பர் கலக்கமுற்றது.

இ - ள். நிழல் தலை தீ நெறி நீர் இல்லை - நிழலிடந் தீந்தவழி நீருடைத்தன்று—ஓரி கத்தும் கானகம் அழல் தலை வெம்பரற்று என்பர் - இருமருங்குமுண்டாகிய ஓரி கூப்பிடுங்காடு அழலுறு

போலுநுதியையுடைய வெய்யபரலேயுடைத்தென்று சொல்லுவர்— தில்லே அம்பலத்தான் கழல் தலே வைத்துக் கைப் போதுகள் கூப்பக் கல்லாதவர் போல் - தில்லேயம்பலத்தின்கண்ணுனது கழல்களைத் தந்தலேமேல்வைத்துக் கையாகிய போதுகளைக்கூப்பப் பயிலாதவரைப்போல இத்தன்மைத்தாகிய நெறிக்கண்—குழல் தலேச் சொல்லி - குழலிடத்துச் சொற்போலுஞ் சொல்லேயுடையாய்— நம் கொற்றவர்க்கு செல்லக் குறிப்பு ஆகும் என்னே - நங்கொற்றவர்க்குச் செல்லக் குறிப்புண்டாகின்ற இஃதென்னே! எ - று.

நீரில்லேயென்னுஞ் சொற்கள் ஒரு சொன்னீரவாய் நெறியென்னு மெழுவாய்க்குப் பயனிலேயாயின. நெறிக்கணீரில்லேயென விரிப்பினுமமையும். நிழலிடந்தீயோடொக்குநெறி; அந்நெறி நீருடைத்தன்று; கானகமெங்குமோரிகூப்பிடும்; அக்கானகம் அழற்றலே வெம்பரலேயுமுடைத்து என்றுரைப்பினு மமையும். இப்பொருட்குக் கானகமோரிகத்து மென்பதற்கு நெறிநீரில்லேயென்றதற்குரைத்ததுரைக்க. மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்றுமை நீங்குதல். (உ0௬)

## போக்கறிவித்தல்.

போக்கறிவித்தலென்பது இப்பொழுதவர் போகைக்குக் காரணமென்னேவென்று கேட்ட தலேமகளுக்கு நீங்கள் உடம்புமுயிரும்போல ஒருவரையொருவரின்றியமையீராயினீர்; இத்தன்மைத்தாகிய நுங்காதலேயறிந்து வைத்தும் அவற்குவருமேதம் நினைதென்றஞ்சி யானவனே வரவுவிலக்குவேன்; அவனுமவ்வாறு வருதலேயொழிந்து வரைவொடுவரிற் பொன் முதலாகிய வெல்லாவற்றையு நினக்கு முலேப்பரிசம் பெறினும் நமர் நின்னேக்கொடார்; சொல்லுமிடத்து இதுவன்றே நீரருஞ்சுரம் போகைக்குக் காரணமென்று தோழி தலேமகனது போக்கறிவியா நிற்றல். அதற்குச் செய்யுள்—

காயமுமாவியுநீங்கள்சிற்றம்பலவன்கயிலேச்
சீயமுமாவும்வெரீஇவரலென்பல்செறிதிரைநீர்த்
தேயமும்யாவும்பெறினுங்கொடார்நமரின்னசெப்பிற்
றேயமுநாடுமில்லாச்சுரம்போக்குத்துணிவித்தவே.

பொருசுடர்வேலவன் போக்குத்துணிந்தமை
யரிவைக்கவ ளறியவுரைத்தது.

இ - ள். நீங்கள் காயமும் ஆவியும் - நீங்கள் உடம்புமுயிரும் போல ஒருவரையொருவரின்றி யமையாதவன்பையுடையீர்—சிற்

றம்பலவன் கயிலைச் சீயமும் மாவும் வெரீஇ வரல் என்பல் - இத்த ன்மைத்தாகிய நுங்காதலைநினையாது சிற்றம்பலத்தான் கைலையிற் சீயத்தையும் அல்லாத கொடுவிலங்கையுமஞ்சி யானவனை வரற்பா லையல்லையென்று கூறுவேன்—செறி திரை நீர்த் தேயமும் யாவும் பெறினும் நமர் கொடார் - அவ்வாறு வருதலையொழிந்து வரைவு வேண்டின், நெருங்கிய திரைகளையுடைய கடலாற்சூழப்பட்ட இந் நிலத்தையும் பொன்முதலாகிய வெல்லாவற்றையும் பெறினும் நமர் நின்னைக்கொடார்கள், அதனால்—தோயமும் நாடும் இல்லாச் சுரம் போக்குத் துணிவித்த செப்பில் இன்ன - நீரு மக்கள்வாழுமிடமு மில்லாத சுரங்களைப் போதலைத்துணிவித்தன சொல்லுமிடத்து இத்தன்மையனவன்றே? எ - று.

நீங்கள் காயமுமாவியும்போல வின்றியமையாமையின் அவ ற்கு வருமேதநினதென்றஞ்சி அவன் வரவு விலக்குவேனென்று ளாக வுரைப்பினுமமையும். துணிவித்ததென்பது பாடமாயின், துணிவித்ததனைச் செப்பினின்னவெனக் கூட்டியுரைக்க. அறிய- இன்னகாரணத்தானென்றறிய. மெய்ப்பாடு பெருமிதம். பயன் உடன்போக்கு மாட்சிமைப்படுத்தல். (உ0எ)

## நாணிழந்துவருந்தல்.

நாணிழந்து வருந்தலென்பது உடன்கொண்டு போகைக்குக் காரணங்கேட்ட தலைமகள், ஒருநாளுமென்னை விட்டு நீங்காது என்னுடனே வளர்ந்த பொலிவுடைத்தாகிய நாண் கற்பினெதிர் நிற்கமாட்டாது தன்னைவிட்டு நீங்காத என்னைக் கழிவதாக; மக ளிர் எழுபிறப்பின் கண்ணுங் குடியிற்பிறவாதொழிகவெனத் தான தற்குப் பிரிவாற்றாமையான் வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மற்பாய்விடையோன்மகிழ்புலியூரென்னொடும்வளர்ந்த
பொற்பார்திருநாண்பொருப்பர்விருப்புப்புகுந்துநுந்தக்
கற்பார்கடுங்கால்கலக்கிப்பறித்தெறியக்கழிக
விற்பாற்பிறவற்கவேழையர்வாழியெழுமையுமே.

கற்புநாணினு முற்சிறந்தமையிற்
சேணெறிசெல்ல வாணுதறுணிந்தது.

இ - ள். மல் பாய் விடையோன் மகிழ் புலியூர் - வளத்தையு டைய பாயும்விடையையுடையவன் விரும்பும்புலியூரில்—என்னொ டும் வளர்ந்த பொற்பு ஆர் திருநாண் - என்னோடுந்தோன்றி என் னோடொக்கவளர்ந்த பொலிவார்ந்த திருவையுடையநாண்—பொ

ருப்பர் விருப்புப் புகுந்து நந்த - பொருப்பர்மேல் யான்வைத்த விருப்பம் இடையேபுகுந்து தள்ள நின்றநிலைகுலைந்து—கற்பு ஆர் கடுங் கால் கலக்கிப் பறித்து எறிய - கற்பாகிய நிறைந்த கடியகாற் றலைத்துப் பிடுங்கி என்வயிற்கிடவாமைப் புறத்தெறிய—கழிக - என்னைக்கழிவதாக—ஏழையர் எழுமையும் இற் பால் பிறவற்க - இனி மகளிர் எழுபிறப்பின்கண்ணுங் குடியிற்பிறவாதொழிக. எ-று.

நாண்கழிகவென வியையும். வாழி அசைநிலை. கற்பாங் கடுங் காலென்பதூஉம் பாடம். முற்சிறந்தமையின்-முன்னெண்ணச் சிறந்தமையின். மல்லல் மல்லெனக் கடைக்குறைந்து நின்றது. மெய்ப்பாடு அது. பயன் உடன்போக்கு வலித்தல். (உ0அ)

## துணிவெடுத்துரைத்தல்.

துணிவெடுத்துரைத்தலென்பது தலைமகளைக் கற்புவழி நிறுத் திச்சென்று, நின்னோடு போதுமிடத்து நீ செல்லுங்கற்சுரம் அவ ளது சிற்றடிக்கு நற்றளிராம்போலுமெனத் தோழி தலைமகனுக்கு அவடுணிவெடுத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

கம்பஞ்சிவந்தசலந்தரனாகங்கறுத்ததில்லை
நம்பன்சிவநகர்நற்றளிர்கற்சுரமாகுநம்பா
வம்பஞ்சியாவம்புகமிகநீண்டரிசிந்துகண்ணாள்
செம்பஞ்சியின்மிதிக்கிற்பதைக்கும்மலர்ச்சீறடிக்கே.

செல்வமாதர் செல்லத்துணிந்தமை
தொல்வரைநாடற்குத் தோழிசொல்லியது.

இ - ள். நம்பா - நம்பா—அம்பு அஞ்சி ஆவம் புக மிக நீண்டு அரி சிந்து கண்ணாள் - அம்புகளஞ்சித் தூணியிற்புக்கொளிப்ப மிக நீண்டு செவ்வரி சிதறிய கண்களையுடையாளுடைய—செம்பஞ்சி யின் மிதிக்கின் பதைக்கும் மலர்ச் சீறடிக்கு - செம்பஞ்சியின் மிதி ப்பினுநடுங்கும் மலர்போலுஞ் சிறியவடிக்கு—கல் சுரம் நல் தளிர் ஆகும் - நீசெல்லுங் கல்லையுடையசுரம் நல்லதளிராம்போலும்; இவ ளது துணிவிருந்தவாற்றன். எ - று.

கம்பம் சிவந்த சலந்தரன் ஆகம் கறுத்த - அச்சத்தால்வரு நடுக்கத்தைவெகுண்ட சலந்தரனதாகத்தை முனிந்த—தில்லை நம் பன் சிவநகர் நல் தளிர் - தில்லையினம்பனது சிவநகரின் நற்றளிரெ னக்கூட்டுக.

சிவநகரென்பது ஒரு திருப்பதி. செம்பஞ்சியின் மிதிக்கிற் பதைக்கும் மலர்ச்சீறடியென்பன ஒருசொன்னீர்மைப்பட்டு நின்

றனை; இதனை யதிகாரப் புறனடையாற்கொள்க. அரிசிந்து கண்ணுளது என்னுமாறனுருபு தொகச்சொல்லாத விடத்துத் தொக்கு நின்றதெனினு மமையும். அரிசிந்து கண்ணுள் மலர்ச்சீறடியென்று கூட்டுவாருமுளர். தொல்வரை-பெரியவரை. மெய்ப்பாடு அது. பயன் உடன்போக்கு வற்புறுத்தல். (௨0க)

## குறியிடங்கூறல்.

குறியிடங் கூறலென்பது துணிவெடுத்துரைத்த தோழி, தாழாது இவ்விருட்காலத்துக் கொண்டுபோவாயாக; யானவளைக் கொண்டுவாரா நின்றேன்; நீ முன்புவந்தெதிர்ப்பட்ட அக்குறியிடத்து வந்து நில்லெனத் தலைமகனுக்குக் குறியிடங் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

முன்றேன் மணிகண்டமொத்தவனம்பலந்தம்முடிதாழ்த்
துன்னுதவர்வினைபோற்பரந்தோங்குமெனதுயிரே
யன்னளரும்பெறலாவியன்னயருளாசையினாற்
பொன்னார்மணிமகிழ்ப்பூவிழயாம்விழைபொங்கிருளே.

மன்னியவிருளிற் றுன்னியகுறியிற்
கோங்கிவர்கொங்கையை நீங்குகொண்டென்றது.

இ - ள். எனது உயிரே அன்னாள் அரும் பெறல் ஆவி அன்னாய் - எனதுயிரை யொப்பாளது அரியபெறுதலையுடைய ஆவியையொப்பாய்—அருள் ஆசையினால் - நினதருண்மேலுள்ள வாசையால்—பொன் ஆர் மணி மகிழ்ப் பூ விழ யாம் விழை பொங்கு இருள் - பொன்போலும் நிறைந்த நல்ல மகிழின்பூவிழ அவைவிழுகின்ற வோசையை நீசெய்யுங்குறியாக வோர்ந்து யாம் விரும்பு மிக்கவிருள்—முன்றேன் மணி கண்டம் ஒத்து - இக்காலத்துக் கருமையால் எல்லார்க்கு முன்னயவனதழகிய மிடற்றையொத்து—அவன் அம்பலம் தம்முடி தாழ்த்து உன்னாதவர் வினை போல் பரந்து ஓங்கும் - அவனதம்பலத்தைத் தம்முடிகளைத்தாழ்த்து நினையாதவரது தீவினைபோலக் கருமையோடுபரந்து மிகும். எ - று.

ஆவியன்னய தருளென்றுரைப்பாருமுளர். மணிமகிழ் பூவிழவென்பது பாடமாயிற் பூவிழவென்னுஞ் சொற்கள் ஒருசொன்னீர்மைப்பட்டு மணிமகிழென்னு மெழுவாயை யமைத்தனவாக வுரைக்க. இனித்தாழாதிவ்விருட்காலத்துப் போகவேண்டுமென்றும் இரவுக்குறிக்கண்வரும் அரையிருட்கண்வந்து அக்குறியிடத்து

நில்லென்றுங் கூறினாளாம். துன்னியகுறி-நீ முன்புவந்தியவளை யெதிர்ப்பட்ட குறியிடம். மெய்ப்பாடு அது. பயன் குறியிடமுணர்த்துதல். (உ௧௦)

## அடியொடுவழிநினைந்தவனுளம்வாடல்.

அடியொடு வழிநினைந்தவனுளம்வாடலென்பது தோழி குறியிடை நிறுத்திப் போகாநிற்ப, தலைமகன் அவ்விடத்தே நின்று, அனிச்சப்பூப்போலும் அழகிய வடிகள் அழற்கடம்போது மென்றால் இதற்கென்ன துன்பம் வந்தெய்துங் கொல்லோவெனத் தலைமகளடியொடு தான் செல்லாநின்றவழி நினைந்து, தன்னுள்ளம் வாடாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பனிச்சந்திரனொடுபாய்புனல்சூடும்பரன்புலியூ
ரனிச்சந்திகழுமஞ்சீறடியாவவழல்பழுத்த
கனிச்செந்திரளன்னகற்கடம்போந்துகடக்குமென்றா
லினிச்சந்தமேகலையாட்கென்கொலாம்புகுந்தெய்துவதே.

நெறியுறுகுழலியொடு நீங்கத்துணிந்த
உறுசுடர்வேலோ னுள்ளம்வாடியது.

இ - ள். பனிச் சந்திரனொடு பாய் புனல் சூடும் - குளிர்ச்சியையுடைய மதியோடு பரந்த புனலையுடைய கங்கையைச்சூடும்— பரன் புலியூர் அனிச்சம் திகழும் அம் சீறடி - பரனது புலியூரில் அனிச்சப்பூப்போலுமழகிய சிறியவடிகள்—ஆவ-அன்னோ—அழல் பழுத்த கனிச் செந்திரள் அன்ன - தீப்பழுத்த பழத்தினது சிவந்த திரள்போலும்—கல் கடம் போந்து கடக்கும் என்றால் - கற்றிரளையுடையகாட்டை இங்குநின்றும் போந்துகடக்குமாயின்— சந்த மேகலையாட்கு இனிப் புகுந்து எய்துவது என்கொல் - நிறத்தையுடைய மேகலையையுடையாட்கு இனி யென்காரணமாகவந்தெய்துந்துன்பம் வேறென்! எ - று.

ஆவ இரங்கற்குறிப்பு. மெய்ப்பாடு அழுகை. பயன் நெஞ்சோடுசாவுதல். (உ௧௧)

## கொண்டுசென்றுய்த்தல்.

கொண்டுசென்றுய்த்தலென்பது தலைமகன் குறியிடைநின்று, அடியொடு வழிநினைந்து, தன்னுள்ளம் வாடாநிற்ப, அந்நிலைமைக்கண், நின்னுள்ளத்துக் கருதியதனை இப்பொழுது நினக்குத் தெய்வந் தாராநின்றது; என்றோழியையுங் கொண்டுவந்தேன்; நீ யிவ

ளைக் கைக்கொள்ளெனத் தோழி தலைமகளைக் கொண்டுசென்று அவனொடு கூட்டாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வைவந்தவேலவர்சூழ்வரத்தேர்வருமவள்ளலுள்ளந்
தெய்வந்தருமிருடேங்குமுழுதுஞ்செழுமிடற்றின்
மைவந்தகோன்றில்லைவாழ்த்தார்மனத்தின் வழுத்துநர்போ
ன், மொய்வந்தவாவிதெளியுந்துயிலுமிம்மூதெயிலே.

வண்டமர் குழலியைக்
கண்டுகொள் கென்றது.

இ - ள். செழு மிடற்றின் மை வந்த கோன் தில்லை வாழ்த்தார் மனத்தின் - வளவியமிடற்றின்கட் கருமையுண்டாகிய கோனது தில்லையை வாழ்த்தாதாருடைய மனம்போல—முழுதும் இருள் தூங்கும்—உலகமுழுதும் இருள்செறியாநின்றது——வழுத்துநர் போல் - அத்தில்லையை வாழ்த்துவாருடைய மனம்போல—மொய் வந்த வாவி தெளியும் - பெருமையுண்டாகிய பொய்கைகள் கலக்க மற்றுத் தெளியாநின்றன—இம் மூதெயில் துயிலும் - இம்முதிய ஊர் துயிலாநின்றது, அதனால்—வை வந்த வேலவர் சூழ்வரத் தேர் வரும் வள்ளல் - கூர்மையுண்டாகிய வேலையுடைய விளையர்சூழத் தேரின்கண்வரும் வள்ளலே—உள்ளம் தெய்வம் தரும் - நினதுள்ளத்துக் கருதியதனைத் தெய்வம் இப்பொழுதே நினக்குத்தரும்; என்றோழியையுங் கொணர்ந்தேன்; காண்பாயாக. எ - று.

வள்ளலென்பது ஈண்டு முன்னிலைக்கண் வந்ததெனக்கொண்டு, வள்ளலதுள்ளமென்று விரித்துரைப்பினுமமையும். சூழ்வரத்தோ வருமென்று பாடமோதி ஊர்காக்குமிளையர் ஊரைச்சூழ்வரும் வரவுமினி யொழியுமென்றுரைப்பாருமுளர். மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகளைத் தலைமகனுடன்படுத்தல். (உகஉ)

## ஓம்படுத்துரைத்தல்.

ஓம்படுத்துரை , லென்பது கொண்டுசென்றுய்த்து இருவரையும் வலஞ்செய்து நின்று, மறை நிலைதிரியினும் கடன் முழுதும்வற்றினும், இவளிடத்து நின்னருடிரியாமற் பாதுகாப்பாயெனத் தோழி தலைமகளைத் தலைமகனுக் கோம்படுத்துரையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பறந்திருந்தும்பர்பதைப்பப்படரும்புரங்கரப்பச்
சிறந்தெரியாடிதென்றில்லையன்னாடிறத்துச்சிலம்பா
வறந்திருந்துன்னருளும்பிறிதாயினருமறையின்
றிறந்திரிந்தார்கலியும்முற்றும்வற்றுமிச்சேணிலத்தே.

தேம்படு கோதையை
யோம் படுத்தது.

இ - ள். சிலம்பா - சிலம்பா—இருந்து உம்பர் பதைப்பப் பறந்து படரும் புரம் கரப்ப - இருந்து உம்பரிடைவிடாது நடுங்கப் பறந்துசெல்லும் புரங்கள் கெட—சிறந்து எரியாடி தென் தில்லை அன்னாள் திறத்து - பொலிந்து எரியான் விளையாடுமவனது தெற்கின்கணுண்டாகிய தில்லையையொப்பாளிடத்து—அறம் இருந்து உன் அருளும் பிறிது ஆயின் - அறந்திருந்துதற்குக் காரணமாகிய உனதருளும் வேறுபடுமாயின்—இச் சேண் நிலத்து - இவ்வகன்றநிலத்து—அருமறையின் திறம் திரிந்து ஆர்கலியும் முற்றும் வற்றும் - அரிய மறைகளின் முறைமைபிறழக் கடலு மெஞ்சாது வற்றும். எ - று.

அறந்திரிந்தென்பது பாடமாயின், அறந்திரிந்தருமறையின் றிறந்திரிந்தென மாற்றியுரைக்க. அறந்திரிந்தாற்போல நின்னருளும் பிறிதாயினென வொருசொல் வருவித்துரைப்பினு மமையும். அருமறையுமென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு பெருமிதம். பயன் ஓம்படுத்தல். (உ௬௲)

## வழிப்படுத்துரைத்தல்.

வழிப்படுத்துரைத்தலென்பது ஓம்படுத்துரைத்த தோழி, ஆயமுமன்னையும் பின்வாராமல் இவ்விடத்தே நிறுத்தி இவ்வூரிடத்துள்ள அலரையு மொருவாற்றானீக்கி யானும்வந்து நுங்களைக் காண்பேனாக; நீயிருந் திருவொடுசென்று நும்பதியிடைச் சேர்வீராமினென இருவரையும் வழிப்படுத்துக் கூறாநிற்றல். அதற்குச் செய்யுள்—

ஈண்டொல்லையாயமுமௌவையுநீங்கவிவ்வூர்க்கௌவைதீர்த்
தாண்டொல்லைகண்டிடக்கூடுகநும்மையெம்மைப் பிடித்தின்
றீண்டெல்லைதீரின்பந்தந்தவன்சிற்றம்பலநிலவு
சேண்டில்லைமாநகர்வாய்ச்சென்றுசேர்கதிருந்தகவே.

மதிநுதலியை வழிப்படுத்துப்
பதிவயிற்பெயரும் பாங்கிபகர்ந்தது.

இ - ள். எம்மைப் பிடித்து ஆண்டு - எம்மை வலிந்துபிடித்தாண்டு—இன்று எல்லை தீர் இன்பம் தந்தவன் சிற்றம்பலம் நிலவு - இன்று எல்லையைநீங்கிய வின்பத்தைத் தந்தவனது சிற்றம்பலம் நிலைபெற்ற—சேண் தில்லை மா நகர்வாய் - சேய்த்தாகிய தில்லையா

கிய பெரியநகரிடத்து—திருத்தகச் சென்று சேர்க - நீர் பொலிவு தகச்சென்று சேர்வீராமின்—ஆயமும் ஔவையும் ஈண்டு நீங்க - ஆயமுமன்னையும் பின்வாராது இவ்விடத்தேநீங்க—இவ்வூர்க் கௌவை ஒல்லை தீர்த்து - இவ்வூரின்கணுண்டாகிய அலரை யொருவாற்றான் விரையநீக்கி—ஆண்டு நும்மை ஒல்லை கண்டிடக் கூடுக-யாமுண்டுவந்து நும்மைவிரையக் காணக்கூடுவதாக. எ-று.

சேண்டில்லை யென்பதற்கு மதின்முதலாயினவற்றானுயர்ந்த தில்லையெனினு மமையும். ஒல்லைகண்டிடவென விகாரவகையான் வல்லெழுத்துப் பெறாதுநின்றது. மெய்ப்பாடு அழுகை. பயன் அச்சந் தவிர்த்தல். (உகச)

## மெல்லக்கொண்டேகல்.

மெல்லக்கொண்டேகலென்பது தோழியை விட்டு உடன் கொண்டுபோகாநின்ற தலைமகன் நின்னொடு கேறலான் இன்று இக்காடு திருந்தச்செய்யப்பட்டாற்போலக் குளிர்ச்சியை யுடைத்தாயிருந்தது; இனி நின்சீறடி வருந்தாமற் பையச் செல்வாயாக வெனத் தன்னுய வெள்ளத்தோடும் விளையாடுமாறுபோலத் தலைமகளை மெல்லக்கொண்டு செல்லாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பேணத்திருத்தியசீறடிமெல்லச்செல்பேரரவம்
பூணத்திருத்தியபொங்கொளியோன்புலியூர்புரையு
மாணத்திருத்தியவான்பதிசேருமிருமருங்குங்
காணத்திருத்தியபோலுமுன்னுமன்னுகானங்களே.

பஞ்சிமெல்லடிப் பணைத்தோளியை
வெஞ்சுரத்திடை மெலிவகற்றியது.

இ - ள். பேரரவம் பூண - பெரியவரவங்களைப் பூணும்வண்ணம்—திருத்திய பொங்கு ஒளியோன் புலியூர் புரையும்-அவற்றின் றீத்தொழிலைநீக்கிய பெருகுமொளியையுடையவனது புலியூரை யொக்கும்—மாணத் திருத்திய வான் பதி இருமருங்கும் சேரும் - மாட்சிமைப்படக் குற்றங்கடிந்து செய்யப்பட்ட பெரியவூர்கள் நாஞ்செல்லுநெறியி னிருபக்கமுமொன்றேடொன்று சேர்ந்திருக்கும்—முன்னு மன்னு கானங்கள் காணத் திருத்திய போலும் - முன்னுளவாகியகாடுகள் நாஞ்சென்று காணும்வண்ணந் திருந்தச் செய்யப்பட்டனபோலும், அதனால்—பேணத் திருத்திய சீறடி - யான்விரும்பும்வண்ணங் கைபுனையப்பட்ட சிறியவடியையுடையாய்—மெல்லச் செல் - பையச்செல்வாயாக, எ - று.

பேணத்திருத்திய சீறடியென்பது சினையாகிய தன் பொருட் கேற்ற வடையடுத்து நின்றது. அரவந் திருத்தியவென வினையும். வான்பதி சேருமென்பதற்குப் பதி நெறியைச்சேர்ந்திருக்குமென் றுரைப்பினு மமையும். மெய்ப்பாடு உவகை. பயன் தலைமகளை யயர்வகற்றுதல். (௨௧௫)

## அடலெடுத்துரைத்தல்.

அடலெடுத்துரைத்தலென்பது மெல்லக்கொண்டு செல்லாநின்றவன், சேய்த்தாகச் சிலரை வரக்கண்டு தலைமகளஞ்சாநிற்ப, நின்னையன்மாராயின் அஞ்சுவேன்; அல்லது நால்வகைத்தானையுந் திரண்டுவரினும் என்கையில் வடித்திலங்காநின்ற எஃகின்வாய்க் கிரை போதாது; இதனை யிவ்விடத்தே காண்பாயாக வென்று, அவளதச்சந்தீரத் தன்னடலெடுத் துரையாநிற்றல். அதற்குச் செய்யுள்—

**கொடித்தேர்மறவர்குழாம்வெங்கரிநிரைகூடினென்கை**
**வடித்தேரிலங்கெஃகின்வாய்க்குதவாமன்னுமம்பலத்தோ**
**னடித்தேரலரென்னவஞ்சுவனின்னையரென்னின்மன்னுங்**
**கடித்தேர்குழன்மங்கைகண்டிடிவ்விண்டோய்கனவரையே.**

வரிசிலையவர் வருகுவரெனப்
புரிதருகுழலிக் கருளவனுரைத்தது.

இ - ள். நின் ஐயர் என்னின் - நின்னையன்மாராயின்—மன்னும் அம்பலத்தோன் அடித் தேரலர் என்ன அஞ்சுவன் - நிலைபெறுமம்பலத்தின்கண்ணுறனுடைய அடிகளை யாராய்ந்துணராதாரைப் போல அஞ்சுவேன், அல்லது—கொடித் தேர் - கொடியையுடைய தேரும்—மறவர் குழாம் - வீரரதுதிரளும்—வெம் கரி நிரை - வெய்யகரிநிரையும்—கூடின் - அனைத்துந் திரண்டுவரினும்—என்கை வடித்து எர் இலங்கு எஃகின் வாய்க்கு உதவா - என்கையில் வடிக்கப்பட் டழகுவிளங்காநின்ற எஃகினதுவாய்க்கு இரையுதவமாட்டா—மன்னும் கடித் தேர் குழல் மங்கை - நிலைபெற்ற நறுநாற்றத்தை வண்டுகளாராய்ந்துவருங் குழலையுடைய மங்காய்—விண் தோய் இக் கனவரைக் கண்டிடு - விண்ணினைத்தோயாநின்ற இப் பெரியவரையிடத் தியான்செய்வதனைக் காண்பாயாக. எ - று.

கூடினென்பதற்கு என்னைக் கிட்டினென்றுரைப்பினு மமையும். அடித்தேர்பவரென்பது பாடமாயின், என்ன வென்பதனை உவமவுருபாக்காது இவரையடித்தேர்பவரென்று பிறர் கருதவெ.

ன்றுரைக்க. கண்டிடிரென்பதூஉம் பாடம். மன்னுங்கடி யென்ப தற்கு வண்டெனா வொருசொல் வருவித்துரைக்க. வரிசிலையவர் வருகுவரென-வரிசிலையவர் வாராநின்றார் இவர் யாவரென. மெய்ப் பாடு பெருமிதம். பயன் தன்வலியுணர்த்தி யாற்றுவித்தல்.

இடைச்சுரத்து அவடமரெதிர்படை தொடர்ந்து நிற்ப வழி வருவார் விலக்கி வரைவித்துக்கொடுப்ப. என்னை "இடைச்சுர மருங்கின வடம ரெய்திக்—கடைக்கொண்டு பெயர்தலிற் கலங் கஞ ரெய்திக்—கற்பொடு புணர்ந்த கௌவை யுளப்பட—வப்பாற் பட்ட வொருதிறத் தானும்" * என்றார் தொல்காப்பியனார். (உகசு)

## அயர்வகற்றல்.

அயர்வகற்றலென்பது அடலெடுத்துரைத்து அச்சந் தீர்த்துக் கொண்டு போகாநின்றவன், இத்துன்பக்கடறு கடந்துசென்று இப்பொழுதே நாமின்பப்பதி காணப் புகாநின்றேம்; இனி நமக் கொரு குறைவில்லை யெனத் தலைமகளது வழிவருத்தந்தீரக் கூறா நிற்றல். அதற்குச்செய்யுள்—

**முன்னோனருண்முன்னுமுன்னாவினையின்மூனகர்துன்னு**
**மின்னாக்கடறிதிப்போழ்தேகடந்தின்றுகாண்டுஞ்சென்று**
**பொன்னாரணிமணிமாளிகைத்தென்புலியூர்ப்புகழ்வார்**
**தென்னாவெனவுடையானடமாடுசிற்றம்பலமே.**

இன்னல்வெங்கடத் தெறிவேலவ
னன்னமன்னவ ளயர்வகற்றியது.

இ - ள். முன்னோன் அருள் முன்னும் முன்னா - எல்லார்க் கும் முன்னாயவனதருளை முற்பிறப்பின்கண் ணுநினையாத—வினை யின் மூனகர் துன்னும் இன்னாக் கடறு இது இப்போழ்தே கடந்து - தீவினையையுடைய நீசர்சேருந் துன்பத்தைச் செய்யும் பாலைநில மிதனை யிப்பொழுதே கடந்து—பொன் ஆர் அணி மணி மாளிகைத் தென் புலியூர் - பொன்னிறைந்த வழகையுடைய மணி யால் விளங்கும் மாளிகையையுடைய தென்புலியூர்க்கண்—புகழ் வார் தென்னா என உடையான் நடம் ஆடு சிற்றம்பலம் - புகழ்ந்து ரைப்பார் தென்னனேயென்று புகழ என்னையுடையான் நின்றுகூ த்தாடுஞ் சிற்றம்பலத்தை—இன்று சென்று காண்டும் - இன்றுசெ ன்றுகாண்பேம்; இதுவன்றோ நமக்குவருகின்றவின்பம்! எ - று.

* பொருள். அகத்திணை, ௬௧.

தென்புலியூர்ச் சிற்றம்பலமென வியையும். உடையாரென்பது பாடமாயின்,தென்னனே யென்று புகழ வொருசிறப்புடையாரென் றுரைப்பினு மமையும். மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகளை யயர்வகற்றுதல். அலங்காரம் கூற்றிடத் திருபொருட்கண் வந்த வுயர்ச்சி வேற்றுமை. (உகஎ)

## நெறிவிலக்கிக்கூறல்.

நெறிவிலக்கிக் கூறலென்பது அயர்வகற்றிக்கொண்டு செல்லா நின்ற தலைமகனை, இனிச்செல்லு நெறிக்கண் நன்மக்களில்லை; நீ தனியை; இவள் வாடினாள்; பொழுதுஞ் சென்றது; ஈண்டுத் தங்கிப் போவாயாகவென, அவ்விடத்துள்ளோர் வழிவிலக்கிக் கூறாநிற் றல். அதற்குச்செய்யுள்—

விடலையுற்றாரில்லைவெம்முனைவேடர்தமியைமென்பூ
மடலையுற்றார்குழல்வாடினண்மன்னுசிற்றம்பலவர்க்
கடலையுற்றாரினெறிப்பொழிந்தாங்கருக்கன்சுருக்கிக்
கடலையுற்றான்கடப்பாரில்லையின்றிக்கடுஞ்சுரமே.

சுரத்திடைக்கண்டவர் சுடர்க்குழைமாதொடு
சரத்தணிவில்லோய் தங்குகென்றது.

இ - ள். விடலை - விடலாய்—உற்றார் இல்லை - இனிச்செல் லுநெறிக்கண் நன்மக்களில்லை—வெம்முனை வேடர் - உள்ளார் வெய்யமுனையிடத்து வேடரே—தமியை - நீதனியை—மென் பூ மடலை உற்று ஆர் குழல் வாடினள் - மெல்லிய பூவினிதழைப்பொ ருந்தி நிறைந்த குழலையுடையாள் வழிவந்த வருத்தத்தால்வாடி னாள்—மன்னு சிற்றம்பலவர்க்கு அடலை உற்றாரின் - நிலைபெற்ற சிற்றம்பலத்தையுடையவர்க் காட்படுந்தன்மையைப் பொருந்தின வர்களல்லாரைப்போல—எறிப்பு ஒழிந்து ஆங்கு அருக்கன் சுரு க்கிக் கடலை உற்றான் - விளக்கமொழிந்து அவ்விடத்து அருக்கன் றன் கதிர்களைச்சுருக்கிக் கடலைச் சென்றுற்றான்—இக் கடுஞ் சுரம் இன்று கடப்பார் இல்லை - இக்கடியசுரத்தை யிப்பொழுது கடப் பாருமில்லை; அதனாலீண்டுத் தங்குவாயாக. எ - று.

வேடரொடு சாராத நன்மக்கள் இவர்க்கணியராதலின், அவ ரை உற்றாரென்றார். வேடரி லுற்றாரில்லையென்று நன்றிசெய்யா ரென்பது பயப்பவுரைப்பினு மமையும். மடலென்றது தாழம்பூ மடலையென்பாரு முளர். சிற்றம்பலவர்க்கென்னு நான்கனுருபு

பகைப்பொருட்கண் வந்தது. அருக்கன் பெருக்கியென்றும் பெருகி யென்றும் பாடமாயின்,கெடுதலை மங்கலமரபிற் கூறிற்றெனக.

## கண்டவர்மகிழ்தல்.

கண்டவர் மகிழ்தலென்பது நெறிவிலக்குற்று வழிவருத்தந் தீர்ந்து ஒருவரையொருவர் காணலுற்று இன்புற்றுச் செல்லாநின்ற இருவரையுங்கண்டு, இவர்கள் செயலிருந்தவாற்றான் இப் பெருஞ்சுரஞ் செல்வதன்றுபோலும்; அதுகிடக்க இதுதானின்புறவுடைத்தாகியதோர் நாடகச் சுவையுடைத்தா யிருந்ததெனை எதிர் வருவார் இன்புற்று மகிழ்ந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

அன்பணைத்தஞ்சொல்லிபின்செல்லுமாடவனீடவன்றன்
பின்பணைத்தோளிவருமிப்பெருஞ்சுரஞ்செல்வதன்று
பொன்பணைத்தன்னவிறையுறைதில்லைப்பொலிமலர்மே
னன்பணைத்தண்ணறவுண்ணளிபோன்றொளிர்நாடகமே.

மண்டழற் கடத்துக்
கண்டவ ருரைத்தது.

இ - ள். அன்பு அணைத்து அம் சொல்லி பின் செல்லும் ஆடவன் - சிறுபுறமும் அசைநடையுங்காண்டற்கு அன்பானணைத்து அழகிய சொல்லையுடையாளது பின்னே ஆடவனொருகாற் செல்லாநின்றான்—அவன்றன் பின் பணைத்தோளி நீடு வரும் - முன்செல்லநாணிப் புறக்கொடையும் வலிச்செலவுங் காண அவனதுபின்னே வேய்போலுந் தோள்களையுடையாள் நெடும்பொழுது செல்லாநின்றாள்—இப் பெருஞ் சுரம் செல்வது அன்று - இருந்தவாற்றான் இவரதுசெயல் இப்பெரிய சுரத்தைச் செல்கையன்று—பொன் பணைத்தன்ன இறை உறை தில்லை - பொன்னொருவடிவுகொண்டு பெருத்தாற்போலு மிறை யுறைகின்ற தில்லைவரைப்பின்—நன் பணைப் பொலி மலர்மேல் தண் நறவு உண் அளி போன்று-நல்ல பணையிற் பொலிந்த மலரிடத்துக் குளிர்ந்த நறவையுண்ட வண்டுகளையொத்து—ஒளிர் நாடகம் - இன்பக்களியான் மயங்கி விளங்குவதொரு நாடகம். எ - று.

பெருஞ்சுரஞ் செல்வதன்றென்பதற்குப் பெருஞ்சுரந் தொலைவதன்றெனினு மமையும். பொன்பணைத்தாற்போலு மிறையென்பாருமுளர். கண்டார்க்கின்பஞ் செய்தலின், நாடகமென்றார். இவையிரண்டற்கும் மெய்ப்பாடு அழுகை. பயன் நெறிவிலக்குதல். ()

## வழிவிளையாடல்.

வழிவிளையாடலென்பது கண்டவர்மகிழக் கொண்டுசெல்லா நின்றவன், நெறிசெல்வருத்தத்தி னெகிழ்ந்த மேனியையுடைய நின்னைக் கண்டு கண்கடம்மாற் கொள்ளும் பயன் கொண்டனம்; இனிச் சிறிதிருந்து இக்கடுங்கானகந் தண்ணெனுமளவுஞ் செவி நிறைய நின்மொழி பருக வருவாயாகவெனத் தலைமகளுடன் விளையாடா நிற்றல். அதற்குச்செய்யுள்—

**கண்கடம்மாற்பயன்கொண்டனங்கண்டினிக்காரிகைநின்**
**பண்கடமென்மொழியாரப்பருகவருகவின்னே**
**விண்கடநாயகன்றில்லையின்மெல்லியல்பங்கனெங்கோன்**
**றண்கடம்பைத்தடம்போற்கடுங்கானகந்தண்ணெனவே.**

வன்றழற்கடத்து வடிவேலண்ணல்
மின்றங்கிடையொடு விளையாடியது.

இ - ள். கண்டு - நெறிசெல்வருத்தத்தி னெகிழ்ந்த மேனியையாகிய நின்னைக்கண்டு—கண்கள் தம்மால் பயன் கொண்டனம் - கண்களாற் கொள்ளும் பயன்கொண்டனம்—காரிகை - காரிகை நீர்மையாய்—இனி நின் பண் கட மென்மொழி ஆரப் பருக இன்னே வருக - இனிச் சிறிதிருந்து நினது பண்ணினது முறைமையையுடைய மெல்லியமொழியைச் செவிநிறையப் பருகுவான் இவ்விடத்து வருவாயாக—விண்கள் தம் நாயகன் - விண்ணுலகங்கடம்முடைய தலைவன்—தில்லையின் மெல்லியல் பங்கன் - தில்லைக்கணுளனாகிய மெல்லியல் கூற்றையுடையான்—எம் கோன் - எம்முடைய விறைவன்—தண் கடம்பைத் தடம் போல் கடுங் கானகம் தண்ணென - அவனது குளிர்ந்த கடம்பையிற் பொய்கை போலக் கடியகானகங் குளிருமளவும். எ - று.

தண்ணென வின்னேவருகவென வியையும். கடம்பை யென்பது ஒரு திருப்பதி. கடம்பைத்தடம்போற் கடுங்கானகங் குளிரும்வண்ணம் நின்மொழியைப் பருகவென்று கூட்டினுமமையும். மெய்ப்பாடு உவகை. பயன் மகிழ்தல். (உஉ0)

## நகரணிமைகூறல்.

நகரணிமை கூறலென்பது இருவருந் தம்முளின்புற்றுச் செல்லாநின்றமை கண்டு, இனிச் சிறிது நெறிசென்று அக்குன்றத்தைக் கடந்தால் நும்பதியாகிய நகர் விளங்கித் தோன்றுநிற்கும்; அத்துணை

யுங் கடிது செல்வீராமினென எதிர்வருவார் அவர் நகரணிமை கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

மின்றங்கிடையொடுநீவியன் றில்லைச்சிற்றம்பலவர்
குன்றங்கடந்துசென் முனின் றுதோன் றுங்குரூஉக்கமலந்
துன்றங்கிடங்குந் துறைதுறைவள்ளைவெள்ளைநகையார்
சென்றங்கடைதடமும்புடைசூழ்தருசேணகரே.

வண்டமர் குழலியொடு
கண்டவ ருரைத்தது.

இ-ள். மின் தங்கு இடையொடு - மின்போலுமிடையை யுடையாளோடு—நீ வியன் தில்லைச் சிற்றம்பலவர் குன்றம் கடந்து சென்முல் - நீயகன்ற தில்லையிற் சிற்றம்பலத்தையுடையவரது குன்றத்தைக்கடந்து அப்பாற் சிறிதுநெறியைச் சென்முல்—குரூஉக் கமலம் துன்று அம் கிடங்கும் - நிறத்தையுடைய தாமரைப்பூ நெருங்கிய அழகியகிடங்கும்—வள்ளை வெள்ளை நகையார் துறை துறை சென்று அங்கு அடை தடமும் - வள்ளைப் பாடலைப்பாடும் வெள்ளை முறுவலையுடையமகளிர் துறைதொறுந் துறைதொறுஞ்சென்று அவ்விடத்துச்சேரும் பொய்கைகளும்—புடை சூழ்தரு சேண் நகர் - பக்கத்துச்சூழ்ந்த அத்தில்லையாகிய வுயர்ந்தநகர்—நின்று தோன்றும் - இடையறுதுதோன்றும்; அத்துணையுங் கடிதுசெல்வாயாக. எ-று.

குழலியொடு கண்டவர்-குழலியொடு தலைமகனைக் கண்டவர். மெய்ப்பாடு பெருமிதம். பயன் இடமணித் தென்றல். (உஉக)

## நகர்காட்டல்.

நகர்காட்டலென்பது நகரணிமை கூறக்கேட்டு இன்புறக் கொண்டுசெல்லாநின்ற தலைமகன், அன்னந்துன்னிப் பிறையணிந்து சூலத்தையுடைத்தாகிய மாளிகைமேற் கொடிநுடங்க மதில் தோன்றாநின்ற அப்பெரிய நகர்காண் நம்முடைய நகராவதெனத் தலைமகளுக்குத் தன்னுடைய நகர் காட்டாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மின்போல்கொடிநெடுவானக்கடலுட்டிரைவிரிப்பப்
பொன்போல்புரிசைவடவரைகாட்டப்பொலிபுலியூர்
மன்போற்பிறையணிமாளிகைசூலத்தவாய்மடவாய்
நின்போனடையன்னந்துன்னிமுன்றோன் றுநன்னீணகரே.

கொடுங்கடங்கடந்த குழைமுகமாதர்க்குத்
தடங்கிடங்குசூழ் தன்னகர்காட்டியது.

இ - ள். நின் போல் நடை அன்னம் துன்னி - நின்னடை போலு நடையையுடைய அன்னங்கடுன்னி—மன்போல் பிறை அணி மாளிகை சூலத்தவாய் - மன்னனைப்போலப் பிறையையணிந்த மாளிகைகள் அவனைப்போலச் சூலத்தவுமாய்—முன் தோன்று நல் நீள் நகர் - முன்றோன்றுகின்ற நல்ல பெரியநகர்—மடவாய் - மடவாய்—மின் போல் கொடி நெடுவானக் கடலுள் திரை விரிப்ப - ஒளியானும் நுடக்கத்தானும் மின்னையொக்குங் கொடிகள் பெரியவானமாகிய கடலுட் டிரையைப்பரப்பப்—பொன் புரிசை வடவரை காட்டப் பொலி புலியூர்-பொன்னானியன்ற புரிசை மேருவைக்காட்டப் பொலியும் புலியூர்காண்; தொழுவாயாக. எ - று.

போலென்பது அசைநிலை. நிறத்தாற் பொன்போலும் புரிசையென்பாருமுளர். சூலத்தவாயென்னுஞ் சினைவினையெச்சம் முன்றோன்றுமென்னு முதல்வினையோடு முடிந்தது. துன்னியென இடத்து நிகழ்பொருளின் வினை இடத்தின்மேலேறி நின்றது. (உஉஉ)

## பதிபரிசுரைத்தல்.

பதிபரிசுரைத்தலென்பது நகர் காட்டிக்கொண்டு சென்று அந்நகரிடைப்புக்கு அவ்விடத்துள்ள குன்றுகள், வாவிகள், பொழில்கள், மாளிகைகள், தெய்வப்பதி இவையெல்லாந் தனித்தனி காட்டி, இதுகாண் நம்பதியாவதெனத் தலைமகளுக்குத் தலைமகன் பதிபரிசு காட்டாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**செய்குன்றுவையிவைசீர்மலர்வாவிவிசும்பியங்கி**
**நைகின்றதிங்களெய்ப்பாறும்பொழிலவைஞாங்கரெங்கும்**
**பொய்குன்றவேதியரோதிடமுந்திடமிந்திடமு**
**மெய்குன்றவார்சிலையம்பலவற்கிடமேந்திழையே.**

கண்ணிவர்வளநகர் கண்டுசென்றடைந்து
பண்ணிவர்மொழிக்குப் பதிபரிசுரைத்தது.

இ - ள். உவை செய் குன்று - உவை செய்குன்றுகள்—இவை சீர் மலர் வாவி - இவை நல்லமலரையுடைய வாவிகள்—அவை விசும்பு இயங்கி நைகின்ற திங்கள் எய்ப்பு ஆறும் பொழில் - அவை விசும்பின்கணியங்குதலான் வருந்துந் திங்கள் அயர்வுயிர்க்கும்பொழில்கள்—உந்திடம் ஞாங்கர் எங்கும் பொய் குன்ற வேதியர் ஓதிடம் - உவ்விடம் மிசையெங்கு முலகத்திற் பொய்முதலாகிய குற்றங்கெட மறையவர் மறைசொல்லுமிடம்—ஏந்திழை - ஏந்திழாய்—இந்திடமும் எய் குன்ற வார் சிலை அம்பலவற்கு இடம் -

இவ்விடமும் எய்தற்குக் கருவியாகிய குன்றமாகிய நீண்டவில்லையு டைய அம்பலவற் கிருப்பிடம்; இத்தன்மைத்திவ்வூர். எ - று.

இவையென்பது தன் முன்னுள்ளவற்றை. உவை யென்பது முன்னின்றவற்றிற் சிறிது சேயவற்றை. அவையென்பது அவற்றி னுஞ் சேயவற்றை. முன் சொல்லப்பட்டவையே யன்றி இதனையுங் கூறுகின்றேனென்பது கருத்தாகலின், இந்திடமுமென்னு மும்மை இறந்தது தழீஇயவெச்சவும்மை. உந்திடம் இந்திடமெனச் சுட் டீறு திரிந்து நின்றன. பண்ணிவர்மொழி-பண்போலுமொழி. இவை யிரண்டற்கும் மெய்ப்பாடு பெருமிதம். பயன் இடங் காட்டுதல். (உஉ௩)

## செவிலிதேடல்.

செவிலிதேடலென்பது இருவரையும் வழிப்படுத்திவந்து பிரி வாற்றாதுகவலாநின்றதோழியை, எம்பிள்ளை எங்குற்றது? நீ கவலா நின்றாய்; இதற்குக்காரண மென்னோவென்று வினவிச் செவிலி தலைமகளைத் தேடாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**மயிலெனப்பேர்ந்திளவல்லியினொல்கிமென்மான்விழித்துக்**
**குயிலெனப்பேசுமெங்குட்டனெங்குற்றதென்னெஞ்சகத்தே**
**பயிலெனப்பேர்ந்தறியாதவன்றில்லைப்பல்பூங்குழலா**
**யயிலெனப்பேருங்கண்ணாயென்கொலாமின்றயர்கின்றதே.**

கவலையுற்ற காதற்றோழியைச்
செவிலியுற்றுத் தெரிந்துவினையது.

இ - ள். மயில் எனப் பேர்ந்து - மயில்போலப் புடைபெயர் ந்து—இள வல்லியின் ஒல்கி - இளைய கொடிபோலநுடங்கி—மெல் மான் விழித்து - மெல்லிய மான்போல விழித்து—குயில் எனப் பேசும் எம் குட்டன் எங்குற்றது - குயில்போலச் சொல்லும் எமது பிள்ளை யாண்டையது—என் நெஞ்சகத்தே பயில் என - என்னெ ஞ்சின்கண்ணே தனக்குப் பயிற்சியென்று பலர் சொல்லும்வண் ணம்—பேர்ந்து அறியாதவன் தில்லைப் பல் பூங்குழலாய் - என்னெ ஞ்சினின்று நீங்கியறியாதவனது தில்லையிற் பலவாகிய பூக்களையு டைய குழலையுடையாய்—அயில் எனப் பேரும் கண்ணாய் - வேல் போலப்பிறழுங் கண்ணையுடையாய்—இன்று அயர்கின்றது என் கொலாம் - நீ யின்று வருந்துகின்றதென்னோ? எ - று.

எங்குற்றதென்பது ஒருசொல். என்னெஞ்சகத்தே பயிலெ னப் பேர்ந்தறியாதவனென்பதற்கு என்னெஞ்சின் கண்ணே நீ

பயிலவேண்டுமென்றொருகால் யான் கூறப் பின்னீங்கியறியாதவ னென்றுரைப்பினு மமையும். கண்ணிக்கென்பது பாடமாயின், அவள் காரணமாகப்போலும் இவள் வருந்துகின்றதென்று உய்த் துணர்ந்து அவட்கு நீ வருந்துகின்ற தென்னென வினவிற்றாக வுரைக்க. மெய்ப்பாடு மருட்கை. பயன் தலைமகட்குற்றதுணர்தல்.

## அறத்தொடுநிற்றல்.

அறத்தொடு நிற்றலென்பது தேடாநின்ற செவிலிக்கு, நீ போய் விளையாடச்சொல்ல யாங்கள் போய்த் தெய்வக் குன்றிடத்தே யெல்லாருமொருங்கு விளையாடா நின்றேமாக, அவ்விடத்தொரு பெரியோன் வழியே தார்சூடிப்போயினான்; அதனைக்கண்டு நின் மகள் இத்தாரையென்பாவைக்குத் தாருமென்றாள்; அவனும் வேண்டியது மறாது கொடுப்பானாதலிற் பிறிதொன்று சிந்தியாது கொடுத்து நீங்கினான்; அன்றறியாப்பருவத்து நிகழ்ந்ததனை "உற்றார்க் குரியர் பொற்றொடி மகளிர்—கொண்டார்க் குரியர் கொடுத்தார்" என்பதனை யின்றுட்கொண்டாள் போலும்; யானித்துணையு மறிவேனென்று உடன்போக்குத் தோன்றக்கூறி, தோழி அறத்தொடு நில்லாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**ஆளரிக்கும்மரிதாய்த்தில்லையாவருக்கும்மெளிதாந்**
**தாளரிக்குன்றிற்றன்பாவைக்குமேவித்தழறிகழ்வேற்**
**கோளரிக்குந்நிகரன்னாரொருவர்குரூஉமலர்த்தார், வாளரிக்**
**கண்ணிகொண்டாள்வண்டலாயத்தெம்வாணுதலே.**

சுடர்க்குழைப்பாங்கி படைத்துமொழிகிளவியிற்
சிறப்புடைச்செவிலிக் கறத்தொடுநின்றது.

இ - ள். ஆள் அரிக்கும் அரிதாய் - ஆட்செய்தல் அரிக்குமரிதாய்—தில்லை யாவருக்கும் எளிதாம் தாளர் இக்குன்றில் - அவ்வாட்செய்தல் தில்லைக்கணெல்லார்க்கு மெளிதாந் தாளையுடையவரது இம்மலையிடத்து—தழல் திகழ் வேல் கோள் அரிக்கு - தழல் விளங்கும் வேலையுடைய கோள்வல்ல அரிமாவிற்கு—நிகர் அன்னார் ஒருவர் குரூஉ மலர்த் தார் - மறுதலைபோல்வாரொருவரது நிறத்தையுடைய மலராணியன்றதாரை—வாள் அரிக் கண்ணி எம் வாள் நுதல் - வாள்போலுஞ் செவ்வரிபரந்த கண்ணையுடையளாகிய எம்முடையவாணுதல்--வண்டல் ஆயத்துத் தன்பாவைக்கு மேவிக் கொண்டாள் - வண்டலைச்செய்யு மாயத்தின்கண்ணே தன்பாவைக்கென்று அழுந்துகொண்டாள். இத்துணையுமறிவேன். எ-று.

ஆளரி ஒருகால் நரசிங்கமாகிய மாலெனினுமமையும். கோளரிக்கு நிகரன்னாரென்பதற்குக் கோளரிக்கொப்பாகிய அத்தன்மையரெனினுமமையும். இக்குன்றின்கண் வண்டலாயத்துமேவிக்கொண்டாளெனவியையும். தாளரிக்குன்றினென்றதனான், இது தெய்வந்தரவந்ததென்றும், பாவைக்கென்றதனான் அறியாப் பருவமென்றும், கோளரிக்கு நிகரன்னாரென்றதனான் இவட்குத் தக்காரென்றும், மேவியென்றதனாற் பயிர்ப்பு நீங்கிற்றென்றும், தாரென்றதனான் மெய்யுற்றதனோடொக்குமென்றுங் கூறினாளாம். மெய்ப்பாடு பெருமிதம். பயன் உடன்போக்குணர்த்துதல். (உஉ௫)

## கற்புநிலைக்கிரங்கல்.

கற்புநிலைக்கிரங்கலென்பது தோழி யறத்தொடுநிற்பக் கேட்ட செவிலி இஃதறமாயினும் இவள் பருவத்திற்குத்தகாது; அதுகிடக்க, இனியவளுக்கு நன்மையாவது அவனை வழிபடுவதல்லது பிறிதில்லையெனக் கற்புநிலைக்கிரங்கா நிற்றல். அதற்குச்செய்யுள்—

வடுத்தான்வகிர்மலர்கண்ணிக்குத்தக்கின்றுதக்கன்முத்தீக்
கெடுத்தான்கெடலில்தொல்லோன்றில்லைப்பன்மலர்கேழ்கிளர
மடுத்தான்குடைந்தன்றழுங்கவழுங்கித்தழீஇமகிழ்வுற்
றெடுத்தாற்கினியனவேயினியாவனவெம்மனைக்கே.

விற்புரைநுதலி கற்புநிலைகேட்டுக்
கோடாயுள்ள நீடாயழுங்கியது.

இ - ள். வடுத்தான் வகிர் மலர் கண்ணிக்குத் தக்கின்று - அறமேயாயினும் வடுத்தான் வகிரப்பட்டாற்போலும் மலர்ந்த கண்ணையுடையாட்கு இம்முதுக்குறைவுதகாது; ஆயினும்—எம் அனைக்கு இனி ஆவன - எம்மனைக்கு இனி நம்மாற்செய்யத்தகுவன—எடுத்தாற்கு இனியனவே-எடுத்தாற் கினியனவே; வேறில்லை. எ-று.

தக்கன் முத்தீக் கெடுத்தான் - தக்கனது முத்தீயைக்கெடுத்தவன்—கெடல் இல் தொல்லோன் - ஒருஞான்றுங் கேடில்லாத பழையோன்—தில்லைப் பல் மலர் கேழ் கிளர - அவனது தில்லைக்கட் பலவாகியமலர் நிறங்கிளர—மடுத்தான் குடைந்து அன்று அழுங்க - மடுவைத்தான் குடைந்து அன்றுகெடப்புக—அழுங்கித் தழீஇ மகிழ்வுற்று எடுத்தாற்கு - அதுகண்டிரங்கி யணைத்து இவ்வாறுதவிசெய்யப் பெறுதலான் மகிழ்ந்தெடுத்தாற்கெனக் கூட்டுக.

தில்லைக்கணெடுத்தாற் கெனவியையும். வகிர்மலர்கண்ணி யென்புழிச் செயப்படுபொருளைச் செய்ததுபோலக் கூறினார். வகிரெ

ன்னுமுவமவினை ஒற்றுமை நயத்தால் உவமிக்கப்படும் பொருண் மேலேறி நின்றது. தானென்பதனை அசைநிலையாக்கி வடுவகிர்போ லுங் கண்ணென்றுரைப்பாருமுளர். நீடாயழுங்கல் நெடிதாயழுங் கல். மெய்ப்பாடு உவகையைச்சார்ந்த அழுகை. பயன் தலைமகளது கற்பினைப் பாராட்டி ஆற்றுமை நீங்குதல். (உஉ௬)

## கவன்றுரைத்தல்.

கவன்றுரைத்தலென்பது கற்புநிலைக் கிரங்காநின்ற செவிலி, நெருநலைநாள் முறுவலைத்தந்து முலைமுழுவித்தழுவி நீ சிறிய விரகு கள் செய்தவெல்லாம் இன்றவ் வலியகாட்டைச் செல்லவேண்டிப் போலும் இதனையப்பொழுதே யறியப்பெற்றிலேனென்று அவ ணிலை நினைந்து கவலாநிற்றல். அதற்குச்செய்யுள்—

முறுவலக்காறந் துவந்தென்முலைமுழுவித்தழுவிச்
சிறுவலக்காரங்கள்செய்தவெல்லாமுழுதுஞ்சிதையத்
தெறுவலக்காலனைச்செற்றவன்சிற்றம்பலஞ்சிந்தியா
ருறுவலக்கானகந்தான்படர்வானமொளியிழையே.

அவணிலை நினைந்து
செவிலி கவன்றது.

இ - ள். ஒளி இழை - ஒளியிழை—அக்காலத்து முறுவல் தந்து - உள்ளத்தோன்றுடையளாதலின் அக்காலத்துமுறுவலையெ னக்குத்தந்து—வந்து என் முலை முழுவித் தழுவி - வந்து எனது முலையைமுத்தங்கொண்டு என்னைப்புல்லி—சிறு வலக்காரங்கள் செய்த எல்லாம் - அவ்வாறு சிறியவிரகுகள் செய்தவெல்லாம்— முழுதும் சிதையத் தெறு வலக் காலனைச் செற்றவன் சிற்றம்ப லம் சிந்தியார் - எல்லாப்பொருளுமழிய வெகுளுதல்வல்ல அக்கா லனைவெகுண்டவனது சிற்றம்பலத்தைக் கருதாதார்—உறு வலக் கானகம் தான் படர்வான் ஆம் - சேரும் வலியகாட்டைத் தான் செல்லவேண்டிப்போலும்! அக்காலத்திதறிந்திலேன்! எ - று.

எனக்கு வெளிப்படாமற் பிரிவார்செய்வன செய்தாளென் னுங் கருத்தான் வலக்காரமென்றாள். குறித்துணர்வார்க்கு வெளிப் படுமென்னுங் கருத்தாற் சிறுமைப்படுத்தாள். தெறும் வெற்றியை யுடைய காலனெனினுமமையும். (உஉ௭)

## அடிநினைந்திரங்கல்.

அடிநினைந்திரங்கலென்பது நிலைமை நினைந்து கவலாநின்ற செவிலி, அனிச்சப்பூமேன் மிதிப்பினும் ஆற்றாது பதைத்துப்

பொங்காநின்ற வடிகள் இன்று செறிந்த பரலையுடைய காட்டின் கட் பாவியவாறென்னோவென அவளடி நினைந் திரங்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

தாமேதமக்கொப்புமற்றில்லவர்தில்லைத்தண்ணனிச்சப்
பூமேன்மிதிக்கிற்பதைத்தடிபொங்குநங்காயெரியுந்
தீமேலயில்போற்செறிபரற்கானிற்சிலம்படிபா
யாமேநடக்கவருவினையேன்பெற்றவம்மனைக்கே.

வெஞ்சுரமும்மவள் பஞ்சிமெல்லடியுஞ்
செவிலிநினைந்து கவலையுற்றது.

இ - ள். தாமே தமக்கு ஒப்பு மற்று இல்லவர் தில்லை - தாமே தமக்கொப்பாக வேறொரொப்பில்லாதவரது தில்லையில்—தண் அனிச்சப் பூமேல் மிதிக்கின் பதைத்து அடி பொங்கும் நங்காய் - குளிர்ந்த வனிச்சப்பூவின்மேன் மிதிப்பினும் நடுங்கித் தன்னடி கள்பண்டு கொப்புட்கொள்ளும் நங்காய்—எரியும் தீமேல் அயில் போல் செறி பரல் கானில் - எரியாநின்ற தீயின்மேற்பதித்த வேல் போலச் செறிந்தபரலையுடைய காட்டின்கண்—சிலம்பு அடி பாய் - சிலம்பையுடைய அவ்வடியைப்பாவி—அருவினையேன் பெற்ற அம்மனைக்கு - அரியவினையையுடையேன் பெற்ற அன்னைக்கு— நடக்க ஆமே - இன்றுநடக்க வியலுமோ! ஆண்டென்செய்கின் றாள்! எ - று.

செறிவு ஒத்தபண்பன்று. நிலத்தைச்செறிந்த பரலெனினு மமையும். அயில்போல் செறிபரலென்பது பாடமாயின், அயில் போலுஞ் செறிபரலென்றுரைக்க. இவை யிரண்டற்கும் மெய்ப் பாடு அழுகை. பயன் ஆற்றாமை நீங்குதல். (உஉஅ)

## நற்றாய்க்குரைத்தல்.

நற்றாய்க்குரைத்தலென்பது அடிநினைந்திரங்காநின்ற செவிலி, கற்புமுதிர்வு தோன்ற நின்று என்னை யிடைவிடாமற் றேடி யழாநின்ற பேதையதறிவு இன்றென்னைத் தேய்வியா நின்ற தென்று அவள் உடன்போனமை ஆற்றாது நற்றாய்க்குக் கூறா நிற்றல். அதற்குச்செய்யுள்—

தழுவினகையிறைசோரிற்றமியமென்றேதளர்வுற்
றழுவினைசெய்யுநையாவஞ்சொற்பேதையறிவுவிண்ணோர்
குழுவினையுய்யநஞ்சுண்டம்பலத்துக்குனிக்கும்பிரான்
செழுவினதாள்பணியார்பிணியாலுற்றுத்தேய்வித்ததே.

முகிழ்முலைமடந்தைக்கு முன்னியதறியத்
திகழ்மனைக்கிழத்திக்குச் செவிலிசெப்பியது.

இ - ள். தழுவின கை இறை சோரின் - தன்னைத்தழுவின என்கை சிறிதுசோருமாயின்—தமியம் என்றே நையாத் தளர்வுற்று - நாந்தமியமென்றேகருதி நைந்து உள்ளந்தளர்ந்து—அழுவினை செய்யும் அம் சொல் பேதை அறிவு - அழூந்தொழிலைச்செய்யும் அழகியசொல்லையுடைய பேதையதறிவு—விண்ணோர் குழுவினை உய்ய நஞ்சு உண்டு - விண்ணோரது திரள்பிழைக்கத் தானஞ்சையுண்டு—அம்பலத்துக் குனிக்கும் பிரான் செழுவின தாள் - அம்பலத்தினின்று கூத்தாடுமிறைவனுடைய வளவியதாள்களை—பணியார் பிணியால் உற்றுத் தேய்வித்தது - பணியாதார் பிணிபோலும் பிணியான்மிக்கு என்னைக்குறைவித்தது. எ - று.

உய்யநஞ்சுண்டென்னுஞ் சொற்கள் ஒரு சொன்னீர்மைப்பட்டு உய்வித்து என்னும் பொருளவாய், குழுவினையென்னு மிரண்டாதவற்கு முடிபாயின. அறிவைக்கருத்தாவாகவும் பிணியைக் கருவியாகவுங் கொள்க. முன்னியது-வந்தது. மெய்ப்பாடும் பயனும் அவை. (உஉ௯)

## நற்றாய்வருந்தல்.

நற்றாய் வருந்தலென்பது உடன்போனமைகேட்டு உண்மகிழ்வோடு நின்று, ஓரேதிலன் பின்னே தன் தோழியை விட்டு, என்னையு முன்னே துறந்து, சேராதார் முன்னே ஊர் அலர்தூற்ற அருஞ்சுரம் போயினாள்; இனி யானெங்ஙனமாற்றுவேனென நற்றாய் பிரிவாற்றாது வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

யாழியன்மென்மொழிவன்மனப்பேதையொரேதிலன்பின்
றோழியைநீத்தென்னைமுன்னேதுறந்துதுன்னார்கண்முன்னே
வாழியிம்மூதூர்மறுகச்சென்றாளன்றுமால்வணங்க
வாழிதந்தானம்பலம்பணியாரினருஞ்சுரமே.

கோடாய் கூற
நீடாய் வாடியது.

இ - ள். யாழ் இயல் மென் மொழி வன் மனப் பேதை - யாழோசையினியல்புபோலும் இயல்பையுடைய மெல்லியமொழியையும் வலியமனத்தையுமுடையபேதை—ஒரு ஏதிலன் பின் - ஒரு நொதுமலன்பின்னே—தோழியை நீத்து - தன்றோழியைவிட்டு—என்னை முன்னே துறந்து - என்னை முற்காலத்தே நீங்கி—

இம் மூதூர் மறுக - இம்மூதூரிலுள்ளார் அலரெடுத்துக்கலங்க— துன்னூர்கள் முன்னே-சேராதார் முன்னே—மால் வணங்க அன்று ஆழி தந்தான் அம்பலம் பணியாரின் - திருமால்வணங்குதலான் அன்றாழியைக்கொடுத்தவனது அம்பலத்தைப் பணியாதாரைப் போல—அரும் சுரம் சென்றாள் - அரிய சுரத்தைச்சென்றாள், இனி யெங்ஙனமாற்றுகேன். எ - று.

இற்செறிக்கப்பட்ட பின்னர்ப் பராமுகத்தளென்பதனை உடன்போனபின்ன ருணர்ந்தாளாகலின், என்னை முன்னே துறந் தென்றாள். வாழி அசைநிலை. மெய்ப்பாடும் பயனும் அவை. (உ௲0)

## கிளிமொழிக்கிரங்கல்.

கிளிமொழிக்கிரங்கலென்பது பிரிவாற்றாது வருந்தாநின்ற வள் அவள்போன போக்கன்றி, இக்கிள்ளை என்னெஞ்சையீரா நின்றதெனத் தன்றாய் செலவுணர்ந்து வருந்தாநின்ற கிளியினது மொழிகேட் டிரங்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

**கொன்னுனைவேலம்பலவற்றொழாரிற்குன்றங்கொடியோ,ளெ ன்னணஞ்சென்றனளென்னணஞ்சேருமெனவயரா,வென்ன னைபோயினள்யாண்டையளென்னைப்பருந்தடுமென், றென் னனைபோக்கன்றிக்கிள்ளையென்னுள்ளத்தையீர்கின்றதே.**

மெய்த்தகைமாது வெஞ்சுரஞ்செல்லத்
தத்தையைநோக்கித் தாய்புலம்பியது.

இ - ள். கொல் நுனை வேல் அம்பலவற் றொழாரின் - கொற் றொழிலமைந்த நுனையையுடைத்தாகிய சூலவேலையுடைய அம்பல வனை வணங்காதாரைப்போல—கொடியோள் குன்றம் என்ன ணம் சென்றனள் என்னணம் சேரும் என - கொடியாள் மலைநெ றியை யெவ்வண்ணஞ்சென்றாள் ஆண்டெவ்வணந் தங்குமென் றியான்கூற— அயரா - தன்றாய்செலவுணர்ந்து மயங்கி—என் அனை போயினள் - என்னுடைய அன்னை போயினாள்—யாண்டையள் - அவளெவ்விடத்தாள்—என்னைப் பருந்து அடும் என்று - இனியெ ன்னைப் பருந்து கொல்லுமென்று சொல்லி—என் அனை போக்கு அன்றிக் கிள்ளை என் உள்ளத்தை ஈர்கின்றது-என்னுடைய வன்னை போக்கொழிய அவள் கிளி யென்னெஞ்சை யீராநின்றது. எ-று.

என்னணஞ் சென்றனள் என்னணஞ் சேருமென்று நினைந் தயராவெனக் கிளிமேலேற வுரைப்பினுமமையும். என்னன்னை போக்கன்று ஈர்கின்றதிக்கிள்ளையென மறுத்துரைப்பினுமமையும்.

மெய்த்தகை-மெய்யாகியகற்பு; புனையாவழகுமாம். மெய்ப்பாடும் பயனும் அவை. (உகூக)

## சுடரோடிரத்தல்.

சுடரோடிரத்தலென்பது கிளிமொழி கேட்டிரங்கா நின்றவள், பெற்றவென்னோடு தன்கிளியிருந்து வருந்த இதனையுந் துறந்து அறிவுமுதிர்ந்து, அழற்கடஞ் சென்றாண்முகத்தை நின் கதிர்களான் வாட்டாது தாமரைமலர்போல மலர்த்துவாயாகவெனச் சுடரோடிரந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பெற்றேனொடுங்கிள்ளைவாடமுதுக்குறைபெற்றிமிக்கு
நற்றேன்மொழியழற்கானடந்தாண்முகநானணுகப்
பெற்றேன்பிறவிபெறாமற்செய்தோன்றில்லைத்தேன்பிறங்கு
மற்றேன்மலரின்மலர்த்திரந்தேன்சுடர்வானவனே.

வெஞ்சுரந்தணிக்கெனச் செஞ்சுடரவற்கு
வேயமர்தோளி தாயர்பராயது.

இ - ள். சுடர் வானவனே - சுடராகிய வானவனே—பெற்றேனொடும் கிள்ளை வாட - பெற்றவென்னோடுந்தன் கிளியிருந்துவருந்த இதனையுந்துறந்து—முதுக்குறை பெற்றி மிக்கு - அறிவுமுதிர்ந்தவியல்புமிக்கு—நல் தேன் மொழி - நல்லதேன்போலு மொழியையுடையாள்—அழல் கான் நடந்தாள் முகம் - அழலையுடைய காட்டின்கணடந்தவளதுமுகத்தை—மல் தேன் மலரின் மலர்த்து - நின் வெங்கதிர்களான் வாட்டாது வளவியவண்டையுடைய தாமரைமலர்போல மலர்த்துவாயாக—இரந்தேன் - நின்னை யானிரந்தேனிதனை. எ - று.

அணுகப் பெற்றேன் நான் - ஒருவாற்றாற் றன்னையணுகப் பெற்றேனாகிய யான்—பிறவி பெறாமல் செய்தோன் தில்லைத் தேன் பிறங்கு மற்றேன்மலர் - பின்பிறவியைப் பெறாதவண்ணஞ் செய்தவனது தில்லையின் மதுமிகு மற்றேன்மலரெனக் கூட்டுக.

பெற்றேனொடுமென்பது எண்ணொடுவுமாம். தணிக்கவென்னு மிறுதியகரங் குறைந்துநின்றது. மெய்ப்பாடும் பயனும் அவை. ()

## பருவநினைந்துகவறல்.

பருவநினைந்து கவறலென்பது சுடரோடிரந்து வருந்தாநின்றவள், கற்பிக்குமுதுபெண்டீரு மின்றித் தானவனுக்குச் செய்யத்

தகுங் குற்றேவல் செய்யவல்லள் கொல்லோ வென்று அவளது பருவநினைந்து கவலாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**வைம்மலர்வாட்படையூரற்குச்செய்யுங்குற்றேவன்மற் றென், மைம்மலர்வாட்கண்ணிவல்லள்கொல்லாந்தில்லையான் மலைவாய், மொய்ம்மலர்க்காந்தளைப்பாந்தளென்றெண்ணித் துண்ணென்றொளித்துக்,கைம்மலராற்கண்புதைத்துப்பதைக் குமெங்கார்மயிலே.**

முற்று முலைக்கு
நற்றாய் கவன்றது.

இ - ள். தில்லையான் மலை வாய் - தில்லையானுடைய இம்மலையிடத்து—மொய்ம் மலர்க் காந்தளைப் பாந்தள் என்று எண்ணி - மொய்ம்மலர்க் காந்தளது பூவினைப் பெரும்பாம்பென்று கருதி— துண்ணென்று ஒளித்து - துண்ணென்று மறைந்து—கைம் மலரால் கண் புதைத்துப் பதைக்கும் - கைம்மலர்களாற் கண்புதைத்து நடுங்கும்—எம் கார் மயில் என் மைம் மலர் வாள் கண்ணி - எம்முடைய கார்மயிலாகிய என்னுடைய மையழகு பெற்ற வாள்போலுங் கண்ணையுடையாள்—வைம் மலர் வாள் படை ஊரற்கு - கூர்மையையுடைய மலரணிந்த வாளாகிய படைக்கலத்தையுடைய ஊரனுக்கு—செய்யும் குற்றேவல் வல்லள் கொல் - தான்செய்யத்தகுங் குற்றேவல்களைக் கற்பிக்கு முதுபெண்டிருமின்றித் தானே செய்ய வல்லளாமோ! ஆண்டென்செய்கின்றாள்! எ - று.

மற்றென்பது அசை. மொய்ம்மலர்க்காந்தள் முதலாகிய தன் பொருட்கேற்ற வடையடுத்து நின்றது. பிரிவின்றன் மகண்மேற் செல்லுங் கழிபெருங்காதலளாதலின், எங்கார்மயிலென்றும் என் வாட் கண்ணியென்றும், பல்காற்றன்னோடடுத்துக் கூறினாள். தில்லையான் மலைவாய்ப் பதைக்குமென வியையும். நோக்கென்னுமலங்காரமாய்ப் பாம்பிற்கஞ்சுமயிலென இல்குணமடுத்து வந்ததென் பாருமுளர். மெய்ப்பாடும் பயனும் அவை. (உ௩௩)

## நாடத்துணிதல்.

நாடத்துணிதலென்பது பருவநினைந்து கவலாநின்ற தாய்க்கு, நீ கவன்று மெலியவேண்டா, யான் அவள் புக்கவிடம் புக்குத் தேடுவேனெனக் கூறி, செவிலி அவளை நாடத் துணியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**வேயினதோளிமெலியல்விண்ணோர்தக்கன்வேள்வியின்வாய்**
**ப், பாயினசீர்த்தியனம்பலத்தானைப்பழித்துமும்மைத்**
**தீயினதாற்றல்சிரங்கண்ணிழந்துதிசைதிசைதாம்**
**போயினவெல்லையெல்லாம்புக்குநாடுவன்பொன்னினையே.**

*கோடாய் மடந்தையை*
*நாடத் துணிந்தது.*

இ - ள். விண்ணோர் - விண்ணவர்—தக்கன் வேள்வியின் வாய்ப் பாயின சீர்த்தியன் அம்பலத்தானைப் பழித்து - தக்கனது வேள்வியின்கட் பரந்த புகழையுடையனாகிய அம்பலத்தானை யிகழ்ந்துகூறி—மும்மைத் தீயினது ஆற்றல் சிரம் கண் இழந்து - மூன்றன்றொகுதியாகிய தீயினதுவலியையுந் தலையையுங் கண்ணையுமிழந்து—திசைதிசை தாம் போயின எல்லை எல்லாம் புக்கு-திசைதிசைதோறுந் தாம்போயின வெல்லையெல்லாம்புக்கு—பொன்னினை நாடுவன் - பொன்னினைத்தேடுவேன்—வேயின தோளி - வேயின்றன்மையவாகிய தோள்களையுடையாய்—மெலியல் - நீ மெலியவேண்டா. எ - று.

தொக்கபொருட்குந் தொகுதிக்கு மொற்றுமையுண்மையின், ஆற்றன் முதலாயினவற்றை யிழத்தலை விண்ணோர்மேலேற்றினார். திசைதிசையென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு அழுகையைச் சார்ந்த பெருமிதம். பயன் நற்றாயையாற்றுவித்தல். "ஏமப் பேரூர்ச் சேரியுஞ் சுரத்துந்—தாமே செல்லுந் தாயரு முளரே." * என்றாகலிற் செவிலிதேடப் பெறும். அலங்காரம் முயற்சிவிலக்கு. ()

## கொடிக்குறிபார்த்தல்.

கொடிக்குறி பார்த்தலென்பது செவிலி நாடத்துணியா நிற்ப, அவ்விருவரையு மிப்பொழுதே வரும்வண்ணம் நீ கரைந்தால், நினக்கு உணங்கலையஞ்சாதிருந் துண்ணலாம்; அதுவன்றித் தெய்வத்திற்குவைத்த நிணத்தையுடைய பலியையும் நினக்கே வரைந்து வைப்பேன்; அவ்வாறு கரைவாயாகவென நற்றாய் கொடிக்குறி பாராநிற்றல். அதற்குச்செய்யுள்—

**பணங்களஞ்சாலும்பருவரவார்த்தவன்றில்லையன்ன**
**மணங்கொளஞ்சாயலுமன்னனுமின்னேவரக்கரைந்தா, லுண**
**ங்கலஞ்சாதுண்ணலாமொண்ணிணப்பலியோக்குவன்மாக்**
**குணங்களஞ்சாற்பொலியுங்கலசேட்டைக்குலக்கொடியே.**

---

* தொல். பொருள், அகத்திணை, ௩எ.

நற்றாய் நயந்து
சொற்புட் பராயது.

இ - ள். மாக் குணங்கள் அஞ்சாற் பொலியும் நலசேட்டைக் குலக்கொடியே - பெரியகுணங்களைந்தான் விளங்கும் நல்ல சேட்டையையுடைய சீரியகொடியே—பணங்கள் அஞ்சு ஆலும் பரு அரவு ஆர்த்தவன் தில்லை அன்ன - படங்களைந்து ஆடாநிற்கும் பரியவரவைச்சாத்தியவனது தில்லையைப்போலும்—மணம் கொள் அம் சாயலும் மன்னனும் - நறுநாற்றம்பொருந்திய அழகிய மென்மையையுடையாளும் மன்னனும்—இன்னே வரக் கரைந்தால் - இப்பொழுதே வரும்வண்ணம் நீயழைத்தால்—உணங்கல் அஞ்சாது உண்ணலாம் - யாமோப்பாமையின் உணங்கலையஞ்சாதிருந்து நினக்குண்ணலாம்—ஒள் நிணப் பலி ஒக்குவல் - தெய்வத்திற்குக்கொடுத்த நல்ல நிணத்தையுடைய பலியையும் நினக்கேவைரந்து வைப்பேன்; அவ்வாறு கரைவாயாக. எ - று.

ஒக்குவலென்பதற்குத் தருவேனென் றுரைப்பினுமமையும். குணங்களைந்தாவன மறைந்தபுணர்ச்சித்தாதலும், கலங்காமையும், பொழுதிறவா திடம்புகுதலும், நெடுகக் காண்டலும், மடியின்மையும். சேட்டை உறுப்பைப் புடைபெயர்த்தல். கொடி காக்கை. நலசேட்டை குலக்கொடியே யென்று பாடமோதி, சேட்டையாகிய தெய்வத்தின் நல்லகொடியேயென் றுரைப்பாருமுளர். சொற்புட்பராயது - வருவது சொல்லுதலையுடைய புள்ளை வேண்டிக் கொண்டது. (உகரு)

## சோதிடங்கேட்டல்.

சோதிடங்கேட்டலென்பது கொடிநிமித்தம் பெற்று, இக்காவன் மனையின்கண்ணே யாங்கள் மணஞ்செய்ய அவ்விருவரையும் இன்னும் பெறுமாறுண்டாயின், ஆராய்ந்து சொல்லுமினென அறிவாளரைக்கிட்டிச் செவிலி சோதிடங் கேளாநிற்றல். அதற்குச் செய்யுள்—

**முன்னுங்கடுவிடமுண்டதென் றில்லைமுன்னோனருளா**
**லின்னுங்கடியிக்கடிமனைக்கேமற்றியாமயர**
**மன்னுங்கடிமலர்க்கூந்தலைத்தான்பெறுமாறுமுண்டே**
**லுன்னுங்கடிதின்றியோதுங்களுன்மறையுத்தமரே.**

சித்தந்தளர்ந்து தேடுங்கோடாய்
உய்த்துணர்வோரை யுரைமினென்றது.

விடம் தைம்மலர்க்கண்வந்திருந்தது.
"வெங்கருவை வின்றோர், செஞ்சத் திருக்கையா
லேற்றயின்றோய்" மயிலையந்தாதி.

இ - ள். முன்னும் கடு விடம் உண்ட தென் தில்லை முன்னோன் அருளால் - பரந்துசெல்லுங் கடியவிடத்தையுண்ட தென்றில்லைக்கண்ணுளனாகிய எல்லார்க்கு முன்னாயவனதருளால்—இக்கடிமனைக்குக் கடி யாம் அயர - இக்காவலையுடைய மனையின்கண் மணத்தை யாஞ்செய்ய—மன்னும் கடிமலர்க் கூந்தலை இன்னும் தான் பெறுமாறும் உண்டேல் - நிலைபெற்ற கடிமலரையுடைய கூந்தலையுடையாளை இன்னுந்தான் பெறுமாறுமுண்டாயின்—நால்மறை உத்தமரே - நான்மறையையுடைய தலைவீர்—உன்னுங்கள் - நும்முள்ளத்தா னாராய்மின்கள்—தீது இன்றி ஓதுங்கள் - ஆராய்ந்து குற்றந்தீரச் சொல்லுமின்கள். எ - று.

அருளாற்பெறுமாறுமுண்டேலென வியையும். தேவர் சென்றிரப்ப நஞ்சை நினைத்தலுங் கைம்மலர்க்கண் வந்திருந்ததாகலின், கருதப்படும் வெவ்விடமெனினுமமையும். யாங்கடியயரத் தான் கடிமலர்க்கூந்தலைப் பெறுமாறு முண்டேலென் றுரைப்பினுமமையும். இப்பொருட்குத் தானென்றது தலைமகனை. தீதின்றி யுன்னுங்களெனினுமமையும். உய்த்துணர்வோரை-வெளிப்படாத பொருளையேதுக்களா லுணர்வோரை. இவை யிரண்டற்கும் மெய்ப்பாடு மருட்கை. பயன் எதிர்காலச்செய்கை யுணர்தல். (உகசு)

## சுவடுகண்டறிதல்.

சுவடுகண்டறிதலென்பது சோதிடம்பெற்றுச் செல்லாநின்றவள், இம்முரம்பின்கட் கிடந்த இவை தீவினையே னெடுத்துவளர்த்த மாணிழைசீறடி; உவை அக்கள்வனடியாமெனச் சுவடுகண்டறியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

தெள்வன்புனற்சென்னியோனம்பலஞ்சிந்தியாரினஞ்சேர்
முள்வன்பரன்முரம்பத்தின்முன்செய்வினையேனெடுத்த
வொள்வன்படைக்கண்ணிசீறடியிங்கிவையுங்குவையக்
கள்வன்பகட்டுரவோனடியென்றுகருதுவனே.

சுவடுபடு கடத்துச்
செவிலிகண் டறிந்தது.

இ - ள். தெள் வன் புனல் சென்னியோன் அம்பலம் சிந்தியார் இனம் சேர் - தெள்ளிய பெரியபுனலையுடைத்தாகிய சென்னியையுடையவனதம்பலத்தைக் கருதாதாரது இனஞ்சேரும்—முள் வன் பரல் முரம்பத்தின் இங்கிவை - முள்ளையும் வலியபரலையுமுடைய இம்முரம்பின்கட்கிடந்த இவை—முன் செய் வினையேன்

எடுத்த ஒள் வன் படைக் கண்ணி சீறடி - முற்காலத்துச்செய்யப்பட்ட தீவினையையுடைய யா னெடுத்துவளர்த்த ஒள்ளிய வலிய படைபோலுங் கண்ணிணையுடையாளுடைய சிறிய வடிச்சுவடாம்—உங்குவை அக் கள்வன் பகட்டு உரவோன் அடி என்று கருதுவன் - இனி உவற்றை அக்கள்வனுகிய பகடுபோலும் வலியையுடையானுடைய அடிச்சுவடென்றுய்த்துணரா நின்றேன். எ-று.

இங்கிவை உங்குவை யென்பன ஒருசொல். (உ௩௭)

## சுவடுகண்டிரங்கல்.

சுவடுகண்டிரங்கலென்பது சுவடுகண்டறிந்து அவ்விடத்தே நின்று தவிசின்மேன் மிதிப்பினும் பதைத்துக் கொப்புட்கொள்ளா நின்ற இக்கான்மலர், இன்றொரு விடலைபின்னே போதற்குத் தகுங்காலை எவ்வாறொத்தனவென அடிச்சுவடுகண் டிரங்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

பாலொத்தநீற்றம்பலவன்கழல்பணியார்பிணிவாய்க்
கோலத்தவிசின்மிதிக்கிற்பதைத்தடிகொப்புள்கொள்ளும்
வேலொத்தவெம்பரற்கானத்தினின்றொர்விடலைபின்போங்
காலொத்தனவினையேன்பெற்றமாணிழைகான்மலரே.

கடத்திடைக்காரிகை யடித்தலங்கண்டு
மன்னருட்கோடா யின்னலெய்தியது.

இ - ள். கோலத் தவிசின் மிதிக்கின் - கோலத்தையுடைய தவிசின்மேன் மிதிப்பினும்—பால் ஒத்த நீற்று அம்பலவன் கழல் பணியார் பிணி வாய் - பாலொத்த நீற்றையுடைய அம்பலவனது கழல்களைப் பணியாதாரது வருத்தம்போலும் வருத்தம்வாய்ப்ப—பதைத்து அடி கொப்புள் கொள்ளும் - நடுங்கி அவ்வடிகள் பண்டு கொப்புளங்கொள்ளும்—வினையேன் பெற்ற மாண் இழை கான்மலர் - தீவினையேன்பெற்ற மாணிழையுடைய அத்தன்மையவாகிய காலாகியமலர்கள்—இன்று வேல் ஒத்த வெம் பரற் கானத்தின் ஓர் விடலைபின் போம் கால் ஒத்தன - இன்று வேலையொத்த வெய்யபரலையுடைய காட்டின்கண் ஒருவிடலைபின் போதற்குத் தகுங் காலையொத்தன; இதனையெவ்வாறு ஆற்றவல்லவாயின! எ - று.

தவிசு தடுக்குமுதலாயின. கான்மலரென அவற்றை மலராகக் கூறினமையாற் காலொத்தனவென வுவமித்தாள். பிணியாயென்றும், பிணிபோலென்றும், காலொத்திராவென்றும், பாடமோதுவாருமுளர். காலென்றது அடியை. (உ௩௮)

## வேட்டமாதரைக்கேட்டல்.

வேட்டமாதரைக் கேட்டலென்பது சுவடுகண்டிரங்காநின்று, அதுவழியாகச் செல்லாநின்றவள், இவ்வாறு அறியாப் பருவத்த ளாய்த் தனக்கியைபில்லாத சுரத்தின்கண் அயலானொருவனுடன் போந்தாள்; அவளை நீ கண்டாயோவென வேட்டமாதரைக் கேளா நிற்றல். அதற்குச்செய்யுள்—

பேதைப்பருவம்பின்சென்றதுமுன்றிலெனைப்பிரிந்தா
லூதைக்கலமரும்வல்லியொப்பாண்முத்தன்றில்லையன்னா
ளேதிற்சுரத்தயலானொடின்றேகினள்கண்டனையே
போதிற்பொலியுந்தொழிற்புலிப்பற்குரற்பொற்றொடியே. ‖

மென்மலர்கொய்யும் வேட்டமாதரைப்
பின்வருசெவிலி பெற்றிவினையது.

இ - ள். போதிற் பொலியும் தொழில் புலிப்பற் குரல் பொற் றொடி - பூவின்கட்பொலியுந் தொழிலினையும் புலிப்பல்லையுடைய கழுத்தினையுமுடைய பொற்றொடியாய்—பேதைப் பருவம் சென் றது பின் - பேதையாகிய பருவங்கழிந்தது சுரம்போந்தபின்— முன்றில் எனைப் பிரிந்தால் ஊதைக்கு அலமரும் வல்லி ஒப்பாள் - இவ்வாறறியாப் பருவத்தளாய் முன்றிற்கணென்னைச் சிறிதுநீங்கிற் றமியளாய் நடுங்குதலான் ஊதையாற்சுழலும் வல்லியையொப் பாள்—முத்தன் தில்லை அன்னாள் - முத்தனது தில்லையையொப் பாள்—ஏதில் சுரத்து அயலானொடு இன்று ஏகினள் - அவள் வெம் மைமுதலாயினவற்றாற் றனக்கென்னு மியல்பில்லாத சுரத்தின் கண் அயலானொருவனோடு இன்றுபோயினாள்—கண்டனையே அவளை நீ கண்டாயோ? அவளெவ்வண்ணம்போயினாள்? எ - று.

தில்லையன்னாரென்பதூஉம் பாடம். பெற்று வினையதென்ப தூஉம் பாடம். (உ௩௧)

## புறவொடுபுலத்தல்.

புறவொடு புலத்தலென்பது வேட்டமாதரைக் கேட்டு அது வழியாகச் செல்லாநின்றவள், ஏதிலனுமாய்த் தமியனுமாயவன் சொற்றுணையாக வெய்யசுரத்தே மாதர் சென்றால், இல்லையுடைய புறவே, இது நினக்குத் தகுதியன்றென்று கூறிற்றிலை; நீ வாழ்வா யாகவெனப் புறவொடுபுலந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

புயலன்றலர்சடையேற்றவன்றில்லைப்பொருப்பரசி
பயலன்றனைப்பணியாதவர்போன்மிகுபாவஞ்செய்தேற்

கயலன் றமியனஞ்சொற்றுணைவெஞ்சுரமாதர்சென்றா
லியலன் றெனக்கிற்றிலைமற்றுவாழியெழிற்புறவே.

காட்டிப் புறவொடு
வாட்ட முரைத்தது.

இ - ள். புயல் அன்று அலர் சடை ஏற்றவன் - நீரை அன்று விரிந்த சடையின்கணேற்றவன்—தில்லைப் பொருப்பரசி பயலன் - தில்லைக்கணுளனாகிய பொருப்பிற்கரசியது கூற்றையுடையான்—துணைப் பணியாதவர் போல் மிகு பாவம் செய்தேற்கு - அவன்றன் னைப் பணியாதாரைப்போல மிக்கபாவத்தைச் செய்தேற்கு—அய லன் தமியன் அம் சொல் துணை மாதர் வெஞ்சுரம் சென்றால் - எதிலனுமாய்த் தமியனுமாயவனது அழகியசொல்லே துணையாக மாதர் வெய்யசுரத்தைச் சென்றால்—எழில் புறவே-எழிலையுடைய புறவே—இயல் அன்று எனக்கிற்றிலை - இது தகுதியன்றென்று கூறிற்றிலை—வாழி - வாழ்வாயாக. எ - று.

இது கூறிற்றாயின் அவள் செல்லாளென்பது கருத்து. பொருப்பரையன் மகளாதலிற் பொருப்பரசியெனத் தந்தைகி ழமை மகட்குக் கூறப்பட்டது. பாவஞ்செய்தேற்கியலன் றெனக் கிற்றிலையெனக்கூட்டுக. வெஞ்சுரமாதல்கண்டாளென்பது பாட மாயின், ஆதலென்பதனை எல்லாவற்றோடுங் கூட்டுக. வெஞ்சுரம் போதல் கண்டாளென்பதூஉம் பாடம். (உ௪0)

## குரவொடுவருந்தல்.

குரவொடு வருந்தலென்பது புறவொடு புலந்து போகாநின்ற வள், என்னுடைய பாவை நின்னுடைய முன்னே இக்கொதிக்குங் கடத்தைக் கடப்பக்கண்டு நின்றும், இன்னவாறு போனாளென்று எனக்கு வாயுந் திறக்கின்றிலை; இது நினக்கு நன்றோவெனக் குர வொடுவாடி யுரையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பாயும்விடையோன்புலியூரனையவென்பாவைமுன்னே
காயுங்கடத்திடையாடிக்கடப்பவுங்கண்டுநின்று
வாயுந்திறவாய்குழையெழில்வீசவண்டோலுறுத்த
நீயுநின்பாவையுநின்றுநிலாவிடுநீள்குரவே.

தேடிச்சென்ற செவிலித்தாயர்
ஆடற்குரவொடு வாடியுரைத்தது.

இ - ள். குழை எழில் வீச - குழை எழிலைச்செய்ய—வண்டு ஓலுறுத்த - வண்டுகள் நின்பாவையையோலுறுத்த—நின் பாவையும் நீயும் நின்று நிலாவிடும் நீள் சுரவே - அப்பாவையுநீயும் நின்று நிலாவும் பெருஞ்சுரவே—பாயும் விடையோன் புலியூர் அனைய என்பாவை - பாய்ந்துசெல்லும் விடையையுடையவனது புலியூரை யொக்கும் என்னுடையபாவை—முன்னே காயும் கடத்திடை ஆடிக் கடப்பவுங் கண்டு நின்று - நின்முன்னே கொதிக்குங் கடத்தின்கண் அசைந்து அதனைக்கடப்பவும் விலக்காது கண்டு நின்று—வாயும் திறவாய் - அத்துணையேயன்றி இன்னவாறு நிகழ்ந்ததென்று எனக்குவாயுந் திறக்கின்றிலை; இது நினக்குத்தகுமோ! எ - று.

நிலாவினையென்பது பாடமாயின், வழிச்சுரஞ் செல்லக்கண்டும் வாய்திறந்து ஒன்றுங்கூறுது குழையெழில்வீச வண்டோலுறுத்த நின்று விளங்கினையென்று கூட்டியுரைக்க. குழையெழில்வீச வண்டோலுறுத்தவென்பன அணியாகிய குழைவிளங்கவென்பதூஉஞ் செவிலியரோலாட்டவென்பதூஉந் தோன்ற நின்றன. இப்பாட்டைந்திற்கும் மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்றுமை நீங்குதல். (உ௬௧)

## விரதியரைவினுவல்.

விரதியரை வினுவலென்பது சுரவொடுவருந்திச் செல்லாநின்றவள், பத்தியர்போல ஒருபித்தி தன் பின்னேவர ஒருபெருந்தகை முன்னேசெல்லக் கண்டீரோவென விரதியரை வினுவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சுத்தியபொக்கணத்தென்பணிகட்டங்கஞ்சூழ்சடைவெண்
பொத்தியகோலத்தினீர்புலியூரம்பலவர்க்குற்ற
பத்தியர்போலப்பணைத்திறுமாந்தபயோதரத்தோர்
பித்திதற்பின்வரமுன்வருமோவொர்பெருந்தகையே.

வழிவருகின்ற மாவிரதியரை
மொழிமின்களென்று முன்னிமொழிந்தது.

இ - ள். சுத்திய பொக்கணத்து-சுத்தியையுடைத்தாகிய பொக்கணத்தையும்—என்பு அணி - என்பாகிய வணியையும்—கட்டங்கம் - கட்டங்கமென்னும் படைக்கலத்தையும்—சூழ் சடை - சூழ்ந்த சடையினையும்—பொத்திய வெண் கோலத்தினீர் - மெய்ம்முழுதும்மூடிய வெண்கோலத்தையுமுடையீர்—புலியூர் அம்பலவர்

க்கு உற்ற பத்தியர் போல - புலியூர்க்கணுண்டாகிய அம்பலத்தை யுடையவர்கண் மிக்க பத்தியையுடையாரைப்போல—பணைத்து இறுமாந்த பயோதரத்து ஓர் பித்தி - பெருத்திறுமாந்த முலைகளை யுடையா ளொருபேதை—தன் பின்வர ஓர் பெருந்தகை முன் வருமோ - தனக்குப் பின்வர ஒருபெருந்தகை முன்னேவருமோ? உரைமின். எ - று.

சுத்தி பிறர்க்குத் திருநீறு கொடுத்தற்கு இப்பிவடிவாகத் தலை யோட்டானமைக்கப்படுவதொன்று. என்பணியென்புழி இயல்பும், கட்டங்கமென்புழித் திரிபும், விகாரவகையாற்கொள்க. கடுங்க மென்பது மழு. இது கட்டங்கமென நின்றது. வெண்கோலம் நீற ணிந்தகோலம். பத்தியர்க்குப் பணைத்தல் உள்ளத்து நிகழும் இன் புறவால் மேனிக்கண்வருமொளியும்,ஓடுங்காமையும். இறுமாத்தல் தாழாதவுள்ளத்தராய்ச் செம்மாத்தல். முலைக்குப் பணைத்தல் பெரு த்தல்; இறுமாத்தல் ஏந்துதல். வெண்பத்திய கோலத்தினீரென்ற பாடத்திற்கு வெண்ணீற்றுற் பத்திபடவிட்ட முண்டத்தையுடைய கோலமென்றுரைக்க. (உசஉ)

## வேதியரைவினவல்.

வேதியரை வினவலென்பது விரதியரை வினவி, அதுவழி யாகச் செல்லாநின்றவள், மான்போலு நோக்கினையும், மயில்போ லுஞ் சாயலையுமுடையமான் ஓரேந்தலோடு நும்மெதிரே வரக்கண் டீரோவென வேதியரை வினவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**வெதிரேய்கரத்துமென்றோலேய்சுவல்வெள்ளை நூலிற்கொ**
**ண்மூ,வதிரேய்மறையினிவ்வாறுசெல்வீர்தில்லையம்பலத்துக்**
**கதிரேய்சடையோன்கரமானெனவொருமான்மயில்போ**
**லெதிரேவருமேசுரமேவெறுப்பவொரேந்தலொடே.**

மாதின்பின் வருஞ்செவிலி
வேதியரை விரும்பிவினயது.

இ - ள். வெதிர் ஏய் கரத்து - மூங்கிற்றண்டு பொருந்திய கையினையும்—மெல் தோல் ஏய் சுவல் - மெல்லிய கலைத்தோலியை ந்த சுவலினையும்—வெள்ளை நூலின் - வெள்ளை நூலினையும்—கொ ண்மூ அதிர் ஏய் மறையின் இவ்வாறு செல்வீர் - கொண்மூவினது முழக்கம்போலு மறையொலியினையுமுடைய இந்நெறிச்செல்வீர்— ஒரு மான் - ஒருமான்—தில்லை அம்பலத்துக் கதிர் ஏய் சடை யோன் கரமான் என - தில்லையம்பலத்தின்கணுளனாகிய மதிசேர்ந்த

சடையையுடையவனது கரத்தின்மான்போல மருண்ட நோக்கத்தளாய்—மயில் போல் - மயில்போல வசைந்தசாயலளாய்—சுரமே வெறுப்ப ஒரு ஏந்தலொடு எதிரே வருமே - வருத்துஞ் சுரந்தானே கண்டுதுன்புற ஓரேந்தலோடு நும்மெதிரேவந்தாளோ? உரைமின். எ - று.

தோலேய்ந்த சுவலின்கணுண்டாகிய வெள்ளை நூலினையுமெ ன்னுமமையும். இவை யிரண்டற்கும் மெய்ப்பாடு அது. பயன் தலைமகளைக் காண்டல். (உ௪௩)

## புணர்ந்துடன்வருவோரைப்பொருந்திவினவல்.

புணர்ந்துடன் வருவோரைப்பொருந்தி வினவலென்பது வேதியரை வினவி, அதுவழியாகச் செல்லாநின்றவள், நும்மைக் கண்டு, என்னுற்றேடப்படுகின்றார் மீண்டார்களென்று கருதி மகிழ்ந்தேன்; அதுகிடக்க, இவ்வாறு நும்மோடொத்த வொழுக்கத்தினராய் முன்னே யிருவரைப் போகக்கண்டீரோவெனப் புணர்ந்துடன் வருவோரைப் பொருந்தி வினவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மீண்டாரெனவுவந்தேன்கண்டுநும்மையிம்மேதகவே
பூண்டாரிருவர்முன்போயினரேபுலியூரெனைநின்
றாண்டானருவரையாளியன்னானைக்கண்டேனயலே
தூண்டாவிளக்கனையாயென்னையோவன்னைசொல்லியதே.

புணர்ந்துடன்வரும் புரவலனொருபால்
அணங்கமர்கோதையை யாராய்ந்தது.

இ - ள். நும்மைக் கண்டு மீண்டார் என உவந்தேன் - நும்மைக்கண்டு என்னுற் றேடப்படுகின்றார் மீண்டாரென்றுகருதி மகிழ்ந்தேன்—இம் மேதகவே பூண்டார் இருவர் முன் போயினரே - இவ்வாறு நும்மோடொத்த மேதகவையுடைத்தாகிய இவ் வொழுக்கத்தையேபூண்டார் இருவர் முன்னே போயினரோ? உரைமின். எ - று.

புலியூர் எனை நின்று ஆண்டான் அருவரை ஆளி அன்னானைக் கண்டேன் - புலியூர்க்கண் ஒரு பொருளாகமதித்து என்னைநின்றாண்டவனது கிட்டுதற்கரிய மலையில் ஆளியையொப்பானை யான் கண்டேன்—தூண்டா விளக்கு அனையாய் - தூண்டவேண்டாத விளக்கையொப்பாய்—அயல் அன்னை சொல்லியது என்னையோ - அவனதயல் அன்னைசொல்லியதியாது? அதனையவட்குச் சொல்லுவாயாக. எ - று.

அருவரைக்கட் கண்டேனெனக் கூட்டினுமமையும். ஆளி யன்றென்றதனால், நின்மகட்கு வருவதோரிடையூறில்லையெனக் கூறினும். தூண்டாவிளக்கு இல்பொருளுவமை. மணிவிளக்கெனினுமமையும். அணங்கமர் கோதையை - தெய்வநாற்றமமர்ந்த கோதையையுடையாளை. ஆராய்ந்தது-வினையது. மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த வுவகை. பயன் அது. (உ௪௪)

## வியந்துரைத்தல்.

வியந்துரைத்தலென்பது புணர்ந்துடன் வருவோரை வினவி, அதுவழியாகப் போகாநின்றவள், தன்மகணின்ற நிலையையும், அவன்கையின் வேலினான் வேங்கைபட்டுக்கிடந்த கிடையையுங் கண்டு, வியந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

பூங்கயிலாயப்பொருப்பன்றிருப்புலியூரதென்னத்
தீங்கையிலாச்சிறியாணின்றதிவ்விடஞ்சென்றெதிர்ந்த
வேங்கையின்வாயின்வியன்கைமடுத்துக்கிடந்தலற
வாங்கயிலாற்பணிகொண்டதுதிண்டிறலாண்டகையே.

வேங்கைபட்டதும் பூங்கொடிநிலையும்
நாடாவருங் கோடாய்கூறியது.

இ - ள். பூங் கயிலாயப் பொருப்பன் திருப்புலியூரது என்ன - பொலிவினையுடைய கைலாயமாகிய பொருப்பையுடையவனது திருப்புலியூரதனைப்போல—தீங்கை இலாச் சிறியாள் நின்றது இவ்விடம் - குற்றத்தையுடையவளல்லாத என்சிறியாள் நின்றது இவ்விடத்து—சென்று - சென்று—எதிர்ந்த வேங்கையின் வாயின் வியன் கை மடுத்து - தன்னோடெதிர்ந்த புலியின்வாயின்கட் பெரியகையைமடுத்து—கிடந்து அலற - வீழ்ந்துகிடந் தலறும் வண்ணம்—திண் திறல் ஆண்டகை அயிலாற் பணிகொண்டது ஆங்கு-திண்ணிய திறலையுடைய ஆண்டகை வேலாற் பணிகொண்டது அவ்விடத்து; அதனால், அவர்போயின நெறியிதுவே. எ - று.

தீங்கையிலாவென்புழி இன்மை உடைமைக்கு மறுதலையாகிய வின்மை. மகளடிச்சுவடுகிடந்தவழிச் சென்று நின்றனளாதலின், அதனை இவ்விடமென்றும், வேங்கைபட்டவிடத்தை யவ்விடமென்றுங் கூறினாள். வேங்கை தன் காதலியையணுகாமல் அது வரும்வழிச் சென்றேற்றானதலிற் சென்றென்றாள். சென்றுபணி கொண்டதென வினையும். மெய்ப்பாடு அது. பயன் ஆற்றாமை நீங்குதல். (உ௪௫)

## இயைபெடுத்துரைத்தல்.

இயைபெடுத்துரைத்தலென்பது வேங்கைபட்டது கண்டு வியந்து, அதுவழியாகச் செல்லாநின்றவள், எதிர்வருவாரை வினவ, அவர் நீ கூறுகின்றவரைக் குன்றத்திடைக்கண்டோம்; அவ்விருவருந்தம்முளியைந்து செல்லாநின்றமைகண்டு, எல்லாவற்றையுமுடையளாகிய தன் காதலியோடு ஒருவடிவாய் விளையாடும் புலியூரனென்றே கருதி, யாங்களெல்லாமொத்து, மிகவும் அவ்வெழிலைத்தொழ நினைந்தோம்; அந்நன்மை சொல்லலாவதொன்றன்றென எதிர்வருவார் அவரியைபெடுத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

மின்றொத்திடுகழனூபுரம்வெள்ளைசெம்பட்டுமின்ன
வொன்றொத்திடவுடையாளொடொன்றும்புலியூரனென்றே
நன்றொத்தெழிலைத்தொழவுற்றனமென்னதோர்நன்மைதான்
குன்றத்திடைக்கண்டனமன்னைநீசொன்னகொள்கையரே.

சேயிழையோடு செம்மல்போதர
ஆயிழைபங்கனென் றயிர்த்தேமென்றது.

இ - ள். அன்னை - அன்னாய்—நீ சொன்ன கொள்கையர்க் குன்றத்திடைக் கண்டனம் - நீ கூறிய கோட்பாட்டையுடையாரைக் குன்றத்திடைக்கண்டேம்—மின் தொத்து இடு கழல் நூபுரம் - அவ்விருவரு மியைந்துசேறலின், மின்றிரளுண்டாகாநின்ற அவனதுகழலும் அவளதுசிலம்பும்—வெள்ளை செம்பட்டு - அவனது வெண்பட்டும் அவளது செம்பட்டும்—மின்ன - விளங்க—ஒன்று ஒத்திட-ஒருவடிவை யொத்தலான்—உடையாளொடு ஒன்றும் புலியூரன் என்று - எல்லாவற்றையு முடையளாகிய தன்காதலியோ டொருவடிவாய் விளையாடும் புலியூரனென்றேகருதி—ஒத்து நன்று எழிலைத் தொழ உற்றனம் - யாங்களெல்லாமொத்துப் பெரிது மவ்வழகைத்தொழ நினைந்தேம்—என்னது ஓர் நன்மை தான் - அந்நன்மை யெத்தன்மையதோர் நன்மைதான்! அது சொல்லலாவதொன்றன்று. எ - று.

என்னதோர் நன்மையென்றதனான், அஃதறமாதலுங் கூறப்பட்டதாம். தானென்பது அசைநிலை. கொள்கையரை யென்னுமுருபு விகாரவகையாற் றொக்கது. என்னநன்மையதா மென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு உவகை. பயன் செவிலியை யெதிர்வருவார் ஆற்றுவித்தல். (உ௬௬)

## மீளவுரைத்தல்.

மீளவுரைத்தலென்பது இயைபெடுத்துரைத்தவர், அவ்விருவரும் ஓரிடுக்கணின்றிப்போய்த் தில்லையினெல்லையைச் சென்றணைவர்; இனி நீ செல்வதன்று, மீள்வதே காரியமெனத் தேடிச் செல்லாநின்ற செவிலியை, மீளக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

மீள்வதுசெல்வதன்றன்னையிவ்வெங்கடத்தக்கடமாக்
கீள்வதுசெய்தகிழவோனொடுங்கிளர்கெண்டையன்ன
நீள்வதுசெய்தகண்ணாளிந்நெடுஞ்சுரநீந்தியெம்மை
யாள்வதுசெய்தவன்றில்லையினெல்லையணுகுவரே.

கடுங்கடங்கடந்தமை கைத்தாய்க்குரைத்து
நடுங்கன்மின்மீண்டு நடமினென்றது.

இ - ள். கிளர் கெண்டை அன்ன நீள்வது செய்த கண்ணாள் - புடைபெயராநின்ற கெண்டைபோலும் நீடலைச்செய்த கண்ணையுடையாள்—இவ் வெங்கடத்து - வெய்யவிச் சுரத்தின்கண்—அக் கடமாக் கீள்வது செய்த கிழவோனொடும் - அத்தன்மைத்தாகிய கடமாவைப் பிளத்தலைச்செய்த கிழவோனொடும்—இந் நெடுஞ்சுரம் நீந்தி - இந்நெடியசுரத்தை நீந்தி அவ்விருவரும் ஓரிடுக்கணின்றிப் போய்—எம்மை ஆள்வது செய்தவன் தில்லையின் எல்லை அணுகுவர் - எம்மை யாளுதலைச்செய்தவனது தில்லையினெல்லையைச் சென்றணைவர், அதனால்—அன்னை - அன்னாய்—மீள்வது - செயற்பாலது மீள்வதே—செல்வது அன்று - சேறலன்று. எ - று.

சுரங்கடத்தல் இருவர்க்கு மொக்குமெனினும், நீள்வதுசெய்த கண்ணாணீந்தியெனத் தலைமகண்மேற் கூறினார், வெஞ்சுரத்திற்கவள் பஞ்சின் மெல்லடி தகாவாகலின். அணுகுவரென்புழித் தலைமகள் தொழிலுமுண்மையின், நீந்தியென்னுமெச்சம், வினைமுதல் வினை கொண்டதாம்; * திரித்துரைப்பாருமுளர். கிழவோனொடு மென்றதனால், அவன் பற்றுக்கோடாக நீந்தினாளென்பது விளக்கினார். இனி ஒடுவை எண்ணொடுவாக்கி யுரைப்பினுமமையும். உம்மை அசைநிலை. (உசஎ)

---

* "முதனிலை மூன்றும் வினைமுதன் முடிபின" என்புழிப் பொதுவாகாது வினைமுதற்கே வினையாதல் வேண்டுமென்னும் வரையறையின்றி வினைமுதல் வினையென்னுந் துணையேயாய் நிற்றலின், இவ்வாறு முடித்தார். இது சேனாவரையருரையானுமுணர்க. கிளவியாக்கம். உ-ம் சூத்திரம். ஆறுமுகவுறிசொன்.

## உலகியல்புரைத்தல்.

உலகியல்புரைத்தலென்பது மீளக்கூறவும் மீளாது கவலாநின்ற செவிலிக்கு, சந்தனமு முத்துஞ் சங்கும் தாம் பிறந்தவிடங்கட்கு யாதும் பயன்படாது, தம்மைவிரும்பி யணிவாரிடத்தே சென்று பயன்படாநிற்கும்; அதுபோல மகளிருந் தாம் பிறந்தவிடத்துப் பயன்படார்; நீ கவலவேண்டாவென, உலகியல்பு கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

சுரும்பிவர்சந்துந்தொடுகடன்முத்தும்வெண்சங்குமெங்கும்
விரும்பினர் பாற்சென்று மெய்க்கணியாம்வியன்கங்கையென்
னும், பெரும்புனல்சூடும்பிரான்சிவன்சிற்றம்பலமனைய
கரும்பனமென்மொழியாருமந்நீர்மையர்காணுநர்க்கே.

செவிலியது கவலைதீர
மன்னியவுலகியன் முன்னியுரைத்தது.

இ - ள். சுரும்பு இவர் சந்தும் - நறுநாற்றத்தாற் சுரும்புசென்று பரக்குஞ் சந்தனமும்—தொடு கடல் முத்தும் - தோண்டப்பட்ட கடலின்முத்தும்—வெண் சங்கும் - வெண்சங்கும்—எங்கும் விரும்பினர்பால் சென்று மெய்க்கு அணியாம் - எத்தேயத்துந் தாம்பிறந்த விடங்கட்கு யாதும்பயன்படாது தம்மைவிரும்பி யணிவாரிடத்தே சென்று அவர்மெய்க்கு அணியாகாநிற்கும்—வியன் கங்கை என்னும் பெரும்புனல் சூடும் பிரான் - அகன்ற கங்கையென்னுநின்ற பெரும்புனலைச் சூடும்பிரான்—சிவன் - சிவன்—சிற்றம்பலம் அனைய கரும்பு அன மென் மொழியாரும் - அவனது சிற்றம்பலத்தையொக்குங் கரும்புபோலும் மெல்லிய மொழியினையுடைய மகளிரும்—காணுநர்க்கு அந் நீர்மையர் - ஆராய்வார்க்கத்தன்மையர்; நீ கவலவேண்டா. எ - று.

சங்கு மணியாயும் வளையாயும் அணியாம். எங்குமணியாமெனவியையும். சிற்றம்பலத்து மன்னுங் கரும்பன மென்மொழியாரென்பது பாடமாயின், சிற்றம்பலத்தையுடைய தில்லையினுளதாங் கரும்புபோலு மென்மொழியையுடையாரென்றுரைக்க. (உ௪அ)

## அழுங்குதாய்க்குரைத்தல்.

அழுங்குதாய்க்குரைத்தலென்பது உலகியல்பு கூறவும் மீளாது நின்று, தாணெடுத்து வளர்த்தமை சொல்லிக் கவலாநின்ற செவிலியை, முன்னிலைப்புறமொழியாக, இவர் தாம் இல்லின்கணெடுத்து வளர்த்தவர்போலும்; அவர்போய்த் தம்மை யிருவரையுங்

கூட்டுவித்த தெய்வப்பதியாகிய தில்லையிடத்துப் பழனங்களைச் சென்றணைவரெனத் தம்முட் கூறுவார்போன்று கூறி, மீட்டுக் கொண்டு போகாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஆண்டிலெடுத்தவராமிவர்தாமவரல்குவர்போய்த்
தீண்டிலெடுத்தவர்தீவினைதீர்ப்பவன்றில்லையின்வாய்த்
தூண்டிலெடுத்தவராறெங்கொடெற்றப்பழம்விழுந்து
பாண்டிலெடுத்தபஃறாமரைகீழும்பழனங்களே.

செழும்பணை யணைந்தமை
அழுங்குதாய்க் குரைத்தது.

இ - ள். இவர் தாம் ஆண்டு இல் எடுத்தவர் ஆம் - இவர்தாம் அவ்விடத்து இல்லின்கணெடுத்து வளர்த்தவர்போலும்--தீண்டில்-யாவராயினுந் தம்மையணுகில்—எடுத்து அவர் தீவினை தீர்ப்பவன் தில்லையின்வாய் - அவர் நரகத்தழுந்தாமலெடுத்து அவரது தீவினையைத் தீர்ப்பவனது தில்லையின்கண்—தூண்டில் எடுத்த வரால் தெங்கொடு எற்ற - தூண்டிலைவிழுங்கிய வரால் தெங்கொடு மோத—பழம் விழுந்து - அதன் பழம்விழுந்து—பாண்டில் எடுத்த பல் தாமரை கீழும் பழனங்கள் - கிண்ணம்போலும் பூக்களையுயர்த்திய பலவாகிய தாமரையைக் கிழிக்கும் பழனங்களை—அவர் போய் அல்குவர் - அவர்சென்று சேர்வர்; இனியோரிடரில்லை. எ - று.

தில்லையின்வாய்ப் பழனங்களெனவியையும். ஆண்டிலெடுத்தவராமிவர்தாமென்று தம்முட்கூறிப் பின் செவிலிக்குக் கூறினாராக வுரைக்க. இவ்வாறு பகராது, செவிலிகேட்ப முழுவதூஉந் தம்முட் கூறினாராக வுரைப்பினுமமையும். தூண்டிலானெடுக்கப் பட்டவராலெனினு மமையும்.இவைமூன்றற்கும்மெய்ப்பாடு பெருமிதம். பயன் செவிலிக்கியல்பு கூறி அவளை மீள்வித்தல். நில்லா வளைதொட்டு இதுகாறும்வரப் பாலைத்திணைகூறியவா றறிக. ()

உடன்போக்கு முற்றிற்று.



# வரைவுமுடுக்கம்.



இவ்வாறுடன்போக்கு நிகழாதாயின், வரைந்துகோடனிகழும். அது நிகழுமிடத்துத் தோழியான் வரைவுமுடுக்கப்பட்டும் வரைபொருட்பிரிந்துவந்தும் நிகழுமென்ப. அவற்றுள், வரைவு முடுக்கம் வருமாறு:—

வருத்தங்கூற லவன்மறுத் துரைத்த
லுள்ள துகூற லேதங்கூறல்
பகல்வரலென்ற றொழுதிரந் துரைத்தல்
சிறைப்புறங்கூறன் மந்திமேல்வைத்தல்
கண்டுயிலாமை கண்டாருரைத்தல்
பகலுடம்பட்டாள்போன் றிரவரலென்ற
விரவுடம்பட்டாள்போன்று பகல்வரலென்ற
விரவும்பகலும் வரவொழிகென்றல்
காலங்கூறல் கூறுவிக்குற்றல்
செலவுகூறல் பொலிவழிவுரைத்தலென்
றீரெண்கிளவியு மியம்புங்காலை
வாரணிமுலையாய் வரைவுமுடுக்கம்.

இ-ள். வருத்தமிகுதிகூறி வரைவுகடாதல், பெரும்பான்மை கூறிமறுத்தல், உள்ளதுகூறிவரைவுகடாதல், ஏதங்கூறியிரவரவு விலக்கல், பழிவரவுரைத்துப்பகல்வரவுவிலக்கல், தொழுதிரந்து கூறல், தாயறிவுகூறல், மந்திமேல்வைத்துவரைவுகடாதல், காவன் மேல்வைத்துக்கண்டுயிலாமைகூறல், பகலுடம்பட்டாள்போன்றிர வரவுவிலக்கல், இரவுடம்பட்டாள்போன்று பகல்வரவுவிலக்கல், இரவும்பகலும்வரவுவிலக்கல், காலங்கூறிவரைவுகடாதல், கூறு விக்குற்றல், செலவுநினைந்துரைத்தல், பொலிவழிவுரைத்துவரைவு கடாதல், எனவிவை பதினாறும் வரைவுமுடுக்கமாம். எ - று. அவற்றுள்—

## வருத்தமிகுதிகூறிவரைவுகடாதல்.

வருத்தமிகுதிகூறி வரைவுகடாதலென்பது அலரறிவுறுத்த தோழி, அலரானுங் காவன்மிகுதியானு நின்னை யெதிர்ப்பட மாட் டாதழுது வருந்தாநின்றவளிடத்து நின்னருளிருக்கின்றவாறென் னோவெனத் தலைமகளது வருத்தமிகுதிகூறித் தலைமகனை வரைவு கடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

எழுங்குலைவாழையினின்கனிதின்றிளமந்தியந்தண்
செழுங்குலைவாழைநிழலிற்றுயில்சிலம்பாமுனைமே
லுழுங்கொலைவேற்றிருச்சிற்றம்பலவரையுன்னலர்போ
லழுங்குலைவேலன்னகண்ணிக்கென்னோநின்னருள்வகையே

இரவுக்குறியிடத் தேர்ந்திழைப்பாங்கி
வரைவுவேண்டுதல் வாவுரைத்தது.

இ - ள். எழும் குலை வாழையின் இன் கனி தின்று - எழா நின்ற குலைகளையுடைய வாழைத்திரளின்கணுண்டாகிய இனிய கனிகளைத்தின்று—இள மந்தி - இளையமந்தி—செழுங் குலை வாழை அம் தண் நிழலில் துயில் சிலம்பா - வளவிய குலையையுடைய அவ் வாழைத்திரளினது நல்ல குளிர்ந்தநிழற்கண் வெருவுதலின்றித் துஞ்சுஞ் சிலம்பையுடையாய்—முனைமேல் உழும் கொலை வேல் திருச்சிற்றம்பலவரை உன்னலர் போல் - போரிடத்துழுங் கொலை வேலையுடைய திருச்சிற்றம்பலவரை நினையாதாரைப்போல—அழுங்கு உலை வேல் அன்ன கண்ணிக்கு - வருந்தாநின்ற உலைத்தொழி லமைந்த வேல்போலுங் கண்ணையுடையாட்கு—நின் அருள் வகை என்னோ - நினதருட்கூறியாதோ? இவளதாற்றுமைக்கு மருந் தன்று. எ - று.

நின்னருள்வகை யென்னோவென்பதற்கு இவ்வாறு வருந்து மிவடிறத்து இனி நீ செய்யக்கருதியவகை யாதோவெனினுமமை யும். அழுங்கொலைவேலென்பது பாடமாயின், அழாநின்ற கொலை வேல்போலுங் கண்ணையுடையாட்கென் றுரைக்க. எழுங்குலை இளங்குலை. செழுங்குலை முதிர்ந்தகுலை. எழுங்குலையு முதிர்ந்த குலையு முடைமையான் இடையறாது பழுக்கும் வாழைத்திரளின்க ணுண்டாகிய கனியை நுகர்ந்து, மந்தி வேறொன்றான் வெருவாது அவ்வாழை நிழலின்கீழின்புற்றுத் துயிலுமாறுபோல, ஆராவின்ப மிடையிட்டு நுகராது நீ வரைந்துகோடலான் இடையறாத பேரின் பந்துய்த்து, அன்னைசொல்லா லுண்ணடுங்காது நின்றாணிழற்கீழ் இவளின்புற்றுவாழ்தல் வேண்டுமென உள்ளுறைகாண்க. மெய்ப் பாடு அச்சம். பயன் வரைவுகடாதல். (உருo)

## பெரும்பான்மைகூறிமறுத்தல்.

பெரும்பான்மைகூறி மறுத்தலென்பது வரைவுகடாவிய தோழிக்கு, யானவளைத் தெய்வமாவுடமென்றறிந்து வரைந்துகோ டற்கு இக்குன்றிடத்துத் தோன்றாநின்ற விடம் தெய்வமகளிர திடமோ, அன்றிக் குறத்தியரிடமோ, கூறுவாயாகவெனத் தலை மகன் றலைமகளைப் பெரும்பான்மைகூறி மறுத்துரையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பரம்பயன்றன்னடியேனுக்குப்பார்விசும்பூடுருவி
வரம்பயன்மாலறியாத்தில்லைவானவன்வானகஞ்சே

ரரம்பையர்தம்மிடமோவன்றிவேழத்தினென்புநட்ட
குரம்பையர்தம்மிடமோவிடந்தோன்றுமிக்குன்றிடத்தே.

குலம்புரி கொம்பர்க்குச்
சிலம்பன் செப்பியது.

இ - ள். இக் குன்றிடத்தே தோன்றும் இடம் - இக்குன்றிடத்துத் தோன்றுமிடம்—தில்லை வானவன் வானகம் சேர் அரம்பையர் தம் இடமோ - தில்லையின் வானவனது வானகத்தைச் சேர்ந்த தெய்வமகளிர் தமதிடமோ—அன்றி வேழத்தின் என்பு நட்ட குரம்பையர் தம் இடமோ - அன்றி யானையினென்பை வேலியாக நட்ட குரம்பைகளையுடைய குறத்தியரிடமோ? நீ கூறுவாயாக. எ - று.

பரம் - எல்லாப்பொருட்கும் அப்பாலாயவன்—தன் அடியேனுக்குப் பயன்—ஆயினும் தன்னடியேற்குப் பெறும்பயனாயுள்ளான்—பார் விசும்பு ஊடுருவி வரம்பு அயன் மால் அறியாத் தில்லை வானவன் - பாரையும் விசும்பையு மூடுருவிநிற்றலாற் றன்னெல்லையை அயனுமாலுமறியாத தில்லையின் வானவனெனக் கூட்டுக.

என்றது அவளை யெட்டவுஞ் சுட்டவும் படாத தெய்வமென்றிருத்தலான், அவள் வாழுமிடத்தை அரம்பையரிடமென்றே கருதுவல், அன்றாயினுரையென வரைவுடம்படாது கூறியவாறு. மெய்ப்பாடு மருட்சி. பயன் இரவுக்குறியிடமுணர்த்துதல். (உருக)

## உள்ளதுகூறிவரைவுகடாதல்.

உள்ளதுகூறி வரைவுகடாதலென்பது பெரும்பான்மைகூறி மறுத்த தலைமகனுக்கு, இவ்விடம் எந்தையது முற்றூட்டு; எமக்குற்றார் குறவரே; எம்மைப்பெற்றாளுங் கொடிச்சியே; யாங்களும் புனங்காப்போஞ்சிலர்; நீ வரைவுவேண்டாமையின் எம்மைப் புணர்ந்துரைக்க வேண்டுவதில்லையெனப் பின்னும் வரைவுதோன்றத் தோழி தங்களுண்மை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சிறார்கவண்வாய்த்தமணியிற்சிதைபெருந்தேனிழுமென்
றிறால்கழிவுற்றெஞ்சிறுகுடிலுந்துமிடமிதெந்தை
யுறாவரையுற்றார்குறவர்பெற்றாளுங்கொடிச்சியும்பர்
பெறாவருளம்பலவன்மலைக்காத்தும்பெரும்புனமே.

இன்மையுரைத்த மன்னனுக்கு
மாமைநோக்கி தோழியுரைத்தது.

இ-ள். சிறூர் கவண் வாய்த்த மணியின் சிதை பெருந்தேன்-சிறூர்கையிற்கவண் தப்பாமல் அதுவிட்ட மணியாற் சிதைந்த பெருந்தேன்—இழுமென்று - இழுமென்னு மோசையையுடைத் தாய்—இருல் கழிவுற்று எம் சிறுகுடில் உந்தும் இடம் இது-இருலினின்றுங் கழிதலையுற்று எமது சிறுகுடிலைத் தள்ளுமிவ்விடம்—எந்தை உருவரை - எந்தையது முற்றூட்டு—உற்றூர் குறவர் - எமக்குற்றூர் குறவர்—பெற்ருளும் கொடிச்சி - எம்மைப்பெற்ருளுங் கொடிச்சியே—உம்பர் பெரு அருள் அம்பலவன் மலைப் பெரும் புனம் காத்தும் - யாமும் தன்னன்பரல்லது உம்பர்பெருதவருளையுடைய அம்பலவனது மலைக்கட் பெரும்புனத்தைக்காத்தும்; அதனுல், நீயிர் வரைவுவேண்டாமையி னெம்மைப்புனைந்துரைக்கவேண்டுவதில்லை. எ - று.

"கோவையுந் தொகையு மாவயின் வரையார்" என்பதனுன், இது தொடர்நிலைச் செய்யுளாதலிற் குரம்பையர் தம்மிடமோ வென்று வினவப்பட்ட விடம் எஞ்சிறுகுடிலுந்துமிடமெனவும் ஒருபுனத்தைச்சுட்டி இதெந்தையுருவரையெனவுங் கூறினுளாக வுரைப்பினுமமையும். சிறுரெறிந்தமணியாற் பெருந்தேன் சிதைந்து அவ்விருலைவிட்டுக் கழிந்து, சிறுகுடிலிற் பரந்தாற்போல, அயலார் கூறும் அலரான் நுமதுமறைந்தவொழுக்கம் நும்வயினடங்காது பலருமறிய வெளிப்படா நின்றதெனை உள்ளுறைகாண்க. மெய்ப்பாடு மருட்சி. பயன் குறியிட முணர்த்துதல். (உருஉ)

## ஏதங்கூறியிரவரவுவிலக்கல்.

ஏதங்கூறி யிரவரவுவிலக்கலென்பது உண்மையுரைத்து வரைவுகடாய தோழி, நீ வரைவொடு வாராயாயிற் சிங்கந்திரண்டு தனக்கியானையாகிய வுணவுகளைத்தேடு மிருளின்கண், நினது கை வேல் துணையாக நீவந்தருளாநின்ற விஃதே எங்களுக்குத் துன்பமாகத் தோன்ருநின்றது; இனியிவ்விருளிடை வாராதொழிவாயென ஏதங்கூறித் தலைமகனை யிரவரவு விலக்காநிற்றல். அதற்குச் செய்யுள்—

**கடந்தொறும்வாரணவல்சியினுடிப்பல்சீயங்கங்கு**
**லிடந்தொறும்பார்க்குமியவொருநீயெழில்வேலின்வந்தாற்**
**படந்தொறுந்தீயரவன்னம்பலம்பணியாரினெம்மைத், தொ**
**டர்ந்தொறுந்துன்பென்பதேயன்பநின்னருடோன்றுவதே.**

இரவருதுயர மேந்தலுக்கெண்ணிப்
பருவரலெய்திப் பாங்கிபகர்ந்தது.

இ - ள். பல் சீயம் வாரண வல்சியின் நாடி - பலவாகியசீயம் வாரணமாகிய வல்சி காரணமாகத்தேடி—கங்குல் கடம் தொறும் இடம்தொறும் பார்க்கும் இயவு-கங்குற்பொழுதின்கட் காடுகடோறுங் காட்டினிடங்கடோறுஞ் சென்று பார்க்குநெறியின்கண்—ஒரு நீ எழில் வேலின் வந்தால் - தனியையாகிய நீ எழிலையுடைய வேல் துணையாக வந்தால்—அன்ப - அன்பனே—நின் அருள் எம்மைத் தொடர்ந்து ஒறும் துன்பு என்பதே தோன்றுவது - எம்மிடத்துண்டாகிய நின்னருள் எம்மைவிடாதே தொடர்ந்தொறுக்குந் துன்பமென்னுமுணர்வே எமக்குத்தோன்றுவது. எ - று.

படம்தொறும் தீ அரவன் அம்பலம் பணியாரின் எம்மை ஒறும் - படந்தொறுமுண்டாகிய தீயையுடைய அரவையணிந்தவன தம்பலத்தைப் பணியாதாரைப்போல வருந்த எம்மை யொறுக்குமெனக்கூட்டுக.

என்றது, எமக்கு நீ செய்யுந் தலையளியை யாங்கள் துன்பமாகவே யுணராநின்றேம் என்றவாறு. நாடுதல் மனத்தாலாராய்தல். பார்த்தல் கண்ணானோக்குதல். வேலினென்னு மைந்தாவது ஏதுவின்கண் வந்தது. ஒறுக்குமென்பது ஒறுமெனவிடைக்குறைந்து நின்றது. எம்மை நீ விடாது தொடருந்தொறு மெனினுமமையும். இதற்குத் தொடருமென்பது இடைக்குறைந்து நின்றது. நின்னருளென்னு மெழுவாய் துன்பமென்னும் பயனிலைகொண்டது. மெய்ப்பாடு அச்சம். பயன் இரவுக்குறியதேதங்காட்டி வரைவுகடாதல். (உருஙு)

## பழிவரவுரைத்துப்பகல்வரவுவிலக்கல்.

பழிவரவுரைத்துப் பகல்வரவு விலக்கலென்பது இவ்விருளிடை யாராதொழிகென்றது பகல்வரச்சொன்னவாறுமென வுட்கொண்டு, பகற்குறிச் சென்றுநிற்ப, தோழி யெதிர்ப்பட்டுப் பகல் வந்து எமக்குச் செய்யாநின்ற மெய்யாகியவருள் புறத்தாரறிந்து வெளிப்பட்டுப் பழியாகப் புகுதாநின்றது; இனிப் பகல்வரவொழிவாயாகவெனப் பழிவருதல் கூறிப் பகல்வரவு விலக்காநிற்றல். அதற்குச்செய்யுள் —

களிறுற்றசெல்லல்களைவயிற்பெண்மரங்கைஞெமிர்த்துப்
பிளிறுற்றவானப்பெருவரைநாடபெடைநடையோ

டொளிறுற்றமேனியன்சிற்றம்பலநெஞ்சுறாதவர்போல்
வெளிறுற்றவான்பழியாம்பகனீசெய்யுமெய்யருளே.

ஆங்ஙனமொழுகு மடல்வேலண்ணலைப்
பாங்கியைய பகல்வரலென்றது.

இ - ள். களிறு உற்ற செல்லல் பெண் களைவயின் - அசும்பி ன்கட்பட்டுக் களிறுற்ற வருத்தத்தைப் பிடி தீர்க்கின்றவிடத்து— மரம் கைஞ் ஞெமிர்த்துப் பிளிறு உற்ற வானப் பெருவரை நாட - மரத்தைக் கையான்முறித்துப் பிளிறுதலையுற்ற வானத்தைத்தோ யும் பெரியவரையையுடைய நாடனே—பெடை நடையோடு ஒளிறு உற்ற மேனியன் சிற்றம்பலம் நெஞ்சு உறாதவர் போல் - அன்னப்பெடையினது நடைபோலு நடையையுடையாளொடுகூடி விளங்குதலையுற்ற மேனியையுடையவனது சிற்றம்பலத்தை நெஞ் சாலுறாதாரைப்போல யாமிடர்ப்பட—வெளிறு உற்ற வான் பழி யாம் - வெளிப்படுதலையுற்ற பெரிய பழியாகாநின்றது—நீ பகல் செய்யும் மெய் அருள் - நீ பகல்வந்து எமக்குச்செய்யும் மெய்யாகிய வருள். எ - று.

மெய்யருளென்றது மெய்யாகவருளுநின்றாயேனு மென்ற வாறு. வழியல்லாவழிச் சேறலான் அசும்பிற்பட்ட களிற்றினை வாங்குதற்குப் பிடிமுயல்கின்றாற்போல, இவளை யெய்துதற் குபாய மல்லாத விவ்வொழுக்கத்தினை விரும்புநின்னை இதனினின்று மா ற்றுதற்கு யான் முயலாநின்றேனென உள்ளுறைகாண்க. மெய்ப் பாடு அது. பயன் பகற்குறிவிலக்கி வரைவுகடாதல். (உரு௪)

## தொழுதிரந்துகூறல்.

தொழுதிரந்து கூறலென்பது பகல்வரவு விலக்கின தோழி, இவனிரவுவரவுங் கூடுமெனை வுட்கொண்டு, நின்னை யெதிர்ப்பட வேண்டி அழுது வருந்தாநின்ற இவள் காரணமாக, அரிக்கும் யாளி க்கும் வெருவி யானைகள் திரண்டு புடைபெயராத மிக்கவிருளின் கண் வாராதொழிவாயாகவென்று, நின் கழல்களைக் கையாற்றொ ழுது, நின்னை யிரந்தேனென வரைவுதோன்றத் தலைமகனைத் தொ ழுதிரந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

கழிகட்டலைமலைவோன்புலியூர்கருதாதவர்போற்
குழிகட்களிறுவெரீஇயரியாளிகுழீஇவழங்காக்
கழிகட்டிரவின்வரல்கழல்கைதொழுதேயிரந்தேன்
பொழிகட்புயலின்மயிலிற்றுவளுமிவள்பொருட்டே.

இரவரவி னேதமஞ்சிச்
சுரிதருகுழற் ருேழிசொல்லியது.

இ - ள். பொழிகட் புயலின் மயிலின் துவளும் இவள் பொருட்டு - பொழியாநின்ற கண்ணிற் புனலையுடையதோர் மயில்போலத் துவளாநின்ற விவள் காரணமாக—அரி யாளி வெரீஇ - அரியையும் யாளியையும் வெருவி—குழி கண் களிறு-குழிந்தகண்ணையுடையவாகிய யானைகள்—குழீஇ - ஓரிடத்தே திரண்டு நின்று—வழங்கா - அவ்விடத்துநின்றும் புடைபெயராத—கழி கட்டிரவின் வரல் - சிறந்த வச்சத்தைச்செய்யு மிரவின்கண் வாராதொழிவாயாக—கழல் கை தொழுது இரந்தேன் - நின்கழல்களைக் கையாற்ருெழுது நின்னையிரந்தேனிதனை. எ - று.

கழி கண் தலை மலைவோன் புலியூர் கருதாதவர் போல் வெரீஇ - கழிந்தகண்ணையுடைய தலைமாலையைச் சூடுவோனது புலியூரைக் கருதாதார்ரப்போல வெருவியெனக்கூட்டுக.

குழிவழங்காவென்று பாடமோதி, அரியையும் யாளியையுங் குழியையும் வெருவி வழங்காவென் றுரைப்பாருமுளர். கழி அச்சத்தைச்செய்யு மியல்பாற் சிறத்தல். கழிகட்டிரவினென்பதற்குக் கழி சிறப்பின்கண் வந்து அரையிரவின்கணென்பது பட நின்றதெனினுமமையும்.பொழிகட் புயலின் மயிலிற்றுவளுமென்றதனுல், இவ்வாறிவளாற்ருளெனினும் நீ வரற்பாலையல்லையென் றுகூறி வரைவுகடாவினுளாம். வழியிடைவருமேதங் குறித்து இவ்வாருகின்ற விவள்பொருட்டென் றுரைப்பினுமமையும்.கருதார் மனம்போலென்பது பாடமாயின், மனம்போலுங் கழிகட்டிரவென வியையும். மெய்ப்பாடு அது. பயன் இரவுக்குறிவிலக்கி வரைவுகடாதல்.

## தாயறிவுகூறல்.

தாயறிவு கூறலென்பது தொழுதிரந்து கூறவும், வேட்கை மிகவாற் பின்னுங் குறியிடைச்சென்று நிற்ப, அக்குறிப்பறிந்து, நங்கானலிடத்து அரையிரவின்கண் ஒரு தேர்வந்ததுண்டாகக் கூடுமெனவுட்கொண்டு, அன்னை சிறிதே கண்ணுஞ்சிவந்து என்னையும் பார்த்தாள்; இருந்தவாற்ருன் இவ்வொழுக்கத்தை யறிந்தாள்போலுமெனத் தோழி தலைமகளுக்குக் கூறுவாள்போன்று சிறைப்புறமாகத் தலைமகனுக்கு வரைவுதோன்றத் தாயறிவு கூருநிற்றல். அதற்குச்செய்யுள்—

**விண்ணுஞ்செலவறியாவெறியார்கழல்வீழ்சடைத்தீ**
**வண்ணன்சிவன்றில்லைமல்லெழிற்கானலரையிரவி**

**வண்ணன் மணிநெடுந்தேர்வந்ததுண்டாமெனச்சிறிது**
**கண்ணுஞ்சிவந்தன்னையென்னையுநோக்கினள்கார்மயிலே.**

சிறைப்புறத்துச் செம்மல்கேட்ப
வெறிக்குழற்பாங்கி மெல்லியற்குரைத்தது.

இ - ள். கார் மயிலே-கார்காலத்து மயிலையொப்பாய்—தில்லை மல் எழில் கானல் - தில்லையில் வளவிய வெழிலையுடைய கானலிடத்து—அரை இரவின் மணி அண்ணல் நெடுந்தேர் வந்தது உண்டாம் என - அரையிரவின்கண் மணிகளையுடைய தலையாயதொரு நெடுந்தேர் வந்ததுண்டாகக்கூடுமென வுட்கொண்டு—அன்னை சிறிது கண்ணும் சிவந்து - அன்னை சிறிதே கண்ணுஞ்சிவந்து—என்னையும் நோக்கினள் - என்னையும் பார்த்தனள்; இருந்தவாற்றான் இவ்வொழுக்கத்தினையறிந்தாள்போலும்! எ - று.

விண்ணும் செலவு அறியா - விண்ணுளோரானும் எல்லாப் பொருளையுங் கடந்தப்பாற்சென்ற செலவையறியப்படாத—வெறி ஆர் கழல் வீழ் சடைத் தீ வண்ணன் - நறுநாற்றமார்ந்த கழலினையுந் தாழ்ந்தசடையினையுமுடைய தீவண்ணன்—சிவன் - சிவன்—தில்லை - அவனது தில்லையெனக் கூட்டுக.

எல்லாப்பொருளையுங்கடந்து நின்றனவாயினும், அன்பர்க்கணியவாய் அவரிட்ட நறுமலரான் வெறிகமழுமென்பது போதர வெறியார்கழலென்றார். மெய்ப்பாடு பெருமிதம். பயன் படைத்து மொழியால் வரைவுகடாதல். (உடு௬)

## மந்திமேல்வைத்துவரைவுகடாதல்.

மந்திமேல்வைத்து வரைவுகடாதலென்பது சிறைப்புறமாகத் தாயறிவுகூறிச் சென்றெதிர்ப்பட்டு, ஒரு கடுவன் றன்மந்திக்கு மாங்கனியைத் தேனின்கட்டோய்த்துக்கொடுத்து நுகர்வித்துத் தம்முளின்புறுவதுகண்டு, இது நங்காதலர்க்கு நம்மாட்டரிதாயிற்றென நீ வரையாமையை நினைந்தாற்றாளாயினுளென மந்திமேல்வைத்துத் தலைமகளது வருத்தங்கூறி வரைவு கடாவாநிற்றல். அதற்குச் செய்யுள்—

**வான்றோய்பொழிலெழின் மாங்கனிமந்தியின்வாய்க்கடுவன்**
**றேன்றோய்த்தருத்திமகிழ்வகண்டாடிருநீண்முடிமேன், மீன்**
**றோய்புனற்பெண்ணைவைத்துடையாளையுமேனிவைத்தான்**
**வான்றோய்மதிற்றில்லைமாநகர்போலும்வரிவளையே.**

வரிவளையை வரைவுகடாவி
யரிவைதோழி யுரைபகர்ந்தது.

இ - ள். நீள் திருமுடிமேன் மீன் தோய் புனல் பெண்ணை வைத்து - நீண்ட திருமுடிக்கண் மீனைப்பொருந்திய புனலாகிய பெண்ணை வைத்து—உடையாளையும் மேனி வைத்தான் வான் தோய் மதில் தில்லை மாநகர் போலும் வரிவளை - எல்லாவற்றையுமு டையவளையுந் திருமேனிக்கண் வைத்தவனது வானைத்தோயுமதி லையுடைய தில்லையாகிய பெரியநகரையொக்கும் வரிவளை—வான் தோய் பொழில் எழில் மாங்கனி - வானைத்தோயும் பொழிலின்க ணுண்டாகிய நல்லமாங்கனியை—கடுவன் தேன் தோய்த்து மந்தி யின் வாய் அருத்தி மகிழ்வ கண்டாள் - கடுவன் தேனின்கட்டோய் த்து மந்தியின்வாய்க் கொடுத்து நுகர்வித்துத் தம்முளின்புறுமவற் றைக் கண்டாள். எ - று.

என்றதனால், 'துணைபுறங்காக்குங் கடுவனைக்கண்டு, விலங்கு களுமிவ்வாறு செய்யாநின்றன; இது நங்காதலர்க்கு நம்மாட்டரி தாயிற்றென நீ வரையாமையை நினைந்தாற்றுளாயினுமொன்று ளாம். அருத்தி என்பதற்கு நெடுஞ்சுரநீந்தி என்றதற்குரைத்த துரைக்க. கான்றோய்பொழிலென்பதூஉம் பாடம். வரிவளையை வரைவு-வரிவளையை வரைதல். மெய்ப்பாடு அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். பயன் வரைவுகடாதல். (உ௫௭)

## காவன்மேல்வைத்துக்கண்டுயிலாமைகூறல்.

காவன்மேல்வைத்துக் கண்டுயிலாமை கூறலென்பது மந்தி மேல்வைத்து வரைவுகடாவப்பட்ட தலைமகன், இது நங்காதலி யிடத்து நமக்கரிதாயிற்றெனத் தானுமாற்றுனாய், இரவுக்குறிச் சென்று நிற்ப, அந்நிலைமைக்கண் இவ்விடத்துள்ளார், இவள் காவற்பறைகேட்குந் தோறுங் கண்டுயிலாமைக்குக் காரணமென் னோவெனத் தம்முட் கூறுநிற்றல். இதுவுஞ் சிறைப்புறமாக வரைவு கடாதலைப் பயக்கும். அதற்குச்செய்யுள்—

**நறைக்கண்மலிகொன்றையோனின்றுநாடகமாடுதில்லைச்**
**சிறைக்கண்மலிபுனற்சீர்நகர்காக்குஞ்செவ்வேலிளைஞர்**
**பறைக்கண்படும்படுந்தோறும்படாமுலைப்பைந்தொடியாள்**
**கறைக்கணமலிகதிர்வேற்கண்படாதுகலங்கினவே.**

நகர் காவலின்
மிகுகழி காதல்.

இ - ள். நறைக் கள் மலி கொன்றையோன்-நறுநாற்றத்தையுடைய தேன்மலிந்த கொன்றையையுடையவன்—நின்று நாடகம் ஆடு தில்லைச் சிறைக்கண் - நின்று கூத்தாடுந்தில்லையாகிய சிறையிடத்து—மலி புனல் சீர் நகர் காக்கும்—அதுபொழுமன் மிகும்புனலையுடைய சீரியநகரை இராப்பொழுதின்கட்காக்கும்—செவ்வேல் இளைஞர் பறைக்கண் படும் படும் தோறும் - செவ்வேலையுடைய இளைஞரது பறைக்கண் படுந்தோறும் படுந்தோறும்—படா முலைப் பைந்தொடியாள் - படக்கடவவல்லாத முலையையுடைய பைந்தொடியாளுடைய—கறை கண் மலி கதிர் வேற் கண் - கறை தன்கண் மிக்க கதிர்வேல்போலுங்கண்கள்—படாது கலங்கின - ஒருகாலும் படாவாய் வருந்தின. எ - று.

நாடகமென்றது ஈண்டுக்கூத்தென்னுந் துணையாய்நின்றது. கலங்கினவென்பதற்குத் துயிலாமையான் நிறம்பெயர்ந்தன வென்றும் அழுதுகலங்கினவென்று முரைப்பாருமுளர். காவன்மிகுதியும் அவளதாற்றாமையுங்கூறி வரைவுகடாயவாறு. இஃதின்னோர் கூற்றென்னாது துறைகூறிய கருத்து. மெய்ப்பாடு அழுகை. பயன் வரைவுகடாதல். (௨௫௮)

## பகலுடம்பட்டாள்போன்றிரவரவுவிலக்கல்.

பகலுடம்பட்டாள்போன்றிரவரவு விலக்கலென்பது சிறைப்புறமாகக் கண்டுயிலாமைகேட்ட தலைமகன், ஆதரவுமிகவாலெதிர்ப்படலுற்றுநிற்பத் தோழி யெதிர்ப்பட்டு, நீவந்தொழுகாநின்ற இப்புலராவிரவும் பொழியாமழையும் புண்ணின்கணுழையும் வேல் மலராம்படி யெங்களை வருத்தாநின்றன; இதற்கொரு மருந்தில்லையோ நும் வரையிடத்தெனப் பகலுடம்பட்டாள்போன் றிரவரவு விலக்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

கலராயினர்நினையாத்தில்லையம்பலத்தான்கழற்கன்
பிலராயினர்வினைபோலிருடூங்கிமுழங்கிமின்னிப்
புலராவிரவும்பொழியாமழையும்புண்ணின்னுழைவேன்
மலராவருமருந்தும்மில்லையோநும்வரையிடத்தே.

விரைதரு தாரோ
யிரவர லென்றது.

இ - ள். கலர் ஆயினர் வணங்காத் தில்லை அம்பலத்தான் கழற்கு - தீமக்களாயுள்ளார் கருதாத தில்லையம்பலத்தானுடைய திருவடிகட்கு—அன்பு இலர் ஆயினர் வினைபோல் இருள் தூங்கிப்

புலரா இரவும் - அன்புடையரல்லாதாரது தீவினைபோல இருள் செறிந்துபுலராதவிரவும்—மின்னி முழங்கிப் பொழியா மழையும்- மின்னி முழங்கிப் பொழிவதுபோன்று பொழியாத மழையும்— புண்ணில் நுழை வேல் மலரா வரும் - எமக்குப் புண்ணின்கணு ழையும்வேல் மலராம்வண்ணங் கொடியவாய் வாராநின்றன—மரு ந்தும் இல்லையோ நும் வரையிடத்து - இதற்கொரு மருந்துமில் லையோ நும்வரையிடத்து! எ - று.

மருந்தென்றமையான் வரையிடத்தென்றாள். ஒரு நிலத்துத் தலைமகளாதலின், நும்வரையாகிய இவ்விடத்திதற்கோர் மருந்தில்லை யோவென ஒருலகவழக்காகவுரைப்பினு மமையும். வருத்துதலே யன்றித் தணித்தலுமுண்டோவென்பதுபட நின்றமையின், மரு ந்துமென்னுமும்மை எச்சவும்மை. இரவின்கண் வந்தொழுகா நிற் பவும், இரவுறுதுயரந்தீர்க்கு மருந்தில்லையோவென்று கூறினமை யான், வரைவல்லது இவ்வாறொழுகுதல் அதற்கு மருந்தன்றென்று கூறினளாம். மெய்ப்பாடு அழுகை. பயன் இரவுக்குறி விலக்குதல்.

## இரவுடம்பட்டாள்போன்றுபகல்வரவுவிலக்கல்.

இரவுடம்பட்டாள்போன்று பகல்வரவு விலக்கலென்பது இவள் மருந்தில்லையோவென்றது, யான் இரவுக்குறிச்செல்லின் மழைக்காலிருளானெதிர்ப்படலருமையான் வேட்கையுற்றுப் பகற் குறி யுடம்பட்டாளென வுட்கொண்டு, பகற்குறிச் செல்லாநிற்ப, தோழி யெதிர்ப்பட்டு, பகல்வந்தருளாநின்றது அவளுக்கு வருத்த முறும்படியாக மிக்க வலராகாநின்றது; அதனாற் பகற்குறி வரற் பாலையல்லையென, இரவுக்குறி யுடம்பட்டாள்போன்று பகற்குறி விலக்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

இறவரையும்பர்க்கடவுட்பராய்நின்றெழிலியுன்னிக்
குறவரையார்க்குங்குளிர்வரைநாடகொழும்பவள
நிறவரைமேனியன்சிற்றம்பலநெஞ்சுறாதவர்போ
லுறவரைமேகலையாட்கலராம்பகலுன்னருளே.

இகலடு வேலோய்
பகல்வர லென்றது.

இ - ள். இற - தொடர்ந்து பெய்யாதிருதலான்——எழிலி உன்னி-எழிலிபெய்தலை நினைந்து--வரை உம்பர்க் கடவுள் பராய்- மலைமேலுறையுந் தெய்வங்களைப்பராவி—குறவர் நின்று ஆர்க்கும் குளிர் வரை நாட - குறவர் நின்றார்ப்பரவஞ்செய்யுங் குளிர்ந்த

வரைமேலுண்டாகிய நாட்டையுடையாய்—கொழும் பவள நிற வரை மேனியன் சிற்றம்பலம் நெஞ்சு உறாதவர் போல் உற - கொழுவிய பவளமாகிய நிறத்தையுடைய வரைபோலுந் திருமேனியை யுடையவனது சிற்றம்பலத்தை நினையாதவரைப்போல வருந்த— அரை மேகலையாட்குப் பகல் உன் அருள் அலராம் - அரைக் கணிந்த மேகலையையுடையாட்குப் பகலுண்டாமுனதருள் மிக்க வலராகா நின்றது; அதனனீவாரல். எ - று.

குறவரையென்புழி ஐகாரம் அசைநிலை. அசைநிலை யென்றது குறமலையென் றுரைப்பாருமுளர். வரையையுடையநாடெனினுமமையும். குறவர் பரவும்பருவத்துத் தெய்வத்தைப்பரவாது, பின்மழைமறுத்தலானிடர்ப்பட்டு அதனை முயல்கின்றாற்போல, நீயும் வரையுங்காலத்து வரையாது, இவளை யெய்துதற்கரிதாகிய விடத்துத் துன்புற்று வரைய முயல்வையென உள்ளுறைகாண்க. "உள்ளுறை தெய்வ மொழிந்தவை நிலனெனக்—கொள்ளு மென்ப குறியறிந் தோரே" * என்பவாகலிற் றெய்வத்தை நீக்கி யுவமை கொள்க. மெய்ப்பாடு அது. பயன் பகற்குறி விலக்குதல். (உகூ0)

## இரவும்பகலும்வரவுவிலக்கல்.

இரவும்பகலும் வரவுவிலக்கலென்பது இரவுடம்பட்டாள் போன்று பகல்வரவு விலக்கின தோழி, நீ பகல்வரின் அலர்மிகுதியானெங்களுக்கு மிக்கபழி வந்தெய்தும்; இராவரின் எவ்வாற்றானு நின்னை யெதிர்ப்படுதலருமையாற் சிறிதும் பயனில்லை; அதனால் நீ யிருபொழுதும் வரற்பாலையல்லையென இரவும் பகலும் வரவு விலக்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

சுழியாவருபெருநீர்சென்னிவைத்தென்னைத்தன்றொழும்பிற்
கழியாவருள்வைத்தசிற்றம்பலவன்கரந்தருமான்
விழியாவரும்புரிமென்குழலாடிறத்தையமெய்யே
பழியாம்பகல்வரினீயிரவேதும்பயனில்லையே.

இரவும் பகலும்
வரவொழி கென்றது.

இ - ள். ஐய - ஐயனே—பகல் வரின் புரி மென்குழலாள் திறத்து மெய்யே பழியாம் - நீ பகல்வரிற் சுருண்ட மெல்லியகுழலையுடையாடிறத்து மெய்யாகவே அலருண்டாம்—இரவு ஏதும் பயன் இல்லை - இராவரின் எதிர்ப்படுத லருமையாற் சிறிதும்பயனில்லை; அதனன் நீயிருபொழுதும் வாரல். எ - று.

* தொல். பொருள், அகத்திணையியல்.

சுழியா வரு பெரு நீர் சென்னி வைத்து - சுழியா நின்றுவரும் பெரியநீரைச் சென்னியின்கண்வைத்து—தன் தொழும்பின் என்னைக் கழியா அருள் வைத்த - தனக்குத் தொண்டுபடுதற்கண் என்னை நீங்காத தன்னருளான்வைத்த—சிற்றம்பலவன் கரம் தரும் மான் விழியா வரும் புரி மென்குழலாள் - சிற்றம்பலவனது கரத்தின்கண் வைக்கப்பட்ட மான்போல விழித்துவரும் புரிமென்குழலாளெனக்கூட்டுக.

பரந்துவரும் பெரும்புனலை வேகந்தணித்துத் தன்சென்னியின்கண் வைத்தாற்போல நில்லாதுபரக்கு நெஞ்சையுடையேனைத் தன்னருட்கணடக்கினானென்பது கருத்து. தன்றொழும்பினின்றும் யானீங்காமைக்குக் காரணமாகிய அருட்கணென்னை வைத்தவனெனினு மமையும். மெய்ப்பாடு அது. பயன் இரவுக்குறியும் பகற்குறியும் விலக்கி வரைவுகடாதல். (உசுக)

## காலங்கூறிவரைவுகடாதல்.

காலங்கூறி வரைவுகடாதலென்பது இருபொழுதும் வரவு விலக்கின தோழி, மதி நிரம்பாநின்றது; வேங்கை பூவாநின்றன; இனி நினக்கு வரைவொடு வருதற்குக் காலமிதுவெனக் காலங் கூறி வரைவு கடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மையார்கதலிவனத்துவருக்கைப்பழம்விழுதே
னெய்யாதயின்றிளமந்திகள்சோருமிருஞ்சிலம்பா
மெய்யாவரியதெனம்பலத்தான்மதியூர்கொள்வெற்பின்
மொய்யார்வளரிளவேங்கைபொன்மாலையின்முன்னினவே.

முந்தியபொருளைச் சிந்தையில்வைத்து
வரைதருகிளவியிற் றெரியவுரைத்தது.

இ - ள். மை ஆர் கதலி வனத்து வருக்கைப் பழம் விழு தேன் - இருளார்ந்த வாழைக்காட்டின்கண் வருக்கைப்பலாவின் பழம்விழுதலா னுண்டாகியதேனை—இள மந்திகள் எய்யாது அயின்று சோரும் இருஞ் சிலம்பா - இளையமந்திகளறியாதே யுண்டு பின்களியாற் சோரும் பெரிய சிலம்பையுடையாய்—மதி ஊர் கொள் - மதி நிரம்பாநின்றது—அம்பலத்தான் வெற்பின் - அம்பலத்தானுடைய இவ்வெற்பின்கண்—மொய் ஆர் வளர் இள வேங்கை பொன் மாலையின் முன்னின - செறிவார்ந்த வளராநின்ற விளையவேங்கைகள் பூத்துப் பொன்மாலைபோலத் தோன்றின—மெய்யா அரியது என் - இனி மெய்யாக வுனக்கரியதியாது! எ-று.

கதலிவனத்துண்டாகிய தேனென்றதனாற் கதலிக்கனியொடு கூடுதல்பெற்றாம். ஊர்கோடல் குறைவின்றி மண்டலமாக வொளி பரத்தல். அல்லதூஉம் பரிவேடித்தலெனினுமமையும். நின்மலைக் கண் விலங்குகளு மித்தன்மைத்தாகிய தேனைக் குறியாதுண்டு இன் புறுகின்றனவாகலிற் குறித்தவற்றினிணக்கரியதியாது இதுவன்றோ பருவமுமென வரைவுபயப்பக் கூறியவாறாயிற்று. மந்திகடேரு மென்பது பாடமாயின், தேனையறியாதுண்டு அதன்சுவை மிகுதி யாற் பின்னதனைத்தேர்ந்துணருமென் றுரைக்க. வேட்டபொருள் உள்ளத்துமுற்பட்டுத் தோன்றுதலின், வரைவை முந்தியபொரு ளென்றாள். வரைதருகிளவி-வரையுங்கிளவி. மெய்ப்பாடு பெரு மிதம். பயன் வரைவுகடாதல். (உகூஉ)

## கூறுவிக்குற்றல்.

கூறுவிக்குற்றலென்பது காலங்கூறி வரைவுகடாவவும் வரை வுடம்படாமையின் அவடன்னைக்கொண்டே கூறுவிப்பாளாக, அலரான்வருநாணினையுங் காணாமையான்வருமாற்றாமையையும் பற் றிக் கிடந்த நம்மல்லலை நம்மாற் றலையளிக்கப்படுவார் இவ்வாறு வருந்துதறகாதெனத் தாமாகவறிகின்றிலராயின் நாஞ்சொல்லுந் தன்மைகளென்னோவெனப் புலந்து, நீயாகிலுஞ்சென்று கூறென் பது குறிப்பாற்றோன்றத் தலைமகன் வரைவுடம்படாமையைத் தோழி தலைமகட்குக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

தேமாம்பொழிற்றில்லைச்சிற்றம்பலத்துவிண்ணோர்வணங்க
நாமாதரிக்கநடம்பயில்வோனைநண்ணாதவரின்
வாமாண்கலைசெல்லநின்றார்கிடந்தநம்மல்லல்கண்டாற்
றாமாவறிகிலராயினென்னாஞ்சொல்லுந்தன்மைகளே.

ஒத்ததொவ்வா துரைத்ததோழி
கொத்தவிழ்கோதையாற் கூறுவிக்குற்றது.

இ - ள். தேமாம் பொழில் தில்லைச் சிற்றம்பலத்து - தேமாம் பொழிலையுடைய தில்லைச்சிற்றம்பலத்தின்கண்—விண்ணோர் வண ங்க நாம் ஆதரிக்க நடம் பயில்வோனை நண்ணாதவரின் - விண் ணோர்வணங்கவும் நாம் விரும்பவுங் கூத்தைச் செய்வானைச் சேரா தாரைப்போல வருந்த—வாம் மாண் கலை செல்ல நின்றார் கிடந்த நம் அல்லல் கண்டால் - அழகு மாட்சிமைப்பட்ட மேகலைகழலும் வண்ணங்கண்டு தலையளிசெய்யாது நின்றவர் பெருகிக்கிடந்த நம் மல்லலைக்கண்டால்—தாமா அறிகிலர் ஆயின் - நம்மாற் றலையளிக்

கப்படுவார் இவ்வாறு வருந்துதறகாறெதன்று தாமாகவறிகின்றில ராயின்—நாம் சொல்லும் தன்மைகள் என் - நாஞ்சொல்லுமியல்பு களென்! எ - று.

வாமம் வாமென விடைக்குறைந்து நின்றது. அலரான்வரு நாணியீனயுங் காணுமையான் வருமாற்ருமையையும் பற்றிக் கிடந்த நம்மல்லலென்ருள். ஒத்ததொவ்வாதென்பதனை ஒத்துமொவ்வாம லெனத் திரிக்க. அஃதாவது இராவருதலுடம்பட்டாள் போன்று பகல்வாரலென்றலும், பகல்வருதலுடம்பட்டாள் போன்று இரா வாரலென்றலும், பின் இருபொழுதையுமறுத்தலும். (உசுஅ)

## செலவுநினைந்துரைத்தல்.

செலவுநினைந் துரைத்தலென்பது வரைவுடம்படாமையிற் றோழி தலைமகனோடு புலந்து கூறக்கேட்டு, அக்குறிப்பறிந்து, இக் கல்லதரின்கணீர்வந்தவா றென்னோவென்று வினவுவாரைப் பெற் றேமாயின் இத்தன்மையையுடைத்தாகிய மிக்க விருளின்கண் யாமவருழைச்சேறலரிதன்று; சென்றேமாயினும் அவ்வாறு சொல் வாரில்லையெனத் தலைமகள் செலவுநினைந்து கூறுநிற்றல். அதற்குச் செய்யுள்—

வல்சியினெண்குவளர்புற்றகழுமல்கும்மிருள்வாய்ச்
செல்வரிதன்றுமன்சிற்றம்பலவரைச்சேரலர்போற்
கொல்கரிசீயங்குறுகாவகைபிடிதானிடைச்செல்
கல்லதரென்வந்தவாறென்பவர்ப்பெறிற்கார்மயிலே.

பாங்கிநெருங்கப் பணிமொழிமொழிந்து
தேங்கமழ்சிலம்பற்குச் சிறைப்புறக்கிளவி.

இ - ள். கார் மயிலே - கார்காலத்து மயிலையொப்பாய்—சிற் றம்பலவரைச் சேரலர் போல் - சிற்றம்பலவரைச் சேராதாரைப் போல வருந்த—சீயம் கொல் கரி குறுகாவகை பிடி தான் இடைச் செல் கல் அதர் - சீயங் கொல்கரியைச் சென்றணையாதவண்ணம் பிடி தா னிரண்டற்கு மிடையேசென்று புகுங்கல்லதரின்கண்— வந்தவாறு என் என்பவர்ப் பெறின் - நீர்வந்தவா றெங்ஙனேயெ ன்று சொல்லுவாரைப் பெற்றேமாயின்—வல்சியின் எண்கு வளர் புற்று அகழ மல்கும் இருள்வாய் - குரும்பியாகிய வுணவுகாரண மாகக் கரடி உயர்ந்தபுற்றை யகழாநிற்ப மிகாநின்ற விருளின் கண்—செல்வு அரிதன்று மன் - அவரிருந்த வழிச்சேறலரிதன்று; சென்றேமாயினும் அவ்வாறு சொல்லுவாரில்லை. எ - று.

செல்வரிதென்பது செல்வுழிக்கணென்பதுபோல மெய்யீற்றுடம்படுமெய். * செல்லவென்பது கடைக்குறைந்து நின்றதெனினுமமையும். மன் ஒழியிசைக்கண் வந்தது. கல்லதர் கற்கண்ணதர். கல்லதரினென்பது பாடமாயின், வந்தவாறென்னென ஒருசொல் வருவித்துரைக்க. பணிமொழி மொழிந்தென்பதனை மொழியவெனத் திரித்து, சிறைப்புறக்கிளவியாயிற்றெனவொருசொல் வருவித்துரைக்க. சிறைப்புறக்கிளவியாயிற்றெனவே, சிறைப்புறமாதல் குறித்தாளல்லளென்பது பெற்றாம். இவை யிரண்டற்கும் மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த விளிவரல். பயன் அது. (உகூச)

## பொலிவழிவுரைத்துவரைவுகடாதல்.

பொலிவழிவுரைத்து வரைவுகடாதலென்பது தலைமகள் தன்னை யெதிர்ப்படலுற்று வருந்தாநின்றமை சிறைப்புறமாகக் கேட்ட தலைமகன் குறியிடைவந்து நிற்ப, தோழி யெதிர்ப்பட்டு, என்னையரது காவலை நீவி நின்வயத்தளாய் நின்று பொலிவழிந்து வருந்தாநின்றவளை நீ வரைந்துகொள்ளாது இவ்வாறிகழ்ந்து மதித்தற்குக் காரண மென்னோவெனத் தலைமகளது பொலிவழிவுகூறி வரைவு கடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வாரிக்களிற்றின்மருப்புகுமுத்தம்வரைமகளிர்
வேரிக்களிக்கும்விழுமலைநாடவிரிதிரையி
னாரிக்களிக்கமர்நன்மாச்சடைமுடிநம்பர்தில்லை
யேரிக்களிக்கருமஞ்ஞையிந்நீர்மையென்னெய்துவதே.

* "உயிர்ற்றின்முன் உயிர்முதலவரின் உயிரோடுயிர்க்கு மயக்கமின்மையிற் புணர்ச்சியின்றி விட்டிசைத்து நிற்குமாதலின், உடம்படாதவவ்விரண்டு முடம்படுதற்பொருட்டு இடையே வருமெய்யை உடம்படுமெய்யென்பவாகலின், வருமுயிரேறி யொற்றுமைப்பட்டுப் புணர்தற்குரிய மெய்யீற்றின் வழித்தோன்றும் மெய்யை உடம்படுமெய்யென்பது பொருந்தாது." நன்னூல் விருத்தி கசுஉ-ம். சூத்திரம்.

"விண்வத்துக்கொட்கும். எ-ம். செல்வுழிச்செல்க. எ-ம். சார்வுழிச் சார்ந்த தகையள். எ-ம். மெய்யீற்றுமுன் உயிர் வருங்கால் இங்ஙனமுடம்படுமெய் யன்றெனக் கூறும்வகரந்தோன்றின." கசுங-ம். சூத்திரம்.

"விண்வத்துக் கொட்கும் வண்ணத்தமரர் என்புழி வகரம் உடம்படாதவற்றை உடம்படுத்த வந்ததல்லாமையின், இன்னோரன்னவை உடம்படு மெய்யெனப் பெயர்பெறுமாறில்லை யென்பது." தொல்காப்பியச் சூத்திரவிருத்தி.

வரைவுவிரும்பு மன்னுயிர்ப்பாங்கி
விரைதருகுழலி மெலிவுரைத்தது.

இ - ள். களிற்றின் மருப்பு உகு முத்தம் - களிற்றின் மருப்புக்களினின்று முக்க முத்துக்களை—வரை மகளிர் வேரிக்கு வாரி அளிக்கும் விழுமலை நாட - வரையின்வாழுமகளிர் வேரிக்குவிலையாக முகந்துகொடுக்குஞ் சிறந்த மலைக்களுண்டாகிய நாட்டையுடையாய்—விரி திரையின் நாரிக்கு அளிக்க அமர் - விரியுந் திரையையுடைய யாறாகிய பெண்ணிற்குக் கொடுத்தற்குப் பொருந்திய—நல் மாச் சடைமுடி நம்பர் தில்லை எர் இக் களிக் கரு மஞ்ஞை - நல்ல பெரிய சடைமுடியையுடைய நம்பரது தில்லையினுளளாகிய எரையுடைய இக்களிக் கருமஞ்ஞையையொப்பாள்—இந் நீர்மை எய்துவது என் - தன்றன்மையையிழந்து இத்தன்மையையெய்துவதென்? நீயுரை. எ - று.

மலையையுடைய நாடெனினுமமையும். விரிதிரையினென்பது அல்வழிச்சாரியை. விரிதிரையையுடைய நாரியெனினு மமையும். நாரிக்களித்தமரென்பது பாடமாயின், நாரிக்களித்தலான் அவளமருஞ்சடை யென்றுரைக்க. களிக்கருமஞ்ஞை களியையுடைய கரியமஞ்ஞை. அணைதற்கரிய களிற்றின் மருப்பினின்று முக்க முத்தத்தினதருமையைக் கருதாது தமக்கின்பஞ்செய்யும் வேரிக்குக் கொடுத்தாற்போல, என்னையரது காவலை நீவி நின்வயத்தளாகியவிவளதருமை கருதாது நினக்கின்பஞ் செய்யுங் களவொழுக்கங் காரணமாக இகழ்ந்து மதித்தாயென உள்ளுறைகாண்க. மெய்ப்பாடும் பயனும் அவை. (உகரு)

வரைவுமுடுக்க முற்றிற்று.

# வரைபொருட்பிரிதல்.

வரைபொருட்பிரிதல் வருமாறு:—

முலைவிலைகூறல் வரைவுடம்படுத்தல்
வரைபொருட்கேகலை யுரையவட்கென்ற
னீகூறென்றல் சொல்லாதேகல்
பிரிந்தமைகூற னெஞ்சொடுகூற
னெஞ்சொடுவருந்தல் வருத்தங்கண்டுரைத்தல்
வற்புறுத்தல்லொடு வன்புறையழிதல்

வாய்மைகூறன் மன்னவன்மெய்யுரை
தேருறுதுபுலம்பல் காலமறைத்துரைத்த
றூதுவரவுரைத்த றூதுகண்டழுங்கன்
மெலிவுகண்டு செவிலியுரைத்தன்
மேவியசெவிலி கட்டுவைப்பித்தல்
கலக்குற்றுநிற்றல் கட்டுவித்திகூறல்
வேலனையழைத்த லின்னலெய்தல்
விலக்கநினைத்த னிலைமையுரைத்த
லறத்தொடுநிற்ற லையந்தீர்த்த
லவன்வெறிவிலக்கல் செவிலிக்குத்தோழி
யறத்தொடுநிற்ற னற்றாய்க்குச்செவிலி
யறத்தொடுநிற்ற றேர்வரவுரைத்தன்
மணமுரசுகேட்டு மகிழ்ந்துரைத்த
லையுற்றுக்கலங்க லவனிதிகாட்ட
லாறைந்துடனே கூறியமூன்றும்
விரைமலர்க்குழலாய் வரைபொருட்பிரிதல்.

இ-ள். முலைவிலைகூறல், வருமதுகூறிவரைவுடம்படுத்தல், வரைபொருட்பிரிவையுரையெனக்கூறல், நீயேகூறென்றல், சொல்லாதேகல், பிரிந்தமைகூறல், நெஞ்சொடுகூறல், நெஞ்சொடுவருந்தல், வருத்தங்கண்டுரைத்தல், வழியொழுகிவற்புறுத்தல், வன்புறையெதிரழிந்திரங்கல், வாய்மைகூறிவருத்தந்தணித்தல், தேருறுதுபுலம்பல், காலமறைத்துரைத்தல், தூதுவரவுரைத்தல், தூதுகண்டழுங்கல், மெலிவுகண்டுசெவிலிகூறல், கட்டுவைப்பித்தல், கலக்கமுற்றுநிற்றல், கட்டுவித்திகூறல், வேலனையழைத்தல், இன்னலெய்தல், வெறிவிலக்குவிக்கநினைத்தல், அறத்தொடுநிற்றலையுரைத்தல், அறத்தொடுநிற்றல், ஐயந்தீரக்கூறல், வெறிவிலக்கல், செவிலிக்குத்தோழியறத்தொடுநிற்றல், நற்றாய்க்குச்செவிலியறத்தொடுநிற்றல், தேர்வரவுகூறல், மணமுரசுகேட்டுமகிழ்ந்துரைத்தல், ஐயுற்றுக்கலங்கல், நிதிவரவுகூறாநிற்றல் என விவை முப்பத்துமூன்றும் வரைபொருட்பிரிதலாம். எ-று. அவற்றுள்:—

## முலைவிலைகூறல்.

முலைவிலை கூறலென்பது வரைவு முடிக்கப்பட்ட தலைமகன், யான் வரைவொடு வருதற்கு நீ சென்று அவளையன்மாரை முலைவிலை கேட்பாயாகவென, எல்லாவற்றானு நின்வரவை எமரேற்றுக்

கொளினல்லது விலைகூறுவராயின் அவளுக்கேழுலகும் விலைபோ தாதெனத் தோழி முலைவிலை கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

குறைவிற்குங் கல்விக்குஞ் செல்விற்கு நின்குலத்திற்கும்வந்
தோர், நிறைவிற்குமேதகுநீதிக்குமற்பினல்லானினையி
னிறைவிற்குலாவரையேந்திவண்டில்லையனேழ்பொழிலு
முறைவிற்குலாநுதலாள்விலையோமெய்ம்மை யோதுநர்க்கே.

கொலைவேற் கண்ணிக்கு
விலையிலை யென்றது.

இ - ள். குறைவிற்கும்-வரைவுவேண்டி நீயெம்மாட்டுக் குறையுடையையாய் நிற்குமதனானும்—கல்விக்கும்-கல்விமிகுதியானும்—செல்விற்கும் - செல்வானும்—நின் குலத்திற்கும் - தங்குலத்திற்கேற்ற நின்குலத்தானும்—வந்தோர் நிறைவிற்கும் - நீவிடுக்கவந்த சான்றோரது நிறைவானும்—மேதகு நீதிக்கும் - மேவுதற்குத்தகு நீதியானும்—ஏற்பின் அல்லால் - நின்வரவை யெமரேற்றுக்கொளினல்லது விலைகூறுவராயின்—நினையின் மெய்ம்மை ஓதுநர்க்கு-ஆராயுமிடத்து மெய்ம்மை சொல்லுவார்க்கு—உறை வில் குலா நுதலாள் ஏழ்பொழிலும் விலையோ - விற்போலவளைந்த நுதலையுடையாட்கு ஏழுலகும் விலையாமோ! விலைக்குறையாம். எ - று.

இறை - எல்லாப்பொருட்குமிறைவன்—வில் குலா வரை ஏந்தி - வில்லாகிய வளைதலையுடைய வரையையேந்துவான்—வண் தில்லையன் - வளவிய தில்லைக்கண்ணுளான்—ஏழ்பொழிலும் - அவனுடைய ஏழ்பொழிலுமெனக்கூட்டுக.

செல்வு இருமுதுகுரவராற் கொண்டாடப்படுதல். நிறைவு அறிவொடுகூடிய வொழுக்கம். நீதி உள்ளப்பொருத்த முளவழி மறுதுகொடுத்தல். உறைவிலென்பதற்கு உறையையுடைய வில்லெனினுமமையும். (உ.சுசு)

## வருமதுகூறிவரைவுடம்படுத்தல்.

வருமதுகூறி வரைவுடம்படுத்தலென்பது முலைவிலை கூறிய தோழி, நீ வரைவொடுவாராது இரவருள்செய்யாநின்ற விது கெர்ப்பத்துக்கேதுவானால் நம்மெல்லார்க்கும் பொல்லாதாம்; அது படாமல் எமராற்றெடுக்கப்பட்ட அருங்கலங்களை விரைய வரவிட்டு அவளை வரைந்தெய்துவாயாகவென மேல்வருமிடுக்கண் கூறித் தலைமகனை வரைவுடம்படுத்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வடுத்தனநீள்வகிர்க்கண்ணிவெண்ணித்திலவாணகைக்குத்
தொடுத்தனநீவிடுத்தெய்தத்துணியென்னைத் தன்றொழும்பி
ற், படுத்தநன்னீள்கழலீசர்சிற்றம்பலந்தாம்பணியார்க்
கடுத்தனதாம்வரிற்பொல்லாதிரவினின்னாருளே.

தொடுத்தனவிடுத்துத் தோகைதோளெய்
திடுக்கண்பெரி திரவரினென்றது.

இ - ள். என்னைத் தன் தொழும்பிற் படுத்த நல் நீள் கழல் ஈசர் சிற்றம்பலம் - என்னைத் தன்னடிமைக்கட்படுவித்த நல்ல நீண்ட கழலையுடைய வீசரது சிற்றம்பலத்தை—தாம் பணியார்க்கு அடுத்தன தாம் வரின் - தாம் பணியாதார்க்குத் தக்கனவாகிய தீது கள் உனக்கு வரக்கூடுமாயின்—இரவின் நின் ஆர் அருள் பொல் லாது - இரவின்கணுண்டாகிய நின்னாரருள் எமக்குப்பொல்லாது, அதனான்—வடுத்தன நீள் வகிர்க் கண்ணி வெண் நித்தில வாள் நகைக்கு - வடுவனவாகிய நீண்ட வகிர்போலுங் கண்ணையுடையா ளது தூயமுத்துப்போலு மொளியையுடைய முறுவலுக்கு—தொடு த்தன நீ விடுத்து எய்தத் துணி - எமராற்றொடுக்கப்பட்டனவாகிய பொருள்களை நீவரவிட்டு வரைந்தெய்தத் துணிவாயாக. எ - று.

நீள்வகிர்க்கண்ணியாகிய வெண்ணித்தில வாணகைக்கென்று ரைப்பினு மமையும். தொடுத்தன பலவாக வகுக்கப்பட்டன. படு த்தன நீள்கழலென்பதூஉம் பாடம். சிற்றம்பலந்தாம்பணியார்க் கடுத்தன தாம் வருகையாவது கெர்ப்பம் வருகை. அடுத்தனதாம் வரினென்பதற்கு நீ வரினெமக்கடுத்தனதாமுளவாமென்று பொ ருளுரைப்பாருமுளர். அடுத்தனதான்வரினென்பது பாடமாயின், தானென்பது அசைநிலை. இவை யிரண்டற்கும் மெய்ப்பாடு பெரு மிதம். பயன் அது. (உசுஎ)

## வரைபொருட்பிரிவையுரையெனக்கூறல்.

வரைபொருட்பிரிவை யுரையெனக்கூறலென்பது மேல்வரு மது கூறி வரைவுடம்படுத்தின தோழிக்கு, யான்போய் நுமர் கூறு நிதியமுந்தேடிக்கொண்டு நும்மையும்வந்து மேவுவேன்; நீ சென்று அவள் வாடாதவண்ணம் யான் பிரிந்தமைகூறி ஆற்றுவித்துக் கொண்டிருப்பாயாகவெனத் தலைமகன் றன் வரைபொருட்குப் பிரிகின்றமை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

குன்றங்கிடையுங்கடந்துமர்கூறுநிதிகொணர்ந்து
மின்றங்கிடைநும்மையும்வந்துமேவுவனம்பலஞ்சேர்

மன்றங்கிடைமருதேகம்பம்வாஞ்சியமன்னபொன்னைச்
சென்றங்கிடைகொண்டுவாடாவகைசெப்புதேமொழியே.

ஆங்கவள்வயி னீங்கலுற்றவன்
இன்னுயிர்த்தோழிக்கு முன்னிமொழிந்தது.

இ - ள். மின் தங்கு இடை - மின்போலுமிடையையுடையாய்—குன்றங் கிடையும் கடந்து - இனிக் குன்றக்கிடப்புக்களையுடைய சுரத்தையுங் கடந்துபோய்—உமர் கூறும் நிதிகொணர்ந்து - நுமர்சொல்லு நிதியத்தைத் தேடிக்கொணர்ந்து—நும்மையும் வந்து மேவுவன் - நும்மையும்வந்து மேவுவேன்—தேமொழியே-தேமொழியினையுடையாய்—சென்று - நீசென்று—அம்பலம் சேர் மன் தங்கு-அம்பலத்தைச்சேர்ந்த மன்னன்றங்கும்—இடைமருது ஏகம்பம் வாஞ்சியம் அன்ன பொன்னை - இடைமருது ஏகம்பம் வாஞ்சியமாகிய இவற்றையொக்கும் பொன்னை—இடை கொண்டு வாடாவகை-இடைகொண்டு வாடாதவண்ணம்—அங்குச் செப்பு - அவ்விடத்துச் சொல்லவேண்டுவன சொல்லுவாயாக. எ - று.

குன்றக்கிடையென்பது மெலிந்து நின்றதெனினு மமையும். நும்வயினென்பதூஉம் பாடம். எண்ணப்பட்டவற்றொடு படாது அம்பலஞ்சேர் மன்னனெனக் கூறியவதனால், அம்பலமே யவர்க்கிடமாதல் கூறினார். இடைகொண்டென்புழி இடை காலம். மெய்ப்பாடு அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். பயன் வரைபொருட் பிரியுந் தலைமகன் ஆற்றுவித்தல். (உகூஅ)

## நீயேகூறென்றல்.

நீயே கூறென்றலென்பது பிரிவறிவிப்பக் கூறின தலைமகனுக்கு, நீ யிரவுவரினும் பகற்பிரிந்து செல்லையென வுட்கொண்டு நின்னொடு கூடிய வப்பொழுதும் யானுயிர்வாழேனென்று நினைந்திருப்பாளுக்குத் தாழேனென்னு முரைமுன்னாக நின்பிரிவை நீயே சொல்லிப் போவாயாகவென அவன் விரையவருவது காரணமாகத் தோழி தலைமகளது பிரிவாற்றாமை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

கேழேவரையுமில்லோன்புலியூர்ப்பயில்கிள்ளையன்ன
யாழேர்மொழியாளிரவரினும்பகற்சேறியென்று
வாழேனெனவிருக்கும்வரிக்கண்ணியைநீவருட்டித்
தாழேனெனவிடைக்கட்சொல்லியேகுதனிவள்ளலே.

காய்கதிர்வேலோய் கனங்குழையவட்கு
நீயேயுரை நின்செலவென்றது.

இ - ள். தனி வள்ளலே - ஒப்பில்லாத வள்ளலே—கேழ் ஏவ ரையும் இல்லோன் புலியூர்ப் பயில் கிள்ளை அன்ன யாழ் ஏர் மொழி யாள் - தனக்குவமையாக யாவரையுமுடைய னல்லாதவனது புலி யூர்க்கட்பயிலுங் கிளியையொக்கும் யாழோசைபோலு மொழியை யுடையாள்—இரவினும் பகல் சேறி என்று - - இரவினீவரினும் பகற்பிரிந்து செல்வையென்று அதனையேயுட்கொண்டு—வாழேன் என இருக்கும் வரிக் கண்ணியை - நின்னொடுகூடிய வப்பொழு தும் யானுயிர்வாழேனென்று நினைந்திருக்கும் வரிக்கண்ணினையு டையாளை—வருட்டி இடைக்கண் தாழேன் என நீ சொல்லி ஏகு- வசமாக்கிப் பெற்றதோர் செவ்வியில் தாழேனென்னும் உரை முன்னாக நின்பிரிவை நீயேசொல்லி யேகுவாயாக. எ - று.

கிளி மென்மையும் மென்மொழியுடைமையும்பற்றி, மென் மொழியையுடையாட் குவமையாய் வந்தது. யாழோசை செவிக் கினிதாதல்பற்றி மொழிக்குவமையாய் வந்தது. புலியூர்ப்பயிலு மொழியாளென வியையும். வாழேனென விருக்குமென்பதனை முற்றாக்கி மொழியாளிவ்வாறுசெய்யும்; அவ்வரிக்கண்ணியை யென ஒருசுட்டு வருவித்துரைப்பினு மமையும். வருடி வருட்டியென மிக்கு நின்றது. வாழேனெனவிருக்கு மென்றதனான், இத்தன்மைத் தாகிய விவளது பிரிவாற்றாமையை மறவாதொழியவேண்டு மென் றானாம். இடைக்கணென்றது இவ்வொழுக்கத்தால் நினக்கு வரு மேத நினைந்து ஆற்றாளாஞ் செவ்விபெற்றென்றவாறு. வடிக்கண் ணியையென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு அச்சம். பயன் தலைமகளை தாற்றுமை யுணர்த்துதல். (உசுக)

## சொல்லாதேகல்.

சொல்லாதேகலென்பது நீயேகூறென்ற தோழிக்கு, யானெ வ்வாறு கூறினும் அவள் பிரிவுடம்படாளாதலின் ஒருகாலும் வரை ந்துகொள்கையில்லை; யான் விரைய வருவேன்; அவ்வளவும் நீயாற் றுவித்துக் கொண்டிருப்பாயாகவெனக் கூறித் தலைமகன் றலைமக ளுக்குச் சொல்லாது பிரியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வருட்டிற்றிகைக்கும்வசிக்கிற்றுளங்குமனமகிழ்ந்து
தெருட்டிற்றெளியலள்செப்பும்வகையில்லைசீருக்கன்
குருட்டிற்புகச்செற்றகோன்புலியூர்குறுகார்மனம்போன்
றிருட்டிற்புரிகுழலாட்கெங்ஙனேசொல்லியேகுவனே.

நிரைவளை வாட
வுரையா தகன்றது.

இ - ள். வருட்டின் திகைக்கும் - நுதலுந்தோளு முதலாயின வற்றைத் தைவந்து ஒன்றுசொல்லக் குறிப்பேனாயின் இஃதென்க ருதிச் செய்கின்றானென்று மயங்காநிற்கும்—வசிக்கின் துளங்கும்- இன்சொல்லின்வசித்து ஒன்று சொல்லலுறுவேனாயின் அக்குறிப் பறிந்து உண்ணடுங்காநிற்கும்—தெருட்டின் மன மகிழ்ந்து தெளி யலள் - இனி வெளிப்படப் பிரிவுணர்த்திப் பொருண்முடித்துக் கடிதின்வருவலென்று கூளுற்றுத் தெளிவிப்பேனாயின் மனமகிழ் ந்து அதனைத்தேருள்—செப்பும் வகை இல்லை - இவ்வாறொழிய அறிவிக்கும்வகை வேறில்லை, அதனான்—புரி குழலாட்கு எங்ஙன் சொல்லி எகுவன் - சுருண்ட குழலையுடையாட்குப் பிரிவை எவ்வ ண்ணஞ் சொல்லிப்போவேன்! ஒருவாற்றானுமரிது! எ - று.

சீர் அருக்கன் குருட்டின் புகச் செற்ற கோன் புலியூர்-பெரு மையையுடைய அருக்கன் குருடாகிய இழிபிறப்பிற் புகும்வண் ணம் அவனைவெகுண்ட தலைவனது புலியூரை—குறுகார் மனம் போன்று இருட்டின் புரிகுழல் - அணுகாதார் மனம்போன்று இரு ட்டுதலையுடைய புரிகுழலெனக்கூட்டுக.

வருடினென்பது வருட்டினென நின்றது. எகுவதேயென்ப தூஉம் பாடம். மெய்ப்பாடு அழுகை. பயன் வரைவுமாட்சிமைப் படுத்துதற்குப் பிரிதல். (உஎ0)

## பிரிந்தமைகூறல்.

பிரிந்தமை கூறலென்பது தலைமகன், முன்னின்று பிரிவுணர் த்தமாட்டாமையிற் சொல்லாது பிரியாநிற்ப, தோழி சென்று, நம ராற்றொடுக்கப்பட்ட வெல்லா நிதியத்தையும் ஒருங்குவரவிட்டு நின்னை வரைந்துகொள்வானாக அழற்கடநெறியே பொருள்தேடப் போனான்; அப்போக்கு, அழற்கடஞ் சென்றமையான் நமக்குத் துன்பமென்பேனோ? வரைவுகாரணமாகப் பிரிந்தானாதலின் நமக் கின்பமென்பேனோவெனப் பொதுப்படக் கூறி, வரைவு காரண மாகப் பிரிந்தானாதலின், இது நமக்கின்பமேயெனத் தலைமகள் வருந்தாமல் அவன் பிரிந்தமை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

நல்லாய்நமக்குற்றதென்னென்றுரைக்கேனமர்தொடுத்த
வெல்லாநிதியுமுடன்விடுப்பானிமையோரிறைஞ்சு
மல்லார்கழலழல்வண்ணர்வண்டில்லைதொழார்களல்லாற்
செல்லாவழற்கடமின்றுசென்றார்நஞ்சிறந்தவரே.

தேங்கமழ் குழலிக்குப்
பாங்கி பகர்ந்து.

இ - ள். நம் சிறந்தவர்-நமக்குச்சிறந்த அவர்—நமர் தொடுத்த எல்லா நிதியும் உடன் விடுப்பான் - நமராற்றொடுக்கப்பட்ட வெல்லாநிதியத்தையும் ஒருங்கே வரவிடுவான்வேண்டி—இமையோர் இறைஞ்சும் மல் ஆர் கழல் அழல் வண்ணர் வண் தில்லை - இமையோர் சென்றுவணங்கும் வளமார்ந்த கழலையுடைய அழல்வண்ணரது வளவியதில்லையை—தொழார்கள் அல்லால் செல்லா அழல் கடம் இன்று சென்றார் - தொழாதாரல்லது நம்போல்வார் செல்லாத அழலையுடைய சுரத்தை இன்றுசென்றார், அதனுன்—நல்லாய் - நல்லாய்—நமக்கு உற்றது என்னென்று உரைக்கேன் நமக்குவந்ததனை யாதென்றுசொல்லுவேன்! எ - று.

என்னென்றுரைக்கேனென்றதனுன், தொடுத்தது விடுப்பச் சென்றாராகலின் இன்பமென்பேனோ? அழற்கடஞ் சென்றமையாற் றுன்பமென்பேனோவெனப் பொதுப்படக் கூறுவாள்போன்று, வரைவுகாரணமாகப் பிரிந்தாராகலின் இது நமக்கின்பமே யென் றுற்றுவித்தாளாம். தொழார்களல்லார் செல்லாவென்று பாட மோதுவாருமுளர். மெய்ப்பாடு அழுகை. பயன் வரைவுநீட்டியாமையுணர்த்துதல். (உஎக)

## நெஞ்சொடுகூறல்.

நெஞ்சொடு கூறலென்பது பிரிந்தமை கூறக்கேட்டு வருந்தாநின்ற நெஞ்சிற்கு, நமக்கேதம்பயக்கு மொழுக்கமொழிந்து குற்றந் தீர்ந்த முறைமையாகிய வொழுக்கத்துப் பிரிந்தவிது நம்மைக் கெடுக்குமென்று நீ கருதின், இதுவொழிய நமக்கின்புற்றுவாழு முபாயம் வேறுளதோவெனத் தலைமகள் அந்நெஞ்சினது வருத்தந் தீரக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**அருந்தும்விடமணியாமணிகண்டன்மற்றண்டர்க்கெல்லா**
**மருந்துமமிர்தமுமாகுமுன்னோன்றில்லைவாழ்த்தும்வள்ள**
**றிருந்துங்கடனெறிசெல்லுமிவ்வாறுசிதைக்குமென்றால்**
**வருந்தும்மடநெஞ்சமேயென்னயாமினிவாழ்வகையே.**

கல்வரைநாடன் சொல்லாதகல
மின்னொளிமருங்கு றன்னொளிதளர்ந்தது.

இ - ள். அருந்தும் விடம் அணியாம் மணிகண்டன்-உண்ணப்பட்ட நஞ்சநின்று அலங்காரமாய நீலமணிபோலுங் கண்டத்தையுடையவன்—அண்டர்க்கு எல்லாம் மருந்தும் அமிர்தமும் ஆகும்

முன்னோன் - தேவர்க்கெல்லா முறுதிபயக்கு மருந்தும் இன்சுவை யையுடைய வமிர்தமுமாகாநிற்கும் முன்னோன்—தில்லை வாழ்த்தும் வள்ளல் - அவனது தில்லையைவாழ்த்தும் நம்வள்ளல்—திருந்தும் கடன் நெறி செல்லும் இவ்வாறு சிதைக்கும் என்றால் - நமக்கே தம்பயக்கு மொழுக்கமொழிந்து குற்றந்தீர்ந்திருக்கு முறைமையா கிய இந்நெறியைச் செல்கின்ற இந்தநீதி நம்மைக்கெடுக்குமென்று நீகருதின்—வருந்தும் மட நெஞ்சமே - வருந்துகின்ற வறிவில்லாத நெஞ்சமே—யாம் இனி வாழ் வகை என்ன - யாமின்புற்று வாழு முபாயம் வேறியாது! எ - று.

அருந்துமென்பது காலமயக்கம்; அருந்துதற்றொழின் முடிவ தன்முன் நஞ்சங்கண்டத்து நிறுத்தப்பட் டணியாயிற்றாகலின், நிகழ்காலத்தாற் கூறப்பட்டதெனினு மமையும். மற்று அசைநிலை. திருந்துங் கடனெறியென்பது தித்திக்குந் தேனென்பதுபோல இத்தன்மைத்தென்னு நிகழ்காலம்பட நின்றது. திருந்துங் கட னெறியைச் செல்லுமென்றும், களவாகிய விவ்வாற்றைச் சிதைக்கு மென்றும்,முற்றாக அறுத்துரைப்பாருமுளர். (உஎஉ)

## நெஞ்சொடுவருந்தல்.

நெஞ்சொடுவருந்தலென்பது பிரிந்தமை கூறக்கேட்ட தலை மகள், அன்றவரை விடாது என்னைவிட்டு அவரது தேர்ப்பின் செ ன்றநெஞ்சம் இன்றுமவ்வாறு செய்யாது என்னை வருத்தாநின்ற தெனத் தன்னெஞ்சொடு வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஏர்ப்பின்னைதோண்முன்மணந்தவனேத்தவெழிறிகழுஞ், சீர்ப்பொன்னைவென்றசெறிகழலோன்றில்லைச் சூழ்பொழில் வாய்க், கார்ப்புன்னைபொன்னவிழ்முத்தமணலிற்கலந்தகன் றார், தேர்ப்பின்னைச்சென்றவென்னெஞ்சென்கொலாமின்று செய்கின்றதே.

வெற்ப னீங்கப்
பொற்பு வாடியது.

இ - ள். ஏர்ப் பின்னை தோள் முன் மணந்தவன் ஏத்த - அழ கையுடைய பின்னையென்கின்ற தேவியுடைய தோள்களை முற்கால த்துக் கலந்த மாயோன் நின்றுபரவ—எழில் திகழும் சீர்ப் பொ ன்னை வென்ற செறி கழலோன் தில்லைச் சூழ் பொழில் வாய் - எழி ல்விளங்குஞ் செம்பொன்னைவென்ற திருவடிகளையுடையவனது தில்லைக்கட் சூழ்ந்த பொழிலிடத்து—கார்ப் புன்னை பொன்

அவிழ் முத்த மணலில் - கரியபுன்னை பொன்போல மலராநின்ற முத்துப்போலு மணலையுடையதோரிடத்து—கலந்து அகன்றூர் - கூடி நீங்கினவரது—தேர்ப் பின்னைச் சென்ற என் நெஞ்சு இன்று செய்கின்றது என் கொலாம் - தேர்ப்பின்சென்ற என்னெஞ்சம் இவ்விடத்தின்று செய்கின்றதென்னோ! அறிகின்றிலேன்! எ - று.

எத்தவெழிறிகழுமெனவியையும். என்னோடு நில்லாது அவர் தேர்ப்பின்போன நெஞ்சம் இன்றென்னை வருத்துகின்ற விஃதெ ன்னென்று நெஞ்சொடு நொந்து கூறினளாகவுரைப்பினு மமை யும். செறிகழலும் முத்தமணலும் அன்மொழித்தொகை. தேய்கி ன்றதேயென்பது பாடமாயின், அன்றவரை விடாதுசென்ற நெஞ் சம், செல்லாது ஈண்டிருக்குமென்னைப்போல், இன்று தேய்கின்ற தென்னென்று கூறினளாகவுரைக்க. இவை யிரண்டற்கும் மெய்ப் பாடு அழுகை. பயன் ஆற்றாமை நீங்குதல். (உ௭௩)

## வருத்தங்கண்டுரைத்தல்.

வருத்தங்கண்டுரைத்தலென்பது தலைமகள் தன்னெஞ்சொடு வருந்தாநிற்பக் கண்ட தோழி, இத்தன்மைத்தாகிய வெற்பராக லிற் றாழாது விரைய வரைவொடுவருவர்; ஆதலால் நீ யின்னுமை யையடையாதொழிவாயாக வென்று அவள் வருத்தந்தீரக் கூறா நிற்றல். அதற்குச்செய்யுள்—

கானமர்குன்றர்செவியுறவாங்குகணைதுணையா
மானமர்நோக்கியர்நோக்கெனமானற்றொடைமடக்கும்
வானமர்வெற்பர்வண்டில்லையின்மன்னைவணங்கலர்போற்
றேனமர்சொல்லிசெல்லார்செல்லல்செல்லறிருநுதலே.

அழலுறுகோதையின் விழுமுறுபேதையை
நீங்கலரெனப் பாங்கிபகர்ந்தது.

இ - ள். தேன் அமர் சொல்லி - தேனைப்பொருந்துஞ் சொல்லையுடையாய்—கான் அமர் குன்றர் செவி உற வாங்கு கணை - கானின்கணமருங் குன்றவர் செவியுறும்வண்ணம் வலித்த கணை யை—துணையாம் மான் அமர் நோக்கியர் நோக்கென மான் நல் தொடை மடக்கும் - தாமெய்யக் குறித்தவற்றினெக்குந் தந்துணை வியராகிய மானைப்பொருந்திய நோக்கத்தையுடையவரது நோக் கோடொக்குமென்று கருதி அம்மானைக்குறித்த நல்ல தொடை யைமடக்கும்—வான் அமர் வெற்பர் செல்லார் - முகிறங்கும் வெற் பர் செல்கின்றாரல்லர்—வண் தில்லையின் மன்னை வணங்கலர்

போல் - வளவிய தில்லையின்மன்னனை வணங்காதாரைப்போல— திருநுதல் - திருநுதால்—செல்லல் செல்லல் - இன்னாமையையடையாதொழிவாய். எ - று.

தொடைமடக்குமென்னுஞ் சொற்கள் இயைந்து ஒருசொல்லாய்க் குன்றவரென்னு மெழுவாய்க்குங் கணையையென்னு மிரண்டாவதற்கும் முடிபாயின. துணையாமென்பது "ஏவலிளையர் தாய்" என்பதுபோல மயக்கமாய் நின்றது. மானமர் நோக்கியர் நோக்கென்பதனை உறழ்வாலுவமைப்பாற்படுக்க. கொலைத்தொழிலாளருந் தந்துணைவியரோடொப்பனவற்றிற்கு மிடர்செய்யாத வெற்பராதலின், நீ யிவ்வாறு வருந்த நீட்டியாரென்பது கருத்து. (உ௭௪)

## வழியொழுகிவற்புறுத்தல்.

வழியொழுகி வற்புறுத்தலென்பது தலைமகளது வருத்தங்கண்ட தோழி, அவளை வழியொழுகியாற்றுவிக்கவேண்டு மளவாகலின், ஆற்றுமைக்குக் காரணமாகியவற்றைக் கூறித் தானும் அவளோடு வருத்தமுற்று, அதுகிடக்க, இம்மலர்ப்பாவையை யன்னாட்கு இவ்வேறுபாடு வந்தவாறென்னேவென்று அயலவர் ஐயுறா நிற்பராதலான் நீ யாற்றவேண்டுமென்று அவள்வழியொழுகி வற்புறுத்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மதுமலர்ச்சோலையும்வாய்மையுமன்புமருவிவெங்கான்
கதுமெனப்போக்குநிதியினருக்குமுன்னிக்கலுழ்ந்தா, னொது
மலர்நோக்கமொர்மூன்றுடையோன்றில்லைநோக்கலர்போ
லிதுமலர்ப்பாவைக்கென்னேவந்தவாறென்பரேந்திழையே.

சூழிருங் கூந்தலைத்
தோழி தெருட்டியது.

இ - ள். மது மலர்ச் சோலையும் - அவரைப் புதுவதுகண்ணுற்ற மதுமலரையுடைய சோலையையும்—வாய்மையும் - அன்று நின்னிற்பிரியேன் பிரியினாற்றேனென்றுகூறிய வஞ்சினத்தினது மெய்ம்மையையும்—அன்பும் - வழிமுறைபெருகிய வன்பையும்—மருவி வெங்கான் கதுமெனப் போக்கும் - நம்மோடு மருவிவைத்துப் பின்கதுமென வெங்கானிற்போகிய போக்கையும்—நிதியின் அருக்கும் - போய்த்தேடு நிதியினது செய்தற்கருமையையும்—முன்னிக் கலுழ்ந்தால் - நினைந்து நீகலுழ்ந்தால்—ஏந்திழை - ஏந்திழாய்—னொதுமலர் - ஏதிலர்—மலர்ப்பாவைக்கு இது வந்தவாறு என்னே என்பர் - மலர்ப்பாவையன்னாட்கு இவ்வேறுபாடு வந்தவாறென்னேவென்றையுறுவர்; அதனா னியாற்றுவாயாக. எ - று.

நோக்கம் ஓர் மூன்று உடையோன் தில்லை நோக்கலர் போல் வந்தவாறு என்றோ - கண்களொருமூன்றையுடையவனது தில்லை யைக் கருதாதார்போல வந்தவாறென்றோவெனக்கூட்டுக.

அன்பு வழிமுறையாற் சுருங்காது கடிது சுருங்கிற்றென்னுங் கருத்தாற் கதுமெனப் போக்குமென்றாள். அருக்குமென்றதனால் நீட்டித்தல் கருதினாளாம். வழியொழுகி யாற்றுவிக்கவேண்டுமௌ வாகலின், ஆற்றாமைக்குக் காரணமாகியவற்றை மிகுத்துக் கூறி னாளாம். இவை யிரண்டற்கும் மெய்ப்பாடு இளிவரலைச்சார்ந்த பெருமிதம். பயன் தலைமகளை யாற்றுவித்தல். (உஎரு)

## வன்புறையெதிரழிந்திரங்கல்.

வன்புறையெதிரழிந்திரங்கலென்பது, வழியொழுகி வற்புறுத் தின தோழியோடு, தலைமகன் வரைவு நீடுதலாற் றமக்கோர் பற் றுக்கோடின்றி வருந்துந் திருவினையுடையார்க்கு அவன் வரைவு மிகவுமினிது; யானாற்றேனெனத் தலைமகள் வன்புறையெதிரழிந் திரங்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

வந்தாய்பவரையில்லாமயின்முட்டையிளையமந்தி
பந்தாடிரும்பொழிற்பல்வரைநாடன்பண்போவினிதே
கொந்தார்நறுங்கொன்றைக்கூத்தன்றென்றில்லைதொழார்கு
ழுப்போற்,சிந்தாகுலமுற்றுப்பற்றின்றிநையுந்திருவினர்க்கே.

வன்கறைவேலோன் வரைவுநீட
வன்புறையழிந்தவண் மனமழுங்கியது.

இ - ள். கொந்தார் நறுங் கொன்றைக் கூத்தன் தென் தில்லை தொழார் குழுப்போல்—கொத்தார்ந்த நறியகொன்றையையணிந்த கூத்தனது தெற்கின்கணுண்டாகிய தில்லையைவணங்காதாரது திர ள்போல—சிந்தாகுலம் உற்றுப் பற்று இன்றி நையும் திருவினர் க்கு - மனக்கலக்கத்தையுற்றுத் தமக்கோர் பற்றுக்கோடின்றி வரு ந்துந் திருவினையுடையவர்க்கு—வந்து ஆய்பவரை இல்லா மயில் முட்டை - சென்றாராய்வாரை யுடைத்தல்லாத மயிலின் முட்டை யை—இளைய மந்தி பந்தாடு இரும் பொழில் பல் வரை நாடன் பண்போ - இளையமந்தி பந்தாடிவிளையாடும் பெரிய பொழிலையு டைய பலவாகிய வரைகளையுடைய நாட்டையுடையவன தியல்போ—இனிது - இனிது. எ - று.

நையுந்திருவினர்க்கென்றது நையுந்துணையாயிறந்துபடாதிரு ந்து அவனளிபெற்ற ஞான்று இன்புறவெய்தும் (நல்வினையாட்டி

யர்க்கென்றவாறு. எனவே, யானது பெறுமாறில்லை யென்றுளாம். உற்றதாராய்ந்தோம்புவாரில்லாத மயிலினது முட்டையால் ஈன்ற வருத்தமறியாத விளமந்தி, மயிலின் வருத்தமும் முட்டையின் மென்மையும் பாராது பந்தாடுகின்றாற்போலக் காதலரான் வினை வப்படாத என் காமத்தை நீ யிஃதுற்றறியாமையான் எனது வருத்தமும் காமத்தினது மென்மையும் பாராது, இவ்வாறுரைக்கின்றாயென உள்ளுறைவகையாற் றோழியை நெருங்கி வன்புறை யெதிரழிந்தவாறு கண்டுகொள்க. அல்லதூஉம், வந்தாய்பவர் தோழியாகவும், இளமந்தி தலைமகளாகவும், பந்தாடுதல் தலைமகளது வருத்தம் பாராது தான் வேண்டியவாறொழுகு மவனதொழுக்கமாகவும், உரைப்பினுமமையும். திருவினைற்கேயென்பது பாடமாயின், இவ்வாறு வன்கண்மையேனாய் வாழுந்திருவையுடையேற்கென வுரைக்க. இதற்குத் திரு ஆகுபெயர். மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த பெருமிதம். பயன் அது. (உ௭௬)

## வாய்மைகூறிவருத்தந்தணித்தல்.

வாய்மைகூறி வருத்தந்தணித்தலென்பது வரைவு நீடுதலான் வன்புறையெதிரழிந்து வருந்தாநின்ற தலைமகளுக்கு, அவர் சொன்னவார்த்தை நினக்குப் பொய்யென்பதே கருத்தாயின் இவ்வுலகத்து மெய்யென்பது சிறிதுமில்லையெனத் தோழி தலைமகனது வாய்மைகூறி, அவள் வருத்தந் தணியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மொய்யென்பதேயிழைகொண்டவனென்னைத்தன்மொய்கழற்காட், செய்யென்பதேசெய்தவன்றில்லைச்சூழ்கடற்சேர்ப்பர்சொல்லும், பொய்யென்பதேகருத்தாயிற்புரிகுழற்பொற்றொடியாய், மெய்யென்பதேதுமற்றில்லைகொலாமிவ்வியலிடத்தே.

வேற்றடங் கண்ணியை
யாற்று வித்தது.

இ - ள். மொய் என்பதே இழை கொண்டவன் - வலிமையையுடைய என்பதனையே தனக்கணியாகக் கொண்டவன்—என்னைத் தன் மொய் கழற்கு ஆள் செய் என்பதே செய்தவன் - என்னைத் தன்னுடைய வலியதிருவடிகட் காட்செய்யென்று வெளிப்பட்டுநின்று சொல்லுதலையே செய்தவன்—தில்லைச் சூழ் கடல் சேர்ப்பர் சொல்லும் - அவனது தில்லைவரைப்பினுண்டாகிய சூழ்ந்த கடலையுடைத்தாகிய சேர்ப்பையுடையவரது சொல்லும்—பொய்

என்பதே கருத்து ஆயின் - பொய்யென்பதே நினக்குக் கருத்தாயின்—புரிகுழல் பொற்றொடியாய் - சுருண்டகுழலையுடைய பொற்றொடியாய்—இவ் வியல் இடத்து மெய் என்பது ஏதும் இல்லைகொலாம் - இவ்வுலகத்து மெய்யென்பது சிறிதுமில்லைபோலும்! எ - று.

அரிமுதலாயினாரென்பாகலின், மொய்யென்பென்றார். இழிந்தன கைக்கொள்வானாகலின், என்பையணியாகவும் என்னை யடிமையாகவுங் கொண்டானென்பது கருத்து. மெய்ப்பாடும் பயனும் அவை. (உஎஎ)

## தேறாதுபுலம்பல்.

தேறாதுபுலம்பலென்பது தலைமகனது வாய்மைகூறி வருத்தந்தணியாநின்ற தோழிக்கு, யானவர் கூறிய மொழியின்படியே மெய்ம்மையைக்கண்டு வைத்தும், என்னெஞ்சமு நிறையும் என்வயமாய் நிற்கின்றனவில்லை; அதுவேயுமன்றி, என்னுயிரும் பொறுத்தற்கரிதாகாநின்றது, இவை யிவ்வாறாதற்குக் காரணம் யாதென்றறிகின்றிலேனெனத் தான்றேறாமைகூறிப் புலம்பாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மன்செய்தமுன்னாண்மொழிவழியேயன்னவாய்மைகண்டு
மென்செய்தநெஞ்சுநிறையுநில்லாவெனதின்னுயிரும்
பொன்செய்தமேனியன்றில்லையுறாரிற்பொறையரிதா
முன்செய்ததீங்குகொல்காலத்துநீர்மைகொன்மொய்குழலே

தீதறுகண்ணி தேற்றத்தேறாது
போதறுகுழலி புலம்பியது.

இ - ள். மொய் குழலே - மொய்த்த குழலையுடையாய்—முன்னாள் மன் செய்த மொழி வழியே அன்ன வாய்மை கண்டும் - முற்காலத்து மன்னன் நமக்குதவிய மொழியின்படியே அத்தன்மைத்தாகிய மெய்ம்மையைக் கண்டுவைத்தும்—நெஞ்சும் நிறையும் நில்லா - என்னெஞ்சமுநிறையு மென்வரையவாய் நிற்கின்றில—என் செய்த - இவையென்செய்தன—எனது இன் உயிரும் - அதுவேயுமன்றி எனதினியவுயிரும்—பொன் செய்த மேனியன் தில்லை உறாரின் பொறை அரிதாம் - பொன்னையொத்த மேனியையுடையவனது தில்லையை யுறாதாரைப்போல வருத்தம்பொறுத்த லரிதாகாநின்றது—முன் செய்த தீங்கு கொல் - இவையிவ்வாறாதற்குக் காரணம் யான் முன்செய்த தீவினையோ—காலத்து நீர்மை கொல்-

அன்றிப் பிரியுங்காலமல்லாத விக்காலத்தினியல்போ? அறிகின்றிலன். எ - று.

மொழிவழியே கண்டுமெனவியையும். நெஞ்சநில்லாமையாவது நம்மாட்டு அவரதன்பு எத்தன்மைத்தோவென் றையப்படுதல். நிறைநில்லாமையாவது பொறுத்தலருமையான் அந்நோய் புறத்தார்க்குப் புலனாதல். நில்லாதென்பது பாடமாயிற் றனித்தனி கூட்டுக. பொன்செய்த வென்புழிச் செய்தவென்பது உவமச்சொல். உயிர்துன்ப முழத்தற்குக் காரணமாதலின், அதனையுந் துன்பமாக நினைந்து இன்னுயிரும் பொறையரிதாமென்றாள். மெய்ப்பாடு மருட்கை. பயன் ஆற்றுவித்தல். (உஎஅ)

## காலமறைத்துரைத்தல்.

காலமறைத்துரைத்தலென்பது தேறாமைகூறிப் புலம்பாநின்ற தலைமகள், காந்தள் கருவுறக்கண்டு, இஃதவர் வரவுகுறித்த காலமென்று கலங்காநிற்ப, நம்முடைய வையன்மார் தினைக்கதிர் காரணமாகக் கடவுளைப்பராவ, அக்கடவுளதாணையாற் காலமன்றியுங் கார்நீரைச்சொரிய, அதனையறியாது, காலமென்று இக்காந்தண் மலர்ந்தன; நீயதனைக் காலமென்று கலங்கவேண்டாவெனத் தோழி, அவளையாற்றுவித்தற்குக் காலமறைத்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

கருந்தினையோம்பக்கடவுட்பராவிநமர்கலிப்பச்
சொரிந்தனகொண்மூச்சுரந்ததன்பேரருளாற்றொழும்பிற்
பரிந்தெனையாண்டசிற்றம்பலத்தான்பரங்குன்றிற்றுன்றி
விரிந்தனகாந்தள்வெருவரல்காரெனவெள்வளையே.

காந்தள்கருவுறக் கடவுண்மழைக்கென்
றேந்திழைப்பாங்கி யினிதியம்பியது.

இ - ள். வெள் வளை - வெள்வளையையுடையாய்—கருந்தினை ஓம்பக் கடவுள் பராவி நமர் கலிப்ப - கரியதினையை யோம்பவேண்டிக் கடவுளைப்பராவி நமராரவாரிப்ப—கொண்மூச் சொரிந்தன - அக்கடவுளாணையாற் கொண்மூக்கள் காலமன்றியு நீரைச் சொரிந்தன—காரென - அதனைக்காரென்று கருதி—பரங்குன்றின் காந்தள் துன்றி விரிந்தன - இப்பரங்குன்றின்கட் காந்தணெருங்கி யலர்ந்தன; அதனான் நீகாரென்றஞ்சவேண்டா. எ - று.

சுரந்ததன் பேரருளான் - பொறுத்தற்கரிதாகச் சுரந்த தனது பெரியவருளான்—தொழும்பில் பரிந்து எனை ஆண்ட சிற்றம்பல

த்தான் பரங்குன்றின் - அடிமைக்குத் தகாதவென்னைத் தன்னடிமைக்கண்ணேகூட்டி நடுவுநிலைமையின்றிப் பரிந்தாண்ட சிற்றம்பலத்தானது பரங்குன்றினெனக் கூட்டுக.

கடவுண்மழை-கடவுளாற் றரப்பட்டமழை. மெய்ப்பாடு பெருமிதம். பயன் ஆற்றுவித்தல். (உஎகூ)

## தூதுவரவுரைத்தல்.

தூதுவர வுரைத்தலென்பது காலமறைத்த தோழி, ஒரு தூது வந்து தோன்றாநின்றது; அஃதின்னார் தூதென்று தெரியாதெனத் தானின்புறவோடு நின்று அவள் மனமகிழும்படி தலைமகளுக்குத் தூதுவரவுரையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வென்றவர்முப்புரஞ்சிற்றம்பலத்துணின்றாடும்வெள்ளிக்
குன்றவர்குன்றாவருடரக்கூடினர்நம்மகன்று
சென்றவர்தூதுகொல்லோவிருந்தேமையுஞ்செல்லல்செப்பா
நின்றவர்தூதுகொல்லோவந்துதோன்றுநிரைவளையே.

ஆங்கொரு தூதுவரப்
பாங்கிகண் டுரைத்தது.

இ - ள். நிரை வளை - நிரைவளையையுடையாய்—வந்து தோன்றும் - ஒருதூதுவந்து தோன்றாநின்றது—குன்றா அருள் தரக் கூடினர் நம் அகன்று சென்றவர் தூது கொல்லோ - இது குன்றாத அருள்கொணர்ந்துதர வந்துகூடிப் பின்னம்மைப் பிரிந்துசென்றவர்தூதோ—இருந்தேமையும் செல்லல் செப்பாநின்றவர் தூது கொல்லோ - அன்றி அவர் பிரியவிருந்தோமிடத்தும் இன்னாமையைச் சொல்லாநின்ற வேதிலார்தூதோ? அறியேன். எ - று.

முப்புரம் வென்றவர் - முப்புரத்தை வென்றவர்—சிற்றம்பலத்துள் நின்று ஆடும் வெள்ளிக் குன்றவர் - சிற்றம்பலத்தின்கணின்றாடும் வெள்ளிக்குன்றையுடையவர்—குன்றா அருள் - அவரது குன்றாதவருளெனக்கூட்டுக.

கூடினரென்பது பெயர்படநின்றதெனினு மமையும். இருந்தேமையென்னு மிரண்டாவது ஏழாவதன் பொருட்கண் வந்தது. இரண்டாவதாயேநின்று இன்னாமையைச் சொல்லாநின்றவரென்னுந் தொழிற்பெயரோடு முடிந்ததென்பாருமுளர். ஆங்கொரு தூது-ஏதிலார்தூது. மெய்ப்பாடு அச்சத்தைச்சார்ந்த மருட்கை. பயன் ஐயந்தீர்தல். (உஅ௦)

## தூதுகண்டழுங்கல்.

தூதுகண்டழுங்கலென்பது தூதுவரவுரைப்பக்கேட்ட தலைமகள் மனமகிழ்வோடு நின்று, இஃதயலார் தூதாகலான் இவை வருவனசெல்வன வாகாநின்றன; காதலர்தூது இன்று வாராதிருக்கின்றது என்செய்யக்கருதி யென்றறிகின்றிலேனென்று ஏதிலார் தூதுகண் டழுங்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

**வருவனசெல்வனதூதுகளேதிலவான்புலியூ**
**ரொருவனதன்பரின்பக்கலவிகளுள்ளுருகத்**
**தருவனசெய்தெனதாவிகொண்டேகியென்னெஞ்சிற்றம்மை**
**யிருவினகாதலரேதுசெய்வானின்றிருக்கின்றதே.**

அயலுற்ற தூதுவரக்
கயலுற்றகண்ணி மயலுற்றது.

இ - ள். ஏதில தூதுகள் வருவன செல்வன - ஏதிலவாகிய தூதுகள் வருவன போவனவாயிராநின்றன—வான் புலியூர் ஒருவனது அன்பரின் - வாலிய புலியூர்க்கணுளனாகிய ஒப்பில்லாதானது அன்பையுடையவரைப்போல—உள் உருகத் தருவன இன்பக் கலவிகள் செய்து - யானின்புற வுள்ளுருகும் வண்ணந் தரப்படுவனவாகிய இன்பக்கலவிகளை முன்செய்து—எனது ஆவி கொண்டு ஏகி - பின்னெனதாவியைத் தாங்கொண்டுபோய்—என் நெஞ்சில் தம்மை இருவின காதலர் - என்னெஞ்சத்தின்கட் டம்மையிருத்தினகாதலர்—இன்று இருக்கின்றது ஏது செய்வான் - இன்றுவாளாவிருக்கின்றது ஏதுசெய்யக்கருதி? எ - று.

ஒருவனதன்பு ஒருவன்கணன்பு. உள்ளுருகத் தருவன வென்பதற்கு உள்ளுருகும்வண்ணஞ் சிலவற்றைத் தருவனவாகிய கலவியென்றுரைப்பினு மமையும். தன்மெய்யன்பர் போல யானுமின்புற வுள்ளுருகுங் கலவிகளை முன்செய்து பின்னெனதாவி போயினாற்போலத் தாம் பிரிந்துபோய் ஒருஞான்றுங் கட்புலனாகாது யானினைந்து வருந்தச்செய்த காதலர் இன்று ஏதுசெய்ய விருக்கின்றாரென வேறுமொரு பொருடோன்றியவாறு கண்டுகொள்க. அயல்-அயன்மை. மெய்ப்பாடும் பயனும் அவை. (உஅக)

## மெலிவுகண்டுசெவிலிகூறல்.

மெலிவுகண்டு செவிலிகூறலென்பது ஏதிலார் தூதுகண்டழுங்காநின்ற தலைமகளைச் செவிலி யெதிர்ப்பட்டு, அடியிற்கொண்டு முடிகாறுநோக்கி, இவள் பண்டைத் தன்மையளல்லள்; இவ்வாறு

மெலிதற்குச் சேயினதாட்சியிற் பட்டனள்போலுமென் றறிகின்றிலேனென்று அவளது மெலிவுகண்டு கூறுநிற்றல். அதற்குச் செய்யுள்—

வேயினமென்றோண்மெலிந்தொளிவாடிவிழிபிறிதாய்ப்
பாயினமேகலைபண்டையளல்லள்பவளச்செவ்வி
யாயினவீசனமரர்க்கமரன்சிற்றம்பலத்தான்
சேயினகாட்சியிற்பட்டனளாமித்திருந்திழையே.

வண்டமர்புரிகுழ லொண்டொடிமெலிய
வாடாநின்ற கோடாய்கூறியது.

இ - ள். வேய் இன மென்றோள் மெலிந்து - வேய்க்கினமாகிய மென்றோண்மெலிந்து—ஒளி வாடி - கதிர்ப்புவாடி—விழி பிறிதாய் - விழி தன்னியல்பிழந்து வேறாய்—பாயின மேகலை பண்டையளல்லள் - பரந்த மேகலையையுடையாள் பண்டைத்தன்மையளல்லளாயினள், அதனால்—இத் திருந்திழை - இத்திருந்திழை—சேயினது ஆட்சியின் பட்டனளாம் - சேயினதாட்சியாகிய விடத்துப்பட்டாள்போலும். எ - று.

பவளச் செவ்வி ஆயின ஈசன் - திருமேனி பவளத்தினது செவ்வியாகியவீசன்—அமரர்க்கு அமரன் - தேவர்க்குத் தேவன்—சிற்றம்பலத்தான் - சிற்றம்பலத்தின்கண்ணான்—சேய் - அவனுடைய சேயெனக்கூட்டுக.

ஒளிவாடியென்பதூஉம், விழிபிறிதாயென்பதூஉம், சினைவினைப்பாற்படும். பாயினமேகலை யென்னுஞ் சொற்கள் ஒரு சொன்னீர்மைப் படுதலின், ஆகுபெயரெனப்படும். செவ்வி கருகுதலும் வெளுக்குதலுமில்லாத நிறம். ஆட்சி அவனதாணையான் மக்களுக்கணையலாகாத விடம். (உஅஉ)

## கட்டுவைப்பித்தல்.

கட்டுவைப்பித்தலென்பது மெலிவுகண்ட செவிலி, அவளது பருவங்கூறி, இவ்வணங்குற்ற நோயைத் தெரியவறிந்து சொல்லுமினெனக் கட்டுவித்திக் குரைத்துக் கட்டுவைப்பியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சுணங்குற்றகொங்கைகள்சூதுற்றிலசொற்றெளிவுற்றில
குணங்குற்றங்கொள்ளும்பருவமுறாள்குறுகாவசுரர்

நிணங்குற்றவேற்சிவன்சிற்றம்பலநெஞ்சுறாதவர்போ
லணங்குற்றநோயறிவுற்றுரையாடுமினன்னையரே.

மால்கொண்ட கட்டுக்
கால் கொண்டது.

இ - ள். சுணங்கு உற்ற கொங்கைகள் சூது உற்றில - சுணங்கைப்பொருந்திய கொங்கைகள் சூதின்றன்மையை யுற்றனவில்லை—சொல் தெளிவு உற்றில - சொற்கள் குதலைமைநீங்கி விளங்குதலையுற்றனவில்லை—குணம் குற்றம் கொள்ளும் பருவம் உறாள் - நன்மையுந் தீமையுமறியும் பெதும்பைப் பருவத்தை யிப்பொழுதைக்குறாள், இவளிளமை இதுவாயிருந்தது—அன்னையரே - அன்னைமீர்—அணங்கு உற்ற நோய் அறிவுற்று உரையாடுமின் - இவ்வணங்குற்ற நோயைத் தெளியவறிந்து சொல்லுவீராமின். எ - று.

நிணம் குற்ற வேல் சிவன் சிற்றம்பலம் நெஞ்சு உறாதவர் போல் அணங்குற்ற - சென்றுசேராத வசுரருடைய நிணத்தைக் குற்ற சூலவேலையுடைய சிவனது சிற்றம்பலத்தை நெஞ்சாலுறாதாரைப்போல அணங்குற்றவெனக்கூட்டுக.

இளமைகூறிய வதனாற் பிறிதொன்று சிந்திக்கப்பட்டாளென்பது கூறினாளாம். இவை யிரண்டற்கும் மெய்ப்பாடு மருட்கை. பயன் தலைமகட்குற்ற துணர்த்தல். (உஅகூ)

## கலக்கமுற்றுநிற்றல்.

கலக்கமுற்று நிற்றலென்பது செவிலிகட்டுவைப்பியாநிற்ப, இவளுள்ளமோடியவாறு முழுதையும் புலப்படுத்தி, நம்மை வருத்தி, அயலார் அன்று மொழியாத பழியையும் வெளிப்படச்சொல்லி, எம்மிடத்துண்டாகிய நாணினையுந்தள்ளி, எங்குடியினையுங் குற்றப்படுத்தியல்லவே இக்கட்டுவித்தி நிற்கப் புகுகின்றதெனத் தோழி கலக்கமுற்று நில்லாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மாட்டியன்றேயெம்வயிற்பெருநாணினிமாக்குடிமா
சூட்டியன்றேசிற்பதோடியவாறிவளுள்ளமெல்லாங்
காட்டியன்றேகின்றதில்லைத்தொல்லோனைக் கல்லாதவர்போ
ல், வாட்டியன்றேர்குழலார்மொழியாதனவாய்திறந்தே.

தெய்வத்திற் றெரியுமென
எவ்வத்தின் மெலிவுற்றது.

இ - ள். இவள் உள்ளம் ஓடியவாறு எல்லாம் காட்டி - இவளுள்ளமோடியவாறு முழுதையும்புலப்படுத்தி—அன்றே நின்ற

இல்லைத் தொல்லோர்க்கு கல்லாதவர் போல் வாட்டி - அன்று தோட்டுநின்ற இல்லைக்கணுள்ளாகிய பழையோனைக் குருமுகத்தா லறியாதாரைப்போல வருந்த நம்மைவாட்டி—ஏர் குழலார் அன்று மொழியாதன வாய் திறந்து - அலர்தூற்றி அவ்வேர்குழலாராகிய வயலார் அன்றுமொழியாத பழியையும் வெளிப்படச்சொல்லி— இனி எம் வயின் பெரு நாண் மாட்டி அன்றே - இப்பொழு தெம் மிடத்துண்டாகிய பெருநாணினை மாள்வித்தலல்லவே—மாக் குடி மாசு ஊட்டி அன்றே நிற்பது - எம்பெருங்குடியைக் குற்றப்படுத்தி யல்லவே இக்கட்டுவித்திநிற்பது! இனியென்செய்தும்! எ - று.

மூள்வித்தற்கண் மூட்டியென நின்றவாறுபோல மாள்வித் தற்கண் மாட்டியென நின்றது. தள்ளியென்னும் பொருள்பட நின்றதென்பாருமுளர். நிற்பதென்றதனை முன்னையதனோடுங் கூட்டுக. இவளென்றது கட்டுவித்தியையென்று, இவணிற்பதெனக் கூட்டித் தலைமகள் கூற்றாக வுரைப்பினுமமையும். இல்லைக்கணின்ற நாள் இந்நாளென்றுணரலாகாமையின், அன்றே நின்றவென் றார். தெய்வம்-கட்டுக்குரியதெய்வம். மெய்ப்பாடு இளிவரல். பயன் அறத்தொடுநிற்றற் கொருப்படுத்தல். (உஅச)

## கட்டுவித்திகூறல்.

கட்டுவித்தி கூறலென்பது தோழி கலக்கமுற்று நில்லாநிற்ப, இருவரையு நன்மையாகக் கூட்டுவித்த தெய்வம் புறத்தார்க்கிவ் வொழுக்கம் புலப்படாமல் தானிட்ட நெல்லின்கண் முருகணங்கு காட்ட, இதனை யெல்லீருங் காண்மின்; இவளுக்கு முருகணங் கொழியப் பிறிதொன்றுமில்லையெனக் கட்டுவித்தி நெற்குறி காட் டிக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

குயிலிதன்றேயென்னலாஞ்சொல்லிகூறன்சிற்றம்பலத்தா
னியலிதன்றேயென்னலாகாவிறைவிறற்சேய்கடவு
ட்யிலிதன்றேகொடிவாரணங்காண்கவன்சூர்தடிந்த
வயிலிதன்றேயிதன்றேநெல்லிற்றோன்றுமவன்வடிவே.

கட்டு வித்தி
விட்டு ரைத்தது.

இ - ள். இது குயில் அன்றே என்னலாம் சொல்லி கூறன் - இது குயிலோசையாமென்று சொல்லலாகுஞ் சொல்லையுடையா ளது கூற்றையுடையான்—சிற்றம்பலத்தான் - சிற்றம்பலத்தின்க ண்ணான்—இயல் இது அன்றே என்னல் ஆகா இறை - அவனது தன்மை யிதுவாமென்று கூறமுடியாத விறைவன்—விறல் சேய்

கடவும் மயில் இது அன்றே - அவனுடைய விறலையுடைய சேயூரு மயிலிதுவல்லவே—கொடி வாரணம் காண்க - அதுவேயுமன்றி, அவன் கொடிக்கணுளதாகிய கோழியையும் எல்லீருங்காண்க—வன் சூர் தடிந்த அயில் இது அன்றே - அதுவேயுமன்றி, வலியனாகிய சூரைக்குறைத்த அயில்தானிதுவல்லவே! இவையெல்லாஞ் சொல்லுகின்றதென்—நெல்லில் தோன்றும் அவன் வடிவு - இப் பரப்பிய நெல்லின்கண்வந்து தோன்றுகின்றது அவனதுருவமாம்—இது அன்றே - இதுவல்லவே? காண்மின். எ - று.

முருகனெனவே, முருகணங்கினுளென்று கூறினுளாம். சூர் மாமரமாய் நின்றமையாற் றடிந்தவென்முள். மெய்ப்பாடு பெருமிதம். பயன் தன் கருமமுற்றுதல். கட்டுவித்தியை வினவ, அவளறியாதாள்போல இக்கருமமுடித்தற் பொருட் டிவ்வகை சொன்னுள். என்னை? வரைபொருட்குத் தலைமகன் போக, அவன் வரவு நீட்டித்தலான், இவளதாற்ருமையானுண்டாகிய நோயை முருகனுல் வந்ததென்றிவள் கூறலாமோ? இஃதங்ஙனமாயிற் குறியென்பதனைத்தும் பொய்யேயாமென்பது கடா. அதற்குவிடை: குறியும் பொய்யன்று;இவளும் பொய்கூறினுளல்லள்;அஃதெங்ஙனமெனின்:—குறிபார்க்கச் சென்றிருக்கும்பொழுதே தெய்வ முன்னிலையாகக் கொண்டிருத்தலான், அத்தெய்வத்தின் வெளிப்பாட்டானே தலைமகனுடன் புணர்ச்சியுண்மையை யறிந்தாள். இவளிங்ஙனமறிந்தாளென்பதனை நாமறிந்தவாறியாதினுலெனின், இக்களவொழுக்கந் தெய்வமிடைநிற்பப் பான்மைவழியோடி நடக்குமொழுக்கமாதலானும், சிற்றம்பலத்தானியல்பு தெரிந்திராதே யென்றிவள் சொல்லுதலானும், அறிந்தாம். இப்படி வருமொழுக்கம் அகத்தமிழொழுக்கமென்பதனை முதுபெண்டிரு மறிந்துபோதுகையானும், இவளுரைக்கின்றுழி முதுபெண்டிரை முகநோக்கியே சிற்றம்பலத்தானியல்பு தெரியாதென வுரைத்தாள், அவருமக் கருத்தேபற்றியும் அதனை யுணர்ந்தார், இக்கருத்தினுலு நாமறியப்பட்டது. இனியயலாரையுஞ் சுற்றத்தாரையு நீக்கவேண்டுகையாலும், இக்களவொழுக்க முடியுமிடத்து வேலனைக் கூவுகையும், வெறித்தொழில் கொள்கையும், அவ்வெறித்தொழிலை யறத்தொடு நின்றுவிலக்குகையும், அகத்தமிழிலக்கணமாகையின், முருகணங்கென்றே கூறப்பட்டது. கூறியவாறுவது: குறிக்கிலக்கணம் நென்மூன்றுமிரண்டு மொன்றும் படுகை. அஃதாவது அடியுங்கொடியுமுவகையும். இதனில், அடியாவது மயில், கொடியாவது கோழி, உவகையாவது வேல். ஆதலான் முருகணங்கெனவே கூறப்பட்டதென வறிக. (உஅரு)

## வேலனையழைத்தல்.

வேலனை யழைத்தலென்பது கட்டுவித்தி முருகணங்கென்று கூறக்கேட்டு, இப்பாலனிக் குடியின்கட்பிறந்து நம்மையிவ்வாறு நிற்பித்த பண்பினுக்கு வேலன் புகுந்து வெறியு மாடுக; அதன் மேன் மறியு மறுக்கவெனத் தாயர் வேலனை யழையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**வேலன்புகுந்துவெறியாடுகவெண்மறியறுக்க**
**காலன்புகுந்தவியக்கழல்வைத்தெழிற்றில்லைநின்ற**
**மேலன்புகுந்தென்கணின்றானிருந்தவெண்காடனைய**
**பாலன்புகுந்திப்பரிசினினிற்பித்தபண்பினுக்கே.**

வெறியாடிய வேலனைக்கூஉய்
நெறியார்குழலி தாயர்நின்றது.

இ - ள். காலன் புகுந்து அவியக் கழல் வைத்து எழில் தில்லை நின்ற மேலன் - தன்னையடைந்த வந்தணனை ஏதஞ்செய்யக்குறித்து அவ்விடத்துப் புகுந்த காலன் வலிகெட ஒருகழலைவைத்து எழிலையுடைய தில்லைக்கணின்ற எல்லாப்பொருட்கு மேலாயுள்ளான்—புகுந்து என்கண் நின்றான் - புகுந்தணியனு யென்னிடத்து நின்றவன்—இருந்த வெண்காடு அனைய பாலன் புகுந்து - அவனிருந்த வெண்காட்டையொக்கும் இப்பிள்ளை யிக்குடியிற்பிறந்து—இப் பரிசினின் நிற்பித்த பண்பினுக்கு - வெறியாடுவித்தலாகிய இம்முறைமைக்கணெம்மை நிற்பித்த பண்பால்—வேலன் புகுந்து வெறி ஆடுக - வேலனீண்டுப் புகுந்து வெறியாடுவானுக—வெண்மறி அறுக்க - பலியாக வெள்ளியமறியையு மறுக்க. எ - று.

வெறியாடுதலேயன்றி இதுவுந் தகாதென்னுங் கருத்தால், மறியறுக்கவெனப் பிரித்துக் கூறினாளாம். கழல்வைத்தென்றாள், எளிதாகச் செய்தலான். பாலனென்னும் பான்மயக்கம் அதிகாரப் புறனடையாற் கொள்க. பரிசினினிற்பித்தவென்புழி ஐந்தாவது ஏழாவதன் பொருட்கண் வந்து, சிறுபான்மை இன்சாரியைபெற்று நின்றது. ஏழாவதற்கு இன்னென்பதோருருபு புறனடையாற் கொள்ளினுமமையும். மெய்ப்பாடு இளிவரல். பயன் தலைமகளது வேறுபாடு நீக்குதல். (உஅகூ)

## இன்னலெய்தல்.

இன்னலெய்தலென்பது வெறியாடுதற்குத் தாயர் வேலனை யழைப்பக்கேட்ட தலைமகள், இருவாற்றானும் நமக்குயிர்வாழ்நெறி

யில்லையெனத் தன்னுள்ளே கூறி, இன்னலெய்தா நிற்றல். அதற்குச்செய்யுள்—

**அயர்ந்தும்வெறிமறியாவிசெருத்தும்விளர்ப்பயலார்**
**பெயர்ந்துமொழியாவிடினென்னைபேசுவபேர்ந்திருவ**
**ருயர்ந்தும்பணிந்துமுணரானதம்பலமுன்னலரிற்**
**றுயர்ந்தும்பிறிதினொழியினென்னாதுந்துறைவனுக்கே.**

ஆடியவெறியிற் கூடுவதறியாது
நன்னறுங்கோதை யின்னலெய்தியது.

இ - ள். வெறி அயர்ந்தும் மறி ஆவி செருத்தும் பெயர்ந்தும் விளர்ப்பு ஒழியாவிடின்-வெறியை விரும்பியாடியும் மறியினதாவியைக்கெடுத்தும் பின்னு நிறவேறுபாடொழியாதாயின்—அயலார் பேசுவ என்னை - அயலார்கூறுவனவென்னும்—பிறிதின் ஒழியின்-வெறியாட்டாகிய பிறிதினால் இவ்விளர்ப் பொழியுமாயின்— துயர்ந்தும் துறைவனுக்கு என் ஆதும் - துயரமுற்றும் அத்துறைவனுக்கு நாமென்னாதும்! இருவாற்ருனு முயிர்வாழ்தலரிது! எ - று.

இருவர் பேர்ந்து உயர்ந்தும் பணிந்தும் உணரானது அம்பலம் உன்னலரின் துயர்ந்தும் - யான்றலைவன் யான்றலைவனென்று தம்முண்மாறுபட்ட பிரமனுமாலுமாகிய விருவர் அந்நிலைமையினின்றும் பெயர்ந்து தழற்பிழம்பாகிய தன்வடிவையறியலுற்று ஆகாயத்தின்மேற் சென்றுயர்ந்தும் நிலத்தின்கீழ்ப்புக்குத் தாழ்ந்தும் அறியப்படாதவன தம்பலத்தை நினையாதாரைப்போலத் துயரமுற்றுமெனக்கூட்டுக.

மறியறுத்தற்கு முன்னுரைத்ததுரைக்க. பெயர்ந்துமென மெலிந்துநின்றது. உணரானென்றது செயப்படுபொருட்கண் வந்தது. தன்னைப்பிரிதல், துன்பமாய் இன்றியமையாத யாம் இத்தன்மையமாகவும், அளிக்கின்றிலனென வுட்கொண்டு, அவனை நாம் முன்னம் நெருங்கமுயங்கு மன்பாமாறெல்லாம் இன்றென்னுமென்னுங் கருத்தால், என்னாதுமென்ருள். பிறிதுமொழியினென்பது பாடமாயின், வெறியினாற்றணியாதாதலின் இந்நோய் பிறிதென்று பிறர்மொழியினென்றுரைக்க. மெய்ப்பாடு அச்சத்தைச்சார்ந்த மருட்கை. பயன் தலைமகள் தன்னெஞ்சொடு சொல்லியாற்றுதல்.

## வெறிவிலக்குவிக்கநினைதல்.

வெறிவிலக்குவிக்க நினைதலென்பது இருவாற்ருனு நமக்குயிர்வாழு நெறியில்லையாதலாற் றுறைவற்குற்ற நோயைப் பிறர்

சிதைக்கப்படின், நாண்டுறந்தும் வெறிவிலக்குவிப்பனெனத் தலை மகள் தோழியைக்கொண்டு வெறிவிலக்குவிக்க நினையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சென்றார்திருத்தியசெல்லனின்றார்கள்சிதைப்பரென்று
னன்றுவழகிதன்றேயிறைதில்லைதொழாரினைந்து, மொன்று
மிவட்குமொழிதல்கில்லேன்மொழியாதுமுய்யேன்
குன்றார்துறைவர்க்குறுவேனுரைப்பனிக்கூர்மறையே.

அயறருவெறியின் மயறருமென
விலக்கலுற்ற குலக்கொடிநினைந்தது.

இ - ள். இறை தில்லை தொழாரின் நைந்தும் - இறைவனது தில்லையைத் தொழாதாரைப்போல வருந்தியும்—ஒன்றும் இவட்கும் மொழிதல்கில்லேன் - நாணிலு லென்னுடொன்றுயிருக்கும் என்றேழியாகிய விவட்கு மொழிய மாட்டுகிலேன்—மொழியாதும் உய்யேன்-மொழியாதொழிந்தாலும் வேறோராற்றானுயிர்வாழேன், ஆயினும்—குன்று ஆர் துறைவர்க்கு உறுவேன் - இனி மணற்குன்றுகளார்ந்த துறையையுடையவர்க்குச் சிறந்தயான்—இக் கூர் மறை உரைப்பன் - இம்மிக்கமறையை யிவட்குரைப்பேன்—சென்றார் திருத்திய செல்லல் சிதைப்பர் நின்றார்கள் என்றால்-புணர்ந்துபோயினார் மிகவுமுண்டாக்கிய இந்நோயைத்தீர்ப்பார் முருகனைப் பிறராக இதற்கியாது மியைபிலாதார் சிலராயின்—நன்று அழகிது அன்றே - இது பெரிது மழகிது. எ - று.

நன்றுவழகிதன்றேயென்பது குறிப்புநிலை. குன்றார்துறைவர்க்குறுவேனென்றவதனால், நாண்டுறந்தும் மறையுரைத்தற்குக் காரணங் கூறினாளாம். இந்நோயை யேதிலார் சிதைப்பவிடேன், மறையுரைத்தாயினும் வெறிவிலக்குவேனென்னுங் கருத்தால், நன்றுவழகிதன்றேயென்றாள். மயறருமென-வருத்த நமக்குண்டாமென. மெய்ப்பாடு இளிவரலைச்சார்ந்த நகை. பயன் வெறிவிலக்குதற்கொருப்படுதல். (உஅஅ)

## அறத்தொடுநிற்றலையுரைத்தல்.

அறத்தொடுநிற்றலை யுரைத்தலென்பது நாண்டுறந்தும் மறையுரைத்தும் வெறிவிலக்குவிக்க நினையாநின்ற தலைமகள், மேலறத்தொடு நிற்பாளாக, அயலாரேசுக; ஊர்நகுக; அதுவேயுமன்றி, யாயும்வெகுள்வளாக; அதன்மேல் நீயுமென்னை முனிவாயாக; நீ தேறுயாகிற் சூளுற்றுத்தருவேன்;யான் சொல்லுகின்ற விதனைக்கேட்பாயாகவெனத் தோழிக்குக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஒன்றுமிவட்டுதும்: "ஒன்றித் தோன்றும் தோழி
தொல். அகத். 39.

யாயுந்தெறுகவயலவரேசுகவூர்நகுக
நீயுமுனிகநிகழ்ந்ததுகூறுவலென்னுடைய
வாயுமனமும்பிரியாவிறைதில்லைவாழ்த்துநர்போற்
றூயனினக்குக்கடுஞ்சூடருவன்சுடர்க்குழையே.

வெறித்தலைவெரீஇ வெருவருதோழிக்
கறத்தொடுநின்ற வாயிழையுரைத்தது.

இ - ள். சுடர்க் குழை - சுடர்க்குழையையுடையாய்—என்னுடைய வாயும் மனமும் பிரியா இறை தில்லை வாழ்த்துநர் போல் தூயன் - எனதுவாயையு மனத்தையும் பிரியாதவிறைவனது தில்லையை வாழ்த்துவாரைப்போலத் தூயேன்—நினக்குக் கடுஞ் சூள் தருவன்-நீதேறாயாயின் நினக்குக்கடிய சூளுறவையுந் தருவேன்—அயலவர் ஏசுக - அயலாரேசுக—ஊர் நகுக - ஊர்நகுவதாக—யாயுந் தெறுக - அவ்விற்றின்மேலே யாயும்வெகுளுவாளாக——நீயும் முனிக - அதுவேயுமன்றி நீயுமென்னைமுனிவாயாக—நிகழ்ந்தது கூறுவல் - புகுந்ததனை யான்கூறுவேன்; கேட்பாயாக. எ - று.

தூயேனென்றது தீங்குகரந்த வுள்ளத்தேனல்லேனென்றவாறு. தூயனெனக்கென்பது பாடமாயின், எனக்கியான் றூயேனென்றுரைக்க. அறத்தொடுநின்ற-அறத்தொடுகூடிநின்ற.வெரீஇயுரைத்ததென வியையும். அலங்காரம் பரியாயம்;பொருண்முரணுமாம். மெய்ப்பாடு பெருமிதம். பயன் அறத்தொடுநிற்றல். (உஅகூ)

## அறத்தொடுநிற்றல்.

அறத்தொடு நிற்றலென்பது அறத்தொடு நிற்பாளாக முன்றேற்றுவாய்செய்து, எம்பெருமாற்குப் பழிவருங்கொல்லோவென்னுமையத்தோடு நின்று, யாமுன்பொருநாள் கடற்கரையிடத்தே வண்டல்செய்து விளையாடாநின்றேமாக, அந்நேரத்தொரு தோன்றல், நும் வண்டல் மனைக்கு யாம் விருந்தென்று வந்து நின்றபொழுது, நீ பூக்கொய்யச் சிறிது புடைபெயர்ந்தாய்; அந்நிலைமைக்கட் கீழ்காற்று மிகுதலாற் கரைமேலேறுங்கடல் மேல்வந்துற்றது; உற, யான் றோழியோ தோழியோ வென்று நின்னை விளித்தேன்; அதுகண்டிரங்கி, அவனருளொடுவந்து தன் கையைத்தந்தான்; யானு மயக்கத்தாலே யதனை நின்கையென்று தொட்டேன்; அவனும் பிறிதொன்றுஞ் சிந்தியாது, என்னுயிர்கொண்டுதந்து, என்னைக் கரைக்கணுய்த்துப் போயினான்; அன்று என்னாணினால் நினக்கதனைச் சொல்லமாட்டிற்றிலேன்; இன்றிவ்வாறாயினபின் இது

கூறினேன்; இனி நினக்கடுப்பது செய்வாயாகவெனத் தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நில்லாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வண்டலுற்றேமெங்கண்வந்தொருதோன்றல்வரிவளையீ
ருண்டலுற்றேமென்றுநின்றதோர்போழ்துடையான்புலியூர்க்
கொண்டலுற்றேறுங்கடல்வரவெம்முயிர்கொண்டுதந்து
கண்டலுற்றேர்நின்றசேரிச்சென்றானோர்கழலவனே.

செய்தவெறியி னெய்துவதறியாது
நிறத்தொடித்தோழிக் கறத்தொடுநின்றது.

இ - ள். வண்டல் உற்றேம் எங்கண் - விளையாட்டைப் பொருந்தினேமாகிய வெம்மிடத்து—ஒரு தோன்றல்-ஒருதோன்றல்—வரி வளையீர் உண்டல் உற்றேம் என்று வந்து நின்றது ஓர் போழ்து - வரிவளையையுடையீர் நும்வண்டல்மனைக்கு விருந்தாய் நாமுண்ணக் கருதினேமென்று சொல்லிவந்து நின்றதோர் பொழுதின் கண்—உடையான் புலியூர்க் கொண்டல் உற்று ஏறும் கடல் வர - உடையானது புலியூர்வரைப்பிற் கீழ்காற்றுமிகுதலாற் கரைமேலேவந்தேறுங் கடல் எம்மேல்வர—எம் உயிர் கொண்டு தந்து - அதன்கணழுந்தாமல் எம்முயிரைக் கைக்கொண்டு எமக்குத்தந்து—ஓர் கழலவன் கண்டல் உற்று ஏர் நின்ற சேரிச் சென்றான் - அவ்வொருகழலவன் கண்டலாகியமரமிக்கு அழகுநின்ற அச்சேரியின்கட்சென்றான்; இனித் தக்கதுசெய்வாயாக. எ - று.

வண்டலுற்றேமங்கணென்பது பாடமாயின், அங்கணென்பதனை ஏழாம்வேற்றுமைப் பொருள்படநின்றதோ ரிடைச்சொல்லாக வுரைக்க. புலியூர்க்கடலெனவியையும். தேரிற் சென்றானென்பது பாடமாயின், நம்மைக் காண்டல் விரும்பித் தேர்மேலேறிச் சென்றானென்றுரைக்க. தேரினென்பது கருவிப்பொருட்கண்வந்த வைந்தாமுருபெனினுமமையும். இதற்குக் காண்டலுற்றென்பது குறுகிநின்றது. தோன்றல் கழலவன் என்றதனால், அவனது பெருமையும், எம்முயிர்கொண்டு தந்தென்றதனால் மெய்யுறவுங் கூறினாளாம். மெய்ப்பாடும் பயனும் அவை. (உகூ0)

## ஐயந்திரக்கூறல்.

ஐயந்திரக் கூறலென்பது எம்பெருமாற்குப் பழிவருங்கொல்லோவென்றையுற்று அறத்தொடு நின்ற தலைமகளது குறிப்பறிந்த தோழி, அவளையந்திர, நங்குடிக்குப் பழிவரினும், அவற்குப் பழிவாராமல் மறைத்துக்கூறுமா றென்னோவெனத் தான் றலைமகளைப் பாதுகாத்தல் தோன்றக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

குடிக்கலர்கூறினுங்கூறுவியன்றில்லைக்கூத்தனதாண்
முடிக்கலராக்குமொய்பூந்துறைவற்குமுரிபுருவ
வடிக்கலர்வேற்கண்ணிவந்தனசென்றுநம்யாயறியும்
படிக்கலராமிவையென்னுமறைக்கும்பரிசுகளே.

விலங்குதல்விரும்புமேதகுதோழி
யலங்கற்குழலிக் கறியவுரைத்தது.

இ - ள். முரி புருவ வடிக்கு அலர் வேல் கண்ணி - முரிந்த புருவத்தையுடைய வடுவகிரிற்பரந்த வேல்போலுங் கண்ணையுடையாய்—கூறு வியன் தில்லைக் கூத்தன தாள் - கூறலாகாத அகன்ற தில்லையிற் கூத்தனுடையதாள்களை—முடிக்கு அலர் ஆக்கும் மொய் பூந் துறைவற்கு வந்தன - தன்முடிக்குப் பூவாக்கும் மொய்த்தபூவையுடையதுறையை யுடையவனுக்குவந்த பழிகளை—சென்று நம் யாய் அறியும் - அவைபோய்ப் பரத்தலான் நம்முடைய யாயுமறியும்—படிக்கு அலர் ஆம் - அதுவேயுமன்றி, உலகத்திற்கெல்லா மலராம், அதனான்—குடிக்கு அலர் கூறினும் - நங்குடிக் கலர்கூறினேமாயினும்—இவை நாம் மறைக்கும் பரிசுகள் என் - இவற்றை நாம் மறைத்துச்சொல்லும் பரிசுகளென்னோ! எ - று.

கூறுத்தாளெனவியையும். வடுவகிரோடு பிறபண்பா லொக்குமாயினும், பெருமையானெவ்வாதென்னுங் கருத்தான், வடிக்கலர் கண்ணென்றாள். வடிக்கென்னு நான்காவது ஐந்தாவதன்பொருட் கண் வந்தது. வடித்தலான் விளங்கும் வேலெனினு மமையும். அறத்தொடு நிற்குமிடத்து எம்பெருமாற்குப் பழிபடக்கூறுமோவென்றையுறுந் தலைமகட்கு, நங்குடிக்கலர் கூறினுந் துறைவற்குப் பழிபடக் கூறேனென்பதுபடக் கூறித் தோழி யறத்தொடு நிற்றலையுடம்படுவித்தவாறு. கூறுவென்பதற்குக் கூத்தனதாள் தனக்குக் கூறுகவென்றும், யாயறியும்படிக்கலராமென்பதற்கு யாயுமறியும்படியாகச் சென்றலராமென்று முரைப்பாருமுளர். மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகளை யாற்றுவித்தல். (உகக)

## வெறிவிலக்கல்.

வெறிவிலக்கலென்பது தலைமகளை ஐயந்தீர்த்து வெறிக்களத்தே சென்று, வேலனை நோக்கி, புனலிடைவீழ்ந்து கெடப்புக வந்தெடுத்துய்த்த கதிர்த்தோணிற்க, இந்நோய் தீர்த்தற்குப் பிறிதோருபாயத்தைக் கருது நின்னைப்போல, இவ்வுலகத்தின்கண் அறிவுடையாரில்லையென, மேலறத்தொடு நிற்பாளாகத் தோழி வெறி விலக்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

***விதியுடையாருண்கவேரிவிலக்கலமம்பலத்துப்***
***பதியுடையான்பரங்குன்றினிற்பாய்புனல்யாமொழுகக்***
***கதியுடையான்கதிர்த்தோணிற்கவேறுகருதுநின்னின்***
***மதியுடையார்தெய்வமேயில்லைகொல்லினிவையகத்தே.***

*அறத்தொடுநின்ற திறத்தினிற்பாங்கி*
*வெறிவிலக்கிப் பிறிதுரைத்தது.*

இ - ள். விதியுடையார் உண்க வேரி - இவ்வெறியாட்டு விழவின் வேரியுண்ண விதியுடையவர்கள் வேரியுண்ணவமையும்— விலக்கலம் - யாமதனைவிலக்கேம், அதுகிடக்க—அம்பலத்துப் பதி உடையான் பரங்குன்றினின் பாய் புனல் யாம் ஒழுக - அம்பலமாகிய விருப்பிடத்தையுடையானது பரங்குன்றினிடத்துப் பரந்த புனலோடே யாமொழுக—கதி உடையான் கதிர்த் தோள் நிற்க - எடுத்தற்பொருட்டு ஆண்டுவரவையுடையவனுயவனுடைய ஒளியையுடைய தோள்கணிற்க—வேறு கருது நின்னின் மதி உடையார் - இந்நோய்தீர்த்தற்கு வேறோருபாயத்தைக் கருது நின்னைப் போல் அறிவுடையார்—தெய்வமே-தெய்வமே—வையகத்து இனி இல்லை கொல் - இவ்வுலகத்து இப்போழ்தில்லைபோலும். எ - று.

இவ்வாறு கூறவே, நீ கூறியதென்னென்று கேட்ப அறத்தொடு நிற்பாளாவது பயன். அம்பலத்தென அத்துச்சாரியை அல்வழிக்கண் வந்தது. ஓரிடத்தாேனுதுக்கப்படாமையிற் பதியுடையவனென்று சொல்லப்படாதவன் அம்பலத்தின்கண் வந்து பதியுடையனுயினுனென்பதுபட வுரைப்பினுமமையும். பரங்குன்றினினென்பதற்குப்'பாலன் புகுந்திப் பரிசினினிற்பித்த'என்றற் குரைத்ததுரைக்க. ஒழுகவென்னும் வினையெச்சம் கதியையுடையானென்னு மாக்கத்தையுட்கொண்ட வினைக்குறிப்புப் பெயரோடு முடியும். கதி ஆண்டுச்சென்ற செலவு. கதிர்த்தோணிற்கவென்பதற்கு எடுத்தற்பொருட்டு அவன்றோள் வந்துநிற்க வென்று பொருளுரைத்து, அவ்வெச்சத்திற்கு முடிபாக்கினுமமையும். மதியுடையாரில்லைகொல்லென்பது குறிப்புநிலை. அறத்தொடுநின்ற திறத்தினில் - அறத்தோடுநின்ற தன்மைத்தாக. பிறிது புனலிடையவன்வந் துதவினவுதவி. மெய்ப்பாடு பெருமிதத்தைச்சார்ந்த நகை. பயன் குறிப்பினால் வெறிவிலக்குதல். (உகூஉ)

## செவிலிக்குத்தோழியறத்தொடுநிற்றல்.

செவிலிக்குத்தோழி யறத்தொடுநிற்றலென்பது வெறிவிலக்கி நிற்ப, நீ வெறிவிலக்குதற்குக் காரணமென்னோவென்று கேட்ட

செவிலிக்கு, நீ போய்ப் புனங்காக்கச்சொல்ல, யாங்கள்போய்த் தினைக்கிளி கடியாநின்றேம்; அவ்விடத்தொரு யானைவந்து நின் மகளை யேதஞ்செய்யப் புக்கது; அதுகண்டு அருளுடையானொரு வன் ஓடிவந்தணைத்துப் பிறிதொன்றும் சிந்தியாமல் யானையைக் கடிந்து அவளதுயிர்கொடுத்துப் போயினான்; அறியாப்பருவத்து நிகழ்ந்ததனை இன்றறியும் பருவமாதலான், "உற்றார்க் குரியர் பொற்றொடி மகளிர்" என்பதனையுட்கொண்டு, இவ்வாறுண்மெலியா நின்றாள்; இனியடுப்பது செய்வாயாகவெனத் தோழி அறத்தொடு நில்லாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மனக்களியாயின்றியான்மகிழ்தூங்கத்தன்வார்கழல்க
ளெனக்களியாநிற்குமம்பலத்தோனிருந்தண்கயிலைச்
சினக்களியானைகடிந்தாரொருவர்செவ்வாய்ப்பசிய
புனக்கிளியாங்கடியும்வரைச்சாரற்பொருப்பிடத்தே.

சிறப்புடைச் செவிலிக்
கறத்தொடு நின்றது.

இ - ள். மனக் களியாய் இன்று யான் மகிழ் தூங்க - உள்ள க்களிப்புண்டாய் இன்றியான் மகிழ்தூங்கும் வண்ணம்—தன் வார் கழல்கள் எனக்கு அளியாநிற்கும் அம்பலத்தோன் இருந் தண் கயிலை - எனக்குத் தன்னுடைய நீண்டகழலையுடைய திருவடிகளை யளியாநிற்கும் அம்பலத்தானது பெரிதாகிய குளிர்ந்த கயிலைக் கண்—புனச் செவ் வாய்ப் பசிய கிளி யாம் கடியும் வரைச் சாரல் பொருப்பிடத்து - எம்புனத்தின்கண்வருஞ் செவ்வாயையுடைய பசியகிளிகளை யாங்கடியும் வரையடியினுண்டாகிய பொருப்பிடத் தின்கண்வந்து—ஒருவர் - ஒருவர்—சினக் களி யானை கடிந்தார் - எம்மேல்வருஞ் சினத்தையுடைய களியானையைமாற்றினார்; இனி யடுப்பது செய்வாயாக. எ - று.

கயிலையென்றது கயிலையையணைந்த விடத்தை. கடியும் பொருப்பென வியையும். வரை உயர்ந்தவரை. பொருப்பு பக்கமலை. கிளிகடியும் பருவமென்றதனாற் கற்பினோடு மாறுகொள்ளாமை முதலாயின கூறினாளாம். மெய்ப்பாடு அது. பயன் வெளிப்படை யாலறத்தொடு நிற்றல். (உ௬௧)

## நற்றாய்க்குச்செவிலியறத்தொடுநிற்றல்.

நற்றாய்க்குச்செவிலியறத்தொடு நிற்றலென்பது தோழி யறத் தொடு நிற்பக்கேட்ட செவிலி, இளையளாகிய இல்வாழ்க்கைச்

செல்வத்தையுடைய விவளை என்சொல்லிப் புகழுவோம்? முன்னெழுமிரண்டெயிறு முளையாத விளமைப்பருவத்தே அறிவு முதிர்ந்தாளெனத் தலைமகளது கற்புமிகுதி தோன்ற நற்றாய்க் கறத்தொடு நில்லாநிற்றல். அதற்குச்செய்யுள்—

இளையாளிவளையென்சொல்லிப்பரவுதுமீரெயிறு
முளையாவளவின்முதுக்குறைந்தாண் முடிசாய்த்திமையோர்
வளையாவழுத்தாவருதிருச்சிற்றம்பலத்துமன்னன்
றிளையாவருமருவிக்கயிலைப்பயில்செல்வியையே.

கற்பினின்வழாமை நிற்பித்தெடுத்தோள்
குலக்கொடிதாயர்க் கறத்தொடுநின்றது.

இ - ள். இமையோர் முடி சாய்த்து-இமையோர் தம்முடியைச்சாய்த்து—வளையா வழுத்தா வரு திருச்சிற்றம்பலத்து மன்னன்-வணங்கியும் வாழ்த்தியும் வருந் திருச்சிற்றம்பலத்தின்கண் உளனாகிய மன்னனது—திளையா வரும் அருவிக் கயிலைப் பயில் செல்வியை - திளைத்துவரு மருவியையுடைய கயிலைக்கட்பயிலுந் திருவாட்டியை—இளையாள் இவளை-இளையளாகியவிவளை—என் சொல்லிப் பரவுதும் - என்சொல்லிப் புகழ்வோம்—ஈரெயிறு முளையா அளவின் முதுக்குறைந்தாள் - முன்னெழு மிரண்டெயிறு முளையாத விளமைக்கண் அறிவுமுதிர்ந்தாள். எ - று.

திளைத்தல் ஈண்டிடைவிடாது அவ்விடத்தோடு பயிறல். கற்பினின்வழாமை நிற்பித்தெடுத்தோள்-கற்பினின் வழுவாமலறிவு கொளுத்தி வளர்த்தவள். மெய்ப்பாடு உவகை. பயன் நற்றாய்க் கறத்தொடு நிற்றல். (உகூச)

## தேர்வரவுகூறல்.

தேர்வரவு கூறலென்பது நற்றாய்க்குச் செவிலி யறத்தொடு நில்லாநிற்ப, அந்நிலைமைக்கட் டலைமகனது தேரொலி கேட்ட தோழி, உவகையோடு சென்று, தலைமகளுக்கு அதன் வரவெடுத்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

கள்ளினமார்த்துண்ணும்வண்கொன்றையோன்றில்லைக்கார்க்கடலவாய்ப்,புள்ளினமார்ப்பப்பொருதிரையார்ப்பப்புலவர்கடம், வள்ளினமார்ப்பமதுகரமார்ப்பவலம்புரியின்
வெள்ளினமார்ப்பவரும்பெருந்தேரின்றுமெல்லியலே.

மணிநெடுந்தேரோ னணிதினின்வருமென
யாழியன்மொழிக்குத் தோழிசொல்லியது.

இ - ள். மெல்லியல் - மெல்லியால்—கள் இனம் ஆர்த்து உண்ணும் வண் கொன்றையோன் தில்லைக் கார்க் கடல்வாய் - கள்ளை வண்டினங்களார்த்துண்ணும் வளவிய கொன்றைப்பூவையுடையவனது தில்லையையணைந்த கரியகடலிடத்து—புள் இனம் ஆர்ப்ப - ஆண்டுப்படியும் புள்ளினங்களார்ப்ப—பொரு திரை ஆர்ப்ப-கரையைப்பொருந் திரைகளார்ப்ப—புலவர்கள் தம் வள் இனம் ஆர்ப்ப- அவ்வாரவாரத்தோடு மங்கலங்கூறும் புலவர்கடமது வள்ளியவினமார்ப்ப—மதுகரம் ஆர்ப்ப - நறுவிரையால் வண்டுகளார்ப்ப—வலம்புரியின் வெள் இனம் ஆர்ப்ப - வலம்புரியினது வெள்ளிய வினமார்ப்ப—இன்று பெருந்தேர் வரும் - இன்று நங்காதலர் பெருந்தேர் வாராநின்றது. எ - று.

கரந்தவொழுக்கத்து மணியொலியவித்து வந்ததேர், வரைந்தெய்த இவ்வரவத்தோடும் வருமென மகிழ்ந்து கூறியவாறு. கள்ளென்பது வண்டினுளொரு சாதியென்பாருமுளர். புள்ளினத்தையும் பொருதிரையையும் அவன் வரவிற்கு உவந்தார்ப்பனபோலக் கூறினாள். இதனை மிகைமொழிப்பாற் படுத்திக்கொள்க. முன்னர்த் தலைமகன் பிரிந்தகாலத்துத் தலைமகளதாற்றாமையைத் தாமாற்றுவிக்க மாட்டாது பொறுத்துக் கண்டிருந்த புள்ளினமுங் கடலும் அவனது தேர்வரவுகண்டு, இனிப்பிரிவும் பிரிவாற்றாமையுமில்லையென்று மகிழ்வுற்றார்த்தனவென்றறிக. அணிதினின்வரும்- அணித்தாகவரும். மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகளை யாற்றுவித்தல்; வரைவுமலிந்தமை யுணர்த்துதலுமாம். (உகூ௫)

## மணமுரசுகேட்டுமகிழ்ந்துரைத்தல்.

மணமுரசுகேட்டு மகிழ்ந்துரைத்தலென்பது தோழி தலைமகளுக்குத் தேர்வரவு கூறாநின்ற அந்நிலைமைக்கண் மணமுரசுகேட்டு மனையிலுள்ளார், இஃதிவளை நோக்கி யொலியாநின்றது மணமுரசெனவுட்கொண்டு யாம் பூரணபொற்குடந் தோரண முதலாயினவற்றான் மனையை யலங்கரிப்போமென மகிழ்வொடு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பூரணபொற்குடம்வைக்கமணிமுத்தம்பொன்பொதிந்த
தோரணநீடுகதூரியமார்க்கதொன்மாலயற்குங்
காரணனேரணிகண்ணுதலோன்கடற்றில்லையன்ன
வாரணவும்முலைமன்றலென்றேங்குமணமுரசே.

நிலங்காவலர் நீண்மணத்தி
னலங்கண்டவர் நயந்துரைத்தது.

இ - ள். தொல் மால் அயற்கும் காரணன் - பழையராகிய அரியயனுக்குங் காரணனாயுள்ளான்—ஏர் அணி கண் நுதலோன் - அழகுண்டாகிய கண்ணையுடைய நுதலையுடையான்—கடல் தில்லை அன்ன - அவனது கடலையடைந்த தில்லையையொக்கும்—வார் அணவும் முலை மன்றல் என்று மணமுரசு ஏங்கும் - வாராற்கட்டப்படு மளவைச்சென்றணவும் முலையையுடையாளது மணமென்று மணமுரசேங்காநின்றது, அதனால்—பூரண பொற் குடம் வைக்க - வாயில்கடோறும் நீராணிறைக்கப்பட்ட பொற்குடத்தை வைக்க—மணி முத்தம் பொன் பொதிந்த தோரணம் நீடுக - மணியுமுத்தும் பொன்னின்கணழுத்திய தோரணம் எங்குமோங்குவதாக—தூரியம் ஆர்க்க - தூரியங்கணின்றார்ப்பனவாக. எ - று.

வாரணவுமுலையென்பதற்கு வாரைப்பொருந்து முலையெனினு மமையும். மெய்ப்பாடு உவகை. பயன் நகரியலங்கரித்தல். (உ௬௬)

## ஐயுற்றுக்கலங்கல்.

ஐயுற்றுக்கலங்கலென்பது மணமுரசுகேட்டவள் மகிழ்வொடு நின்று மனையையலங்கரியா நிற்ப, மிகவுங் களிப்பையுடைத்தாய நமது சிறந்த நகரின்கண் முழங்காநின்ற இப்பெரிய முரசம், யான் எவற்கோ அறிகின்றிலேனெனத் தலைமகள் கலக்கமுற்றுக் கூறு நிற்றல். அதற்குச்செய்யுள்—

அடற்களியாவர்க்குமன்பர்க்களிப்பவன்றுன்பவின்பம்
படக்களியாவண்டறைபொழிற்றில்லைப்பரமன்வெற்பிற்
கடக்களியானைகடிந்தவர்க்கோவன்றிநின்றவர்க்கோ
விடக்களியாநம்விழுநகரார்க்கும்வியன்முரசே.

நல்லவர்முரசமற் றல்லவர்முரசெனத்
தெரிவரிதென வரிவைகலங்கியது.

இ - ள். விடக் களி ஆம் நம் விழு நகர் ஆர்க்கும் வியன் முரசு - மிகவுங்களிப்புண்டாய நமது சிறந்தவில்லின்கண் முழங்காநின்ற இப்பெரியமுரசம்—வெற்பின் கடக் களியானை கடிந்தவர்க்கோ - வெற்பின்கண் மதத்தையுடைய களியானையை நம்மேல் வராமல் மாற்றினவர்க்கோ—அன்றி நின்றவர்க்கோ - அன்றி யாதுமியையில்லாதவர்க்கோ? அறிகின்றிலேன். எ - று.

துன்ப இன்பம் பட அடல் களி யாவர்க்கும் அன்பர்க்கு அளிப்பவன் - பிறவியான்வருந் துன்பமுமின்பமுங்கெட இயல்பாகிய பேரின்பத்தை யாவராயினு மன்பராயினூர்க்கு வரையாது கொடுப்

போன்—களியா வண்டு அறை பொழில் தில்லைப் பரமன் - களி த்து வண்டுகளொலிக்கும் பொழிலையுடைய தில்லைக்கணுளனாகிய பரமன்—வெற்பின் - அவனது வெற்பினெனக்கூட்டுக.

அடற்களி அடுதல்செய்யாத பேரின்பம். அடக்களியென்பது பாடமாயின், பேரின்பம் யானென்னு முணர்வினைக் கெடுப்ப வென்றுரைக்க. மெய்ப்பாடு அச்சத்தைச்சார்ந்த மருட்கை. பயன் ஐயந்தீர்தல். (உகூள)

## நிதிவரவுகூறுநிற்றல்.

நிதிவரவுகூறுநிற்றலென்பது முரசொலிகேட்டு ஐயுற்றுக் கல ங்காநின்ற தலைமகளுக்கு,நமர் வேண்டினபடியே அருங்கலங்கொடு த்து நின்னை வரைந்துகொள்வாராக, யானைகடிந்தார் நமது கடை முன் கொணர்ந்திறுத்தார் குறைவில்லாத நிதி; இதனை நீ காண்பா யாகவெனத் தோழி மகிழ்தருமனத்தொடு நின்று நிதிவரவு கூறு நிற்றல். அதற்குச்செய்யுள்—

**என்கடைக்கண்ணினும்யான்பிறவேத்தாவகையிரங்கித்**
**தன்கடைக்கண்வைத்ததண்டில்லைச்சங்கரன்றாழ்கயிலைக்**
**கொன்கடைக்கண்டரும்யானைகடிந்தார் கொணர்ந்திறுத்தார்**
**முன்கடைக்கண்ணிதுகாண்வந்துதோன்றுமுழுநிதியே.**

மகிழ்தருமனத்தொடு வண்புகழ்த்தோழி
திகழ்நிதிமடந்தைக்குத் தெரியவுரைத்தது.

இ - ள். கடை என் கண்ணினும் - கடையாகிய வென்னிட த்தும்—யான் பிற ஏத்தா வகை இரங்கித் தன் கடைக்கண் வை த்த - யான் பிறதெய்வங்களை யேத்தாதவண்ணமிரங்கித் தனது கடைக்கண்ணைவைத்த—தண் தில்லைச் சங்கரன் தாழ் கயிலை-குளி ர்ந்த தில்லைக்கணுளனாகிய சங்கரன் மேவுங்கயிலையிடத்து—கொன் கடைக்கண் தரும் யானை கடிந்தார் - தமக்கொருபயன் கருதாது நமக்கிறுதியைப்பயக்கும் யானையை யன்றுகடிந்தவர்—கொணர் ந்து இறுத்தார் - கொணர்ந்துவிட்டார், விட—கடைக்கண் முன் வந்து தோன்றும் முழுநிதி - நங்கடைமுன்வந்து தோன்றும் குறை வில்லாதநிதி—இது காண் - இதனைக்காண்பாயாக. எ - று.

என்கடைக்கண்ணினு மென்பதற்கு மொழிமாற்றாது எனது கடையாகிய நிலைமைக்கண்ணுமென் றுரைப்பினுமமையும். கண்ண கன்ஞாலமென்புழிப்போலக் கண்ணென்பது ஈண்டுப்பெயராக வின் ஏழனுருபு விரித்துரைக்க. கடைக்கண்ணினுமென்னும் வேற்

றுமைச்சொல்லும், எத்தாவகையென்னும் வினையெச்சமுங் கடைக்கண் வைத்தவென்னும் வினைகொண்டன. கடைக்கணென்பதனை முடிவாக்கி, என் முடிவுகாலத்தும் பிறவேத்தாவகையென் றுரைப்பாருமுளர். கொன்கடைக்கண்டரும்யானை யென்பதற்கு, அச்சத்தைக் கடைக்கண்டரும்யானையென் றுரைப்பாருமுளர். வண்புகழ்-அறத்தொடுநின்று கற்புக்காத்தலான் வந்தபுகழ். மெய்ப்பாடு உவகை. பயன் ஐயந்தீர்தல். (உகூ௮)

வரைபொருட்பிரிதல் முற்றிற்று.

# மணஞ்சிறப்புரைத்தல்.

மணஞ்சிறப்புரைத்தலென்பது வரைந்த பின்னர் மணஞ்சிறப்புக் கூறுநிற்றல். அதுவருமாறு:—

மணமுரசுகூறன் மகிழ்ந்துரைத்தல்லொடு
வழிபாடுகூறல் வாழ்க்கைநலங்கூறல்
காதல்கட்டுரைத்தல் கற்பறிவித்தல்
கற்புப்பயப்புரைத்தல் காதன்மருவுரைத்தல்
கலவியுரைத்தல் கருதியவொன்பது
நலமிகுமணமிவை நாடுங்காலே.

இ-ள். மணமுரசுகூறல், மகிழ்ந்துரைத்தல், வழிபாடுகூறல், வாழ்க்கைநலங்கூறல், காதல்கட்டுரைத்தல், கற்பறிவித்தல், கற்புப்பயப்புரைத்தல், மருவுதலுரைத்தல், கலவியின்பங்கூறல் எனவிவை யொன்பதும் மணஞ்சிறப்புரைத்தலாம். எ-று. அவற்றுள்—

## மணமுரசுகூறல்.

மணமுரசுகூறலென்பது வரைபொருட் பிரிந்துவந்த பின்னர் அருங்கலம் விடுத்தற்கு முன்றிற்கணின்று தலைமகனது முரசுமுழங்காநிற்பக்கண்டு மகிழ்வுறுநின்ற தோழி, நாந்துயர்தீர நம்மில்லின்கட் புகுந்து நின்று யானைகடிந்தார் முரசு முழங்காநின்றது; இனி யென்னகுறையுடையோமென வரைவுதோன்ற நின்று, தலைமகளுக்கு மணமுரசு கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

பிரசந்திகழும்வரைபுரையானையின்பீடழித்தார்
முரசந்திகழுமுருகியநீங்குமெவர்க்குமுன்னு

மரசம்பலத்துநின்றுடும்பிரானருள்பெற்றவரிற்
புரைசந்தமேகலையாய்துயர்தீரப்புகுந்துநின்றே.

வரைவுதோன்ற மகிழ்வுறுதோழி
நிரைவளைக்கு நின்றுரைத்தது.

இ - ள். சந்தப் புரை மேகலையாய் - நிறத்தையுடைய வுயர்ந்த மேகலையையுடையாய்—எவர்க்கும் முன்னும் அரசு - அரியயன்முதலாகிய யாவர்க்கும் முன்னாயிருக்குமரசு—அம்பலத்து நின்று ஆடும் பிரான் - இவ்வாறுபெரியனாயினும் எளியனாய் அம்பலத்தின்கண் எல்லாருங்காண நின்றாடுமுதல்வன்—அருள் பெற்றவரின் துயர் தீர-அவனதருளுடையவரைப்போல நாந்துயர்தீர--புகுந்து நின்று-நம்மில்லின்கட் புகுந்துநின்று—பிரசம் திகழும் வரை புரை யானையின் பீடு அழித்தார் முரசம் திகழும்-பெருந்தேன்றிகழு மலைக்கண் வரைபோலும் யானையினதுவலியை நங்காரணமாக வழித்தவரது முரசு முழங்கிவிளங்காநின்றது—முருகியம் நீங்கும் - அதுவேயுமன்றி, வெறிகாரணமாக ஒலிக்கும் முருகியமும் நீங்காநின்றது; இனியென்னகுறையுடையோம்? எ - று.

புகுந்துநின்றுதிகழுமெனக் கூட்டுக. வரையுயர்யானை யென்பதூஉம் பாடம். முருகுங் கமழுமென்று பாடமோதி, கலியாணத்திற் குறுப்பாம் நறுவிரை நாறுநின்றனவென் றுரைப்பாருமுளர். மெய்ப்பாடு அது. பயன் தலைமகளை மகிழ்வித்தல். (உ௯௯)

## மகிழ்ந்துரைத்தல்.

மகிழ்ந்துரைத்தலென்பது மணமுரசொலிகேட்ட தோழி, சிலம்பன்றந்த பெறுதற்கரிய தழைகளை வாடாமல்வைத்து, அத்தழையே பற்றுக்கோடாக ஆற்றியிருந்தாளெனத் தலைமகளைத் தன்னுள்ளே மகிழ்ந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**இருந்துதியென்வயிற்கொண்டவன்யானெப் பொழுதுமுன்னு**
**மருந்துதிசைமுகன்மாற்கரியோன்றில்லைவாழ்த்தினர்போ**
**விருந்துதிவண்டனவாலெரிமுன்வலஞ்செய்திடப்பா**
**லருந்துதிகாணுமளவுஞ்சிலம்பனருந்தழையே**

மன்னியகடியிற் பொன்னறுங்கோதையை
நன்னுதற்றோழி தன்னின்மகிழ்ந்தது.

இ - ள். சிலம்பன் அருந் தழை - சிலம்பன்றந்த பெறுதற்கரிய தழைகள்—முன் எரி வலம் செய்து - இப்பொழுது முன்றீயை

வலங்கொண்டு—இடப்பால் அருந்துதி காணும் அளவும் - பின் வசிட்டனிடப்பக்கத்துத் தோன்றும் அருந்ததியைக் காணுமள வும்—தில்லை வாழ்த்தினர் போல் இருந்து திவண்டன - தில்லையை வாழ்த்தினரைப்போல வாடாதிருந்து விளங்கின. எ - று.

இருந்துதி என் வயின் கொண்டவன் - அன்பர்துதிப்ப அவர் வயிற்றான் கொள்ளும் பெருந்துதியை என்வயினுண்டாக்கிக் கொண்டவன்—யான் எப்பொழுதும் உன்னும் மருந்து - யானெப் பொழுது முன்னும் வண்ணஞ் சுவையுடைத்தாயதோர் மருந்து— திசைமுகன் மாற்கு அரியோன் - இவ்வாறெனக்கெளியனாயினுந் திசைமுகற்கும் மாற்குமரியான்—தில்லை - அவனது தில்லையெனக் கூட்டுக.

என்றது தழைகளை வாடாமல் வைத்து, அத்தழையே பற் றுக்கோடாக ஆற்றியிருந்தாளெனத் தலைமகளை மகிழ்ந்து கூறிய வாறு. திவண்டனவென்பதற்கு வாடாதிருந்து இவளைத் தீண்டி யின்புறுத்தினவென் றுரைப்பினுமமையும். தழை வாடாதிருந்தன வென்றது முன்னர்த் தான் அவன்றந்த தழையையேற்ற முகூர்த் தத்தைக் கொண்டாடியவாறு. மெய்ப்பாடு உவகை. பயன் மகிழ் தல். வேயினமென்றோளென்னுமது தொட்டு இதுகாறும் வர இப் பாட்டுப் பத்தொன்பதும் அறத்தொடு நிலையினையும், அதன் பின் னர் வரைதலையு நுதலினவென்பது. (௩௦௦)

அகத்திணையின் மிகத்திகழுமின்பக்கலவி யின்பக்களவு முற் றிற்று. எண்பத்தொராம்பாட்டு முதல் இப்பாட்டீறாகத் தோழியா லாய கூட்டம்.

## வழிபாடுகூறல்.

வழிபாடு கூறலென்பது மணஞ்செய்தபின்னர் மணமனை காணவந்த செவிலிக்கு, காவலர் உடம்புமுயிரும்போல ஒருவரை யொருவர் இன்றியமையாமையால் இவள் கருத்தைக் கடவார்; கமலங் கலந்த தேனுஞ் சந்தனமரமும் போல வியைந்து இவள் கற்புவழி நிற்றலையுடையராய் இவள்வழியே நின்றொழுகா நின்று ரெனத் தோழி தலைமகன் றலைமகள் வழியொழுகா நின்றமை கூறா நிற்றல். அதற்குச்செய்யுள்—

**சீரியலாவியும்யாக்கையுமென்னச்சிறந்தமையாற்**
**காரியல்வாட்கண்ணியெண்ணகலார்கமலங்கலந்த**

வேரியுஞ்சந்தும்வியறந்தெனக்கற்பினிற்பரன்னே
காரியல்கண்டர்வண்டில்லைவணங்குமெங்காவலரே.

மணமனைகாண வந்தசெவிலிக்குத்
துணைமலர்க்குழலி தோழிசொல்லியது.

இ - ள். அன்னே - அன்னாய்—கார் இயல் கண்டர் வண் தில்லை வணங்கும் எம் காவலர்-கார்போலுங் கண்டத்தையுடையவரது வளவிய தில்லையைவணங்கு மெம்முடையகாவலர்—சீர் இயல் ஆவியும் யாக்கையும் என்னச் சிறந்தமையால் - சீர்மையியலு முயிருமுடம்பும்போல ஒருவரையொருவர் இன்றியமையாமையால்—கார் இயல் வாள் கண்ணி என் அகலார் - கரியவியல்பையுடைய வாள்போலுங் கண்ணையுடையாளது கருத்தைக்கடவார்—கமலம் கலந்த வேரியும் சந்தும் வியல் தந்தென - தாமரைப்பூவைச்சேர்ந்த தேனுஞ் சந்தனமரமும் இடத்துநிகழ்பொருளு மிடமுமாய் இயைந்து தம்பெருமையைப் புலப்படுத்தினாற்போல இயைந்து—கற்பின் நிற்பர் - இவளது வழிபாட்டின்கண்ணே நிற்பர். எ - று.

என்னகலாரென்றதனாற் காதலியாதலும், கற்பினிற்பரென்றதனால் வாழ்க்கைத்துணையாதலுங் கூறப்பட்டன. ஆவியும் வேரியும் தலைமகட்குவமையாகவும், யாக்கையுஞ் சந்தும் தலைமகற்குவமையாகவு முரைக்க. பிரித்துவமையாக்காது, இவரது கூட்டத்திற்கு அவற்றது கூட்டமுவமையாக வுரைப்பினுமமையும். காரியல் கண்டர்வண்டில்லை வணங்குமென்றதனான், இவரதில்வாழ்க்கை இன்றுபோல என்றும் நிகழுமென்பது கூறினாளாம். இன்னேயென்பது பாடமாயின், இப்பொழுதேயென்றுரைக்க. மெய்ப்பாடு உவகை. பயன் மகிழ்வித்தல். (கூ0க)

## வாழ்க்கைநலங்கூறல்.

வாழ்க்கைநலங் கூறலென்பது மணமனைகண்ட செவிலி, மகிழ்வோடு சென்று, நின்மகளுடைய வில்வாழ்க்கை நலத்திற்கு உவமைகூறில், நின்னுடைய வில்வாழ்க்கை நலமல்லது வேறுவமையில்லையென நற்றாய்க்குத் தலைமகளது வாழ்க்கைநலங் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

தொண்டினமேவுஞ்சுடர்க்கழலோன்றில்லைத் தொன்னகரிற்
கண்டினமேவுமினியவணின்கொழுநன்செழுமென்
றண்டினமேவுதிண்டோளவன்யானவடற்பணிவோள்
வண்டினமேவுங்குழலாளயன்மன்னுமிவ்வயலே.

மணமனைச்சென்று மகிழ்தருசெவிலி
யணிமனைக்கிழத்திக் கதன்சிறப்புரைத்தது.

இ - ள். தொண்டினம் மேவும் சுடர்க் கழலோன் தில்லைத் தொல் நகரில் - தொண்டரதினத்தைப் பொருந்துஞ் சுடர்க்கழலை யுடையவனது தில்லையாகிய பழையநகரிடத்தில்—கண்ட இல் மேவு நம் இல் - யான்கண்ட அவளதில்லம் மேவப்படு நமதில்லத் தோடொக்கும்—அவள் நீ - அவள் நின்னோடொக்கும்—தண்டு இனம் மேவும் செழு மெல் திண் தோளவன் நின் கொழுநன் - தண்டாகிய வினத்தையொக்கும் வளவியவாய் மெல்லியவாகிய திண்ணிய தோள்களையுடையான் நின்கொழுநனோ டொக்கும்—அவள் தற் பணிவோள் யான் - அவடன்னைப்பணிந்து குற்றேவல் செய்வாள் என்னோடொக்கும்—வண்டினம் மேவும் குழலாள் அயல் இவ்வயல் - வண்டினம் பொருந்துங் குழலையுடையாளதயல் இவ்வயலோடொக்கும்; வேறுசொல்லலாவதில்லை. எ - று.

கண்டவென்பது கடைக்குறைந்து நின்றது. பெண்டீர்க்கு ஊறினி தாதனோக்கித் தோளிற்கு மென்மைகூறினாள். தண்டின மென்புழி இனமென்றது சாதியை. மன்னும் அசைநிலை; பெரும் பான்மையுமென்பதுபட நின்றதெனினுமமையும். கண்டெனபத னைத் தன்மைவினையென்று, அவளில்வாழ்க்கையோர் கண்டே னென முன் பொதுவகையாற் கூறிப் பின் சிறப்புவகையாற் கூறிற் றாக வுரைப்பாருமுளர். மெய்ப்பாடும் பயனும் அவை. (௩0௨)

## காதல்கட்டுரைத்தல்.

காதல்கட்டுரைத்தலென்பது அவளில்வாழ்க்கை நலங்கிடக்க, அவன் அவண்மேல்வைத்த காதலான் இவையேயன்றிப் பொறை யாமென்று கருதி நுதலின்கண் இன்றியமையாத காப்பாகிய பொட்டையு மணியான்; இஃதவன் காதலெனத் தலைமகனது காதன் மிகுதி கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**பொட்டணியானுதல்போயிறும்பொய்போலிடையெனப்பூ**
**ணிட்டணியான்றவிசின்மலரன்றிமிதிப்பக்கொடான்**
**மட்டணிவார்குழல்வையான்மலர்வண்டுறுதலஞ்சிக்**
**கட்டணிவார்சடையோன்றில்லைபோலிதன்காதலனே.**

சோதி வேலவன்
காதல்கட் டுரைத்தது.

இ - ள். கட்டு அணிவார் சடையோன் தில்லை போலி தன் காதலன் - மகுடமாகக் கட்டப்பட்ட அழகிய நீண்டசடையையுடையவனது தில்லையையொப்பாடன்னுடைய காதலன்—பொய் போல் இடை போய் இறும் எனப் பூண் இட்டு அணியான் - பொய் போலுமிடை போயிறுமென்று கருதிப் பூணைப்பூட்டியணியான்—தவிசின் மலர் அன்றி மிதிப்பக் கொடான் - மெல்லடிநோதலஞ்சித் தவிசின் மிதிப்புழியும் மலரினன்றி மிதிப்பவிடான்—வண்டு உறுதல் அஞ்சி மட்டு அணி வார் குழல் மலர் வையான் - வண்டுற்று மொய்த்தலஞ்சித் தேனையுடைய வழகிய வார்குழலிடத்து மலர்களை வையான்;இவைசொல்லுகின்றதென்—நுதல் பொட்டு அணியான்- பொறையாமென்று நுதலின்கட் பொட்டையுமிடான். எ - று.

கட்டணிவார்சடை யென்பதற்கு மிக்க அழகையுடைய சடையெனினு மமையும். தவிசின் மிசையென்று பாடமோதுவாருமுளர். (௩௦௩)

## கற்பறிவித்தல்.

கற்பறிவித்தலென்பது தலைமகனது காதன்மிகுதி கூறின செவிலி, அதுகிடக்க, அவளவனையொழிய வேறொரு தெய்வத்தைத் தெய்வமாகக் கருதாளாதலான், அவன் றன்னை வணங்காத பகைவரைச் சென்றுகிட்டித் திறைகொள்ளச் சென்றாலுந் திறைகொண்டுவந்து அவளில்லத்தல்லது ஆண்டுத் தங்கியறியான்; இஃதவரதியல்பெனக் கூறி நற்றாய்க்குத் தலைமகளது கற்பறிவியாநிற்றல். அதற்குச்செய்யுள் —

தெய்வம்பணிகழலோன் றில்லைச்சிற்றம்பலமனையா
டெய்வம்பணிந்தறியாளென்றுநின்றுதிறைவழங்காத்
தெவ்வம்பணியச்சென்றாலுமன்வந்தன்றிச்சேர்ந்தறியான்
பௌவம்பணிமணியன்னார்பரிசின்னபான்மைகளே.

விற்பொலி நுதலி
கற்பறி வித்தது.

இ - ள். தெய்வம் பணி கழலோன் தில்லைச் சிற்றம்பலம் அனையாள் - பிறரான் வழிபடப்படுந் தெய்வங்கள் வணங்குந் திருவடிகளையுடையவனது தில்லையிற் சிற்றம்பலத்தையொப்பாள்—என்றும் தெய்வம் பணிந்து அறியாள் - எஞ்ஞான்றும் வேறொரு தெய்வத்தைப் பணிந்தறியாள்—நின்று திறை வழங்காத் தெவ்வம் பணியச் சென்றாலும் - முன்னின்று திறைகொடாத பகைவர்

வந்து பணியும்வண்ணம் வினைவயிற் சென்றாலும்—மன் வந்து அன்றிச் சேர்ந்து அறியான் - அம்மன்னவன் அவளதில்லத்து வந்தல்லது ஆண்டுத்தங்கியறியான்—பௌவம் பணி மணி அன்னார் பரிசு இன்ன பான்மைகள் - பௌவந்தந்த மணிபோலப் பெருங்குலத்துப்பிறந்த தூயோரதியல்பு இன்னமுறைமைகளையுடைய. எ - று.

தெவ்வு தெவ்வமெண விரிக்கும்வழி விரித்து நின்றது. தெவ்வம்பணியச் சென்றாலு மென்பதற்குத் தெவ்வர் அம்பையணியவென்றும், பௌவம்பணிமணி யென்பதற்குக் கடலிடத்தும் பாம்பிடத்து முளவாகிய முத்தும் மாணிக்கமுமென்று முரைப்பாருமுளர். விற்பொலிநுதலி-விற்போலுநுதலி. (௩௦௪)

## கற்புப்பயப்புரைத்தல்.

கற்புப்பயப்புரைத்தலென்பது கற்பறிவித்த செவிலி, அவள் அவனையொழிய வணங்காமையின் அவனூருங்களிறும் வினைவயிற்சென்றால் அவ்வினை முடித்துக் கொடுத்து வந்து தன் பந்தியிட்டல்லது ஆண்டுத்தங்காதாதலான், அவளது கற்பு, அந்திக் காலத்து வடமீனையும் வெல்லுமெண அவளது கற்புப் பயந்தமை நற்றாய்க்குக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சிற்பந்திகழ்தருதிண்மதிற்றில்லைச்சிற்றம்பலத்துப்
பொற்பந்தியன்னசடையவன்பூவணமன்னபொன்னின்
கற்பந்திவாய்வடமீனுங்கடக்கும்படிகடந்து
மிற்பந்திவாயன்றிவைகல்செல்லாதவனீர்ங்களிறே.

கற்புப் பயந்த
அற்புத முரைத்தது.

இ - ள். சிற்பம் திகழ்தரு திண் மதில் தில்லை - நுண்டொழில்விளங்குந் திண்ணியமதிலையுடைய தில்லையின்--சிற்றம்பலத்துப் பொற் பந்தி அன்ன சடையவன் பூவணம் அன்ன பொன்னின் கற்பு - சிற்றம்பலத்தின்கணுள்ளாகிய பொற்றகட்டு நிரைபோலுஞ் சடையையுடையவனது பூவணத்தையொக்கும் பொன்னினது கற்பு—அந்தி வாய் வடமீனும் கடக்கும் - அந்திக்காலத்துளதாகிய வடமீனையும் வெல்லும், அதனான்—அவன் ஈர்ங்களிறு - எடுத்துக்கொண்டவினையை யிடையூறின்றி யினிதின்முடித்து அவனூரும் மதத்தானீரியகளிறு—படி கடந்தும் இல் பந்தி வாய் அன்றி வைகல் செல்லாது - நிலத்தைக்கடந்தும் இல்லின்கட்டன்பந்தியிடத்தல்லது தங்காது. எ - று.

பொற்பந்தியன்ன சடையென்பதற்கு அழகிய அந்திவானம் போலுஞ் சடையென்பாருமுளர். அந்திக்காலத்துக் கற்புடைமகளிராற் றொழப்படுதலின், அந்திவாய்வடமீனென்றாள். கற்புப்பயந்த வற்புதமாவது படிகடந்துங் கடிது வரும்வண்ணம் எடுத்துக் கொண்ட வினையை யிடையூறின்றி யினிது முடித்தல். (௩0௫)

## மருவுதலுரைத்தல்.

மருவுதலுரைத்தலென்பது கற்புப் பயப்புரைத்த செவிலி, வேந்தற்குற்றுழிப் பிரியினும் அவனூருந்தேரும் வினைமுடித்துத் தன்னிலையினல்லது புறத்துத் தங்காது; அவளும் அவனை யொழிய மற்றோர் தெய்வமும் மனத்தானு நினைந்தறியாள்; இஃதிவர் காதலென அவ்விருவர்காதலு மருவுதல் கூறுநிற்றல். அதற்குச் செய்யுள்—

மன்னவன்றெம்முனைமேற்செல்லுமாயினுமாலரியே
றன்னவன்றேர்புறத்தல்கல்செல்லாதுவரகுணனாந்
தென்னவனேத்துசிற்றம்பலத்தான்மற்றைத்தேவர்க்கெல்லா
முன்னவன்மூவலன்னாளுமற்றோர்தெய்வமுன்னலளே.

இருவர் காதலு
மருவுத லுரைத்தது.

இ - ள். மன்னவன் தெம் முனை மேல் செல்லும் ஆயினும் - மன்னவனது பகைமுனைமேலேவப்பட்டுப் போமாயினும்—மால் அரி ஏறு அன்னவன் தேர் புறத்து அல்கல் செல்லாது - பெரிய வரியேற்றை யொப்பானூருந்தேர் தன்னிலையினல்லது புறத்துத் தங்காது—வரகுணன் ஆம் தென்னவன் ஏத்து சிற்றம்பலத்தான் - வரகுணனாகிய தென்னவனாலேத்தப்படுஞ் சிற்றம்பலத்தின்கண்ணான்—மற்றைத் தேவர்க்கு எல்லாம் முன்னவன் - தானல்லாதவரியயன்முதலாகிய தேவர்க்கெல்லாம் முன்னேயுள்ளான்—மூவல் அன்னாளும் மற்று ஓர் தெய்வம் முன்னலள் - அவனது மூவலையொப்பாளும் வேறொருதெய்வத்தைத் தெய்வமாகக் கருதாள். எ - று.

மற்றெத்தேவர்கட்கு மென்பதூஉம் பாடம். (௩0௬)

## கலவியின்பங்கூறல்.

கலவியின்பங்கூறலென்பது இருவர்காதலு மருவுதல் கூறின செவிலி, இவ்விருவருடைய காதலுங் களிப்பும், இன்பவெள்ளத் திடை யழுந்தப் புகுகின்றதோருயிர் ஓருடம்பாற்றுய்த்தலாராமை

யான் இரண்டுடம்பைக்கொண்டு, அவ்வின்பவெள்ளத்திடைக் கிட ந்து, திளைத்ததனோடொக்கும்; அதுவன்றி அவ்வின்பவெள்ளம் ஒருகாலத்தும் வற்றுவதும் முற்றுவதுஞ் செய்யாதென நற்றாய்க்கு அவரது கலவியின்பங் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஆனந்தவெள்ளத்தழுந்துமொராருயிரீருருக்கொண்
டானந்தவெள்ளத்திடைத்திளைத்தாலொக்குமம்பலஞ்சே
ரானந்தவெள்ளத்தறைகழலோனருள்பெற்றவரி
னானந்தவெள்ளம்வற்றாதுமுற்றாதிவ்வணிநலமே.

நன்னுதன்மடந்தை தன்னலங்கண்டு
மகிழ்தூங்குளத்தோ டிகுளைகூறியது.

இ - ள். ஆனந்த வெள்ளத்து அழுந்தும் ஒரு ஆர் உயிர் - இருவரது காதலுங்களிப்பும் இன்பவெள்ளத்திடையழுந்தப் புகுகின்றதோருயிர்—ஈருருக் கொண்டு ஆனந்த வெள்ளத்திடைத் திளைத்தால் ஒக்கும் - ஒருடம்பாற்றுய்த்தலாராமையின் இரண்டுடம்பைக்கொண்டு அவ்வின்ப வெள்ளத்திடைக்கிடந்து திளைத்ததனோடொக்கும், அதுவேயுமன்றி—அம்பலம் சேர் ஆனந்த வெள்ளத்து அறை கழலோன் அருள் பெற்றவரின் - அம்பலத்தைச்சேர்ந்த வின்பவெள்ளத்தைச்செய்யு மொலிக்குங் கழலையுடைத்தாகிய திருவடியையுடையவனதருளைப் பெற்றவரின்பம்போல—ஆனந்த வெள்ளம் வற்றாது - இவ்வின்பவெள்ளமும் ஒருகாலத்துங் குறைவுபடாது--இவ்வணிநலம் முற்றாது-இவ்வணிநலமு முதிராது.எ-று.

இவையைந்திற்கும் மெய்ப்பாடு உவகை. பயன் மகிழ்தல். ()

மணஞ்சிறப்புரைத்தல் முற்றிற்று.

## ஓதற்பிரிவு.

இனி ஓதற்பிரிவென்பது வரைந்துகொண்ட பின்னர்த் தலைமகனுக்கு முதற்பிரிவு ஓதலாதலாற் கல்வியின்மிகுதி கூறி நீங்காநிற்றல். என்னை? "ஓதல் காவல் பகைதணி வினையே—வேந்தற் குற்றுழி பொருட்பிணி பரத்தையென்—றாங்க வாறே யவ்வயிற் பிரிவே" * என்றோதப்படுதலின், முதற்பிரிவோதலாயிற்று. என்னை! இவ்வண்ணம் முன்னரோதலின்றி இவளை வரைந்த பின்னர்

* இறையனாரகப்பொருள். ௩௫.

ஓத நின்றானோவெனின், அல்லன், முன்னறிவனைப் பொருவிறந் தானென்று கூறப்படுதலால் ஓதிமுடித்தானென்பது. இவன் தானோதிய புருடார்த்தமாகிய தருமார்த்த காமங்களையொழிய வேறும் புருடார்த்தமாகக் கூறப்படுவன உளவோவென்பதனை யாராயவேண்டுங் கருத்தினனாதலானும், கல்வியாற் றன்னிற்றாழ்ந்தாரைத் தனது கல்விமிகுதி காட்டி அவர்களை யறிவித்தல் தருமநூல் விதியாதலானும், பிரியுமென்பவாகலின். அதுவருமாறு—

கல்விநலங்கூறல் பிரிவுநினைவுரைத்தல்
கலக்கங்கண்டுரைத்தல் காதலர்தமது
வாய்மொழிகூறல் வருவனநான்குந்
தீமையில்கல்வி தேருங்காலே.

இ-ள். கல்விநலங்கூறல், பிரிவுநினைவுரைத்தல், கலக்கங்கண்டுரைத்தல், வாய்மொழிகூறித்தலைமகள்வருந்தல் என விவைநான்கும் ஓதற்பிரிவாம். எ-று. அவற்றுள்—

## கல்விநலங்கூறல்.

கல்விநலங் கூறலென்பது வரைந்துகொண்ட பின்னர் ஓதற்குப் பிரியலுறாநின்ற தலைமகன், தலைமகளுக்குப் பிரிவுணர்த்துவானாக மிகவுங் கூற்றாற் கற்றோர் நன்மைக்கெல்லை யில்லாத தன்மையராவரெனத் தோழிக்குக் கல்விநலங் கூறாநிற்றல். அதற்குச் செய்யுள்—

சீரளவில்லாத்திகழ்தருகல்விச்செம்பொன்வரையி
னாரளவில்லாவளவுசென்றாரம்பலத்துணின்ற
வோரளவில்லாவொருவனிருங்கழலுன்னினர்போ
லேரளவில்லாவளவினராகுவரேந்திழையே.

கல்விக்ககல்வர் செல்வத்தவரெனச்
செறிகுழற்பாங்கிக் கறிவறிவித்தது.

இ - ள். ஏந்திழை - ஏந்திழாய்—சீர் அளவு இல்லாத் திகழ் தரு கல்விச் செம்பொன் வரையின் ஆரளவு இல்லா அளவு சென்றார் - நன்மைக்கெல்லையில்லாத விளங்கும் கல்வியாகிய மேருக் குன்றத்தினது மிக்கவளவில்லாத வெல்லையையடைந்தவர்கள்— அம்பலத்துள் நின்ற ஓரளவு இல்லா ஒருவன் இருங்கழல் உன்னினர் போல்-அம்பலத்தின்கணின்ற ஓரளவையுமில்லாத ஒப்பில்லாதானுடைய பெரிய திருவடிகளையறிந்து நினைந்தவரைப்போல—

ஏர் அளவு இல்லா அளவினர் ஆகுவர் - நன்மைக்கெல்லையில்லாத தன்மையராவர். எ - று.

செம்பொன்வரையென்றான், தூய்மையும் பெருமையுங் கலங்காமையுமுடைமையால். கற்றதின்மேலுங் கற்க நினைக்கின்றானாதலான், ஆரளவில்லாவளவு சென்றாரென்றான். ஆரளவு காதமும் புகையுமுதலாயின அளவு. ஓரளவென்பது காட்சியும் அனுமானமு முதலாயினவளவு. இது குறிப்பெச்சம். செல்வத்தவர்-இல்வாழ்க்கைச் செல்வத்தவர். அறிவறிவித்தது-அறியப்படுவதனையறிவித்தது. பாங்கி யறிவறிவித்ததென்பது பாடமாயின், தலைமகனது குறிப்பைக்கண்டு தோழி தலைமகட்குக் குறிப்பினாற் கூறினாளாக வுரைக்க. மெய்ப்பாடு பெருமிதம். பயன் பிரிவுணர்த்தல். (௩0௮)

## பிரிவுநினைவுரைத்தல்.

பிரிவுநினைவுரைத்தலென்பது கல்விநலங் கேட்ட தோழி, அவன் பிரிதற் குறிப்பறிந்து, மிகவுங்கற்றோர் நன்மைக் கெதிரில்லாத தன்மையராவரென்பதனை யுட்கொண்டு, நின்புணர்முலையுற்ற புரவலர், அழற்கானத்தே போய்க் கல்வியான் மிக்காரைக்கிட்டி அவரோடு உசாவித் தங்கல்விமிகுதி புலப்படுத்தப் பிரியாநின்றாரெனத் தலைமகன் ஓதுதற்குப் பிரிவுநினைந்தமை தலைமகளுக்குக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வீதலுற்றார்தலைமாலையன்றில்லைமிக்கோன்கழற்கே
காதலுற்றார்நன்மைகல்விசெல்வீதருமென்பதுகொண்
டோதலுற்றாருற்றுணர்தலுற்றார்செல்லன்மல்லழற்கான்
போதலுற்றார்நின்புணர்முலையுற்றபுரவலரே.

கல்விக்ககல்வர் செல்வத்தவரெனப்
பூங்குழன்மடந்தைக்குப் பாங்கிபகர்ந்தது.

இ - ள். செல்வீ - செல்வீ—வீதல் உற்றார் தலை மாலையன் - கெடுதலையடைந்தவர் தலையானியன்ற மாலையையுடையான்—தில்லை மிக்கோன் - தில்லைக்கணுளனாகிய பெரியோன்—கழற்கே காதல் உற்றார் நன்மை கல்வி தரும் என்பது கொண்டு - அவனுடைய திருவடிக்கே யன்புற்றாரது நன்மையைக் கல்வி தருமென்பதனைக் கருதி—ஓதல் உற்றார் உற்று - ஓதுதலான் மிக்காரைக்கிட்டித்து—உணர்தல் உற்றார் - எல்லாநூல்களையு முணர்தலுற்று—நின்புணர் முலை உற்ற புரவலர் - நின்புணர்முலையைச்சேர்ந்த புரவலர்—செல்லல் மல் அழல் கான் போதல் உற்றார் - இன்னாமையைச் செய்யும் மிக்கவழலையுடைய கானகத்தைப் போகநினைந்தார். எ - று.

ஒத்தான் உயர்ந்தாரைக் கிடைத்து அவரோடுசாவித் தமது கல்விமிகுதியை யறியலுற்றாரென்றுரைப்பாருமுளர். உணர்தலுற்றாரென்பதனை முற்றாகவுரைப்பினு மமையும். நின் புணர்முலையுற்றவென்றதனான், முலையிடத்துத்துயிலை நினைந்து நீட்டியாது வருவரென்றும், புரவலரென்றதனான், நின்னலந் தொலையாமற் காப்பரென்றுங் கூறிப் பிரிவுடம்படுத்தாளாம். செல்வத்தவரென்றது ஈண்டுத் தலைமகனை. மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த பெருமிதம். பயன் பிரிவுணர்த்துதல். (௩0௧)

## கலக்கங்கண்டுரைத்தல்.

கலக்கங்கண்டுரைத்தலென்பது பிரிவுநினை வுரைப்பக்கேட்ட தலைமகளது கலக்கங்கண்ட தோழி, அன்பர் சொற்பாவிரும்பினரென்ன, அச்சொல் இவள் செவிக்கட் காய்ந்தவேல்போலச் சென்றெய்திற்று; இனி மற்றுள்ள பிரிவை எங்ஙனமாற்றுவளெனத் தன்னுள்ளே கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

கற்பாமதிற்றில்லைச்சிற்றம்பலமதுகாதல்செய்த
விற்பாவிலங்கலெங்கோனைவிரும்பலர்போலவன்பர்
சொற்பாவிரும்பினரென்னமெல்லோதிசெவிப்புறத்துக்
கொற்பாவிலங்கிலைவேல்குளித்தாங்குக்குறுகியதே.

ஓதற்ககல்வர் மேதக்கவரெனப்
பூங்கொடிகலக்கம் பாங்கிகண்டுரைத்தது.

இ - ள். கல் பா மதில் தில்லைச் சிற்றம்பலமது காதல் செய் - கல்லாற்செய்யப்பட்ட பரந்த மதிலையுடைய தில்லைக்கட் சிற்றம்பலமதனைக்காதலித்த—வில் பா விலங்கல் எங்கோனை விரும்பலர் போல - வில்லாகச்செய்யப்பட்ட பரந்த மலையையுடைய எம்முடையகோனை விரும்பாதாரைப்போல—அன்பர் சொல் பா விரும்பினர் என்ன - நம்மன்பர் சொல்லாணியன்ற பாவாகியநூல்களைக் கற்க விரும்பினாரென்றுசொல்ல—மெல்லோதி செவிப்புறத்து - அச்சொல் மெல்லோதியையுடையாளது செவிக்கண்—கொல் பா இலங்கு இலை வேல் குளித்தாங்குக் குறுகியது - கொற்றொழில்பரந்த விளங்குமிலையையுடைய வேல் சென்று மூழ்கினாற்போலச் சென்றெய்திற்று; இனிப்பிரிவை யெங்ஙனமாற்றுமோ! எ - று.

பொருப்புவில்லிமேல் விருப்புடையார் கல்விக்கடனீந்தி வருந்தாமையின் விரும்பலர்போலச் சொற்பாவிரும்பின ரென்றாள்.

இனி வருந்தவென்பதோர் சொல்லைவிரித்து விரும்பலர்போல வருந்த அச்சொற்குறுகியதென் றுரைப்பினுமமையும். பூங்கொடி கலக்கம் பாங்கி தன்னுள்ளே சொல்லியது; தலைமகற்குக் கூறிய தென் றுரைப்பாருமுளர். மெய்ப்பாடு அழுகை. பயன் செலவு ழுக்குவித்தல். (௩௪௦)

## வாய்மொழிகூறித்தலைமகள்வருந்தல்.

வாய்மொழிகூறித் தலைமகள் வருந்தலென்பது கலக்கங்கண் டுரைத்த தோழிக்கு, முன்னிலைப்புறமொழியாக நின்னிற் பிரி யேன் பிரிவுமாற்றேனென்று சொன்னவர் தாமே பிரிவராயின், இதற்கு நாஞ்சொல்லுவதென்றோவெனத் தலைமகனது வாய்மொ ழிகூறித் தலைமகள் வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பிரியாமையுமுயிரொன்றாவதும்பிரியிற்பெரிதுந்
தரியாமையுமொருங்கேநின்றுசாற்றினர்தையன்மெய்யிற்
பிரியாமைசெய்துநின்றோன்றில்லைப்பேரியலூரரன்ன
புரியாமையுமிதுவேயினியென்னும்புகல்வதுவே.

நீதறுகல்விக்குச் செல்வன்செல்லுமெனப்
போதுறுகுழலி புலம்பியது.

இ - ள். தையல் மெய்யின் பிரியாமை செய்து நின்றோன் தில்லைப் பேரியல் ஊரர் - தையலாடனது திருமேனியினின்றும் பிரியாமையைச்செய்து நின்றவனது தில்லையிற் பெருந்தன்மையை யுடைய ஊரர்—பிரியாமையும்-நம்மிற்பிரியாமையையும்--உயிர் ஒன் றாவதும் - இருவருக்குமுயிரொன்றாதலையும்——பிரியின் பெரிதும் தரியாமையும் - பிரியிற்பெரிதுமாற்றாமையையும்—ஒருங்கே நின்று சாற்றினர்-ஒருங்கே அக்காலத்து நம்முன்னின்றுகூறினார்--அன்ன புரியாமையும் இதுவே - இப்பொழுது அவற்றுட் பிரியாமை பொய் யாகக்கண்டமையின் உயிர் வேறுபடக்கருதுதலும் பிரிவாற்றுதலு மாகிய அன்னவற்றைச் செய்யாமையும் இப்பிரியாமையோடொக் கும்—இனி நாம் புகல்வது என்-இனிநாஞ் சொல்வதென்! எ-று.

தையன்மெய்யிற் பிரியாத பேரன்பினோனது தில்லைக்கட் பயின்றும் அன்புபெறாது பிரிதல் எங்ஙனம் வல்லராயினாரென் னுங் கருத்தால், பிரியாமைசெய்து நின்றோன் றில்லைப்பேரியலூரர் ரென்றாள். பிரிவுகாணப்பட்டமையின், அன்னவென்றது ஒழி ந்த விரண்டையுமேயாம். அன்னபுரியாமையு மிதுவேயென்ப தற்குப் பிரிவுமுதலாகிய நமக்கின்னாதவற்றைத் தாம் செய்யாமையு

மிதுவேயாயிருந்ததெனினு மமையும்.இன்னல் புரியாமையு மிதுவே யென்று பாடமோதுவாரு முளர். மெய்ப்பாடும் பயனும் அவை. ()

ஓதற்பிரிவு முற்றிற்று.

# காவற்பிரிவு.

இனிக் காவற்பிரிவென்பது எல்லாவுயிர்களையும் அரசன் பாதுகாக்கவென்னுந் தருமநூல்விதியான் அக்காவற்குப் பிரிதல். அதுவருமாறு:—

பிரிவறிவித்தல் பிரிவுகேட்டிரங்கல்
வருபவையிரண்டும் வையங்காவல்.

இ-ள். பிரிவறிவித்தல், பிரிவுகேட்டிரங்கல், என விவையிரண்டுங் காவற்பிரிவாம். எ-று. அவற்றுள்—

## பிரிவறிவித்தல்.

பிரிவறிவித்தலென்பது தருமநூல் விதியால் நமர் உலகத்தைப் பாதுகாப்பான் பிரியக் கருதாநின்றாரெனத் தலைமகன் காவலுக்குப் பிரியக் கருதாநின்றமை தோழி தலைமகளுக் கறிவியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

மூப்பானிளையவன்முன்னவன்பின்னவன்முப்புரங்கள்
வீப்பான்வியன்றில்லையானருளால்விரிநீருலகங்
காப்பான்பிரியக்கருதுகின்றார்நமர்கார்க்கயற்கட்
பூப்பானலமொளிரும்புரிதாழ்குழற்பூங்கொடியே.

இருநிலங்காவற் கேகுவர்நமரெனப்
பொருசுடர்வேலோன் போக்கறிவித்தது.

இ-ள். கார்க் கயற் கண் பூப்பால் நலம் ஒளிரும் புரி தாழ குழல் பூங்கொடி - கரியகயல்போலுங் கண்ணிணையும் பூவின்கண் நறுநாற்றமுடைமையாகிய நன்மைவிளங்குஞ் சுருண்ட தாழ்ந்தகுழலையுமுடைய பூங்கொடியை யொப்பாய்—மூப்பான் - எல்லார் யாக்கைக்கும் முன்னே தனதிச்சையாற் கொள்ளப்பட்ட திருமேனியையுடையனாதலின் எல்லார்க்குந்தான் மூப்பான்—இளையவன்- பின்றோன்றிய யாக்கையையுடையாரெல்லாரும் மூப்பவும் தான் நிலைபெற்ற விளமையையுடையனாதலின் எல்லார்க்கு மிளையான்—

முன்னவன் - உலகத்திற்கு முன்னுள்ளோன்—பின்னவன் - அதற்குப் பின்னுமுள்ளோன்—முப்புரங்கள் வீப்பான் - மூன்று புரங்களையுங் கெடுப்பான்—வியன் தில்லையான் - அகன்ற தில்லைக்கண்ணுளான்—அருளால் நமர் விரி நீர் உலகம் காப்பான் பிரியக் கருதுகின்றார் - அவனதேவலால் நமர் விரிந்தநீராற் சூழப்பட்டவுலகத்தைக் காக்கவேண்டிப் பிரியக்கருதாநின்றார். எ - று.

தில்லையானேவலாவது எல்லாவுயிர்களையு மரசன்காக்கவென்னுந் தருமநூல்விதி. காத்தலாவது தன் வினைசெய்வாரானுங் கள்வரானும் பகைவரானும் உயிர்கட்குவரு மச்சத்தை நீக்குதல். தில்லையானருளாலென்பதற்கு அவனதருளா னுலகத்தைக் காக்குந் தன்மையை யெய்தினுநுதலின் அக்காவற்குப் பிரிகின்றானென்றுரைப்பினுமமையும். மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த பெருமிதம். பயன் காவற்குப் பிரியும் பிரிவுணர்த்துதல். (ருகஉ)

## பிரிவுகேட்டிரங்கல்.

பிரிவுகேட்டிரங்கலென்பது பிரிவறிவித்த தோழிக்கு, முற்காலத்துக் குரவர்களாற் பாதுகாக்கப்படு நம்மை வந்து யானைதெரப்புக, அதனைவிலக்கி நம்முயிர் தந்தவர், இன்று தம்மல்லதில்லாத இக்காலத்துத் தாம் நினைந்திருக்கின்ற திதுவோ? இது தமக்குத் தகுமோவெனத் தலைமகனது பிரிவுகேட்டுத் தலைமகளிரங்கி நிற்றல். அதற்குச்செய்யுள்—

**சிறுகட்பெருங்கைத்திண்கோட்டுக்குழைச்செவிச்செம்முகமா**
**த், தெறுகட்டழியமுன்னுய்யச்செய்தோர்கருப்புச்சிலையோ**
**னுறுகட்டழலுடையோனுறையம்பலமுன்னலரிற்**
**றுறுகட்புரிகுழலாயிதுவோவின்றுசூழ்கின்றதே.**

மன்னவன்பிரிவு நன்னுதலறிந்து
பழங்கணெய்தி யழுங்கல்சென்றது.

இ - ள். கள் துறு புரி குழலாய் - பூவிற்றேனையுடைய நெருங்கிய சுருண்ட குழலையுடையாய்—சிறுகண் - சிறிய கண்ணினையும்—பெருங்கை - பெரிய கையினையும்—திண் கோடு - திண்ணிய கோட்டினையும்—குழை செவி - குழைந்த செவியினையும்—செம் முக மாத் தெறு கட்டு அழிய முன் உய்யச் செய்தோர் - சிவந்த முகத்தினையுமுடைய யானையினது வருத்தும் வளைப்புக்கெடக் குரவராற் பாதுகாக்கப்படு முற்காலத்து நம்மை யுய்வித்தவர்—கருப்புச் சிலையோன் உறு கண் தழல் உடையோன் உறை அம்

பலம் உன்னலரின் - கருப்பு வில்லையுடையவனைச் சென்றுற்ற கண்ணிற்றீயையுடையவனுறையும் அம்பலத்தை யுன்னுதாரைப் போல—இன்று சூழ்கின்றது இதுவோ - கண்ணோட்டமின்றித் தம் மல்லதில்லாத இக்காலத்து நினைக்கின்றதிதுவோ! இது தகுமோ! எ - று.

கருப்புச்சிலையோனென்பதனை எழுவாயாக்கி யுரைப்பினு மமையும். தெறுகட்டழீஇ முன்னமும்பயச் செய்தோரென்பது பாடமாயின், தெறுகின்றவிடத்துத் தழுவி முன்னம்மையுய்வித்தவ ரென்றுரைக்க. மெய்ப்பாடு அழுகை. பயன் செலவழுங்குவித்தல்.

காவற்பிரிவு முற்றிற்று.

# பகைதணிவினைப்பிரிவு.

இனிப் பகைதணிவினைப் பிரிவென்பது தம்மிற்பகைத்த வேந்தரைப் பகையைத்தணித்து இருவரையும் பொருந்தப் பண்ணுதல். அதுவருமாறு:—

பிரிவுகூறல் வருத்தந்தணித்த
லிருபகைதணித்தற் கேகலென்ப.

இ-ள். பிரிவுகூறல், வருத்தந்தணித்தல் என விவையிரண்டும், பகைதணிவினைப் பிரிவாம். எ-று. அவற்றுள்—

## பிரிவுகூறல்.

பிரிவுகூறலென்பது ஒருவரதுள்ளமிகுதியை ஒருவர் தணித்தற்கரிதாகிய இருவேந்தர் தம்முட்பகைத்து உடன்மடியப் புகுதாநின்றாரெனக்கேட்டு, அவ்விருவரையு மடக்கவல்ல திறலுடையராதலின், அவரைப் பகைதணித்து அவர் தம்மிலொன்றுபடவேண்டி நின்னைப்பிரியக் கருதாநின்றாரெனத் தலைமகன் பகைதணிக்கப் பிரியலுறாநின்றமை தோழி தலைமகளுக்குக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**மிகைதணித்தற்கரிதாமிருவேந்தர்வெம்போர்மிடைந்த, பகைதணித்தற்குப்படர்தலுற்றார்நமர்பல்பிறவித், தொகைதணித்தற்கென்னையாண்டுகொண்டோன்றில்லைச்சூழ்பொழில் வாய், முகைதணித்தற்கரிதாம்புரிதாழ்தருமொய்குழலே.**

துன்னுப்பகைதணிப்ப மன்னவன்பிரிவு
நன்னறுங்கோதைக்கு முன்னிமொழிந்தது.

இ - ள். பல்பிறவித் தொகை தணித்தற்கு என்னை ஆண்டு கொண்டோன் தில்லை - பேரருளினராதலின் தாமளிக்குமிடத்துப் பல பிறவித்தொகையான்வருங் கழிபெருந்துன்பமுடையாரையே வேண்டுதலின் என்னை யடிமைக்கொண்டவனது தில்லைக்கண் — சூழ்பொழில்வாய் முகை தணித்தற்கு அரிதாம் புரி தாழ் தரு மொய் குழல் - சூழ்ந்த பொழிலிடத்துளவாகிய போதுகளாற் றனதுநறு நாற்ற மாற்றுதற் கரிதாஞ் சுருண்ட தாழ்ந்த நெருங்கிய குழலையுடையாய்—மிகை தணித்தற்கு அரிதாம் - ஒருவருள்ள மிகுதியை ஒருவர்தணித்தற் கரிதாகாநின்ற—இருவேந்தர் வெம்போர் மிடைந்த பகை தணித்தற்கு நமர் படர்தல் உற்றார் - இருவேந்தரது வெய்யபோர் நெருங்கிய பகையை மாற்றுதற்கு நமர் போக நினைந்தார். எ - று.

எளிதினிற்சந்து செய்வித்துக் கடிதின் மீள்வரென்பது பயப்ப, மிகைதணித்தற்கரிதா மிருவேந்தரெனறதனால் ஒத்த வலியினராதலும், வெம்போர்மிடைந்த வென்றதனால் ஒத்த தொலைவினராதலுங் கூறினாளாம். மிகைதணித்தற்கரிதாம்பகை யெனவியையும். மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த பெருமிதம். பயன் பகை தணிவினை யிடைப்பிரிவுணர்த்துதல். (கூகச)

## வருத்தந்தணித்தல்.

வருத்தந்தணித்தலென்பது தலைமகனது பிரிவுகேட்டு உள்ளுடைந்து தனிமையுற்று வருந்தாநின்ற தலைமகளை, நின்னைவிட்டு அவர் பிரியார்; நீ நெருப்பையுற்ற வெண்ணெயும் நீரையுற்ற வுப்பும்போல இவ்வாறுருகித் தனிமையுற்று வருந்தாதொழியெனத் தோழி அவளது வருத்தந் தணியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

நெருப்புறுவெண்ணெயுநீருறுமுப்புமெனவிங்ஙனே
பொருப்புறுதோகைபுலம்புறல்பொய்யன்பர்போக்குமிக்க
விருப்புறுவோரைவிண்ணோரின் மிகுத்துநண்ணார்கழியத்
திருப்புறுசூலத்தினோன் றில்லைபோலுந்திருநுதலே.

மணிப்பூண்மன்னவன் றணப்பதில்லை
அஞ்சல்பொய்யென வஞ்சியைத்தணித்தது.

இ - ள். மிக்க விருப்புறுவோரை விண்ணோரின் மிகுத்து - தன்கண் மிக்கவிருப்புறுமவரை விண்ணோரினு மிகச்செய்து —

நண்ணூர் கழியத் திருப்புறு சூலத்தினோன் தில்லைபோலும் திருநுதல் - பகைவர் மாய விதிர்க்கப்படுஞ் சூலவேலையுடையவனது தில்லையையொக்குந் திருநுதால்—பொருப்பு உறு தோகை-பொருப்பைச்சேர்ந்த மயில்போல்வாய்-நெருப்பு உறு வெண்ணெயும் நீர் உறும் உப்பும் என - தீயையுற்ற வெண்ணெயும் நீரையுற்றவுப்பும் போல--இங்ஙனே புலம்புறல்-இவ்வாறுருகித் தனிமையுறுதொழி--அன்பர் போக்குப் பொய் - அன்பர்போக்குப் பொய். எ - று.

மிகுத்தென்னும் வினையெச்சம் திருப்புறுசூலமென்புழித் திருப்பென்பதனோடு முடிந்தது. மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகளை யாற்றுவித்தல். (கசரு)

பகைதணிவினைப்பிரிவு முற்றிற்று.

## வேந்தற்குற்றுழிப்பிரிவு.

இனி வேந்தற்குற்றுழிப்பிரிவென்பது ஒருவேந்தனுக்கொரு வேந்தன் றொலைந்துவந்தடைந்தால் அவனுக்குதவிசெய்யப் பிரியாநிற்றல். அதுவருமாறு:—

பிரிந்தமைகூறல் பிரிவாற்றாமை
கார்மிசைவைத்தல் காரைநோக்கி
வருந்தியுரைத்தன் மலர்க்குழலரிவை
கூதிர்கண்டுகவறல் குளிர்முன்பனிக்கவ
ணொந்துகூற னோக்கிப்பின்பனிக்
கிரங்கியுரைத்த விளவேனில்கண்டவ
ளின்னலெய்த விதுவவர்குறித்த
பருவமாமென வரவுகூறல்
பருவமறைத்துரைத்தன் மறுத்துரைத்தலொடு
தேர்வரவுகூறல் வினைமுற்றிநினைத
னிலைமைநினைந்துரைத்தன் முகிலொடுகூறல்
வரவெடுத்துரைத்தன் மறவாமைகூறன்
மற்றிவையீரெட்டு முற்றுழிப்பிரிவாம்.

இ-ள். பிரிந்தமைகூறல், பிரிவாற்றாமை கார்மிசைவைத்தல், வானோக்கிவருந்தல், கூதிர்கண்டுகவறல், முன்பனிக்குநொந்துரைத்தல், பின்பனிநினைந்திரங்கல், இளவேனில்கண்டின்னலெய்தல்,

பருவங்காட்டிவற்புறுத்தல், பருவமன்றென்றுகூறல், மறுத்துக்கூறல், தேர்வரவுகூறல், வினைமுற்றிநினைதல், நிலைமைநினைந்துகூறல், முகிலொடுகூறல், வரவெடுத்துரைத்தல், மறவாமைகூறல் என விவைபதினொறும் வேந்தற்குற்றுழிப்பிரிவாம். எ-று. அவற்றுள்—

## பிரிந்தமைகூறல்.

பிரிந்தமைகூறலென்பது தம்மைவந்தடைந்த வேந்தனுக்குத் தாமுதவிசெய்வாராக வெய்ய போரையுடைய பாசறைமேல் நமர் சென்றார்; இனி யவ்வேந்தன்பகைவரா லிடப்பட்டமதில் இன்றெ ன்றாய் முடியுமோவெனத் தலைமகன் வேந்தற்குற்றுழிப் பிரிந்தமை தோழி தலைமகளுக்குக் கூறுகிற்றல். அதற்குச்செய்யுள்—

**போதுகுலாயபுனைமுடிவேந்தர்தம்போர்முனைமேன்**
**மாதுகுலாயமென்னோக்கிசென்றார்நமர்வண்புலியூர்க்**
**காதுகுலாயகுழையெழிலோனைக்கருதலர்போ**
**லேதுகொலாய்வினைகின்றதின்றொன்றொரிடுமதிலே.**

விறல்வேந்தர் வெம்முனைக்கட்
டிறல்வேந்தர் செல்வரென்றது.

இ - ள். மாது குலாய மெல் நோக்கி - மடவழகுபெற்ற மெல் லிய நோக்கத்தையுடையாய்—போது குலாய புனை முடி வேந்தர் தம் போர் முனைமேல் - பூவழகுபெற்ற பேணிச்செய்யப்பட்ட முடியையுடைய வேந்தர்தமது போரையுடைய பாசறைமேல்— நமர் சென்றார் - நமர் சென்றார்—வண் புலியூர்க் காது குலாய குழை எழிலோனைக் கருதலர் போல் - வளவிய புலியூரிற் காதழகு பெற்ற குழையாலுண்டாகிய எழிலையுடையவனைக் கருதாதாரைப் போல—ஒன்றார் இடும் மதில் இன்று ஏதாய் வினைகின்றது - ஒன் றாரா லிடப்பட்ட மதில் இன்றியாதாய்முடியுமோ! எ - று.

வினைமுடித்துக் கடிதுமீள்வரென்பதுபயப்ப, ஒன்றாரிடுமதி லின்றேயழியுமென்று கூறினாளாம். கொல்லென்பது அசைநிலை. சென்றாரெனத் துணிவுபற்றி இறந்தகாலத்தாற் கூறினாள். திறல் வேந்தரென்றது, சாதிபற்றியன்று தலைமைபற்றி. மெய்ப்பாடு அழு கையைச்சார்ந்த பெருமிதம். பயன் வேந்தற்குற்றுழிப் பிரிவுணர்த்துதல். (௩௧௬)

## பிரிவாற்றாமைகார்மிசைவைத்தல்.

பிரிவாற்றாமைகார்மிசைவைத்தலென்பது பிரிவுகேட்ட தலைமகள், தனது வருத்தங்கண்டு காதலர்வி[illegible]யிற்பிரிய நீ வருந்தி

னல் வினைமுடியுமாறென்னோவென்ற தோழிக்கு, யானவர் பிரிந்த தற்கு வருந்துகின்றேனல்லேன்; இக்கார்முகில் சென்று அப்பாசறைக்கண்ணே தோன்றுமாயின், நம்மை நினைந்தாற்றாராய், அவ்வினை முடிக்கமாட்டாரென்று அதற்கு வருந்துகின்றேனெனக் கார்மிசைவைத்துத் தனது வருத்தங் கூறாநிற்றல். அதற்குச் செய்யுள்—

**பொன்னிவளைத்தபுனல்சூழ்நிலவிப்பொலிபுலியூர்**
**வன்னிவளைத்தவளர்சடையோனைவணங்கலர்போற்**
**றுன்னிவளைத்தநந்தோன்றற்குப்பாசறைத்தோன்றுங்கொ**
**லோ, மின்னிவளைத்துவிரிநீர்கவரும்வியன்முகிலே.**

வேந்தற்குற்றுழி விறலோன்பிரிய
ஏந்திழைபாங்கிக் கெடுத்துரைத்தது.

இ - ள். பொன்னி வளைத்த புனல் சூழ் நிலவிப் பொலி புலியூர் - பொன்னி சுற்றுதலானுண்டாகிய புனலாற் சூழப்பட்ட நிலைபெற்றுப் பொலிகின்ற புலியூரில்—வன்னி வளைத்த வளர் சடையோனை வணங்கலர் போல் - வன்னித்தளிராற் சூழப்பட்ட நெடிய சடையையுடையவனை வணங்காதாரைப்போல—துன்னி வளைத்த நம் தோன்றற்கு - இடர்ப்படப் பகைவரைக்கிட்டிச் சூழ் போகிய நம்முடைய தோன்றற்கு—மின்னி வளைத்து விரிநீர் கவரும் வியன் முகில் - மின்னி யுலகத்தை வந்துவளைத்துப் பரந்த கடலைப்பருகும் பெரியமுகில்—பாசறைத் தோன்றும் கொல் - பாசறைக்கண்ணே சென்றுதோன்றுமோ! எ - று.

வளைத்தலை விரிநீர்மேலேற்றினுமமையும். தோன்றுமாயின் அவர் ஆற்றாராவரென யானாற்றேனாகின்றேனென்பது கருத்து. பொன்னிவளைத்த புனலென்பதற்குப் பொன்னியாற் றகையப்பட்ட புனலென்றும், வன்னிவளைத்த வென்பதற்குத் தீயைவளைத்தாற்போலுஞ் சடையென்றுமுரைப்பாருமுளர். மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்றுவித்தல். (௩௧௭)

## வானோக்கிவருந்தல்.

வானோக்கி வருந்தலென்பது உற்றுழிப்பிரிந்த தலைமகன் பார்ப்புக்களோடு பெடைக்குருகைச் சேவல் தன் சிறகானொடுக்கிப் பனியான்வரும் மிக்க குளிரைப் பாதுகாக்கின்ற இரவின்கண் எனது போதரவு அவளுக்கென்னாங் கொல்லோவெனத் தலைமகளது வடிவை நினைந்து வானை நோக்கி வருந்தாநிற்றல். அதற்குச் செய்யுள்—

கோலித்திகழ்சிறகொன்றினொடுக்கிப்பெடைக்குருகு
பாலித்திரும்பனிபார்ப்பொடுசேவல்பயிலிரவின்
மாலித்தனையறியாமறையோனுறையம்பலமே
போலித்திருநுதலாட்கென்னதாங்கொலென்போதரவே.

மாேைேக்கி வடிவுநினைந்தோன்
வாளேக்கி வருந்தியது.

இ - ள். பார்ப்பொடு பெடைக் குருகு திகழ் சிறகு ஒன்றின் கோலி ஒடுக்கிப் பாலித்து - பார்ப்புக்களோடு பெடைக்குருகை விளங்காநின்ற சிறகொன்றினாற் கோலியொடுக்கிப் பாதுகாத்து—இரும் பனி சேவல் பயில் இரவின் - கொண்டற்றுவலையால்வரும் மிக்ககுளிரைச் சேவல் தானுழக்குமிரவின்கண்—மால் இத்தனை அறியா மறையோன் உறை அம்பலமே போலித் திருநுதலாட்கு - மாலாற் சிறிதுமறியாத அந்தணனுறையும் அம்பலத்தைப்போல்வாளாகிய திருநுதலாட்கு—என் போதரவு என்ன தாம் கொல் - எனதுபோதரவு எத்தன்மையதாகுமோ! எ - று.

இரவினென்னதாமெனவினையும். நாம் இக்காலத்து நங்காதலிக்குப் பனிமருந்தாயிற்றிலேமென்னும் உள்ளத்தனாகலின், பெடையொடுக்கிய சிறகைத் திகழ்சிறகெனப் புனைந்து கூறினான். போலித்திருநுதலாட்கென்பதற்கு அம்பலம்போலும் இத்திருநுதலாட்கென்றுரைப்பினு மமையும். இத்திருநுதலாளென்றான் தன்னெஞ்சத்தளாகலின். மெய்ப்பாடு அச்சம். பயன் மீடற்கொருப்படுதல். (கூகஅ)

## கூதிர்கண்டுகவறல்.

கூதிர்கண்டு கவறலென்பது விழாநின்ற பனியிடத்து எல்லாரும் நெருப்புத்திரளை மேவாநிற்ப, மலைத்திரளையேறித் துணையில்லாதாரைத் தேடும் புயலினம் நமக்கேயன்றித் தம்மையடைந்தார்க் குதவிசெய்யச் சென்றார்க்குஞ் சென்று பொருந்துமோ? பொருந்துமாயின், நம்மை நினைந்து ஆற்றாராய், அவ்வினை முடிக்கமாட்டாரெனத் தலைமகள் கூதிர்கண்டு கவலாநிற்றல். அதற்குச்செய்யுள்—

கருப்பினமேவும்பொழிற்றில்லைமன்னன்கண்ணாருளால்
விருப்பினமேவச்சென்றார்க்குஞ்சென்றல்குங்கொல்வீழ்பனிவாய்,நெருப்பினமேய்நெடுமாலெழிற்றென்றச்சென்றாங்குநின்
ற, பொருப்பினமேறித்தமியரைப்பார்க்கும்புயலினமே.

இருங்கூதி ரெதிர்வுகண்டு
கருங்குழலி கவலையுற்றது.

இ - ள். வீழ் பனிவாய் நெருப்பினம் மேய்-விழாநின்ற பனி யிடத்து எல்லாரும் நெருப்புத்திரளை மேவாநிற்ப—நெடுமால் எழில் தோன்றச் சென்று-நெடிய மாயவனதெழில் கண்டார்க்குப் புலப்படச்சென்று—ஆங்கு நின்ற பொருப்பினம் ஏறி - அவ்விடத்து நின்ற மலைத்திரளையேறி—தமியரைப் பார்க்கும் புயலினம் - துணையில்லாதாரைத்தேடும் புயலினங்கள்—கருப்பினம் மேவும் பொழில் தில்லை மன்னன்கண் ஆர் அருளால் - கருப்புத்திரள் பொருந்தும் பொழிலையுடைய தில்லையின் மன்னவன்கணுண்டாகிய மிக்கவருளான்—விருப்பு இனம் மேவச் சென்றார்க்கும் சென்று அல்கும் கொல் - விருப்பையுடைய தம்மினந் தம்மாலுதவிபெற்றுப் பொருந்தும்வண்ணஞ் சென்றார்க்குஞ் சென்றுதங்குமோ! எ - று.

அல்குதலான்வருந் துயருறுதலேநோக்கிச் சென்றார்க்குமென நான்காவதனாற் கூறினாள். நெருப்பினமேயென்பதனைப் புயன்மேலேற்றி இடிநெருப்பென்றும், சென்றென்பதனை மலைமேலேற்றி உயர்ந்தென்றும், உரைப்பினுமமையும். மெய்ப்பாடு அழுகை. பயன் தோழியை யாற்றுவித்தல். (௩௧௯)

## முன்பனிக்குநொந்துரைத்தல்.

முன்பனிக்குநொந் துரைத்தலென்பது மக்களேயன்றிப் புள்ளுந் தம்பெடையைச் சிறகானொடுக்கிப் பிள்ளைகளையுந் தழுவி இனஞ்சூழ வெருவாது துயிலப்பெறுகின்ற இம்மயங்கிருட்கண், இடையறாது விழாநின்ற பனியிடைக்கிடந்து வாடித் துயர்வாயாக வென்று என்னைப்பெற்றவளை நோவதல்லது யான் யாரை நோவேனென முன்பனிக்காற்றாது தாயொடுநொந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சுற்றின வீழ்பனி தூங்கத் துவண்டு துயர்கவென்று
பெற்றவளேயெனைப்பெற்றாள்பெடைசிறகானொடுக்கிப்
புற்றிலவாளரவன் றில்லைப்புள்ளுந் தம்பிள்ளை தழீஇ
மற்றினஞ்சூழ்ந்து துயிலப்பெறுமிம்மயங்கிருளே.

ஆன்றபனிக் காற்றாதழிந்
தீன்றவளை யேழைநொந்தது.

இ - ள். புற்றில வாள் அரவன் தில்லைப் புள்ளும் - புற்றையுடையவல்லாத ஒளியையுடைய பாம்பையணிந்தவனது தில்லையின் மக்களேயன்றிப் புள்ளும்—பெடை சிறகான் ஒடுக்கி-பெடையைச் சிறகானொடுக்கி—தம்பிள்ளை தழீஇ-தமது பிள்ளைகளையுந் தழுவி—இனம் சூழ்ந்து துயிலப் பெறும் இம் மயங்கு இருள்-இனஞ்சூழ்ந்து வெருவாது துயிலப்பெறுகின்ற இச்செறிந்த விருட்கண்ணே—சுற்றின-மேனியெங்குஞ்சுற்றி—வீழ் பனி தூங்க-வீழாநின்ற பனி இடையறுதுநிற்ப—துவண்டு துயர்க என்று - அதற்கோர் மருந்தின்றித் துயர்வாயாகவென்று—எனைப் பெற்றவளே பெற்றாள் - என்னையீன்றவளே ஈன்றாள்; இனி யான் யாரைநோவது! எ - று.

சுற்றினதூங்கவென வினையும். மயங்கிருட்கட்டுயர்வாயாகவெனக் கூட்டுக. சுற்றினவென்பது பெயரெச்சமுமாம். மற்று அசைநிலை. புற்றில்வாளரவனென்பதற்கு முன்னுரைத்ததுரைக்க. மெய்ப்பாடு அது. பயன் ஆற்றாமை நீங்குதல். (கூஉ0)

## பின்பனிநினைந்திரங்கல்.

பின்பனி நினைந்திரங்கலென்பது இப்பெரியபனி வையமெங்கும் பரந்து துவலைகளைப் பரப்பியவாறு அவள் பொறுக்குமளவன்று; அவளைச் சொல்லுகின்றதென்!எனக்குமாற்றுதலரிதென்பது போதர, மிக்க தனிமையையுடையார்க்கு இப்பனி, வான் சரத்தைத் தருமாயின், அதனோடொக்குமெனத் தலைமகன் தலைமகளது துயரநினைந் திரங்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

புரமன்றயரப்பொருப்புவில்லேந்திப்புத்தேளிர்நாப்பட்
சிரமன்றயனைச்செற்றோன்றில்லைச்சிற்றம்பலமனையாள்
பரமன்றிரும்பனிபாரித்தவாபரந்தெங்கும்வையஞ்
சரமன்றிவான்றருமேலொக்குமிக்கதமியருக்கே.

இரும்பனியி னெதிர்வுகண்டு
சுரும்பிவர்குழலி துயரநினைந்தது.

இ - ள். இரும்பனி வையம் எங்கும் பரந்து பாரித்தவா - பெரியபனி வையமெங்கும் பரந்து துவலைகளைப் பரப்பியவாறு—தில்லைச் சிற்றம்பலம் அனையாள் பரம் அன்று - தில்லையிற் சிற்றம்பலத்தை யொப்பாளதளவன்று—மிக்க தமியருக்கு - மிக்க தனிமையையுடையார்க்கு இப்பனி—அன்றி - உயிர்கவரவெகுண்டு—வான் சரம் தருமேல் - வான் சரத்தைத் தருமாயின்—ஒக்கும் - அதனோடொக்கும். எ - று.

புரம் அயர அன்று பொருப்பு வில் ஏந்தி - புரம்வருந்த அன்று பொருப்பாகிய வில்லையேந்தி—புத்தேளிர் நாப்பண் - தேவர்நடுவே—அயனை அன்று சிரம் செற்றோன் தில்லைச் சிற்றம்பலம் - அவர்க்குத் தலைவனாகிய அயனையன்று சிரமரிந்தவனது தில்லைச்சிற்றம்பலமெனக் கூட்டுக.

பரந்தெங்குந்தருமேலென்றியைப்பினு மமையும். இக்காலத்து அவளாற்றாமை சொல்லவேண்டுமோ எனக்கு மாற்றுதலரிதென்பது போதரத் தமியருக்கெனப் பொதுமையாற் கூறினான். இதனைத் தோழி கூற்றாகவுரைப்பாருமுளர். மெய்ப்பாடு அது. பயன் தலைமகளை யாற்றுவித்தல். (௩௨௧)

## இளவேனில்கண்டின்னலெய்தல்.

இளவேனில்கண்டின்னலெய்தலென்பது மேன்மேலும் நிறம்பெற்றிருளாநின்ற இக்குயில்கள், மாம்பொழிலைச் சுற்றும் வந்து பற்றின; இனியுயிர்வாழுமாறொன்றுங் கண்டிலேனெனத் தலைமகள் இளவேனில்கண் டின்னலெய்தாநிற்றல். அதற்குச்செய்யுள் —

வாழும்படியொன்றுங்கண்டிலம்வாழியிம்மாம்பொழிற்றேன்
சூழும்முகச்சுற்றும்பற்றினவாற்றொண்டையங்கனிவா
யாழின்மொழிமங்கைபங்கன்சிற்றம்பலமாதரியாக்
கூழின்மலிமனம்போன்றிருளாநின்றகோகிலமே.

இன்னிளவேனின் முன்னுவதுகண்டு
மென்னகைப்பேதை யின்னலெய்தியது.

இ - ள். அம் தொண்டைக் கனிவாய் - அழகிய தொண்டைக் கனிபோலும் வாயினையும்—யாழின் மொழி மங்கை பங்கன் சிற்றம்பலம் ஆதரியா - யாழோசைபோலு மினிய மொழியினையுமுடைய மங்கையது கூற்றையுடையானது சிற்றம்பலத்தைவிரும்பாத—கூழின் மலி மனம் போன்று - உணவாற்செருக்கு மனம் போல—இருளா நின்ற கோகிலம் - ஒருகாலைக் கொருகால் நிறம்பெற்றிருளாநின்ற குயில்கள்—இம் மாம் பொழில் தேன் சூழும் முகச் சுற்றும் பற்றின - இம் மாம்பொழிற்கட் குடைதலாற் றேன் சுற்று முகமெங்கும் வந்துபற்றின—வாழும் படி ஒன்றும் கண்டிலம் - இனி யுயிர்வாழுமாறொன்றுங் கண்டிலேம். எ - று.

வாழியென்றது வாழ்வாயாகவென்னும் பொருட்டாய் எதிர்முகமாக்கி நின்றது. தேன் சூழுமுகைச்சுற்றும்பற்றின வென்பது

பாடமாயின், மலருமளவுங் காலம்பார்த்துத் தேன்கள்சூழு முகை யென்க. மெய்ப்பாடு அது. பயன் ஆற்றாமை நீங்குதல்.

"இழவி நிலையே வினையிடத் துரையார்-வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்" * என்பதனான், இக்கிளவியைந்தும் காலங் காட்டவேண்டி இத்துறையுட் கூறினாரென்பது கருத்தாகக் கொள்க. ((கூஉஉ

## பருவங்காட்டிவற்புறுத்தல்.

பருவங்காட்டி வற்புறுத்தலென்பது தலைமகன் தான் வருதற்குக் குறித்துப்போகிய கார்ப்பருவத்தினது வரவுகண்டு கலங்காநின்ற தலைமகளுக்கு, இக்கார்வந்து வானிடத்துப் பரந்தமையான், நம்மைக் கலந்தவரது தேர் இன்றாக நாளையாக இங்கேவாராநிற்பக் காணப்படுவதே இனியுள்ளதெனத் தோழி அப்பருவந் தன்னையே காட்டி, அவளை வற்புறுத்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பூண்பதென்றேகொண்டபாம்பன்புலியூரரன்மிடற்றின்
மாண்பதென்றேயெணவானின்மலருமணந்தவர்தேர்
காண்பதன்றேயின்றுநாளையிங்கேவரக்கார்மலர்த்தேன்
பாண்பதன்றேர்குழலாயெழில்வாய்த்தபனிமுகிலே.

கார்வருமெனக் கலங்குமாதரைத்
தேர்வருமெனத் தெளிவித்தது.

இ - ள். கார் மலர்த் தேன் பாண் பதன் தேர் குழலாய் - கார் காலத்து மலரையூதுந்தேன் பாட்டினது செவ்வியையாராயுங் குழலையுடையாய்—பூண்பது என்றே கொண்ட பாம்பன் - பூணப்படு மணியென்றே கொள்ளப்பட்ட பாம்பினையுடையான்—புலியூர் அரன் - புலியூரரன்—மிடற்றின் மாண்பது என்றே எண - அவனது மிடற்றினழகதாமென்று கருதும்வண்ணம்—எழில் வாய்த்த பனிமுகில் வானின் மலரும் - எழில்வாய்த்தலையுடையவாகிய பனிமுகில்கள் வானிடத்துப் பரவாநின்றன, அதனான்—மணந்தவர் தேர் இன்று நாளை இங்கே வரக் காண்பது அன்றே - நம்மைக்கலந்தவரது தேர் இன்றாக நாளையாக இங்கேவாராநிற்பக் காணப்படுவதல்லவே? இனி யாற்றாயாகற்பாலையல்லை. எ - று.

தேரிங்கே வருவதனைக் காணுமதல்லவே இனியுள்ளதென மொழிமாற்றியுரைப்பினு மமையும். கான்மலரென்பதூஉம், எழிலாயவென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த பெருமிதம். பயன் தலைமகளை வற்புறுத்தல். (கூஉகூ)

---

* தொல். பொருள், கற்பியல். ௬௫.

## பருவமன்றென்றுகூறல்.

பருவமன்றென்று கூறலென்பது காரும் வந்தது; காந்தளும் மலராநின்றன; காதலர் வாராதிருந்த தென்னோவென்று கலங்கா நின்ற தலைமகளுக்கு, சிற்றம்பலத்தின்கண்ணே குடமுழாமுழங்க அதனையறியாது காரென்றுகொண்டு இக்காந்தண்மலர்ந்தன; நீ யிதனைப் பருவமென்று கலங்காதொழியெனத் தலைமகன் வரவு நீட்டித்தலால் தோழி அவள் கலக்கந்தீரப் பருவத்தைப் பருவமன் றென்று கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

தெளிதரற்காரெனச்சீரனஞ்சிற்றம்பலத்தடியேன்
களிதரக்கார்மிடற்றோனடமாடக்கண்ணார்முழவந்
துளிதரற்காரெனவார்த்தனவார்ப்பத்தொக்குன்குழல்போன்
றளிதரக்காந்தளும்பாந்தளைப்பாரித்தலர்ந்தனவே.

காரெனக்கலங்கு மேரெழிற்கண்ணிக்
கின்றுணைத்தோழியன் றென்றுமறுத்தது.

இ - ள். அடியேன் களி தர - அடியேன் களிப்பையுண்டாக்க—சிற்றம்பலத்துக் கார் மிடற்றோன் நடம் ஆட - சிற்றம்பலத்தின்கண்ணே கரியமிடற்றையுடையவன் கூத்தாடாநிற்ப—கண் ஆர் முழவம் துளி தரல் கார் என ஆர்த்தன - முகமமைந்த முழவங்கள் துளியைத்தருதலையுடைய முகில்போல முழங்கின—ஆர்ப்பக் காந்தளும் தொக்கு உன் குழல் போன்று - முழங்க அவற்றை முழவமென்றுணராது காந்தளுந்திரண்டு உன்குழலையொத்து—அளி தரப் பாந்தளைப் பாரித்து அலர்ந்தன - நறுநாற்றமளிகளைக் கொணர்தரப் பாம்புபோலுந் துடுப்புக்களைப்பரப்பி அலர்ந்தன, அதனால்—சீர் அனம் - சீரையுடைய அன்னமே—கார் எனத் தெளிதரல் - இதனைக் காரென்று தெளியற்பாலையல்லை. எ - று.

களித்தரவென்பது களிதரவென்று நின்றதெனினுமமையும். பாரித்தென்பது உவமச்சொல்லெனினு மமையும். மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகளை வற்புறுத்தல். (கஉச)

## மறுத்துக்கூறல்.

மறுத்துக்கூறலென்பது பருவமன்றென்ற தோழிக்கு, காந்தளேயன்றி இதுவும் பொய்யோவெனத் தோன்றியினது மலரைக் காட்டி, இது பருவமேயென்று அவளோடு தலைமகள் மறுத்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

தேன்றிக்கிலங்குகழலழல்வண்ணன்சிற்றம்பலத்தெங், கோன்றிக்கிலங்குதிண்டோட்கொண்டற்கண்டன்குழையெ ழிஞண், போன்றிக்கடிமலர்க்காந்தளும்போந்தவன்கையன ல்போற், றோன்றிக்கடிமலரும்பொய்ம்மையோமெய்யிற்றோ ன்றுவதே.

பருவமன்றென்று பாங்கிபகர
மருவமர்கோதை மறுத்துரைத்தது.

இ - ள். தேன் - தேனையொப்பான்—திக்கு இலங்கு கழல் அழல் வண்ணன் - திசைகளிலே விளங்காநின்ற வீரக்கழலையு டைய அழல்வண்ணன்—சிற்றம்பலத்து எம் கோன் - சிற்றம்பல த்தின்கணுளனாகிய வெங்கோன்—திக்கு இலங்கு திண் தோள் கொண்டல் கண்டன் - திசைகளிலே விளங்காநின்ற திண்ணிய தோள்களையுங் கொண்டல்போலுங் கண்டத்தையுமுடையான்— குழை எழில் நாண் போன்று - அவனுடைய குழையும் எழிலையு டைய நாணுமாகிய பாம்பையொத்து—இக் கடி மலர்க் காந்தளும் போந்து - இக்கடிமலர்க் காந்தளினது துடுப்புக்களும் புறப்பட்டு— அவன் கை அனல் போல் - அவனதுகையிற் றீயைப்போல—தோ ன்றிக் கடி மலரும் மெய்யின் தோன்றுவது பொய்ம்மையோ- தோன்றியினது புதுமலரும் மெய்யாகத்தோன்றுகின்றவிது பொய் யோ! எ - று.

கடியென்பது நாற்றம். கடிமலர் முதலாகியதன்பொருட் கேற்றவடை. மெய்யிற்றோன்றுவதென்பதற்கு மெய்போலத் தோ ன்றுவதெனினு மமையும். காந்தளுமின்றென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்றுமை நீங்குதல். (கூஉரு)

## தேர்வரவுகூறல்.

தேர்வரவு கூறலென்பது மறுத்துக்கூறின தலைமகளுக்கு, கொண்டல்கள் எட்டுத்திசைக்கண்ணும் வாராநின்றமையின், இது பருவமே; இனியுடன்றமன்னர் தம்முட் பொருந்துதலான் நம் மைக் கலந்தவர்தேர் நம்மில்லின்கணின்று வந்து தோன்றுமென்று அவள் கலக்கந்தீரத் தோழி தலைமகனது தேர்வரவு கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

திருமாலறியாச்செறிகழற்றில்லைச்சிற்றம்பலத்தெங், கருமால் விடையுடையோன்கண்டம்போற்கொண்டலெண்டிசையும்

வருமா லுடன்மன்பொருந்தறிருந்தமணந்தவர்தேர்
பொருமாலயிற்கணல்லாயின்றுதோன்றுநம்பொன்னகர்க்கே.

பூங்கொடி மருளப்
பாங்கி தெருட்டியது.

இ - ள். திருமால் அறியா - திருமாலறியப்படாத—செறி கழல் தில்லைச் சிற்றம்பலத்து எம் கரு மால் விடை உடையோன் கண்டம் போல் - செறிந்த வீரக்கழலையுடைய திருவடியையுடைய தில்லையிற் சிற்றம்பலத்தின்கணுள்ளனாகிய எம்முடைய கரியமாலாகிய விடையையுடையவனது கண்டம்போல விருண்டு—கொண்டல் எண் திசையும் வரும் - கொண்டல்கள் எட்டுத்திசைக்கண்ணும் வாராநின்றன, அதனால்—பொரும் மால் அயில் கண் நல்லாய் - தம்மிற்பொரும் பெரியவேல்போலுங் கண்ணையுடைய நல்லாய்—மணந்தவர் தேர் - நம்மைக் கலந்தவரது தேர்—உடல் மன் பொருந்தல் திருந்த—உடன்றமன்னர் தம்முட் பொருந்துதல் திருந்துதலால்—நம் பொன் நகர்க்கு இன்று தோன்றும் - நம்பொன்னையுடைய வில்லின்கண் இன்றுவந்து தோன்றும். எ - று.

உடன்மன்பொருந்தறிருந்த மணந்தவரென்பதற்கு மன்னர் பொருந்தும்வண்ணம் அவரைச்சென்று கூடினவரென்றுரைப்பாருமுளர். மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகளை யாற்றுவித்தல். (கூ௨௬)

## வினைமுற்றிநினைதல்.

வினைமுற்றிநினைதலென்பது வேந்தற்குற்றுழிப் பிரிந்த தலைமகன், வினைமுற்றியபின்னர், கயலையும் வில்லையுங்கொண்டு மன் கோபமுங்காட்டி ஒருதிருமுகம் வாராநின்றது; இனிக் கடிதுபோதுமெனத் தேர்ப்பாகன் கேட்பத் தலைமகளது முகநினைந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

புயலோங்கலர்சடையேற்றவன்சிற்றம்பலம்புகழு
மயலோங்கிருங்களியானைவரகுணன்வெற்பின்வைத்த
கயலோங்கிருஞ்சிலைகொண்டுமன்கோபமுங்காட்டிவருஞ்
செயலோங்கெயிலெரிசெய்தபினின்றோர்திருமுகமே.

பாசறைமுற்றிப் படைப்போர்வேந்தன்
மாசறுபூண்முலை மதிமுகநினைந்தது.

இ - ள். செயல் ஓங்கு எயில் எரி செய்த பின் - செய்தலையுடைய உயர்ந்தமதிலை எரியாக்கியபின்—இன்று ஓர் திருமுகம் -

இன்று திருவையுடைய தொருமுகம்——கயல் - கயல் போலுங் கண்ணையும்—ஓங்கு இருஞ்சிலை கொண்டு - மிகப்பெரிய விற்போலும் புருவத்தையுமுடைத்தாய்—மன் கோபமும் காட்டி வரும் - தங்கிய விந்திரகோபம்போலும் வாயையுங்காட்டி வாராநின்றது; இனிக் கடிதுபோதும். எ - று.

புயல் ஓங்கு அலர் சடை ஏற்றவன் சிற்றம்பலம் புகழும் - நீரை உயர்ந்த விரிசடையின்கணேற்றவனது சிற்றம்பலத்தையே பரவும்—மயல் ஓங்கு இருங் களி யானை வரகுணன் வெற்பின் வைத்த கயல் - மயக்கத்தையுடைய உயர்ந்த பெரிய களியானையையுடைய வரகுணன் இமயத்தின்கண்வைத்த கயலெனக்கூட்டுக.

இன்று ஓராணையோலை அரையன்பொறியாகிய கயலையும் வில்லையுமுடைத்தாய் மன்னன் முனிவையுங்காட்டி வராநின்றதெனச் சிலேடைவகையான் ஒருபொருடோன்றியவாறறிக. மெய்ப்பாடு அச்சம். பயன் தேர்ப்பாகன் கேட்டுக் கடிதூர்தல். (௩௨௭)

## நிலைமைநினைந்துகூறல்.

நிலைமைநினைந்து கூறலென்பது வினைமுற்றியபின்னர் அவள் முகங்கண்டு வாராநின்றவன், புறுக்கள் தந்துணையோடு துயின்று முன்றிற்கண் விளையாடுவகண்டு இது நமக்கரிதாயிற்றென்று என்னிலைமைநினைந் தாற்றகில்லாளாவள்; நீ விரையத் தேரைச்செலுத்துவாயாகவெனத் தலைமகளது நிலைமைநினைந்து தேர்ப்பாகனுக்குக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**சிறப்பிற்றிகழ்சிவன்சிற்றம்பலஞ்சென்றுசேர்ந்தவர்தம்**
**பிறப்பிற்றுனைத்துபெருகுகதேர்பிறங்கும்மொளியார்**
**நிறப்பொற்புரிசைமறுகினிற்றுன்னிமடநடைப்புள்**
**ளிறப்பிற்றுயின்றுமுற்றத்திரைதேருமெழினகர்க்கே.**

பொற்றொடிநிலைமை மற்றவனினைந்து
திருந்துதேர்ப்பாகற்கு வருந்துபுபுகன்றது.

இ - ள். பிறங்கும் ஒளி ஆர் நிறப் பொன் புரிசை மறுகினின் - மிக்கவொளியார்ந்த நிறத்தையுடைய செம்பொன்னானியன்ற உயர்ந்த மதிலையுடைய வூரிற்றெருவின்கண்—துன்னி - சேர்ந்து விளையாடி—மட நடைப் புள் - மென்னடையையுடைய மாடப்புறுக்கள்—இறப்பின் துயின்று முற்றத்து இரை தேரும் - இறப்பின் கட்டுயின்று முற்றத்தின்கணிரைதேர்ந்துண்ணும்—எழில் நகர்க்கு - அவளிருந்த வெழிலையுடைய இல்லத்திற்கு——சிறப்பின்

திகழ் சிவன் சிற்றம்பலம் சென்று சேர்ந்தவர் தம் பிறப்பின் - சிறப்புக்களாற் பொலியுஞ் சிவனது சிற்றம்பலத்தைச் சென்றடைந்தவர்கடம் பிறவிபோல—துனைந்து பெருகுக தேர் - விரைந்து முடுகுவதாக இத்தேர். எ - று.

புருக்கள் துணையோடு துயின்று முன்றிலின்கண் விளையாடுவனகண்டு ஆற்றகில்லாளென்பது போதர, இறப்பிற்றுயின்று முற்றத்திரைதேருமென்றான். சிற்றம்பலஞ்சென்று சேர்ந்தவர் பிறவியிறுதிக்கட் பேரின்பமெய்துமாறுபோல யானுஞ் சுரஞ்செலவிறுதிக்கட் பெருந்தோண் முயங்குவலென்னுங் கருத்தாற் பிறப்பிற்றுனைந்து பெருகுகதேரென்றான். துன்னுமென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு உவகை. பயன் கேட்டபாகன் விரைந்து தேர் பண்ணுவானாதல். (௩௨௮)

## முகிலொடுகூறல்.

முகிலொடு கூறலென்பது காரோட்டங்கண்ட பாகன் அதனோடு விரையத் தேரோட்டா நிற்பான், பிரிதலால் திருந்தியவழகெல்லாம் அழிந்து துன்புறாநின்றவளது சீரிய நகரின்கண், வாராநின்ற வெனது தேரின்முற்படுச் சென்றியங்காதொழியவேண்டும்; இயங்கினும், அத்தமியாள்கேட்ப முழங்காதொழியவேண்டுமெனத் தலைமகன், முந்துற்றுச் செல்லாநின்ற முகிலொடு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

அருந்தேரழிந்தனமாலமென்றோலமிடுமிமையோர்
மருந்தேரணியம்பலத்தோன்மலர்த்தாள்வணங்கலர்போற்
றிருந்தேரழிந்துபழங்கண்டருஞ்செல்விசீர்நகர்க்கென்
வருந்தேரிதன்முன்வழங்கேன்முழங்கேல்வளமுகிலே.

முனைவற்குற்றுழி வினைமுற்றிவருவோன்
கழுமலெய்திச் செழுமுகிற்குரைத்தது.

இ - ள். ஆலம் அருந்து - நஞ்சையருந்தவேண்டும்—எர் அழிந்தனம் என்று ஓலம் இடும் இமையோர் மருந்து—இதனானழகழிந்தோமென்று முறையிடுந்தேவர்க்கு அந்நஞ்சால்வரும் இடர்க்கு மருந்தாயவன் —எர் அணி அம்பலத்தோன் - அழகையுடைய அம்பலத்தின்கண்ணான்—மலர்த்தாள் வணங்கலர் போல் - அவனது மலர்போலுந்தாளை வணங்காதாரைப்போல—திருந்து எர் அழிந்து பழங்கண் தரும் - திருந்திய வழகெல்லாமழிந்து துன்பத்தையுண்டாக்கும்—செல்வி சீர் நகர்க்கு - இல்வாழ்க்கைச் செல்வத்

தையுடையவளது அழகையுடைய வூரின்கண்—வள முகிலே - வள முகிலே—வரும் என் தேர் இதன்முன் வழங்கேல் - வாராநின்றவெனதுதேரிதனின் முற்பட்டுச் சென்றியங்காதொழிய வேண்டும்—முழங்கேல் - இயக்கினும் அத்தமியள்கேட்ப முழங்காதொழியவேண்டும். எ - று.

ஏரணியென்பதற்கு மிக்கவழகென்றும், பழங்கண்டருமென்பதற்குத் துன்பத்தை யெனக்குத் தருமென்று முரைப்பினுமமையும். வழங்கேலென்பதற்குப் பெய்யவேண்டாமென்றுரைப்பாருமுளர். நகர் இல்லெனினுமமையும். முனைவன்-இறைவன். மெய்ப்பாடு அது. பயன் கேட்டபாகன் றேர்விரைந்து கடாவுதல். (கூஉகூ)

## வரவெடுத்துரைத்தல்.

வரவெடுத்துரைத்தலென்பது தலைமகன் முகிலொடு வாராநிற்பக்கண்ட தோழி, வணங்குவாராக வுடம்பட்டவர் கொடுத்த திறையையும் வணங்காது மாறுபட்டவ ரடையாளங்களையும் தமது தேருக்கு முன்னாகக்கொண்டு, வீரமுரசார்ப்ப, ஆலியாநின்ற மாவினோடும் வந்தணுகினார்; இனி நமக்கொரு குறையில்லையெனத் தலைமகளுக்கு அவன்வரவெடுத்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**பணிவார்குழையெழிலோன்றில்லைச்சிற்றம்பலமனைய**
**மணிவார்குழன்மடமாதேபொலிகநம்மன்னர்முன்னாப்**
**பணிவார்திறையும்பகைத்தவர்சின்னமுங்கொண்டுவண்டே**
**ரணிவார்முரசினொடாலிக்குமாவோடணுகினரே.**

> விணைமுற்றிய வேந்தன்வரவு
> புனையிழைத்தோழி பொற்றொடிக்குரைத்தது.

இ - ள். பணி வார் குழை எழிலோன் தில்லைச் சிற்றம்பலம் அனைய - பணியாகிய நீண்டகுழையானுண்டாகிய அழகையுடையவனது தில்லைச்சிற்றம்பலத்தையொக்கும்—மணி வார் குழல் மடமாதே - நீலமணிபோலு நீண்டகுழலையுடைய மடப்பத்தையுடைய மாதே—பொலிக - பொலிக—நம்மன்னர் - நம்முடையமன்னர்—பணிவார் திறையும் - வந்து வணங்குவாராக வுடம்பட்டவர் கொடுத்ததிறையையும்—பகைத்தவர் சின்னமும் - பணியாது மாறுபட்டவரதடையாளங்களையும்—வண் தேர் முன்னாக் கொண்டு - தமது வண்டேர்க்கு முன்னாகக்கொண்டு—அணிவார் முரசினொடு-அணிட வாரையுடைய வீரமுரசினோடும்—ஆலிக்கும் மாவொடு - நிற்கு மாவினோடும்—அணுகினர் - வந்தணுகினார். எ - று.

வண்டேரொடென்பதனைத் தொகுக்கும்வழித் தொகுத்துக் கூறினரெனினு மமையும். இப்பொருட்கு முன்னாகவந்து பணி வாரென்றுரைக்க. மெய்ப்பாடு உவகை. பயன் தலைமகளை மகிழ் வித்தல். (கக0)

## மறவாமைகூறல்.

மறவாமைகூறலென்பது வினைமுற்றிவந்து தலைமகளோடு பள்ளியிடத்தானாகிய தலைமகன், நீயிர் வினையிடத்தெம்மை மறந் தீரேயென்ற தோழிக்கு, யான் பாசறைக்கட் டாழ்த்தவிடத்தும், கண் முத்திலங்க நின்று, இவள் என்னுடைய நெஞ்சைவிட்டு நீங் கிற்றிலள் ஆதலால், யான் மறக்குமாறென்னோவெனத் தானவளை மறவாமை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

கருங்குவளைக்கடிமாமலர்முத்தங்கலந்திலங்க
நெருங்குவளைக்கிள்ளைநீங்கிற்றிலணின்றுநான்முகனோ
டொருங்குவளைக்கரத்தானுணராதவன்றில்லையொப்பாய்
மருங்குவளைத்துமன்பாசறைநீடியவைகலுமே.

பாசறைமுற்றிப் பைந்தொடியோடிருந்து
மாசறுதோழிக்கு வள்ளலுரைத்தது.

இ - ள். நான்முகனோடு ஒருங்கு வளைக் கரத்தான் உணரா தவன் தில்லை ஒப்பாய் - நான்முகனோடுங்கூடச் சங்கையேந்திய கையையுடையவனு மறியாதவனது தில்லையையொப்பாய்--மருங்கு வளைத்து மன் பாசறை நீடிய வைகலும் - முனைமருங்கு சூழ்ந்து மன்னனது பாசறைக்கண் யான்சூழ்த்தவைகற்கண்ணும்—கருங் குவளைக் கடி மா மலர் முத்தம் கலந்து இலங்க நின்று - கண்ணாகிய கருங்குவளையது புதியபெரியமலர் கண்ணீராகிய முத்தத்தைக்கல ந்துவிளங்க நின்று—நெருங்கு வளைக் கிள்ளை நீங்கிற்றிலள் - நெரு ங்கினவளையையுடைய இக்கிளியையொப்பாள் ஒருகாலமு மென் னைவிட்டு நீங்கிற்றிலள்; அதனாற் பிரிவில்லை. எ - று.

வைகலுமென்பதற்கு வைகறோறுமென்றுரைப்பாருமுளர். மெய்ப்பாடும் பயனும் அவை. (கக௧)

வேந்தற்குற்றுழிப்பிரிவு முற்றிற்று.



# பொருள்வயிற் பிரிவு.

இனிப் பொருள்வயிற் பிரிதலென்பது குரவர்களாற் படைக்கப்பட்ட பொருள்கொண்டு இல்லறஞ்செய்தால் அதனான்வரும் பயன் அவர்க்காமத்துணையல்லது தமக்காகாமையால் தமது பொருள்கொண் டில்லறஞ்செய்தற்குப் பொருடேடப் பிரியாநிற்றல். அதுவருமாறு:—

வாட்டங்கூறல் பிரிவுநினைவுரைத்த
லாற்றாதுபுலம்ப லாற்றாமைகூற
றிணைபெயர்த்துரைத்தல் பொருத்தமறிந்துரைத்தல்
பிரிந்தமைகூறல் பிரிவாற்றாமையா
னிரவுறுதுயரத்திற் கிரங்கியுரைத்த
லிகழ்ச்சிநினைந்தழித லுருவுவெளிப்படுத
னெஞ்சொடுநோத னெஞ்சொடுபுலத்த
னெஞ்சொடுமறுத்த னாளெண்ணிவருந்த
லேறுவரவுகண் டிரங்கியுரைத்தல்
பருவங்கண்டிரங்கன் முகிலொடுகூற
றேர்வரவுகூற லிளையரெதிர்கோட
லுண்மகிழ்ந்துரைத்த லோதியவிருபது
மாமதிநுதலாய் வான்பொருட்பிரிதல்.

இ-ள். வாட்டங்கூறல், பிரிவுநினைவுரைத்தல், ஆற்றாதுபுலம்பல், ஆற்றாமைகூறல், திணைபெயர்த்துரைத்தல், பொருத்தமறிந்துரைத்தல், பிரிந்தமைகூறல், இரவுறுதுயரத்திற்கிரங்கியுரைத்தல், இகழ்ச்சிநினைந்தழிதல், உருவு வெளிப்பட்டுநிற்றல், நெஞ்சொடுநோதல், நெஞ்சொடுபுலத்தல், நெஞ்சொடுமறுத்தல், நாளெண்ணிவருந்தல், ஏறுவரவுகண்டிரங்கியுரைத்தல், பருவங்கண்டிரங்கல், முகிலொடுகூறல், தேர்வரவுகூறல், இளையரெதிர்கோடல், உண்மகிழ்ந்துரைத்தல் என விவையிருபதும் பொருள்வயிற் பிரிவாம். எ-று. அவற்றுள்—

## வாட்டங்கூறல்.

வாட்டங்கூறலென்பது பொருள்வயிற்பிரியலுறாநின்ற தலைமகன், இருமையும் பொருளானே முற்றுப்பெறுமென்று யான் பொதுவகையாற்கூற, அக்குறிப்பறிந்து கண்பனிவர, இத்தன்மை

யளாய் வாடினாள்; இனியென்னாற் பிரிவுரைத்தலரிது; நீயுணர்த்து மாற்றானுணர்த்தெனத் தோழிக்குத் தலைமகளது வாட்டங் கூறா நிற்றல். அதற்குச்செய்யுள்—

**முனிவருமன்னருமுன்னுவபொன்னான்முடியுமெனப்**
**பனிவருங்கண்பரமன்றிருச்சிற்றம்பலமனையாய்**
**துனிவருநீர்மையிதென்னென்றுதூநீர்தெளித்தளிப்ப**
**நனிவருநாளிதுவோவென்றுவந்திக்குநன்னுதலே.**

பிரிவுகேட்ட வரிவைவாட்டம்
நீங்கலுற்றவன் பாங்கிக்குரைத்தது.

இ - ள். முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னான் முடியும் என - துறந்தாருமரசரும் கருதுவனவாகிய மறுமையுமிம்மையும் பொருளான் முற்றுப்பெறுமென்று பொதுவகையாற் கூற— கண் பனி வரும் - அக்குறிப்பறிந்து கண்கள் பனிவாராநின்றன, இவ்வாறு பனிவருங்கண்ணோடு அறிவழிந்து வருந்தியவிடத்து— பரமன் திருச்சிற்றம்பலம் அனையாய் - பரமனது திருச்சிற்றம்பலத்தையொப்பாய்—துனி வரும் நீர்மை இது என் என்று தூ நீர் தெளித்து அளிப்ப - நீ துன்பம்வருந்தன்மை இஃதென்னகாரணத்தான் வந்தது யான்பிரியேனென்று தூயநீரைத்தெளித்துத் தலையளிசெய்ய அறிவுபெற்று அறிவழிந்தகாலத்தைப் பிரிந்தகாலமாகவேகருதி —நனி வரும் நாள் இதுவோ என்று நன்னுதல் வந்திக்கும்-நீர் நனிதாழ்த்துவருநாளிதுவோவென்று நன்னுதலாள் வணங்கி நின்றாள்; இனிநீ யுணர்த்துமாற்றானுணர்த்து. எ - று.

பரமன்றிருச்சிற்றம்பலமனையாளென்று பாடமோதுவாருமுளர். நீயெனவுந் தாழ்த்தெனவு மொருசொல் வருவித்துரைக்கப்பட்டது. நனிவந்திக்குமெனினு மமையும். துறந்தார் கருதுவதாகிய மறுமையின்பமும், அரசர் கருதுவதாகிய விம்மையின்பமுமென்று, நிரனிறையாகக்கொண்டு, அவரிருவருங் கருதுவனவாகிய இப்பொருளிரண்டனையும் பொருண்முடிக்குமென்று பொதுவகையாற் கூறினானெனக் கொள்க. மெய்ப்பாடு இளிவரலைச்சார்ந்த பெருமிதம். பயன் பிரிவுணர்த்துதல். (௩௩௨)

## பிரிவுநினைவுரைத்தல்.

பிரிவுநினைவுரைத்தலென்பது வாட்டங்கேட்ட தோழி, பொருளில்லாதார் இருமையின்கண்வரு மின்பமும் அறியாரெனவுட்கொண்டு, அருஞ்சுரம்போய், நமர் பொருடேட நினையாநின்றா

ரெனத் தலைமகளுக்குத் தலைமகனது பிரிவுநினை வுரையாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வறியாரிருமையறியாரெனமன்னுமாநிதிக்கு
நெறியாரருஞ்சுரஞ்செல்லலுற்றார்நமர்நீண்டிருவ
ரறியாவளவுநின்றோன்றில்லைச்சிற்றம்பலமனைய
செறிவார்கருங்குழல்வெண்ணகைச்செவ்வாய்த்திருநுதலே.

பொருள்வயிற்பிரியும் பொருவேலவனெனச்
சுருளுறுகுழலிக்குத் தோழிசொல்லியது.

இ - ள். இருவர் அறியா அளவு நீண்டு நின்றோன் தில்லைச் சிற்றம்பலம் அனைய - மாலும் பிரமனுமாகியவிருவர் அடியுமுடியு மறியாத வெல்லையின்கண் நீண்டுநின்றவனது திருச்சிற்றம்பலத் தையொக்கும்—செறி வார் கருங் குழல் வெண்ணகைச் செவ்வாய்த் திருநுதல் - செறிந்த நீண்டகரியகுழலினையும் வெள்ளியநகையி னையுஞ் செய்யவாயினையுமுடைய திருநுதால்—வறியார் - பொரு ளில்லாதார்—இருமை அறியார் என - இம்மையுமறுமையுமாகிய இருமையின்கண்வரும் இன்பமு மறியாரென்றுகருதி—மன்னும் மா நிதிக்கு - தொலையாது நிலைபெறும் பெரியவரும்பொருடேடுத ற்கு—நெறி ஆர் அரும் சுரம் நமர் செல்லல் உற்றார் - வழியறிதற் கரிய அருஞ்சுரத்தை நமர் போகலுற்றார். எ - று.

செறியாரென்பதூஉம் பாடம். சிறுகானெறி பலவாகிய வரு ஞ்சுரமெனினு மமையும். மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த பெரு மிதம். பயன் பிரிவுடம்படுத்தல். (௩௩௩)

## ஆற்றாதுபுலம்பல்.

ஆற்றாதுபுலம்புலென்பது பிரிவுநினைவுரைப்பக் கேட்ட தலைம கள், இத்தோழியாகிய கொடியவள், இத்தன்மையை யறிந்திருந் தும், அன்பர் பிரிவரெனக் குவளைப்பூ வெறிதற்கு வாளுறை கழித் தாற்போலக் கூறினாள்; இதற்கியான் கூறுவதுண்டோவென ஆற் றாது புலம்பாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சிறுவாளுகிருற்றுற்றமுன்னஞ்சின்னப்படுங்குவளைக்
கெறிவாள்கழித்தனடோழியெழுதிற்கரப்பதற்கே
யறிவாளொழிகுவதஞ்சனமம்பலவர்ப்பணியார்
குறிவாழ்நெறிசெல்வரன்பரென்றம்மகொடியவளே.

பொருடரப்பிரியு மருடருபவனெனப்
பாங்கிபகரப் பூங்கொடிபுலம்பியது.

இ - ள். தோழி கொடியவள் - தோழியாகிய கொடியவள்— அஞ்சனம் எழுதிற் கரப்பதற்கே ஒழிகுவது அறிவாள் - அஞ்சன மெழுதின் எழுதுகின்ற காலமத்துணையுங் காதலர்தோன்றாமை யான் அவ்வஞ்சனத்தை யொழிவதறிவாள்—அம்பலவர்ப் பணி யார் குறி வாழ் நெறி அன்பர் செல்வர் என்று - அம்பலவரை வணங்காதார் அவ்வணங்காமைக்குக் குறியாக வாழுந்தீயநெறியை அன்பர் செல்வரென்று—வாள் சிறு உகிர் உற்று உறாமுன்னம் சின்னப்படும் குவளைக்கு - ஒளியையுடைய சிறியவுகிர் சிறிதுற்றுச் சிறிதுறாமுன்னம் பொடிபடுங் குவளைப்பூவிற்கு—எறிவாள் கழித் தனள் - எறிதற்குக்கருவியாகியவாளை யுறைகழித்தாள்; யான்கூ றுவதுண்டோ. எ - று.

கொடியவரே யென்பது பாடமாயிற் கொடியராகிய வன்ப ரெனக் கூட்டுக. அம்ம அசைநிலை. மெய்ப்பாடு அழுகை. பயன் செலவழுங்குவித்தல். (௩௩௪)

## ஆற்றாமைகூறல்.

ஆற்றாமைகூறலென்பது தலைமகளது வருத்தங்கண்ட தோழி, காதலர் கானகத்தையுடைய சுரத்தைப்போய்ப் பொருடேட நினை யாநின்றாரென்று யான் சொல்லுமளவில், அவளது முலையுங்கண் ணும் பொன்னும்முத்துந் தாராநின்றன; இனி நீ சேட்சென்று தேடும்பொருள் யாதோவெனத் தோழி தலைமகனுக்கு அவளது பிரிவாற்றாமை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வானக்கடிமதிற்றில்லையெங்கூத்தனையேத்தலர்போற்
கானக்கடஞ்செல்வர்காதலரென்னக்கதிர்முலைகண்
மானக்கனகந்தருமலர்க்கண்கண்முத்தம்வளர்க்குந்
தேனக்கதார்மன்னனென்னோவினிச்சென்றுதேர்பொருளே.

ஏழை யழுங்கத்
தோழி சொல்லியது.

இ - ள். வானக் கடி மதில் தில்லை எம் கூத்தனை ஏத்தலர் போல் - முகில்களையுடைத்தாகிய காவலையுடைய மதிலாற் சூழப்ப ட்ட தில்லையில் எங்கூத்தனை வாழ்த்தாதார்போல—காதலர் கா னக் கடம் செல்வர் என்ன - காதலர் கானகத்தையுடைய சுரத் தைச் செல்வரென்றுசொல்ல—கதிர் முலைகள் மானக் கனகம்

தரும் - ஒளியையுடைய முலைகள் கொண்டாடப்படும் பொன்னைத் தாராநின்றன—மலர்க் கண்கள் முத்தம் வளர்க்கும் - மலர்போலு ங்கண்கள் முத்தத்தைப் பெருகவுண்டாக்காநின்றன, அதனான்—தேன் நக்க தார் மன்னன் - தேனுறுமலர்ந்த தாரையுடைய மன்னன்—இனிச் சென்று தேர் பொருள் என் - இனிச்சேட்சென்று தேடும்பொருள் யாது! எ - று.

மானமென்றது அளவை. அளவையென்றது பிரமாணம். மாற்றுணிப்பொன்னென்றுரைப்பினு மமையும். மன்னனென்பது ஈண்டு முன்னிலைக்கண் வந்தது, இயல்புவிளியென்பாருமுளர். மெய்ப்பாடு இளிவரலைச்சார்ந்த பெருமிதம். பயன் அது. (௩௩௫)

## திணைபெயர்த்துரைத்தல்.

திணைபெயர்த்துரைத்தலென்பது யான் அவர்க்கு நினதாற் றுமை கூறினேன்; இனியவர் நினைவறியேனென்ற தோழிக்கு, தாம் எனக்கருளைப் புலப்படுத்திய சொற்களத்தனையு மறந்தோ காவலர் தீவினையேற்குப் பொருளைத்தரத் தொடங்குகின்றதெனப் பிரிவுள்ளிப் பாலைநிலத்தனாகிய தலைமகனை மருதநிலத்தனாக்கித் தலைமகள் புலந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சுருடருசெஞ்சடைவெண்சுடரம்பலவன்மலயத்
திருடருபூம்பொழிலின்னுயிர்போலக்கலந்திசைத்த
வருடருமின்சொற்களத்தனையும்மறந்தத்தஞ்சென்றோ
பொருடரக்கிற்கின்றதுவினையேற்குப்புரவலரே.

துணைவன்பிரியத் துயருறுமனத்தொடு
திணைபெயர்த்திட்டுத் தேமொழிமொழிந்தது.

இ - ள். சுருள் தரு செஞ்சடை வெண் சுடர் அம்பலவன் மலயத்து - சுருண்ட செஞ்சடைக்கணணிந்த வெண்சுடரையுடைத்தாகிய மதியையுடைய வம்பலவனது பொதியின்மலைக்கண்—இருள் தரு பூம் பொழில் - இருண்ட பூவையுடைய பொழிலிடத்து—இன் உயிர் போலக் கலந்து - இன்னுயிர்போல இனியராய் ஒன்றுபட்டு வந்துகூடி—இசைத்த அருள் தரும் இன் சொற்கள் அத்தனையும் மறந்து - நமக்குச்சொன்ன அருளைப் புலப்படுத்தும் இனியசொற்களெல்லாவற்றையுமறந்து—அத்தம் சென்றோ-தாம் அருஞ்சுரஞ் சென்றோ—புரவலர் - காவலர்—வினையேற்குப் பொருள் தரக்கிற்கின்றது - தீவினையேற்குப் பொருளைத்தரத் தொடங்குகின்றது! இது தகுமோ! எ - று.

இருளைத்தருமென்றுரைப்பினு மமையும். (உடம்போடுயிர் கலக்குமாறு போலக் கலந்தெனினு மமையும்.) இணைபெயர்த்திடு தல்-பிரிவுள்ளிப் பாலைநிலத்தனுகியானை மருதநிலத்தனுக்குதல். மெய்ப்பாடு அழுகை. பயன் செலவழுங்குவித்தல். (௩௩௬)

## பொருத்தமறிந்துரைத்தல்.

பொருத்தமறிந்துரைத்தலென்பது இணைபெயர்த்துக் கூறின தலைமகளுக்கு, யாமெல்லாஞ் சொன்னேமாயினுங் காதலர்க்கு நினைவு பொருண்மேலேயாயிருந்தது; இனி யாஞ் சொல்லுவதெ ன்னேவெனத் தோழி தலைமகனது பொருத்தமறிந்து, தானதற்கு நொந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

மூவர்நின்றேத்தமுதலவனாடமுப்பத்துமும்மைத்
தேவர்சென்றேத்துஞ்சிவன்றில்லையம்பலஞ்சீர்வழுத்தாப்
பாவர்சென்றல்குநரகமனையபுனையழற்கான்
போவர்நங்காதலரென்னுமுரைப்பதுபூங்கொடியே.

பொருள்வயிற்பிரிவோன் பொருத்தநினைந்து
சுருளுறுகுழலிக்குத் தோழிசொல்லியது.

இ - ள். மூவர் நின்று ஏத்த - நான்முகனும் மாலும் இந்திர னுமாகிய மூவர்நின்றுபரவ—முதலவன் ஆட - எல்லாப்பொருட் குங் காரணமாகியவனாடாநிற்ப—முப்பத்து மும்மைத் தேவர் செ ன்று ஏத்தும் சிவன் தில்லையம்பலம் சீர் வழுத்தா - முப்பத்துமும் மையாகிய வெண்ணையுடைய தேவர்கள்சென்று வழுத்துஞ் சிவ னது தில்லையம்பலத்தை நன்மைபுகழாத—பாவர் சென்று அல்கும் நரகம் அனைய - தீவினையார் சென்று தங்கு நரகத்தையொக் கும்—புனை அழல் கான் போவர் நம் காதலர் - செய்தாற்போலு மழலையுடைய காட்டைப்போவார் போன்றிருந்தார் நங்காதலர்— பூங் கொடி - பூங்கொடிபோல்வாய்—நாம் உரைப்பது என் - இனி நாஞ் சொல்லுவதுண்டோ! எ - று.

முப்பத்துமும்மை முப்பத்துமூவரது தொகுதியெனினு மமை யும். சீர்வழுத்தாவென்பன ஒருசொன்னீர்மைப்பட்டு, அம்பல த்தையென்னு மிரண்டாவதற்கு முடிபாயின. பொருத்தம்-உள் ளத்து நிகழ்ச்சி. மெசால்லாது பொருள்வயிற்பிரிவோன் கருத்தறி ந்து தோழி சொல்லியது. மெய்ப்பாடும் பயனும் அவை. (௩௩௭)

## பிரிந்தமைகூறல்.

பிரிந்தமைகூற லென்பது பொதுவகையாலுணர்த்தினேமாயின், இனித்தியருபிற காண்கின்றேமெனத் தலைமகனுணர்த்தாது பிரியாநிற்ப, நின் முன்னின்று பிரிவுணர்த்தினால் நீ மேனியொளி வாடுவையென வுட்கொண்டு, பொருண்முடித்துக் கடிதின் மீள்வாராக நால்வகைத்தானையோடு நம்மன்னர் வினைவயிற் சென்றாரெனத் தோழி, தலைமகளுக்குத் தலைமகன் பிரிந்தமை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

தென்மாத்திசைவசைதீர்தரத்தில்லைச்சிற்றம்பலத்து
ளென்மாத்தலைக்கழல்வைத்தெரியாடுமிறைதிகழும்
பொன்மாப்புரிசைப்பொழிற்றிருப்பூவணமன்னபொன்னே
வன்மாக்களிற்றொடுசென்றனரின்றுநம்மன்னவரே.

எதிர்நின்றுபிரியிற் கதிர்நீவாடுதற்
குணர்த்தாதகன்றான் மணித்தேரோனென்றது.

இ - ள். தென் மாத் திசை வசை தீர்தர - தெற்காகிய பெரிய திசை குற்றநீங்க—என் மாத் தலைக் கழல் வைத்து - எனது கருந் தலைக்கட் கழல்களைவைத்து—தில்லைச் சிற்றம்பலத்து - தில்லைச்சிற்றம்பலத்தின்கண்--எரி ஆடும் இறை திகழும் பொன் மாப் புரிசைப் பொழில் திருப் பூவணம் அன்ன பொன்னே - எரியோடாடுமிறைவனது விளங்கும் பொன்னானியன்ற பெரியமதிலாற் சூழப்பட்ட பொழிலையுடைய திருப்பூவணத்தையொக்கும் பொன்னே—நம் மன்னவர் வன் மாக் களிற்றொடு இன்று சென்றனர் - நம்மன்னர் வலிய பெரியகளிறுகளோடும் வினைகுறித்து இன்றுசென்றார். எ - று.

நால்வகைத்தானையோடுஞ் சென்றாரெனினு மமையும். மதிற் கால்சாய்த்தற்குக் களிறு சிறந்தமையின் அதனையே கூறினார். வினைவயிற்பிரிவுழிக் களிற்றுத்தானை சிறந்தமையின், ஒடு உயர் பின்வழி வந்ததாம்; வேறுவினையொடுவாய்க் களிற்றையுடையராய்ச் சென்றாரென்பதுபட நின்றதெனினு மமையும். ஊர்ந்தகளிறென்று ஒடு கருவிப்பொருட்கண் வந்ததெனினுமமையும். செல்வரென்னாது சென்றாரென்றமையான், சொல்லாது பிரிந்தானும். மாவென்பது விலங்கென்று நாய்த்தலையென்றுரைப்பாருமுளர். வாடுதற்கு-வாடுதலான். மெய்ப்பாடு அழுகை. பயன் பிரிவுணர்த்துதல். (௩௩௮)

## இரவுறுதுயரத்திற்கிரங்கியுரைத்தல்.

இரவுறுதுயரத்திற்கிரங்கியுரைத்த லென்பது பிரிவுகேட்ட தலைமகளதாற்றாமுகங் கண்ட தோழி, இவ்வுறுப்புக்குறையோ டெங்குந் திரிந்திளைத்து, அருக்கனது தேர்வருதல் யாண்டையது? இவளாற்றுதல் யாண்டையதென, அவளிரவுறு துயரத்திற்குத் தானிரக்கமுற்றுக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஆழியொன்றீரடியும்மிலன்பாகன்முக்கட்டில்லையோ
னூழியொன்றாதனநான்குமைம்பூதமுமாறொடுங்கு
மேழியன்றாழ்கடலும்மெண்டிசையுந்திரிந்திளைத்து
வாழியன்றேயருக்கன்பெருந்தேர்வந்துவைகுவதே.

அயிறருகண்ணியைப் பயிறருமிரவினுட்
டாங்குவ்தரிதெனப் பாங்கிபகர்ந்தது.

இ - ள். ஆழி ஒன்று - காலுள்ள தொன்று—பாகன் ஈரடியும் இலன் - பாகன் இரண்டடியுமுடையனல்லன், இவ்வுறுப்புக் குறையோடு—ஐம் பூதமும் ஆறு ஒடுங்கும் முக்கண் தில்லையோன் ஊழி ஒன்றாதன நான்கும்—ஐந்துபூதமுந் தோன்றியவாறொடுங்கும் மூன்றுகண்ணையுடைய தில்லையானுடைய ஊழியுமொவ்வாத பெருமையையுடைய நான்கியாமத்தின்கண்ணும்—ஏழ் இயன்ற ஆழ் கடலும் எண் திசையும் திரிந்து இளைத்து அன்றே - ஏழாயியன்ற ஆழ்ந்த கடல்களையும் எட்டுத்திசைகளையுந் திரிந்திளைத்தன்றே—அருக்கன் பெருந்தேர் வந்து வைகுவது - அருக்கனது பெருந்தேர் ஈண்டுவந்து தங்குவது; அதனான் அதன்வரவு யாண்டையது! இவளாற்றுதல் யாண்டையது! எ - று.

ஈரடியுமென்பதனை எழுவாயாக்கினுமமையும். நான்குந் திரிந்தெனவியையும். இயன்றவென்பது கடைக்குறைந்து நின்றது. வாழி அசைநிலை. ஒன்றாதனவென்பதனை நான்குமென்னு மெழுவாய்க்குப் பயனிலையாக்கி யுரைப்பினுமமையும். ஐம்பூதமும் ஆறு களொடுங்கும் ஏழ்கடலுமென்றெண்ணிக் கடலோடருக்கற்கியை புண்மையான், ஐம்பூதத்திற் பிரித்துக் கூறினாரென்பாருமுளர். இரவும்பகலு மொப்பவருமாயினும் இரவுறுதுயரத்திற் காற்றாமை யான், இராப்பொழுது பலகால் வருவதுபோலப் பயிறருமிரவென்றாள். மெய்ப்பாடு அழுகை. பயன் செலவழுங்குவித்தல். (௩௩௧)

## இகழ்ச்சிநினைந்தழிதல்.

இகழ்ச்சிநினைந்தழித லென்பது தோழி இரக்கமுற்றுக் கூறு நிற்ப, முற்காலத்து அவருலகின்மேல்வைத் துணர்த்தியவழி நீட்டித்துப் பிரிவாராயினும், இப்பொழுதைக்கிவர் பிரியாரென யான் அவர் பிரிவிகழ்ந்திருந்தேன்; முன்னின்று பிரிவுணர்த்தின் இவளுயிர்தரியாளென்று அவருணர்த்துதலை யிகழ்ந்துபோனார்; அத்தன்மையவாகிய இரண்டிகழ்ச்சியும், என்னை யித்தன்மைத்தாக வழிவியா நின்றனவெனத் தலைமகள் இகழ்ச்சிநினைந் தழியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பிரியாரெனவிகழ்ந்தேன்முன்னம்யான்பின்னையெற்பிரியிற்
றரியாளெனவிகழ்ந்தார்மன்னர்தாந்தக்கன்வேள்விமிக்க
வெரியாரெழிலழிக்கும்மெழிலம்பலத்தோனெவர்க்கு
மரியானருளிலர்போலன்னவென்னையழிவித்தவே.

உணர்த்தாது பிரிந்தாரென
மணித்தாழ்குழலி வாடியது.

இ - ள். முன்னம் பிரியார் என யான் இகழ்ந்தேன் - முற்காலத்து அவருலகின்மேல்வைத்துக் கூறியவழி நீட்டித்துப் பிரிவாராயினும் இப்பொழுது பிரியாரென யானிகழ்ந்திருந்தேன்—என்பிரியின் தரியாள் என மன்னர் தாம் பின்னை இகழ்ந்தார் - என்னைத் தாம் பிரிகின்றாராகவுணரின் இவளுயிர் தாங்காளென மன்னர் தாம்பின்னுணர்த்துதலை யிகழ்ந்தார்—அன்ன - அத்தன்மையவாகிய இரண்டிகழ்ச்சியும்—தக்கன் வேள்வி எரி ஆர் மிக்க எழில் அழிக்கும் எழில் அம்பலத்தோன் - தக்கனது வேள்வியின் முத்திநிறைந்த மிக்கவழகையழித்த எழிலையுடைய அம்பலத்தான்—எவர்க்கும் அரியான்-யாவர்க்குமரியவன்—அருள் இலர் போல் என்னை அழிவித்த - அவனதருளில்லாதாரைப்போல வருந்த என்னை யழிவித்தன. எ - று.

உண்மையாற் காரணமாவனவும், உணரப்பட்டாற் காரணமாவனவும் எனக் காரணமிருதிறத்தன. அவற்றுட் பிரிவு தரியாமைக்கு உணரப்பட்டாற் காரணமாமாகலில் பிரியினென்புழிப் பிரிகின்றாராகவுணரினென்பது ஆற்றலாற் பெற்றாம், புலிவரினஞ்சுமென்புழிப்போல. எரியாரெழிலழிக்குமென்பதற்கு எரியினதெழிலழிக்குமென்பார், ஆரைக்கிளவிகொடுத் திழித்துக்கூறினாரெனினு மமையும். அழிக்குமென்பது காலமயக்கம். கற்பந்தோறும்

அவ்வாறு செய்தலின் நிகழ்காலத்தாற் கூறினாரெனினு மமையும். உணர்த்தாது பிரியினும் ஒருவாற்றானுணர்ந்து பின்னுமாற்றுளா வளாமெனில், இயல்பு பிற காணப்படுமென்பதாகலானும், முன்னின் றுணர்த்தல் வல்லனல்லாமையானும் அவ்வாறு பிரியுமென்க. மெய்ப்பாடு அது. பயன் ஆற்றாமை நீங்குதல். (கூசo)

## உருவுவெளிப்பட்டுநிற்றல்.

உருவுவெளிப்பட்டு நிற்றலென்பது தலைமகள் இகழ்ச்சிநினைந் தழியாநிற்ப, தானுணர்த்தாது பிரிந்தமையுட்கொண்டு பொருள் வலித்த நெஞ்சோடு செல்லாநின்ற தலைமகன், காணுந்திசைதோ றுங் கயலையும் வில்லையுஞ் சிவந்த கனியையும் முலையையுங் கொண்டு ஒரு பூங்கொடி தோன்றாநின்றதெனத் தலைமகளதுருவை நினைந்து மேற்போகமாட்டாது மீளலுற்றுச் சுரத்திடை நில்லாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சேணுந்திகழ்மதிற்சிற்றம்பலவன்றெண்ணீர்க்கடனஞ்
சூணுந்திருத்துமொருவன்றிருத்துமுலகினெல்லாங்
காணுந்திசைதொறுங்கார்க்கயலுஞ்செங்கனியொடுபைம்
பூணும்புணர்முலையுங்கொண்டுதோன்றுமொர் பூங்கொடியே.

பொருள்வயிற்பிரிந்த வொளியுறுவேலவன்
ஓங்கழற்கடத்துப் பூங்கொடியைநினைந்தது.

இ - ள். சேணும் திகழ் மதில் சிற்றம்பலவன் - சேய்மைக்கண்ணும் விளங்கும் மதிலையுடைய சிற்றம்பலத்தையுடையான்— தெள் நீர்க் கடல் நஞ்சு ஊணும் திருத்தும் ஒருவன் - தெளிந்தநீரையுடைய கடலினஞ்சை உணவாகவுஞ் செய்யுமொப்பிலாதான்—திருத்தும் உலகின் எல்லாம் - அவனாற்செய்யப்படு முலகினெங்கும்—காணும் திசை தொறும் - பார்க்குந் திசைதோறும்— கார்க் கயலும் - கண்ணாகிய கரியகயல்களையும்—செங் கனி யொடு- வாயாகிய செய்யகனியோடும்—பைம் பூணும் - பசும்பொன்னானியன்ற பூணையும்—புணர் முலையும் கொண்டு - தம்முட்புணர்ந்த முலைகளையுமுடைத்தாய்—ஓர் பூங்கொடி தோன்றும் - ஒருபூங்கொடி தோன்றாநின்றது. எ - று.

நஞ்சுண்டலையுங்குற்றநீக்குமெனவுரைப்பினு மமையும். ஊணுந் திருத்துமென்பது அதுசெய்யுந் தன்மையனென்னும் பொருட்டாகலின், நிகழ்காலத்தாற் கூறினார். (கூசக)

## நெஞ்சொடுநோதல்.

நெஞ்சொடுநோதலென்பது மீளநினைந்த தலைமகன், பின்னும் பொருண்மேற் செல்லாநின்ற வுள்ளத்தனாய் நின்று மீளமாட்டாது, இவ்விரண்டனுள் இப்பொழுது நீ யேதுக்குப்போக முயல்கின்றாயெனத் தன்னெஞ்சொடு நொந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பொன்னணியீட்டியவோட்டருநெஞ்சமிப்பொங்குவெங்கா
னின்னணிநிற்குமிதென்னென்பதேயிமையோரிறைஞ்சு
மன்னணிதில்லைவளநகரன்னவன்னநடையாண்
மின்னணிநுண்ணிடைக்கோபொருட்கோநீவிரைகின்றதே.

வல்லழற்கடத்து மெல்லியலைநினைந்து
வெஞ்சுடர்வேலோ னெஞ்சொடுநொந்தது.

இ - ள். பொன் அணி ஈட்டிய ஓட்டரும் நெஞ்சம் - பொற்றிரளையீட்டுவா னோட்டந்தருநெஞ்சமே—நீ விரைகின்றது - இப்பொழுது நீவிரைகின்றது—இமையோர் இறைஞ்சும் மன் அணி தில்லை வளநகர் அன்ன - இமையோர்சென்று வணங்கு மன்னனது அழகிய தில்லையாகிய வளநகரையொக்கும்—அன்ன நடையாள் மின் அணி நுண் இடைக்கோ-அன்னத்தினடைபோலு நடையையுடையாளது மின்போலும் நுண்ணியவிடைக்கோ—பொருட்கோ - எடுத்துக்கொண்ட பொருட்கோ, இரண்டற்குமல்லவோ—இப் பொங்கு வெங்கானின் நணி நிற்குமிது என் என்பது-இவ்வழல்பொங்கு வெங்கானத்தைச்சேர்ந்து போவதும் மீள்வதுஞ் செய்யாது நிற்கின்ற விஃதியாதென்று சொல்லப்படுவது? எ-று.

நண்ணியென்பது நணியென விடைக்குறைந்து நின்றது. அணியென்று பிரித்து வெங்கானின்கணணித்தாக நிற்பதென்றுரைப்பினு மமையும். இமையோரிறைஞ்சுந் தில்லைவளநகரென வியையும். (ஙூசஉ)

## நெஞ்சொடுபுலத்தல்.

நெஞ்சொடுபுலத்தலென்பது நெஞ்சொடுநொந்து கூறாநின்றவன், பேயிடத்துஞ்செய்தலரிதாம்பிரிவை இவளிடத்தே யெளிதாக்குவித்துச் சேய்த்தாகிய இவ்விடத்துப் போந்த நினது சிக்கனவுக்கஞ்சத்தக்கதெனப் பின்னும் அந்நெஞ்சொடு புலந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

நாய்வயினுள்ளகுணமுமில்லேனைநற்றொண்டுகொண்ட
தீவயின்மேனியன்சிற்றம்பலமன்னசின்மொழியைப்
பேய்வயினும்மரிதாகும்பிரிவெளிதாக்குவித்துச்
சேய்வயிற்போந்தநெஞ்சேயஞ்சத்தக்கதுன்சிக்கனவே.

அழற்கடத் தழுக்கமிக்கு
நிழற்கதிர்வேலோ னீடுவாடியது.

இ - ள். நாய் வயின் உள்ள குணமும் இல்லேனை நல் தொண்டு கொண்ட - நாயினிடத்துள்ள நன்மையுமில்லாத வென்னை நல்ல தொண்டாகக்கொண்ட — தீவயின் மேனியன் சிற்றம்பலம் அன்ன சில் மொழியை - தீயிடத்து நிறம்போலு நிறத்தை யுடையவனது சிற்றம்பலத்தையொக்குஞ் சிலவாகிய மொழியையு டையாளிடத்து—பேய் வயினும் அரிதாகும் பிரிவு எளிதாக்குவித்து - பேயினிடத்துஞ் செய்தலரிதாம்பிரிவை எளிதாக்குவித்து— சேய் வயின் போந்த நெஞ்சே - சேய்த்தாகிய இவ்விடத்துப்போந்த நெஞ்சமே—உன் சிக்கனவு அஞ்சத் தக்கது - உனது திண்ணனவு அஞ்சத்தக்கது. எ - று.

நற்றொண்டென்புழி நன்மை சாதியடை. சின்மொழியையெ ன்னு மிரண்டாவது ஏழாவதன்பொருட்கண் வந்தது. (கடசக)

## நெஞ்சொடுமறுத்தல்.

நெஞ்சொடுமறுத்த லென்பது நெஞ்சொடு புலந்துகூறிப் பின்னும் பொருண்மேற் செல்லாநின்ற வுள்ளத்தோடு தலைமகளை நினைந்து, இத்தன்மைத்தாகிய பொன்னைவிட்டு வேறுபொன் றேடியோ எம்மைவாழச்செய்வது? இதற்கியாமுடம்படேம்; நாமே நடக்கவெனச் செலவுடம்படாது பொருள் வலித்த நெஞ்சொடு மறுத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

தீமேவியநிருத்தன்றிருச்சிற்றம்பலமனைய
பூமேவியபொன்னைவிட்டுப்பொன்றேடியிப்போங்குவெங்கா
னாமேநடக்கவொழிந்தனம்யாநெஞ்சம்வஞ்சியன்ன
வாமேகலையைவிட்டோபொருடேர்ந்தெம்மைவாழ்விப்பதே

நீணெறிசென்ற நாறிணர்த்தாரோன்
சேணெறியஞ்சி மீணெறிசென்றது.

இ - ள். நெஞ்சம் - நெஞ்சமே—தீ மேவிய நிருத்தன் திருச் சிற்றம்பலம் அனைய - தீயைப்பொருந்திய நிருத்தத்தையுடையவ

னது திருச்சிற்றம்பலத்தையொக்கும்—பூ மேவிய பொன்னை விட்டுப் பொன் தேடி - பூவின்கண்மேவிய பொன்னைவிட்டு வேறு பொன்னைத் தேடாநின்று—இப் பொங்கு வெங்கான் நாமே நடக்க - இவ்வழல்பொங்கும் வெங்கானின் நாமே நடப்பீராமின்—யாம் ஒழிந்தனம் - யாமொழிந்தேம்—பொருள் தேர்ந்து எம்மை வாழ்விப்பது - பொருடேடி யெம்மை வாழச்செய்வது—வஞ்சி அன்ன வாம் மேகலையை விட்டோ - வஞ்சியையொக்கு மழகிய மேகலையையுடையாளை விட்டோ? யாமீதற்குடம்படேம். எ - று.

இதுவும் பெருந்திணைப்பாற்படும். மீளநினைந்த துணையல்லது மீண்டிலனென்பார் மீணெறியை யுள்ளத்தாற் சென்றதென்றுரைப்ப. இப்பாட்டு நான்கிற்கும் மெய்ப்பாடு அச்சம். பயன் செலவழுங்குவித்தல். (௧சச)

## நாளெண்ணிவருந்தல்.

நாளெண்ணி வருந்தலென்பது தலைமகனது வரவுநீட்ட நினைந்து வருந்தாநின்ற தலைமகளது வருத்தங்கண்ட தோழி, இவளை நோய்பொருந்தச் சென்றவர் சென்றநாளை எண்ணுந்தன்மையாற் பலகாலிடுதலின் நிலனுங்குழிந்து விரலுந்தேய்ந்ததென, அவன் சென்றநாளெண்ணி வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள் —

**தெண்ணீரணிசிவன் சிற்றம்பலஞ்சிந்தியாதவரிற்**
**பண்ணீர்மொழியிவளைப்பையுளெய்தப்பனித்தடங்க**
**ணுண்ணீருகவொளிவாடநீடுசென்றார்சென்றநா**
**ளெண்ணீர்மையினிலனுங்குழியும்விரலிட்டறவே.**

சென்றவர்திறத்து நின்றுநனிவாடுஞ்
சூழிருங்கூந்தற்குத் தோழிநனிவாடியது.

இ - ள். தெண்ணீர் அணி சிவன் சிற்றம்பலம் சிந்தியாதவரின் - தெண்ணீரைச்சூடிய சிவனது சிற்றம்பலத்தைச் சிந்தியாதவரைப்போல வருந்த—பண் நீர் மொழி இவளைப் பையுள் எய்த - பண்ணீர்மையையுடைய மொழியையுடையவிவளை நோய்பொருந்த—பனித் தடங் கண்ணுள் நீர் உக - குளிர்ச்சியையுடைய பெரியகண்ணகத்து நீர்வார—ஒளி வாட - மேனி யொளிவாட—நீடு சென்றார் சென்ற நாள் - காலநீடப் பிரிந்தவர் பிரிந்தநாளை—எண் நீர்மையின் இட்டு விரல் அற நிலனும் குழியும் - எண்ணுந்தன்மையாற் பலகாலிடுதலின் விரல்தேய நிலனுங்குழியும்! இனியெங்ஙனமாற்றும்! எ - று.

ஒளிவாடினளென்பது பாடமாயின், விரலிட்டென்பதனைத் தோழிமேலேற்றுக. மெய்ப்பாடு அழுகை. பயன் தலைமகளை யாற்றுவித்தல். (௩௪௫)

## ஏறுவரவுகண்டிரங்கியுரைத்தல்.

ஏறுவரவுகண்டிரங்கியுரைத்தலென்பது பொருண்முற்றி மீளுநின்ற தலைமகன், மாலைக்காலத்து நாகொடுவாராநின்ற ஏறுவரவுகண்டு, இச்சிறந்த செக்கர்மாலை அவள் பொறுக்குமளவன்றென இரங்கிக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**சுற்றம்பலமின்மைகாட்டித்தன்றொல்கழறந்ததொல்லோன்**
**சிற்றம்பலமனையாள்பரமன்றுதிண்கோட்டின்வண்ணப்**
**புற்றங்குதர்ந்துநன்னாகொடும்பொன்னார்மணிபுலம்பக்**
**கொற்றமருவுகொல்லேறுசெல்லாநின்றகூர்ஞ்செக்கரே.**

நீடியபொன்னி னெஞ்சநெகிழ்ந்து
வாடியவன் வரவுற்றது.

இ - ள். திண் கோட்டின் வண்ணப் புற்று உதர்ந்து - திண்ணிய கோட்டான் நிறத்தையுடைய புற்றையிடந்து—பொன் ஆர் மணி புலம்ப - இரும்பார்ந்த மணியொலிப்ப——கொற்றம் மருவு கொல் ஏறு - வெற்றியைப் பொருந்தின கொலல்வல்ல ஆனேறு— நல் நாகொடும் செல்லாநின்ற - நல்ல நாகோடும் ஊர்வயிற் செல்லாநின்ற—கூர்ஞ் செக்கர் - சிறக்குஞ் செக்கர்வானையுடைய மாலை—சுற்றம் பலம் இன்மை காட்டி - சுற்றத்தாற் பயனின்மையையறிவித்து—தன் தொல் கழல் தந்த தொல்லோன் சிற்றம்பலம் அனையாள் பரம் அன்று - பிறவிமருந்தாதற்குப் பழையவாய் வருகின்ற தன்கழல்களை யெனக்குத்தந்த பழையோனது சிற்றம்பலத்தை யொப்பாளதளவன்று; இனியென்னாகுவள்! எ - று.

சுற்றம்பயனையுடைத்தன்மையெனினு மமையும். மண்ணப் புற்றென்பதூஉம் பாடம். நேடியபொன்னினென்பது பாடமாயின், நேடுதல் தேடுதல். மெய்ப்பாடு அச்சம். பயன் தேர்ப்பாகன் மீள்வதற்கொருப்படுதல். (௩௪௬)

## பருவங்கண்டிரங்கல்.

பருவங்கண்டிரங்கலென்பது ஏறுவரவுகண் டிரக்கமுற்று வாராநின்ற தலைமகன், இம்முகில்கள் ஒன்றோடொன்று தம்மில் விரவுதலாற் பொழில்கடோறும் மயில்கள் திரண்டாடாநின்ற இக்

கார்காலத்து, அவளென்னை நினைந்தாற்றுளாங் கொல்லோவெண அப்பருவங்கண் டிரங்காநிற்றல். அதற்குச்செய்யுள்—

**கண்ணுழையாதுவிண்மேகங்கலந்துகணமயிறேக்**
**கெண்ணுழையாத்தழைகோலிநின்றாலுமினமலர்வாய்**
**மண்ணுழையாவுமறிதில்லைமன்னனதின்னருள்போற், பண்**
**ணுழையாமொழியாளென்னளாங்கொன்மன்பாவியற்கே.**

மன்னியபருவ முன்னியசெலவின்
இன்னலெய்தி மன்னனேகியது.

இ - ள். விண் மேகம் கலந்து கண் நுழையாது - விண்ணிடத்து முகில்கள் ஒன்றோடொன்று விரவுதலாற் கண்சென்று நுழையமாட்டாது—இன மலர் வாய் - இனமலரையுடைய விடமெங்கும்—கண மயில் தொக்கு எண் நுழையாத் தழை கோலி நின்று ஆலும் - மயிலினங்கள் திரண்டு எண்சென்றுபுகாத பீலியைவிரித்து நின்றாடாநிற்கும்—மண் உழை யாவும் அறி தில்லை மன்னனது இன் அருள் போல் - மண்ணிடத் தெல்லாவுயிர்களுமறியுந் தில்லையின் மன்னனது இனியவருள்போலும்—பண் நுழையா மொழியாள் பாவியற்கு என்னள் ஆம் கொல் - பண்ணணையாத தேமொழியையுடையாள் தீவினையேற்கு. எத்தன்மையளாமோ! அறிகின்றிலேன்! எ - று.

எண்ணென்பது உணவாகிய வெண்ணெனபாருமுளர். பண்ணுழையாமொழி யென்பதற்குப் பண்ணப்பட்ட வுழையாகிய நரம்புபோலும் மொழியாளெனினு மமையும். மன் அசைநிலை. மன்னியபருவ முன்னியசெலவி னின்னலெய்தி - நிலைபெற்ற பருவத்து முற்பட்ட செலவினான் வருத்தமெய்தி. மெய்ப்பாடும் பயனும் அவை. (௩௪௭)

## முகிலொடுகூறல்.

முகிலொடு கூறலென்பது பருவங்கண்டிரங்கி விரைவோடு வாராநின்ற தலைமகன், இவ்விடத்தெல்லாம் முற்பட்டாயாயினும் முதுபெண்டிர் திரண்டு அவளின்னாமையை நீக்கற்கு இல்லுறை கடவுட்குப் பூசனைசெய்யாநிற்கும் நீணகரத்திற்கு என்னின் முற்படாதொழிவாயாகவெண, முந்துற்றுச் செல்லாநின்ற முகிலொடு கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**அற்படுகாட்டினின்றாடிசிற்றம்பலத்தான்மிடற்றின்**
**முற்படுநீண்முகிலென்னின்முன்னேன்முதுவோர்குழுமி**

விற்படுவாணுதலாள்செல்லறீர்ப்பான்விரைமலர்தூய்
நெற்படுவான்பலிசெய்தயராநிற்குநீணகர்க்கே.

ஏனைப்பலதுயரமோ டேகாநின்றவன்
துனைக்காரதற்குத் துணிந்துசொல்லியது.

இ - ள். அல் படு காட்டில் நின்று ஆடி-மாலைக்காலத்து இருளுண்டாகாநின்ற புறங்காட்டின்கண் நின்றாடுவான்—சிற்றம்பலத்தான்-சிற்றம்பலத்தின்கண்ணுன்—மிடற்றின் முற்படு நீள் முகில் - அவனது மிடறுபோல விருண்டு முற்படாநின்ற நீண்ட முகிலே—முதுவோர் குழுமி-இவ்விடத்தெல்லாம் முற்பட்டாயாயினும்,முதுபெண்டீர் திரண்டு—வில் படு வாள் நுதலாள் செல்லல் தீர்ப்பான்-விற்றாழுமொளிநுதலாளது இன்னுமையை நீக்கவேண்டி—விரைமலர் தூய் - நறுநாற்றத்தையுடைய மலர்களைத்தூவி—நெல் படுவான் பலி செய்து அயரா நிற்கும் நீள் நகர்க்கு - நெல் விரவிய தூயபலியைக்கொடுத்து இல்லுறைகடவுட்குப் பூசனைசெய்யாநிற்கும் பெரிய வில்லத்திற்கு—என்னின் முன்னேல் - என்னின் முற்படாதொழி. எ - று.

வான்பலிசெய்தயராநிற்குமென்பதற்குப் பலிகொடுத்து விரிச்சி யயராநிற்குமெனினுமையும். ஆடுசிற்றம்பலவனென்பதூஉம் பாடம். துனைக்கார் - விரைவையுடையகார். துணைக்காரென்பது பாடமாயின், இனத்தையுடைய முகிலென்றுரைக்க. மெய்ப்பாடு அது. பயன் பாகன்றேரை விரையக்கடாவுதல். (௩௪௮)

## தேர்வரவுகூறல்.

தேர்வரவு கூறலென்பது பொருள்வயிற் பிரிந்த தலைமகன் முகிலொடுவந்து புகாநிற்ப, இம்முகில் இவளதாவியை வெகுளாநின்ற காலத்து ஒரு தேர்வந்து காத்தமையான் இனிவரக்கடவதனை வெல்லுமாறில்லையெனத் தோழி தலைமகளுக்குத் தேர்வரவு கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

பாவியைவெல்லும்பரிசில்லையேமுகில்பாவையஞ்சீ
ராவியைவெல்லக்கறுக்கின்றபோழ்தத்தினம்பலத்துக்
காவியைவெல்லுமிடற்றோனருளிற்கதுமெனப்போய்
மேவியமாநிதியோடன்பர்தேர்வந்துமேவினதே.

வேந்தன்பொருளொடு விரும்பிவருமெனை
ஏந்திழைப்பாங்கி யினிதியம்பியது.

இ - ள். முகில் பாவை அம் சீர் ஆவியை வெல்லக் கருக்கின்ற போழ்தத்தின் - முகில் பாவையதழகிய சீர்மையையுடைய வுயிரைச் செகுப்பான் கருநின்ற பொழுதின்கண்—அம்பலத்துக் காவியை வெல்லும் மிடற்றோன் அருளின் - அம்பலத்தின்கணுளனாகிய நீலப்பூவைவெல்லு மிடற்றையுடையவனதருள்போல— போய் மேவிய மாநிதியோடு - போய்த்தேடிய பெருநிதியோடு— அன்பர் தேர் கதுமென வந்து மேவினது - அன்பர்தேர் கதுமென வந்து பொருந்திற்று, அதனால்—பாவியை வெல்லும் பரிசு இல்லையே - வரக்கடவதனை வெல்லுமாறில்லையே போலும். எ - று.

இனி ஒருவாற்றானும் இவளுயிர்வாழ்த லரிதென்றிருந்தனம் இதுபாவியாதலின் இற்றைப்பொழுதிகவாது தேர்வந்ததென்னுங் கருத்தாற் பாவியைவெல்லும் பரிசில்லையே யென்றாள். தமியரை அற்றம்பார்த்து வெல்லக்கருதிச் சிலர் வெகுள்கின்றகாலத்து அத் தமியார்க்குத் துணையாயொருதேர்வந்து காத்ததென வேறுமொரு பொருள் விளங்கினவாறறிக. அருளின்மேவினதெனவியையும். அருளான்வந்து மேவிற்றெனினுமமையும். மெய்ப்பாடு பெருமிதம். பயன் ஆற்றுவித்தல். (௩௬௧)

## இளையரெதிர்கோடல்.

இளையரெதிர்கோடலென்பது தோழி தலைமகட்குத் தேர்வரவு கூறுநிற்ப, இந்நிலைமைக்கண், இவளாவிசெல்வதற்கு முன்னே, சூழுந்தொகுநிதியோடு அன்பர் தேர்வந்து தோன்றிற்று; இனி யூழின்வலியது வேறொன்றுமில்லையெனப் பொருண்முடித்து வாராநின்ற தலைமகனைச் சென்று இளையர் எதிர்கொள்ளாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**யாழின்மொழிமங்கைபங்கன்சிற்றம்பலத்தானமைத்த**
**வூழின்வலியதொன்றென்னையொளிமேகலையுகளும்**
**வீழும்வரிவளைமெல்லியலாவிசெல்லாதமுன்னே**
**சூழுந்தொகுநிதியோடன்பர்தேர்வந்துதோன்றியதே.**

செறிகழலவன் றிருநகர்புகுதர
எறிவேலிளைஞரெதிர்கொண்டது.

இ - ள். ஒளி மேகலை உகளும் - ஒளியையுடைய மேகலை தன்னிலையினின்றும் போகாநின்றது—வரி வளை வீழும் - வரியையுடையவளைகள் கழன்று வீழாநின்றன—மெல்லியல் ஆவி செல்லாத முன்னே - இந்நிலைமைக்கண் மெல்லிய லுயிர்செல்வதற்கு

றுன்னே—சூழும் தொகு நிதியோடு அன்பர் தேர் வந்து தோன் றியது - சூழ்ந்துவருந் திரண்டநிதியோடு அன்பரதுதேர் வந்து தோன்றிற்று, அதனுன்—யாழின் மொழி மங்கை பங்கன் - யாழோசைபோலு மினியமொழியையுடைய மங்கையது கூற்றை யுடையான்—சிற்றம்பலத்தான் - சிற்றம்பலத்தின்கண்ணுன்—அமைத்த ஊழின் வலியது ஒன்று என்னே - அவனுலமைக்கப் பட்ட ஊழின் வலியதொன்றியாது! எ - று.

மெய்ப்பாடு உவகை. பயன் மெய்ம்மகிழ்தல். (௩௫௦)

## உண்மகிழ்ந்துரைத்தல்.

உண்மகிழ்ந்துரைத்தலென்பது பொருண்முடித்து இளைஞ ரெதிர்கொள்ளவந்து புகுந்த தலைமகன், தலைமகளுடன் பள்ளியி டத்தனுயிருந்து, இம்மானைப்பிரிந்து பொருள்தேட யான் வெய்ய சுரஞ்சென்ற துன்பமெல்லாம் இவள் கொங்கைகள் என்னுறுப்புக் களிடை மூழ்க இப்பூவணைமே லணையாமுன்னம் துவள்வுற்றதெ னத் தன்னுள்ளே மகிழ்ந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

மயின்மன்னுசாயலிம்மானைப்பிரிந்துபொருள்வளர்ப்பான், வெயின்மன்னுவெஞ்சுரஞ்சென்றதெல்லாம் விடையோன்பு லியூர்க்,குயின்மன்னுசொல்லிமென்கொங்கையென்னங்கத்தி டைக்குளிப்பத், துயின்மன்னுபூவணைமேலணையாமுன்றுவ ளுற்றதே.

பெருநிதியோடு திருமனைபுகுந்தவன்
வளமனைக்கிழத்தியோ டுளமகிழ்ந்துரைத்தது.

இ - ள் மயில் மன்னு சாயல் இம் மானைப் பிரிந்து - மயில்போலு மென்மையையுடைய இம்மானைப்பிரிந்து—பொருள் வள ர்ப்பான் வெயில் மன்னு வெஞ்சுரம் சென்றது எல்லாம் - பொரு ளையீட்டுவான் வெயினிலைபெற்ற வெய்யசுரத்தைச்சென்ற துன்ப மெல்லாம்—விடையோன் புலியூர்க் குயில் மன்னு சொல்லி மென் கொங்கை—விடையையுடையவனது புலியூரிடத்துளவாகிய குயி லோசைபோலுஞ் சொல்லையுடையாளுடைய மெல்லிய கொங்கை கள்—என் அங்கத்திடைக் குளிப்ப - என்னுறுப்புக்களிடை மூழ் கும்வகை—துயில் மன்னு பூ அணைமேல் அணையாமுன் துவளுற் றது - துயினிலைபெறும் பூவணையிடத் தணைவதன்முன்னம் மாய்ந் தது. எ - று.

இம்மானென்றது, பிரிதற்கரியவித் தன்மையளென்றவாறு. எல்லாமென்பது முழுதுமென்னும் பொருள்பட நிற்பதோருரிச்சொல். பன்மையொருமை மயக்கமென்பாருமுளர். மெய்ப்பாடும் பயனும் அவை. பயன் மகிழ்வித்தலுமாம். (௫௫௧)

பொருள்வயிற்பிரிவு முற்றிற்று.

# பரத்தையிற்பிரிவு.

இனிப் பரத்தையிற் பிரிதலென்பது தலைமகளை வரைந்தெய்திய பின்னர், வைகலும் பாலேநுகர்வானொருவன் இடையே புளிங்காடியுநுகர்ந்து அதனினிமை யறிந்தாற்போல,அவனுகர்ச்சியினிமையறிதற்குப் புறப்பெண்டீர்மாட்டுப் பிரியாநிற்றல்.அல்லதூஉம், பண்ணும்பாடலுமுதலாயின காட்டிப் புறப்பெண்டீர் தன்னைக் காதலித்தாற் றானெல்லார்க்குந் தலைவனாகலின் அவர்க்கு மின்பஞ்செய்யப் பிரியாநிற்றலென்றுமாம். அல்லதூஉம், தலைமகளையூடலறிவித்தற்குப் பிரிதலென்றுமாம். இவ்வாறொழிந்து தனக்கின்பம்வேண்டிப் பிரிவனாயின், "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு—மொண்டொடி கண்ணே யுள" * என்பதனால் இவளுக்குத் தலைமகனென்னும் பெயரோடு மாறுபட்டுத் தனது பெருமையோடு மாறுபடாநிற்கும். அதுவருமாறு—

கண்டவர்கூறல் காதற்றோழி
பொறையுவந்துரைத்தல் பொதுப்படக்கூறி
வாடியழுங்கன் மாறுகொண்டவனொடு
கனவிழந்துரைத்தல் விளக்கொடுவெறுத்தல்
வாரம்பகர்ந்து வாயின்மறுத்தல்
பள்ளியிடத்தூடல் பணிமொழியாடன்
செவ்வணிவிடுக்க வில்லோர்கூற
லயலறிவுரைத்தவ ளழுக்கமெய்தல்
செவ்வணிகண்ட வாயிலவர்கூறன்
மனைபுகல்கண்ட வாயிலவர்கூறன்
முகமலர்ச்சிகூறன் முனிவதென்னெனக்
காலநிகழ்வுரைத்தல் கலவியெய்தலை
யெடுத்துரைத்தல்லொடு கலவிகருதிப்

* திருக்குறள், புணர்ச்சிமகிழ்தல். க.

புலத்தல்குறிப்பறிந்து புலந்தமைகூறல்
வாயிலவர்வாழ்த்தல் புனல்வரவுரைத்த
றோர்கண்டுமகிழ்தல் சேடியர்விழவிற்
றம்முளுரைத்த றன்னைவியத்த
னகைத்துரைத்தல்லொடு நாண்கண்டுரைத்தல்
பாணன்வரவுரைத்தல் பாங்கியியற்பழித்த
லுழையரியற்பழித்த லொண்ணுதலாளவற்
கியற்படமொழித லியல்புகினைந்துரைத்தல்
வாயில்பெறாது மகன்றிறநினைதல்
வாயிற்கணின்று தோழிக்குரைத்தல்
வாயில்வேண்டத் தோழிகூறன்
மன்னியதோழி வாயில்வேண்டன்
மனையவர்மகிழ்தல் வாயின்மறுத்தல்
பாணனொடுவெகுடல் பாணன்புலத்தல்
விருந்தொடுசெல்லத் துணிந்தமைகூற
லூடறணிவித்த லணைந்தவழியூடல்
புனலாட்டுவித்தமை கூறிப்புலத்தல்
கலவிகருதிப் புலவிபுகறன்
மிகுத்துரைத்தூடல் விறல்வேற்காளை
யூடனீட வாடியுரைத்த
றனியொழிந்துரைத்த றுகளொன்றில்லாப்
புதல்வன்மேல்வைத்துப் புலவிதீர்தல்
கலவியிடத்தூடன் முன்னிகழ்வுரைத்தல்
பரத்தையைக்கண்டமை பயன்படக்கூற
லாதியமெடுத்துரைத் தூடறீர்த்த
லெண்ணூறொன்றிவை பரத்தையிற்பிரிவெனப்
பண்ணார்மொழியாய் பகர்ந்திசினோரே.

இ-ள். கண்டவர்கூறல், பொறையுவந்துரைத்தல், பொதுப்படக்கூறிவாடியழுங்கல், கனவிழந்துரைத்தல், விளக்கொடுவெறுத்தல், வாரம்பகர்ந்துவாயின்மறுத்துரைத்தல், பள்ளியிடத்தூடல், செவ்வணிவிடுக்கவில்லோர்கூறல், அயலறிவுரைத்தவளழுக்கமெய்தல், செவ்வணிகண்டவாயிலவர்கூறல், மனைபுகல்கண்டவாயிலவர்கூறல், முகமலர்ச்சிகூறல், காலநிகழ்வுரைத்தல், எய்தலெடுத்

துரைத்தல், கலவிகருதிப்புலத்தல், குறிப்பறிந்துபுலந்தமைகூறல், வாயிலவர்வாழ்த்தல், புனல்வரவுரைத்தல், தேர்வரவுகண்டுமகிழ்ந்துகூறல், புனல்விளையாட்டிற்றம்முளுரைத்தல், தன்னைவியந்துரைத்தல், நகைத்துரைத்தல், நாணுதல்கண்டுமிகுத்துரைத்தல், பாணன்வரவுரைத்தல், தோழியியற்பழித்தல், உழையரியற்பழித்தல், இயற்படமொழிதல், நினைந்துவியந்துரைத்தல், வாயில்பெறுதுமகன்றிறநினைதல், வாயிற்கணின்றுதோழிக்குரைத்தல், வாயில்வேண்டத்தோழிகூறல், தோழிவாயில்வேண்டல், மனையவர்மகிழ்தல், வாயின்மறுத்துரைத்தல், பாணனொடுவெகுடல், பாணன்புலந்துரைத்தல், விருந்தொடுசெல்லத்துணிந்தமைகூறல், ஊடறணிவித்தல், அணைந்தவழியூடல், புனலாட்டுவித்தமைகூறிப்புலத்தல், கலவிகருதிப்புலத்தல், மிகுத்துரைத்தூடல், ஊடனீடவாடியுரைத்தல், துனியொழிந்துரைத்தல், புதல்வன்மேல்வைத்துப்புலவிதீர்தல், கலவியிடத்தூடல், முன்னிகழ்வுரைத்தூடறீர்த்தல், பரத்தையைக்கண்டமைகூறிப்புலத்தல், ஊதியமெடுத்துரைத்தூடறீர்த்தல் என விவைநாற்பத்தொன்பதும் பரத்தையிற்பிரிவாம். எ-று. அவற்றுள்—

## கண்டவர்கூறல்.

கண்டவர் கூறலென்பது தலைமகன் பரத்தையர் சேரிக்கட்செல்லாநிற்ப, அப்பரத்தையர் அவனை ஒருங்கெதிர்கொண்டு சுற்றும்பற்றிப் போர்செய்யா நின்றமையின், இஃதிவன் காதலிமாட்டென்றுமென அவ்விடத்துக் கண்டவர் தம்முட் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**உடுத்தணிவாளரவன்றில்லையூரன்வரவொருங்கே**
**யெடுத்தணிகையேறினவளையார்ப்பவிளமயிலேர்**
**கடுத்தணிகாமர்கரும்புருவச்சிலைகண்மலரம்**
**படுத்தணிவாளிளையோர்சுற்றும்பற்றினர்மாதிரமே.**

உரத்தகுவேலோன் பரத்தையிற்பிரியத்
திண்டேர்வீதியிற் கண்டோருரைத்தது.

இ - ள். உடுத்தணி வாள் அரவன் தில்லை ஊரன் வர - கச்சாகவும் உடுத்தணியாகவுமணிந்த வாளரவையுடையவனது தில்லைக்கணுளனாகிய வூரன் இவ்வீதிக்கண்வர—எடுத்து அணி கை ஏறு இன வளை ஆர்ப்ப - தெரிந்தணியப்பட்ட கைக்கணுளவாகிய இன வளைகளொலிப்ப—இள மயில் ஏர் கடுத்து - இளமயிலதெழிலையொத்து—அணி காமர் கரும்புருவச் சிலை கண் மலர் அம்பு

அடுத்து - மிக்கவழகையுடைய கரியபுருவமாகிய வில்லோடு கண் மலராகிய வம்பைச்சேர்த்தி—அணி வாள் இளையோர் ஒருங்கே சுற்றும் மாதிரம் பற்றினர் - அணிகளுண்டாகிய வொளியையுடைய மகளிர் ஒருங்கே சுற்றுந்திசைகளைப்பற்றினர்; இஃதிவன் காதலிமாட்டென்னும்! எ - று.

அணி காமர் என்பன ஒருபொருட்கிளவியாய், மிகுதிதோன்ற நின்றன. ஒன்றாகவெழுந்து அணியினுங் கையினுமுளவாகிய சங்கொலிப்ப இளமைக்கணுண்டாகிய வுள்ளவெழுச்சிமிக்கு வில்லோடம்பையடுத்துப் பற்றி அரைக்கணியப்பட்ட வுடைவாளையுடைய இளையோர் திசைமுழுதுஞ் சூழ்ந்து பற்றினரெனப் பிறிதுமோர் பொருடோன்றி நின்றவாறு கண்டுகொள்க. கருப்புருவச் சிலையென்பது பாடமாயின், புருவமாகிய காமனது உட்கையுடைய கருப்புச்சிலையோடு கண்ணாகிய கள்ளையுடைய மலரம்பையடுத்தென்றுரைக்க. சுற்றும்பற்றியமாதிரமென்பது பாடமாயின், சுற்றும்பற்றி மேவாநிற்ப, அவ்விடத்து நகைக்குறிப்பாலெடுக்கப்பட்டு இவர்கைகள் வளையொலிப்பத் தலைமேலேறினவெனக் கூட்டியுரைக்க. இதற்குச் சுற்றும்பற்றிப் போர்செய்யாநிற்பப் படைக்கலமெடுத்துச் சங்கொலிப்ப அணியுங்கையு மொருங்கெழுந்தனவெனப் பிறிதுமொரு பொருளாகக்கொள்க. இதற்குப் பிறவுரைப்பாருமுளர். உரத்தகுவேல்-உரத்தாற்றக்கவேல். மெய்ப்பாடு மருட்கை, வியப்பாகலின். பயன் பிரிவுணர்த்துதல் (௩௫௨)

## பொறையுவந்துரைத்தல்.

பொறையுவந்துரைத்தலென்பது தலைமகனைப் பரத்தையரெதிர்கொண்டமைகேட்ட தலைமகள் நெஞ்சுடைந்து புறத்துவெளிப்படாமற் பொறுத்தமைகண்ட தோழி, யாணிவ்வாறாகவும் கலங்காது நின்ற பெரும்பொறையாட்டியை யான் இன்று பேசுவன என்னென்று அவளையுவந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சுரும்புறுகொன்றையன் றொல்புலியூர்ச்சுருங்கும்மருங்குற்
பெரும்பொறையாட்டியையென்னின்றுபேசுவபேரொலிநீர்க்
கரும்புறையூரன்கலந்தகன்றானென்றுகண்மணியு
மரும்பொறையாகுமென்னவியுந்தேய்வுற்றழிகின்றதே.

கள்ளவிழ்கோதையைக் காதற்றோழி
உள்ளவிழ்பொறைகண் டுவந்துரைத்தது.

இ - ள். பேரொலி நீர்க் கரும்பு உறை ஊரன் கலந்து அகன்றான் என்று - பெரிய வொலிக்குநீரையுடைய கரும்புதங்குமூரை

யுடையவன் கலந்துவைத்து நீங்கினனென்று கருதுதலான்—கண் மணியும் அரும் பொறை ஆகும் - என்கண்மணியும் பயனின்மை யாற் றாங்குதற்கரிய பாரமாகாநின்றன—என் ஆவியும் தேய்வுற்று அழிகின்றது-எனதுயிருந் தேய்ந்தழியாநின்றது—பெரும் பொறை ஆட்டியை என் இன்று பேசுவ - யானிவ்வாறாகவுங் கலங்காது நின்ற பெரும்பொறையையுடையவளை யான் இன்று பேசுவன வென்! எ - று.

சுரும்பு உறு கொன்றையன் தொல் புலியூர்ச் சுருங்கும் மருங்குல் பெரும்பொறையாட்டியை - சுரும்புகள்வாழுங் கொன்றைப் பூவினையுடையானது பழையதாகிய புலியூரிற் சுருங்கின மருங்குலை யுடைய பெரும்பொறையாட்டியையெனக் கூட்டுக.

என் கண்மணியுந் தேய்வுற்றழியாநின்றது ஆவியுமரும்பொறையாகாநின்றதென்று கூட்டுவாரு முளர். உள்ளவிழ்பொறை-நெஞ்சுடைந்து புறத்து வெளிப்படாதபொறை. மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த வுவகை. பயன் தலைமகளை வியத்தல். (௩௫௩)

## பொதுப்படக்கூறிவாடியழுங்கல்.

பொதுப்படக்கூறி வாடியழுங்கலென்பது பொறையுவந்துரைத்த தோழிக்கு, முன்னிலைப்புறமொழியாக, தமதுநலங் கவரக்கொடுத்து வேறுதுணை யின்மையிற் றமதுணையையே தமக்குத் துணையாகக்கொண்டு கிடந்து என்னைப்போல வுயிர்தேய்வார் இனியாவரோவெனப் பொதுப்படப் பரத்தையர்க் கிரங்குவாள் போன்று, தலைமகனது கொடுமைநினைந்து வாடாநிற்றல். அதற்குச்செய்யுள்—

அப்புற்றசென்னியன் றில்லையுறாரினவருறுநோ
யொப்புற்றெழினலமூரன்கவரவுள்ளும்புறம்பும்
வெப்புற்றுவெய்துயிர்ப்புற்றுத்தம்மெல்லணையேதுணையாச்
செப்புற்றகொங்கையர்யாவர்கொலாருயிர்தேய்பவரே.

பொற்றிகழரவன் மற்றிகழ்தில்லைப்
பிரிந்தவூரனை டிருந்துவாடியது.

இ - ள். அப்பு உற்ற சென்னியன் தில்லை உறாரின் - நீரடைந்த சென்னியையுடையவனது தில்லையை மனமொழிமெய்களாலணுகாதாரைப்போல—எழில் நலம் ஊரன் கவர - கண்ணோட்டமின்றி எழிலையுடைய நலத்தை ஊரன் கவர்ந்துகொள்ள—அவர் உறு நோய் ஒப்புற்று உள்ளும் புறம்பும் வெப்புற்று - அத்தில்லை

யையுறுதாருறு நோயையொத்து அகத்தும் புறத்தும் வெப்பத்தை யுற்று—வெய்துயிர்ப்புற்று - வெய்தாகவுயிர்த்தலையுற்று—தம் மெல் அணையே துணையா - வேறுதுணையின்மையிற் றமது மெல்லணையே தமக்குத்துணையாக—செப்பு உற்ற கொங்கையர் ஆருயிர் தேய்ப வர் யாவர் கொல் - செப்புப்போலுங் கொங்கையையுடைய மகளிர் ஆருயிர்தேய்வார் பிறர்யாரோ யானல்லது? எ - று.

இத்தன்மையராய் என்போல இனி யாருயிர்தேய்வார் யாரோ வெனப் பரத்தையர்க் கிரங்குவாள்போன்று, தலைமகனது கொடு மை கூறினாளாகவுரைக்க. தில்லையுறாதவவருறுநோயென்பது பாட மாயின், எழினலமூரன்கவரத் தில்லையையுறாத அத்தீவினையாருறு நோயை யொத்தென்றுரைக்க. ஊரனோடிருந்து வாடியது-ஊரன்குறைகளை நினைந்து அதனோடிருந்து வாடியது. மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்றாமை நீங்குதல். (௩௫௪)

## நனவிழந்துரைத்தல்.

கனவிழந்துரைத்தலென்பது தலைமகனது கொடுமைநினைந்து கிடந்து வாடாநின்ற தலைமகள், கனவிடைவந்து அவன் மார்புதரத் தானதனை நனவென்றுமயங்கிப் புலந்து அவனோடு புணராதிழந் தமையைத் தோழிக்குச் சொல்லாநிற்றல். அதற்குச்செய்யுள் —

தேவாசுரரிறைஞ்சுங்கழலோன்றில்லைசேரலர்போ
லாவாகனவுமிழந்தேனனவென்றமளியின்மேற்
பூவாரகலம்வந்தூரன்றரப்புலம்பாய்நலம்பாய்
பாவாய்தழுவிற்றிலேன்விழித்தேனரும்பாவியனே.

சினவிற்றடக்கைத் தீம்புனலூரனைக்
கனவிற்கண்ட காரிகையுரைத்தது.

இ - ள். நலம் பாய் பாவாய் - நலம்பரந்த பாவாய்—அமளி யின் மேல் பூ ஆர் அகலம் வந்து ஊரன் தர - அமளியின்கண்மா லையையுடைய மார்பை ஊரன்வந்துதர—புலம்பாய் - அவனோடுமே வாமையிற் பின்னுந்தனிமையாய்—நனவு என்று தழுவிற்றிலேன் - நனவென்றுமயங்கித் தவறுநினைந்து புல்லிற்றிலேன்—அரும் பாவி யன் விழித்தேன் - அத்துணையேயன்றிப் பொறுத்தற்கரிய தீவினை யையுடையேன் விழிப்பதுஞ் செய்தேன், அதனால்—தேவாசுரர் இறைஞ்சும் கழலோன் தில்லை சேரலர் போல் - தேவருமசுரரு மிறைஞ்சுங் கழலையுடையவனது தில்லையைச்சேராதாரைப்போல-- ஆவா கனவும் இழந்தேன் - ஐயோ! கனவான்வருமின்பத்தையு மிழந்தேன். எ - று.

தில்லைசேரலர்போலென்புழி ஒத்தபண்பு துன்பமுறுதலும் இன்பமிழத்தலுமாம். (நூருரு)

## விளக்கொடுவெறுத்தல்.

விளக்கொடு வெறுத்தலென்பது கனவிழந்தமைகூறி வருந்தாநின்ற தலைமகள், நீயாயினுங் கலந்தவர்க்குப் பொய்ம்முகங்காட்டிக் கரத்தல் பொருத்தமன்றென்றிலையேயென விளக்கொடு வெறுத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**செய்ம்முகநீலமலர்தில்லைச்சிற்றம்பலத்தரற்குக்**
**கைம்முகங்கூம்பக்கழல்பணியாரிற்கலந்தவர்க்குப்**
**பொய்ம்முகங்காட்டிக்கரத்தல்பொருத்தமன்றென்றிலையே**
**நெய்ம்முகமாந்தியிருண்முகங்கீழுநெடுஞ்சுடரே.**

பஞ்சணைத்துயின்ற பஞ்சின்மெல்லடி
அன்பனோடமுங்கிச் செஞ்சுடர்க்குரைத்தது.

இ - ள். நெய்ம்முகம் மாந்தி இருள் முகம் கீழும் நெடுஞ்சுடரே - நெய்ம்முகத்தைப்பருகி இருண்முகத்தைக் கிழிக்கும் நெடியசுடரே—கலந்தவர்க்குப் பொய்ம் முகம் காட்டிக் கரத்தல் பொருத்தம் அன்று என்றிலை - எம்மைக்கலந்தவர்க்குப் பொய்யையுடைய முகத்தைக்காட்டித் தெளிந்தாரை வஞ்சித்தல் தகுதியன்றென்று கூறிற்றிலையே? வேறுகூறுவார் யாவர்? எ - று.

செய்ம்முகம் நீலம் மலர் தில்லைச் சிற்றம்பலத்து அரற்கு - செய்ம்முகத்துளவாகிய நீலப்பூ மலராநின்ற தில்லையிற்சிற்றம்பலத்தின்கணுளனாகிய அரனுக்கு—கைம்முகம் கூம்பக் கழல் பணியாரின் கரத்தல் - கைம்முகங்குவியக் கழலைப்பணியாதாரைப் போலக் கண்ணோட்டமும் மெய்ம்மையுமின்றிக் கரத்தலெனக் கூட்டுக.

செய்ம்முகம் செய்ம்முன். கைம்முகம் கைத்தலம். கரத்தல் மறைத்தலெனினுமமையும். நெய்ம்முகம் சுடரையணைந்தவிடம். நெய்ம்முகமாந்தி யிருண் முகங்கீழு நெடுஞ்சுடரே என்றது உணவாகிய நெய்யை மாந்தி மேனியொளியை யுடையையாய்ப் பகை செகுக்கும் பெருமையையுடையையாதலின் அக்களிப்பினாற் கண்டது கூறிற்றிலை என்றவாறு. இவை யிரண்டற்கும் மெய்ப்பாடும் பயனும் அவை. (நூருசு)

## வாரம்பகர்ந்துவாயின்மறுத்துரைத்தல்.

வாரம்பகர்ந்துவாயின்மறுத்துரைத்தலென்பது விளக்கொடு வெறுத்து வருந்தாநின்ற தலைமகள், தலைமகன் பரத்தையிற்பிரிந்து வந்து வாயிற்கணிற்ப, வண்டோரனையர் ஆடவர், பூவோரனையர் மகளிராதலான், நாமும் அவன்றலையளிபெற்ற பொழுது ஏற்றுக் கொள்வதன்றோ நமக்குக்காரியம்; நாம் அவனோடு புலக்கற்பாலே மல்லேமென்று வாயிலோர்விடுத்தார்க்கு, ஊரனது மாலையுந்தோளும் அவ்விடத்து வளைத்துவைத்து வேண்டினார்கொள்ள வமையும்; யான் மன்னனைப் பரத்தையர்க்கு உருவரையாகக் கொடுத்தே னென மறுத்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

பூங்குவளைப்பொலிமாலையுமூரன்பொற்றோளிணையு
மாங்குவளைத்துவைத்தாரேனுங்கொள்கநள்ளாரரணந்
தீங்குவளைத்தவில்லோன்றில்லைச்சிற்றம்பலத்தயல்வா
யோங்குவளைக்கரத்தார்க்கடுத்தோமன்னுருவரையே.

வார்புனலூர னேர்திகழ்தோள்வயிற்
கார்புரைகுழலி வாரம்பகர்ந்தது.

இ - ள். பூங் குவளைப் பொலி மாலையும் - பொலிவையுடைய குவளைப்பூவானியன்ற பெரியமாலையையும்—ஊரன் பொற்றோள் இணையும்-ஊரனது பொன்போலுந் தோளிணையையும்--ஆங்கு வளைத்து வைத்து ஆரேனும் கொள்க - தம்மில்லத்து வளைத்துவைத்து வேண்டியார் கொள்வாராக—நள்ளார் அரணம் தீங்கு வளைத்த வில்லோன் தில்லை - பகைவரதரணந் தீங்கெய்த வளைக்கப்பட்ட வில்லையுடையவனது தில்லையின்--சிற்றம்பலத்து அயல் வாய் ஓங்கு வளைக் கரத்தார்க்கு - சிற்றம்பலத்துக் கயலாகியவிடத்துவாழும் உயர்ந்த வளையையுடைய கையையுடையார்க்கு—மன் உருவரை அடுத்தோம் - மன்னனை உருவரையாகக் கொடுத்தோம். எ - று.

உருவரை முற்றூட்டு. தீங்குவளைத்த வில்லோனென்பதற் குத் தீங்கெய்தவென ஒருசொல் வருவியாது அரணத்தைத் தீங்கு வளைத்தற்குக் காரணமாகிய வில்லென்றுரைப்பினுமமையும். ஓங் குவளைக்கரத்தாரென்புழி ஓங்குதலை வளைக்கரத்தார் மேலேற்றுக· விலையானுயர்ந்தவளையெனினு மமையும். அடுத்தோமென்றதனால், தனதுரிமை கூறினாளாம். மன் அசைநிலையாக்கி, மாலையையுந்தோ ளையுமடுத்தோமெனினு மமையும். மெய்ப்பாடும் பயனும் அவை. ()

## பள்ளியிடத்தூடல்.

பள்ளியிடத்தூடலென்பது வாயின்மறுத்த தலைமகள், ஆற்றாமையே வாயிலாகப்புக்குப் பள்ளியிடத்தானாகிய தலைமகனோடு, நின்னை யிடைவிடாது நுகர்தற்கு முற்காலத்துத் தவத்தைச் செய்யாத தீவினையேமை நோவாது, இன்றிவ்வாறாகிய நின்னை நோவதென்னோ? அதுகிடக்க, நின்காதலிமார் புறமேகற்று நினக்குப் புதிதாகச்செய்த அப்புல்லுதலை யாஞ்செய்யமாட்டேம்; அதனாலெம்மைத் தொடாதே; எங்கலையை விடுவாயாகவெனக் கலவி கருதிப் புலவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**தவஞ்செய்திலாதவெந்தீவினையேம்புன்மைத்தன்மைக்கெள்**
**ளா, தெவஞ்செய்துநின்றினியின்றுனைநோவதெனத்தன்முத்**
**தன், சிவன்செய்தசீரருளார்தில்லையூரநின்சேயிழையார்**
**நவஞ்செய்தபுல்லங்கண்மாட்டேந்தொடல்விடுநற்கலையே.**

பீழுவர்கற்பிற் றேடிவர்கோதை
ஆடவன்றன்னோ டேயுரைத்தது.

இ - ள். அத்தன் - உலகத்துள்ளாரெல்லார்க்குந் தந்தை—முத்தன் - இயல்பாகவே பாசங்களினீங்கியவன்—சிவன் - எவ்வுயிர்க்கும் எப்பொழுதும் நன்மையைச்செய்தலாற் சிவன்—செய்த சீர் அருள் ஆர் தில்லை ஊர - அவனாற்செய்யப்பட்ட சீரியவருணிறைந்த தில்லையிலூரனே—தவம் செய்திலாத வெந் தீவினையேம் - முற்காலத்துத் தவத்தைச்செய்யாத வெய்ய தீவினையையுடையயாம்—புன்மைத் தன்மைக்கு எள்ளாது - நின்னாலாதரிக்கப்படாத எமது புன்மைத்தன்மைகாரணமாக எம்மையேயிகழாது—எவம் செய்து நின்று இன்று இனி உனை நோவது என் - நினக்குத் துன்பத்தைச்செய்யாநின்று இப்பொழுது இனி நின்னை நோதலென்னும்! அதுகிடக்க—நின் சேயிழையார் நவம் செய்த புல்லுங்கள் மாட்டேம் - நின்னுடைய சேயிழையார் நினக்குப்புதிதாகச்செய்த புல்லுதல்களை யாமாட்டேம், அதனால்—நற்கலை தொடல் - எமது நல்லமேகலையைத் தொடாதொழி—விடு - விடுவாயாக. எ - று.

எவ்வம் எவமெனநின்றது. காதலில்லையாயினுங் கண்ணோட்டமுடைமையான் இகழ்ந்து வாளாவிருப்பமாட்டாமையின், எம்புலவியான் நினக்குத் துன்பமாந்துணையே யுள்ளதென்னுங் கருத்தான், எவஞ்செய்து நின்றென்றாள். இனியென்பது நீயிவ்வாறாயினபின் னென்னும்பொருட்டாய் நின்றது. சிவன்செய்த

சீரருளார்தில்லையூரவென்றதனன், நின்னாற்காயப்பட்டாராலுங் காதலிக்கப்படாநின்றுயெனவும்; தவஞ்செய்திலாதவெந் தீவினையேமென்றதனன், எம்மாற்காதலிக்கப்பட்டாராலுங் காயப் படாநின்றேமெனவுங் கூறியவாறும். புல்லென்பது புல்லமென விரிந்துநின்றது. புல்லமென்பதனைப் புன்மையென்று நின்சேயிழையார் புதிதாகச்செய்த குறிகளைப் பொறுக்கமாட்டேமென் றுரைப்பினு மமையும். எவன்செய்து நின்றெனப்பாடமோதி, தவஞ்செய்திலாத வெந்தீவினையேம் இன்றுன்னை நோவது என்செய்து நின்றென்றும் என்னத்தனென்றுமுரைப்பாருமுளர். எள்காதென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு வெகுளி. பயன் புணர்தல். ()

## செவ்வணிவிடுக்கவில்லோர்கூறல்.

செவ்வணிவிடுக்கவில்லோர் கூறலென்பது இக்கொங்கைகள் தாங்கித் தளராநின்ற மருங்குலையுடைய இவள் வருந்த, இவ்வாயத்தார் முன்னே, அப்பரத்தையர் மனைக்கண் இப்பேதை இக்குறியறிவிக்கச் செல்லாநின்ற விது நமக்கு மிகவுமிளிவரவுடைத்தெனச் செவ்வணிவிடுக்க விரையாநின்ற வில்லோர் தம்முட் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**தணியுறப்பொங்குமிக்கொங்கைகடாங்கித்தளர்மருங்குல்**
**பிணியுறப்பேதைசென்றின்றெய்துமாலரவும்பிறையு**
**மணியுறக்கொண்டவன்றில்லைத்தொல்லாயநல்லார்கண்முன்**
**னே, பணியுறத்தோன்றுநுடங்கிடையார்கள்பயின்மனைக்கே.**

பாற்செலுமொழியார் மேற்செலவிரும்பல்
பொல்லாதென்ன வில்லோர்புகன்றது.

இ - ள். அரவும் பிறையும் அணியுறக் கொண்டவன் தில்லை - பிறைக்குப் பகையாகிய அரவையும் பிறையையும் அழகுறத் தனக்கணியாகக்கொண்டவனது தில்லையின்—தொல் ஆயம் நல்லார்கள் முன்னே - பழைய இவளாயத்திலுள்ளாராகிய நல்லார்கண் முன்னே—பணி உறத் தோன்றும் நுடங்கு இடையார்கள் பயில் மனைக்கு - அரவுபோலத்தோன்றும் நுடங்குமிடையையுடையார்கள் நெருங்கும் பரத்தையர் மனைக்கண்—தணி உறப் பொங்கும் இக் கொங்கைகள் தாங்கி - தணிதலுறும்வண்ணம் வளராநின்ற இக்கொங்கைகளைத் தாங்கி—தளர் மருங்குல் பிணியுறப் பேதை இன்று சென்று எய்தும் ஆல் - தளராநின்ற மருங்குலையுடைய இவள் வருந்த இப்பேதை இன்றுசென்றெய்துமாயிற் பெரிதும் இஃதிளிவரவுடைத்து. எ - று.

இதற்குப் பிறிதுரைப்பாருமுளர். பாற்செலுமொழியார் புகன்றது-கேட்டார்க்குப் பாலின்கணுணர்வுசெல்லு மொழியையுடைய மகளிர்மேற்சென்று தூதுவிட விரும்பல் பொல்லாதென இல்லோர் கூறியது. பால்போலு மொழியெனினு மமையும். ஈண்டுச்செல்லுமென்பது உவமைச்சொல். பேதையென்றது செவ்வணியணிந்து செல்கின்ற மாதரை. மெய்ப்பாடு நகை, எள்ளற்பொருட்டாகலின். பயன் தலைமகனைச் செலவழுங்குவித்தல். சிறைப்புறத்தானாக, இல்லோர் சொல்லியது. (௩௫௯)

## அயலறிவுரைத்தவளழுக்கமெய்தல்.

அயலறிவுரைத்தவளழுக்கமெய்தலென்பது இல்லோர் செவ்வணிவிடுக்க நினையாநிற்ப, அயலார்முன்னே இவளால் இக்குறியறிந்த விடத்து ஒருத்தி நமக்குத்தர நாமவனை யெய்தும்படியாயிற்று நம்முடைய பெண்டன்மையென அயலறிவுரைத்துத் தலைமகள் அழுக்கமுற்றுக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

இரவணையும்மதியேர்நுதலார்நுதிக்கோலஞ்செய்து
குரவணையுங்குழலிங்கிவளாலிக்குறியறிவித்
தரவணையுஞ்சடையோன்றில்லையூரனையாங்கொருத்தி
தரவணையும்பரிசாயினவாறுநந்தன்மைகளே.

உலகியலறியச் செலவிடலுற்ற
விழுத்தகைமாதர்க் கழுக்கஞ்சென்றது.

இ - ள். இரவு அணையும் மதி ஏர் நுதலார்நுதி - இரவைச்சேரும் பிறைபோலு நுதலையுடையாரது முன்—கோலம் செய்து - செவ்வணியாகிய கோலத்தைச்செய்து—குரவு அணையும் குழல் இங்கிவளால் இக் குறி அறிவித்து - குரவம்பூச்சேருங் குழலையுடைய இவளால் இக்குறியையறிவித்து—அரவு அணையும் சடையோன் தில்லை ஊரனை - பாம்புசேருஞ் சடையையுடையவனது தில்லையிலூரனை—ஆங்கு ஒருத்தி தர - பின் அவ்விடத்து ஒருத்தி நமக்குத்தர—அணையும் பரிசு ஆயினவாறு நம் தன்மைகள் - நாமவனை யெய்தும்படி யாயினவாறென் நம்முடையபெண்டன்மைகள்! எ - று.

நுதலார்நுதியறிவித்தென் வினையும். குறி பூப்புநிகழ்தற்குறி. மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்றுமை நீங்குதல். (௩௬0)

## செவ்வணிகண்டவாயிலவர்கூறல்.

செவ்வணிகண்டவாயிலவர் கூறலென்பது தலைமகளிடத்து நின்றுஞ் செவ்வணிசெல்லக்கண்டு, நம்மூரற்கு உலகியலாறுரைப் பான்வேண்டி, செம்மலருஞ் செம்பட்டுஞ் செஞ்சாந்தும் நமது திருவையுடைய மனையின்கண் வந்துதோன்றினவெனப் பரத்தை வாயிலவர் தம்முண் மதித்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சிவந்தபொன்மேனிமணிதிருச்சிற்றம்பலமுடையான்
சிவந்தவந்தாளணியூரற்குலகியலாறுரைப்பான்
சிவந்தபைம்போதுமஞ்செம்மலர்ப்பட்டுங்கட்டார்முலைமேற்
சிவந்தவஞ்சாந்தமுந்தோன்றினவந்துதிருமனைக்கே.

மணிக்குழைபூப்பிய லுணர்த்தவந்த
ஆயிழையைக்கண்ட வாயிலவருரைத்தது.

இ - ள். சிவந்த பொன் மேனி மணி - செம்பொன்போலு மேனியையுடையமணி—திருச் சிற்றம்பலம் உடையான்-திருச்சிற் றம்பலத்தையுடையான்—சிவந்த அம் தாள் அணி ஊரற்கு - அவ னது சிவந்தவழகிய தாள்களை முடிக்கணியாக்கும் ஊரற்கு —உலகி யலாறு உரைப்பான் - உலகியனெறியை யறிவிப்பான்வேண்டி— திரு மனைக்கு - நமது திருவையுடைய மனைக்கண்—சிவந்த பைம் போதும் - சிவந்த செவ்விப்பூவும்—அம் செம் மலர்ப்பட்டும் - அழகிய செய்ய பூத்தொழிற்பட்டும்—கட்டு ஆர் முலைமேல் அம் சிவந்த சாந்தும் - கட்டுதலார்ந்த முலைமேலுண்டாகிய வழகிய செ ய்ய சாந்தமும்—வந்து தோன்றின - வந்துதோன்றின; இனித் தரு மக்குறைவாராமல் ஊரற்கும் ஏகல்வேண்டும். எ - று.

உலகியலாறு பூப்பு. உரைத்தாற்போலச் செவ்வணியாலறி வித்தலின் உரைப்பானென்றார். தாளிணையூரற்கென்பதூஉம் பா டம். மெய்ப்பாடு பெருமிதம். பயன் பூப்புணர்த்துதல். (௩௬௧)

## மனைபுகல்கண்டவாயிலவர்கூறல்.

மனைபுகல்கண்டவாயிலவர்கூறலென்பது செவ்வணிகண்ட தலைமகன் பரத்தையிடத்தினின்றும் வந்து தடையின்றி மனை வயிற் புகுதாநிற்ப, பண்டிரவும்பகலும் வாயில்பெறாது நின்றுணங் கும் இக்காவலையுடைய கடையை இத்துணைக்காலத்திற்கழிந்து வாயிலின்றிப் புகுதாநின்றான், மனைக்கடன் பூண்டலான் இனிப் புலந்து அடங்காதார் ஒருவருமில்லையெனத் தலைமகள்வாயிலவர் தம்முட் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**குராப்பயில்கூழையிவளின்மிக்கம்பலத்தான்குழையா**
**மராப்பயினுண்ணிடையாரடங்காரெவரேயினிப்பண்**
**டிராப்பகனின்றுணங்கீர்ங்கடையித்துணைப்போழ்திற்சென்று**
**கராப்பயில்பூம்புனலூரன்புகுமிக்கடிமனைக்கே.**

கடனறிந்தூரன் கடிமனைபுகுதர
வாய்ந்தவாயிலவ ராய்ந்துரைத்தது.

இ - ள். பண்டு இராப் பகல் நின்று உணங்கு ஈர்ங் கடை - முற்காலத்து இரவும்பகலுந் தான் வாயில்பெறாது நின்று வாடும் இக்குளிர்ச்சியையுடைய கடையை—இத்துணைப் போழ்தின் சென்று - நீட்டியாது இத்துணைக்காலத்திற் கழிந்து—கராப் பயில் பூம் புனல் ஊரன் இக் கடி மனைக்குப் புகும் - கராம்பயில்கின்ற பூம்புனலையுடைய வூரையுடையான் இக்காவலையுடைய மனைக்கட் புகாநின்றான், அதனான்—குராப் பயில் கூழை இவளின் மிக்கு - குராப்பூப்பயின்ற குழலையுடைய இவளினும் மேம்பட்டு—அம்பலத்தான் குழையாம் அராப் பயில் நுண் இடையார் அடங்கார் எவர் - அம்பலத்தான் குழையாகிய அரவுபோலும் நுண்ணியவிடையினையுடையார் புலந்தடங்காதார் இனி யாவர்! மனைக்கடன் பூண்டலான் எல்லாருமடங்குவர். எ - று.

கராம்பயிலென்பது கராப்பயிலென வலிந்துநின்றது. மெய்ப்பாடு உவகை. பயன் மெய்ம்மகிழ்தல். (௩௯௨)

## முகமலர்ச்சிகூறல்.

முகமலர்ச்சிகூறலென்பது பரத்தையிற்பிரிந்த தலைமகன் செவ்வணிகண்டு வந்தானென்று சொல்லுமளவில், தலைமகளது கண்கள் சிவந்தன; அப்புலவிநோக்கத்தெதிர் காதலனோக்க, அச்சிவப்பாறி முகமலர்ந்தமையை அவ்விடத்துக்கண்டவர் தம்முட் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**வந்தான்வயலணியூரனெனச்சினவாண்மலர்க்கண்**
**செந்தாமரைச்செவ்விசென்றசிற்றம்பலவன்னருளான்**
**முந்தாயினவியனோக்கெதிர்நோக்கமுகமடுவிற்**
**பைந்தாட்குவளைகள்பூத்திருள்சூழ்ந்துபயின்றனவே.**

பூம்புனலூரன் புகமுகமலர்ந்த
தேம்புனைகோதை திறம்பிறருரைத்தது.

இ - ள். வந்தான் வயல் அணி ஊரன் என - வந்தான் வயலணிந்த வூரனென்று சொல்லுமளவில்—சின வாள் மலர்க் கண் செந்தாமரைச் செவ்வி சென்ற - சினவாள்போலு மலர்க்கண்கள் சிவந்த தாமரைப்பூவினது செவ்வியையடைந்தன—சிற்றம்பலவன் அருளான் முந்தாயின வியன் நோக்கு எதிர் நோக்க - சிற்றம்பலவனதருளான் முன்னுண்டாகிய பெரிய அப்புலவிநோக்கெதிர் காதலனேக்க—முக மடுவின் பைந்தாள் குவளைகள் பூத்து இருள் சூழ்ந்து பயின்றன - கதுமெனப் பின் முகமாகிய மடுவிற் பைந்தாளையுடைய குவளைப்பூக்கள் மலர்ந்திருண்டு நெருங்கின; என்னவில்லறக்கிழத்தியோ! எ - று.

இயனேக்கென்றுபிரித்து முன்னுண்டாகிய தனித்தலியல்பையுடைய நோக்கென்றுரைப்பினு மமையும். கண்களது பிறழ்ச்சிப் பண்மையாற் குவளைப்பூக்கள் பல கூடினாற்போன்றிருந்தனவென்பது போதர, பயின்றனவென்றார். காதலனேடு பழகினவெனினு மமையும். தலைமகற்குப் புலவிக்காலத்துவருந் துன்பமிகுதியும் புலவிநீக்கத்துவரு மின்பமிகுதியும் நோக்கி, சிற்றம்பலவனருளாலெனக்காரணத்தை மிகுத்துக்கூறினார். மெய்ப்பாடும் பயனும் அவை. (ருகரு)

## காலநிகழ்வுரைத்தல்.

காலநிகழ்வுரைத்தலென்பது பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனது ஆற்றாமையைத் தலைமகள் நீக்காதிருப்ப, வண்டேதுமல்லிகைப்போதானும் அந்திப்பிறையானுங் கங்குற்பொழுதானும் ஆற்றாநய்ப் புகுதராநின்றான்; இனி நீ புலக்கற்பாலை யல்லையென உழையர் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

வில்லிகைப்போதின்விரும்பாவரும்பாவியர்களன்பிற், செல்
லிகைப்போதினெரியுடையோன்றில்லையம்பலஞ்சூழ், மல்லி
கைப்போதின்வெண்சங்கம்வண்டூதவிண்டோய்பிறையோ
டெல்லிகைப்போதியல்வேல்வயலூரற்கெதிர்கொண்டதே.

இகழ்வதெவன்கொ ணிகழ்வதிவ்வாறெனச்
செழுமலர்க்கோதை யுழையருரைத்தது.

இ - ள். வில்லி கைப் போதின் விரும்பா அரும் பாவியர்கள் அன்பிற் செல்வி - காமன்கையிலம்பாகிய பூக்களில் ஆதரமில்லாத அரிய குறிப்பையுடையவர்கள் தனக்குச்செய்த அன்பின்கண் வேட்டுச்செல்வோன்—கைப் போதின் எரி உடையோன் - கையாகிய

பூவின்கணுளதாகிய எரியையுடையான்—தில்லையம்பலஞ் சூழ் மல்லிகைப் போதின் வெண் சங்கம் வண்டு ஊத - அவனது தில்லையம்பலத்தைச் சூழ்ந்த மல்லிகையின்போதாகிய வெண்சங்கை வண்டுகளூத—விண் தோய் பிறையோடு எல்லி - விண்ணையடைந்த பிறையோடு இராப்பொழுது—கைப் போது இயல் வேல் வயல் ஊரற்கு எதிர் கொண்டது - கையாகிய பூவின்கணியலும் வேலையுடைய வயலூரற்கு மாறுகொண்டது. எ - று.

என்றது வண்டூதுமல்லிகைப்போதானும் அந்திப்பிறையானுங் கங்குற்பொழுதானும் ஆற்றாளாய்ப் புகுதராநின்றான்; இனி நீ புலக்கற்பாலையல்லையென வாயினேர்வித்தவாறு. வில்லிகைப்போதாற் புலன்களை விரும்பாத அரும்பாவியரெனினு மமையும். கைப்போதின்கண்ணே யெரியையுடையானெனினு மமையும். இகழ்தல்-தலைமகனாற்றாமை நீக்காதிருத்தல். எல்லி ஊரற்கு வாயிலாக வேற்றுக்கொண்டது. புலவாதுண்ணெகிழ்ந்தாளென்றிவளை நாமிகழ்கின்றதென் இதுவன்றோ பொழுதென உழையர் தம்முட் புறங்கூறினராகவுரைப்பினு மமையும். மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகளைச் சிவப்பாற்றுவித்தல். (௩௬௭)

## எய்தலெடுத்துரைத்தல்.

எய்தலெடுத்துரைத்தலென்பது பரத்தையிற்பிரிந்துவந்த தலைமகன் பூப்புநிகழ்ந்த கிழத்தியைப் புலவிதீர்த்து இன்புறப்பண்ணி எய்தலுற்றுமகிழ்ந்தமையை அவ்விடத்துள்ளார் எடுத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

புலவித்திரைபொரச்சீறடிப்பூங்கலஞ்சென்னியுய்ப்பக்
கலவிக்கடலுட்கலிங்கஞ்சென்றெய்திக்கதிர்கொண்முத்த
நிலவிநிறைமதுவார்ந்தம்பலத்துநின்றோனருள்போன்
றுலவியலாத்தனஞ்சென்றெய்தலாயினவூரனுக்கே.

சீரியனுலகிற் றிகழ்தரக்கூடி
வார்புனலூரன் மகிழ்வுற்றது.

இ - ள். புலவித் திரை பொர - புலவியாகியதிரை வந்துமாறுபட—சீறடிப் பூங்கலம் சென்னி உய்ப்ப - காதலி சிற்றடியாகிய பொலிவினையுடைய வணியைத் தன்சென்னியி லுய்த்தலான் அப்புலவிநீங்க—கலவிக் கடலுள் கலிங்கம் சென்று எய்தி - கலவியாகிய கடலுள் துகிலைச்சென்று பற்றி—கதிர் கொள் முத்தம் நிலவி நிறை மது ஆர்ந்து - எயிறாகிய வொளிபொருந்தின முத்தி

ன்கட் பொருந்தி நிறைந்த நீராகிய மதுவைப்பருகி—அம்பலத்து நின்றோன் அருள் போன்று உலவு இயலாத் தனம் - அம்பலத்து நின்றவனதருளை யொத்து ஒருஞான்றுந் தளர்தலில்லாதமுலை கள்—ஊரனுக்குச் சென்று எய்தல் ஆயின - ஊரற்குச் சென்று பெறலாயின. எ - று.

புலவுநாறித் திரைகள் வந்துமோதச் சிறியவடியையுடைய பொலிவையுடைய மரக்கலத்தைக் கடலின் சென்னியிலே செலுத் தக் கடலுட்கலந்து கலிங்கமாகிய தேயத்தைச்சென்றெய்தி ஒளி பொருந்திய முத்துக்கள் தன்கண்வந்து நிலைபெற அவ்விடத்துள்ள மதுக்களை நுகர்ந்து அம்பலத்துநின்றவனதருளையொத்து ஒரு ஞான்றுங் கேடில்லாதபொருள் சென்றெய்தலாயினவென வேறு மொருபொருள் விளங்கியவாறறிக. சீரியவுலகிற் றிகழ்தரக்கூடி- சீர்மையியன்றவுலகினுள்ள வின்பமெல்லாவற்றினும் விளங்கக் கூடி. சீரியவுலகு தேவருலகுமாம். இதுவுந்துறைகூறிய கருத்து. மகிழ்வுற்றதெனவின்னோர் கூற்றென்றது துறைகூறினர். மெய்ப் பாடு உவகை. பயன் மெய்ம்மகிழ்தல். (ருகூரு)

## கலவிகருதிப்புலத்தல்.

கலவிகருதிப்புலத்தலென்பது புலவிதீர்த்து இன்புறப் புண ரப்பட்டு மயங்காநின்ற தலைமகள், தனக்கவன்செய்த தலையளியை நினைந்து, இவ்வாறருளுமருள் ஒருஞான்று பிறர்க்குமாமெனவுட் கொண்டு பொருமியழுது, பின்னுமவனோடு கலவிகருதிப் புலவா நிற்றல். அதற்குச்செய்யுள்—

செவ்வாய்துடிப்பக்கருங்கண்பிறழச்சிற்றம்பலத்தெம்
மொய்வார்சடையோனருளின்முயங்கிமயங்குகின்றாள்
வெவ்வாயுயிர்ப்பொடுவிம்மிக்கலுழ்ந்துபுலந்துநைந்தா
ளிவ்வாறருள்பிறர்க்காகுமெனநினைந்தின்னகையே.

மன்னியவுலகிற் றுன்னியவன்பொடு
கலவிகருதிப் புலவியெய்தியது.

இ - ள். இன் நகை - இன்னகையையுடையாள்—செவ்வாய் துடிப்ப - செய்யவாய் துடிப்ப—கருங்கண் பிறழ - கரிய கண்கள் பிறழ—சிற்றம்பலத்து எம் மொய் வார் சடையோன் அருளின் முயங்கி மயங்குகின்றாள் - சிற்றம்பலத்தின்கணுளனாகிய எம்மு டைய நெருங்கிய நீண்ட சடையையுடையவன தருள்பெற்றவர் போல முயங்கி இன்பக்களியின் மயங்குகின்றவள்—இவ்வாறு

அருள் பிறர்க்கு ஆகும் என நினைந்து - இவ்வாறு நமக்கருளு மருள் ஒருஞான்று பிறர்க்குமாமென ஒன்றனையுட்கொண்டு—வெவ்வாய் உயிர்ப்பொடு விம்மிக் கலுழ்ந்து - வெய்யவிடத்தையுடைய நெட்டுயிர்ப்போடு பொருமியழுது—புலந்து நைந்தாள் - புலந்து வருந்தினாள். எ - று.

அருளின் முயங்குகின்றாளென்புழி அருள்பெற்றவர் உவமையாதல் ஆற்றலான்வந்தது. அருளான் முயங்கியென்பாருமுளர். வெவ்வாயுயிர்ப்பென்பது கலுழ்கட்சின்னீரென்பதுபோல நின்றது. தவறுபற்றிப் புலப்பளென்று நீ கூறுதி; இதுவன்றோ இவள் புலக்கின்றவாறெனத் தோழிக்குத் தலைமகன் கூறியது. மன்னிய வுலகிற்றுன்னியவன்பொடு-நிலைபெற்றவுலகத்தின்வைத்துச் செறிந்தவன்போடு. இதுவுந்துறைகூறியகருத்து. மெய்ப்பாடு உவகையைச்சார்ந்த வெகுளி; பெருமிதமுமாம். பயன் அது. (கூசுசு)

## குறிப்பறிந்துபுலந்தமைகூறல்.

குறிப்பறிந்து புலந்தமைகூறலென்பது புலவிதீர்ந்து கலுழ்ந்துபுணர்ந்து தானுமவனுமேயாய்ப் பள்ளியிடத்தாளாகிய தலைமகள், பின்னுமொருகுறிப்பு வேறுபாடுகண்டு புலந்து, இப்பள்ளி பலரைப்பொறாதென்றிழிய, இப்பொழுது இவளிவ்வாறிழிதற்குக் கருதிய குறிப்பென்னைகொல்லோவென உழையர் தம்முட் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

மலரைப்பொறாவடிமானுந்தமியண்மன்னன்றொருவன்
பலரைப்பொறாதென்றிழிந்துநின்றாள்பள்ளிகாமனெய்த
வலரைப்பொறாதன்றழல்விழித்தோனம்பலம்வணங்காக்
கலரைப்பொறாச்சிறியாளென்னைகொல்லோகருதியதே.

குறிப்பினிற்குறிப்பு நெறிப்படநோக்கி
மலர்நெடுங்கண்ணி புலவியுற்றது.

இ - ள். மன்னன் ஒருவன் - மன்னன் ஒருவன்—மலரைப் பொறா அடி மானும் தமியள் - மென்மையான் மலரையும் பொறாத வடியையுடைய மானுந்தமியளே, ஆயினும்—பள்ளி பலரைப் பொறாது என்று இழிந்து நின்றாள் - இப்பள்ளி பலரைத்தாங்காதென்றுகூறிப் பள்ளியினின்று மிழிந்துநின்றாள்—காமன் எய்த அலரைப் பொறாது அன்று அழல் விழித்தோன் அம்பலம் வணங்கா - காமனெய்த அலரம்பைவெகுண்டு அன்றழலாகியகண்ணை விழித்தவனதம்பலத்தைவணங்காத—கலரைப் பொறாச் சிறியாள் கருதி

யது என்னை கொல் - நீயமக்களைப் பொருத சிறியவள் இந்நிலைமைக்கட் கருதியதென்னோ! எ - று.

இழிந்துநின்றாளென்பது விரையவிழிந்தாளென்பதுபட நின்றது. கலரைப்பொருச்சிறியாளென்றது நீமக்களென்று சொல்லும் வார்த்தையையும் பொருதவள் நீமக்கள்செய்யுங் காரியத்தைச் செய்தாளென்றவாறு. குறிப்பினிற்குறிப்பென்றது இவ்வாறருள் பிறர்க்காகுமென நினைந்து இன்னகைபுலந்தாளென்று தலைமகன் கூறியகூற்றையே தவறாகநினைந்து நம்மையொழிந்து பிறருமுண்டாகக் கூறினுனைகலான் இந்தவமளி பலரைப் பொருதெனப் புலந்தாள் குறிப்பாலே தலைமகனது குறிப்பையறிந்து. இவ்வகை தலைமகள் புலம்ப வாயில்கடம்முட்சொல்லியது. இதுவுமது. மெய்ப்பாடு மருட்கை. பயன் ஐயந்தீர்தல். பள்ளியிடத்தாளாகிய தலைமகள் நுண்ணிதாகியதோர் காரணம்பற்றி இவ்வகையுரைத்து ஊடக்கண்டதோழி தன்னெஞ்சோ டுசாவினாளென்பது. தலைமகன் றன்னெஞ்சோ டுசாவினானெனின், அது பொருந்தாது. (௩௬௭)

## வாயிலவர்வாழ்த்தல்.

வாயிலவர்வாழ்த்தலென்பது செவ்வணிவிடுக்கப் பூப்பியற் செவ்விகெடாமல் மெலிவறிந்து இவளது பொலிவோடு வந்தமையான் இவன் மெய்யே தக்கவாய்மையனெனத் தலைமகனை வாயிலவர் வாழ்த்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வில்லைப்பொலி நுதல்வேற்பொலிகண்ணிமெலிவறிந்து
வல்லைப்பொலிவொடுவந்தமையானின்றுவான்வழுத்துந்
தில்லைப்பொலிசிவன்சிற்றம்பலஞ்சிந்தைசெய்பவரின்
மல்லைப்பொலிவயலூரன்மெய்யேதக்கவாய்மையனே.

தலைமகனது தகவுடைமை
நிலைதகுவாயி னின்றோருரைத்தது.

இ - ள். வில்லைப் பொலி நுதல் வேல் பொலி கண்ணி மெலிவு அறிந்து - விற்போலுநுதலையும் வேல்போலுங் கண்களையுமுடையாளது வாட்டமறிந்து—வல்லைப் பொலிவொடு வந்தமையான் - விரைய இவளது பொலிவோடு வந்தமையால்—வான் நின்று வழுத்தும் - வானத்துள்ளார் நின்றுவழுத்தும்—தில்லைப் பொலி சிவன் சிற்றம்பலம் சிந்தை செய்பவரின் - தில்லைக்கட்பொலியுஞ் சிவனது சிற்றம்பலத்தைக் கருதுவாரைப்போல—மல்லைப் பொலி வயல் ஊரன் - வளத்தாற்பொலியும் வயலையுடைய ஊரையு

டையவன்—மெய்யே தக்க வாய்மையன் - மெய்யாக நல்லமெய்ம் மையன். எ - று.

வில்லையென்னுமைகாரம் இசைநிறையாய் வந்தது. காதலன் வர இவள் இடையின்றிப் பொலிந்தமையாற் பொலிவொடென ஒடுக்கொடுத்துக் கூறினார். பொலிசிற்றம்பலமெனவியையும். மல் லல் கடைக்குறைந்து ஐகாரம் விரிந்துநின்றது. மல்லற் பொலியெ ன்பதூஉம் பாடம். மெய்ப்பாடு உவகை. பயன் மகிழ்தல். (ருசுஅ)

## புனல்வரவுரைத்தல்.

புனல்வரவுரைத்தலென்பது தலைமகளுடன் மனைவயிற்றங்கி யின்புறு நின்றவனது தோள்களைப் பரத்தையர்பொருந்தி மகிழப் புதுப்புனல்வந்து பரந்தது; இனிப் புனலாட்டினால் இவன்காதலி புலக்கும்போலுமென, வையத்தார் தம்முட் புனல்வரவு கூறுநிற் றல். அதற்குச்செய்யுள்—

சூன்முதிர் துள்ளுநடைப்பெடைக்கிற்றுணைச்சேவல்செய்வா ன், றேன்முதிர்வேழத்தின்மென்பூக்குதர்செம்மலூரன்றிண் டோள்,மான்முதிர்நோக்கினல்லார்மகிழத்தில்லையானருளே போன்முதிர்பொய்கையிற்பாய்ந்ததுவாய்ந்தபுதுப்புனலே.

புனலாடுகவெனப் புனைந்துகொண்டு
மனைபுகுந்தவனை வையமுரைத்தது.

இ - ள். சூன் முதிர் துள்ளு நடைப் பெடைக்கு - சூன்முதி ந்த துள்ளுநடையை யுடைத்தாகிய பெடைக்கு—இல் செய்வான் துணைச் சேவல் - ஈனுமில்லைச் செய்யவேண்டித் துணையாகியசே வல்—தேன் முதிர் வேழத்தின் மென்பூக் குதர் - தேன்போலுஞ் சாறுமுதிர்ந்த கரும்பினது மெல்லிய பூவைக்கோதும்—செம்மல் ஊரன் திண் தோள்-தலைமையையுடையவூரனது திண்ணிய தோள் களை—மான் முதிர் நோக்கின் நல்லார் மகிழ - மானினது நோக்கம் போலு நோக்கினையுடைய நல்லார்கூடி இன்புற—தில்லையான் அருளே போல் முதிர் பொய்கையில் வாய்ந்த புதுப் புனல் பாய்ந் தது-தில்லையான தருளை யொத்து நீர் முதிர்ந்த பொய்கையுள் நல்ல புதுப்புனல் பாய்ந்தது; இனிப் புனலாட்டினாற் றன்காதலியைச் சிவப்பிக்கும்போலும். எ - று.

சூன்முதிர்தலாற் குறுகவடியிடுதலிற் றுள்ளு நடையென்றார். தில்லையானருள்பெற்றவர் போல நல்லார்மகிழவென் றுரைப்பாரு முளர். சேவலன்னந் தன் சூன்முதிர்ந்தபெடைக்கு ஈனில்லிழைத்

துப் பாதுகாக்கின்றாற்போல இவனுந் தன்காதலிக்கு வேண்டுவன செய்து மனைவயிற்றங்கி யின்புறுகின்றானென உள்ளுறைகாண்க. துன்னுநடையென்று பாடமோதி, சூன் முதிர்தலாற் பயில அடியிடுநடையென்றுரைப்பாருமுளர். வெண்பூவென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு பெருமிதம். பயன் பிரிவுணர்த்துதல். (கசுசு)

## தேர்வரவுகண்டுமகிழ்ந்துகூறல்.

தேர்வரவுகண்டு மகிழ்ந்துகூறலென்பது புனல்வரவுகேட்ட தலைமகன் புனலாட்டு விழவிற்குப் பரத்தையர் சேரிக்கட் செல்லா நிற்ப, இவனைப் புணர்தற்குத்தக்க தவத்தினை முற்காலத்தே செய்தீர்கள்; தேர்வந்து தோன்றிற்று; இனிச் சென்று இவனது தோளிணையைத் தோய்மினெனத் தேர்வரவுகண்டு பரத்தையர் தம்முண் மகிழ்ந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சேயேயெனமன்னுதீம்புனலூரன்றிண்டோளிணைக
டோயீர்புணர்தவந்தொன்மைசெய்தீர்சுடர்கின்றகோலந்
தீயேயெனமன்னுசிற்றம்பலவர்தில்லைநகர்வாய்
வீயேயெனவடியீர்நெடுந்தேர்வந்துமேவினதே.

பயின்மணித்தேர்செலப் பரத்தையர்சேரிக்
கயன்மணிக்கண்ணியர் கட்டுரைத்தது.

இ - ள். சுடர்கின்ற கோலம் தீயே என மன்னு - சுடராநின்ற வடிவு தீயேயென்றுசொல்ல நிலைபெற்ற—சிற்றம்பலவர் தில்லை நகர்வாய் வீயே என அடியீர் - சிற்றம்பலவரது தில்லைநகரிடத்து ள்ளீராகிய பூவையொக்கு மடியையுடையீர்—நெடுந் தேர் வந்து மேவினது - நெடியதேர் ஈண்டுவந்து மேவிற்று—புணர் தவம் தொன்மை செய்தீர் - இவனைப் புணர்தற்குத் தக்கதவத்தை முற்காலத்துச் செய்தீர்கள்—சேயே என மன்னு தீம் புனல் ஊரன் திண் தோள் இணைகள் தோயீர் - வடிவு முருகவேளேயென்று சொல்ல நிலைபெறாநின்ற இனிய புனலையுடைத்தாகிய வூரையுடையவனது திண்ணியதோளிணைகளை யினியணைமின். எ - று.

ஒன்றற்கொன்றிணையாயிருத்தலின் இணையெனத் தனித்தனி கூறப்பட்டன. இதுவும் ஊடனிமித்தம். கோலமென்றாலது கொலமெனக் குறுகின்றது. கயன்மணிக்கண்ணியென்புது பாடமாயின், பரத்தையர் சேரிக்கட் டலைமகனது தேர்செலத் தலைமகளொருத்துரைத்ததாம். இப்பொருட்குநெடுந்தேர் நுமது சேரிக்கண்வந்து தங்கிற்றென்றுரைக்க. மெய்ப்பாடு உவகை.

பயன் தலைமகன்வரவு சேரிப்பரத்தையர்க்குப்பாங்காயினோர் அவர்க்குணர்த்துதல். (௲எ0)

## புனல்விளையாட்டிற்றம்முளுரைத்தல்.

புனல்விளையாட்டிற் றம்முளுரைத்தலென்பது தலைமகனுடன் புனலாடாநின்ற பரத்தையர் சேடிமார் அரமங்கையரைப்போலப் புனலாடாநின்ற அவ்வவரேயென்று விளித்து, நாமெல்லாமித்தன்மையேமாக வானரமங்கையரென்று சொல்லும்வண்ணம் மற்றொருத்திவந்து இவனைத் திரித்துக்கொள்ளக்கொடுத்துப் பின் வருந்தாது முன்னுறக்காப்போமெனத் தம்முட் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்--

அரமங்கையரெனவந்துவிழாப்புகுமவ்வவர்வா
னரமங்கையரெனவந்தணுகும்மவளன்றுகிராற்
சிரமங்கையனைச்செற்றோன்றில்லைச்சிற்றம்பலம்வழுத்தாப்
புரமங்கையரினையாதையகாத்துநம்பொற்பரையே.

திம்புனல்வாயிற் சேயிழைவருமெனக்
காம்பனதோளியர் கலந்துகட்டுரைத்தது.

இ - ள். அரமங்கையர் என வந்து விழாப் புகும் அவ்வவர் - அரமங்கையரைப்போல வந்து புனலாட்டுவிழவின்கட் புகாநின்ற அவரவரே—வான் அரமங்கையர் என அவள் வந்து அணுகும் - நாமெல்லாம் இத்தன்மையேமாக, வானிடத் தரமங்கையரென்று கருதும்வண்ணம் அவள் வந்தணுகாநின்றாள், அணுகித் தன்னிடத்திவரைத்திரிப்ப—அன்று அங்கு உகிரான் அயனைச் சிரம் செற்றோன் தில்லை - அன்று அவ்விடத்து உகிரால் அயனைச் சிரந்தடிந்தவனது தில்லையின்—சிற்றம்பலம் வழுத்தாப் புர மங்கையரின் நையாது - சிற்றம்பலத்தை வழுத்தாத புரங்களின் மங்கையரைப் போலப் பின்வருந்தாது—நம் பொற்பரை ஐய காத்தும் - நம் பொற்பரை வியப்ப முன்னுடைத்தாகக் காப்பேம். எ - று.

அரமங்கையர் தேவப்பெண்களுக்குப் பொதுப்பெயர். வானரமங்கையரென்றது அவரின்மேலாகிய உருப்பசி திலோத்தமை முதலாயினோரை. வானரமங்கையரென்றது சாதியைநோக்கி நின்றது. ஐயபொற்பரையெனக் கூட்டினுமமையும். அவளென்றதும் சேயிழையென்றதும் பரத்தையரிற்றலைவியாகிய இற்பரத்தையை. "பரத்தைவாயி லெனவிரு வீற்றும்—கிழவோட் சுட்டாக் கிளப்

புப்பய னிலவே" * என்பதனால் இது கிழவோட்சுட்டாக்கிளப் பாயினும், இப்பரத்தையரது மாறுபாடு தலைமகளுடுதற்கு நிமித்த மாகலிற் பயனுடைத்தாம். மெய்ப்பாடு அச்சம். பயன் தலைமக னைத் தங்கட்டாழ்வித்தல். (௩எக)

## தன்னைவியந்துரைத்தல்.

தன்னைவியந்துரைத்தலென்பது சேடிமார் பின் வருந்தாது முன்னுறக்காப்பேமென்று தம்முட் கூறுவதனைக்கேட்டு, இவனை அமரப்புல்லும்பரத்தையர்மாட்டு இவனருள்செல்லாமல் விலக் கேனுயின் என்மாட்டிவனைத் தந்தழாநின்ற இவன் மனைக்கிழத்தி யாகின்றேனெனப் பரத்தைத்தலைவி தன்னைவியந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**கனலூர்கணைதுணையூர்கெடச்செற்றசிற்றம்பலத்தெம்**
**மனலூர்சடையோனருள்பெற்றவரினமரப்புல்லு**
**மினலூர்நகையவர்தம்பாலருள்விலக்காவிடின்யான்**
**புனலூரனைப்பிரியும்புனலூர்கணைப்பூங்கொடியே.**

அரத்தத்துவர்வாய்ப் பரத்தைத்தலைவி
முனிவுதோன்ற நனிபுகன்றது.

இ - ள். கனல் ஊர் கணை துணை ஊர் கெடச் செற்ற - கனல் பரந்தகணையான் ஒத்தவூர்கெட வெகுண்ட—சிற்றம்பலத்து எம் அனல் ஊர் சடையோன் அருள் பெற்றவரின் - சிற்றம்பலத்தின் கணுளனாகிய எம்முடைய அனலையொக்குஞ் சடையையுடையவன தருளைப்பெற்றவர்போலச் செம்மாந்து—அமரப் புல்லும் மினல் ஊர் நகையவர் தம்பால் அருள் விலக்காவிடின் - அவனைச் செறி யப்புல்லாநின்ற ஒளிபரந்த நகையையுடையவர் தம்மிடத்து அவ னருள்செல்லாமை விலக்கேனாயின்—யான் புனல் ஊரனைப் பிரி யும் புனலூர்கண் அப் பூங் கொடி - யான் புனலூரனைப் பிரிந்திரு க்கும் புனல்பரக்குங் கண்ணையுடைய அவன்மனைக்கிழத்தியாகிய அப்பூங்கொடியாகின்றேன். எ - று.

கணைதுணையெனச் செய்யுளின்பநோக்கி மிகாதுநின்றது. கணையென்பதனை யெழுவாயாக்கி யுரைப்பாருமுளர். "பரத்தை யிற்பிரிவே நிலத்திரி வின்றே" † என்பதனால், இவரதில்லந் தம்மில் வேறுபாடில்லாமை யறிக. மெய்ப்பாடு வெகுளி. பயன் தனது நீடுணர்த்தல். (௩எ௨)

---

* தொல். பொருள். செய்யுள். ௨00.
† இறையனாரகப்பொருள். சஉ.

## நகைத்துரைத்தல்.

நகைத்துரைத்தலென்பது பரத்தைத்தலைவி தன்னைவியந்து கூறினாளென்று கேட்ட தலைமகள், எங்கைச்சியார் தமக்கும் ஒரு தங்கைச்சியார் தோன்றினபொழுதே தம்மிறுமாப்பொழியத் தம்முடைய இணைமுலைகளினதிறுமாப்பும் ஒழியப் புகாநின்றது; இதனையறியாது தம்மைத்தாம் வியக்கின்றதென்னோவெனப் பரத்தையை நோக்கி நகைத்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

இறுமாப்பொழியுமன்றேதங்கைதோன்றினென்னெங்கை
யங்கைச், சிறுமான்றரித்தசிற்றம்பலத்தான்றில்லையூரன்றிண்
டோள், பெறுமாத்தொடுந்தன்னபேரணுக்குப்பெற்றபெற்றி
யினோ, டிறுமாப்பொழியவிறுமாப்பொழிந்தவிணைமுலையே.

வேந்தன்பிரிய வேந்திழைமடந்தை
பரத்தையைநோக்கி விரித்துரைத்தது.

இ - ள். அங் கைச் சிறுமான் தரித்த சிற்றம்பலத்தான் தில்லை ஊரன் திண்தோள் - அங்கைக்கண்ணே சிறியமானைத்தரித்த சிற்றம்பலத்தானது தில்லைக்கணுளனாகிய ஊரனுடைய திண்ணியதோள்களை—பெறு மாத்தொடும் - பெறுதலானுண்டாகிய பெருமையோடும்—தன்ன பேரணுக்குப் பெற்ற பெற்றியினோடு - தன்னவாகிய அவனோடுண்டாகிய பெரிய அணுக்கைப்பெற்ற தன்மைகளோடும்—இறுமாப்பு ஒழிய - தான் செம்மாத்தலையொழிய—இணைமுலை இறுமாப்பு ஒழிந்த - இணைமுலைகள் ஏந்துதலையொழியப் புகாநின்றன—தங்கை தோன்றின் - இனித் தனக்கொரு தங்கைதோன்றின்—என் எங்கை இறுமாப்பு ஒழியும் அன்றே - என்னுடைய வெங்கையும் செம்மாத்தலையொழியுமன்றே; அதனான் வருவதறியாது தன்னைப்புகழ்கின்றாள். எ - று.

எங்கையென்றது என்றங்கை யென்றவாறாயினும், என்னெங்கையென இயைபுமிகுதிகூறி நகையாடினாள். மாத்து தலைமகற்குரியளாய் நிற்றலான் உண்டாகியவரிசை. பெற்றி அணுக்காற்றன்னை மதித்தல். தன்னபெற்றியென விகையும். பெற்றியினோடுமென்னு மும்மை தொக்குநின்றது. ஒழிந்தவென்னு மிறந்தகாலம் விரைவு பற்றி வந்தது. மெய்ப்பாடு வெகுளியைச்சார்ந்த வழுகை. பயன் பரத்தையது சிறுமையுணர்த்துதல். அவ்வகை பரத்தைகூறிய வஞ்சினம் தன்பாங்காயினாராற்கேட்ட தலைமகள் பரத்தைக்குப் பாங்காயினார் கேட்ப இவ்வகைசொன்னாளென்பது. (௩எ௩)

## நாணுதல்கண்டுமிகுத்துரைத்தல்.

நாணுதல்கண்டு மிகுத்துரைத்தலென்பது தலைமகனைப் பரத்தையர்வசம் புனலாடவிட்டுச் சூடுவாரின்றிச் செப்பின்கணிட்டடைத்துத் தமியேவைகும் பூப்போல்வாள் இஃதவனுக்குத் தகாத பழியாமெனக் கருதி நாணி அதனை மறைத்திருந்தமைகண்ட தோழி, இவளது கற்பும் நலனும் நல்லபகுதியையுடையனவாயிருந்தனவென அவள் நலத்தை மிகுத்துக் கூறுநிற்றல். அதற்குச் செய்யுள்—

வேயாதுசெப்பினடைத்துத்தமிவைகும்வீயினன்ன
தீயாடிசிற்றம்பலமனையாடில்லையூரனுக்கின்
றேயாப்பழியெனநாணியென்கண்ணிங்ஙனேமறைத்தாள்
யாயாமியல்பிவள்கற்புநற்பாலவியல்புகளே.

மன்னவன்பிரிய நன்மனைக்கிழத்தியை
நாணுதல்கண்ட வாணுதலுரைத்தது.

இ - ள். வேயாது செப்பின் அடைத்துத் தமி வைகும் வீயின் அன்ன - சூடாது செப்பின்கணிட்டடைப்பத் தனியேவைகும் பூவைப்போலும்—தீயாடி சிற்றம்பலம் அனையாள் - தீயின்கணாடுவானது சிற்றம்பலத்தை யொப்பாள்—இல்லை ஊரனுக்கு இன்று ஏயாப் பழி என நாணி - இல்லையூரனுக்கு இன்று தகாதபழியாமெனக்கருதி நாணி—என்கண் இங்ஙனே மறைத்தாள் - தனதாற்றுமையை என்னிடத்தும் இவ்வண்ணமே மறைத்தாள், அதனால்—இவள் கற்பு யாய் ஆம் இயல்பு - இவளதுகற்பு நமக்குத் தாயாமியல்பையுடைத்து—இயல்புகள் நல் பால - இவளுடைய நாணமுதலாகிய வியல்புகள் நல்லகூற்றன. எ - று.

தமிவைகும்வீ அக்காலத்தினிகழ்ந்த வேறுபாட்டிற்குவமை. அம்பலம் இயற்கைநலத்திற்குவமை. பாணனுரைத்ததென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு அழுகை. பயன் தலைமகளது பெருமையுணர்த்துதல். (கூஎச)

## பாணன்வரவுரைத்தல்.

பாணன்வரவுரைத்தலென்பது நாளோடு தனியிருந்து வருந்தாநின்ற தலைமகளுக்கு, இராப்பொழுதின்கட் சென்று திசையைக் கடக்கும் வாவல் இரைதேருங்காலமன்மையாற் பகற்பொழுதின்கணுறையும் மரம்போலும் தமியோனமையறியாது விறலியும்பா

ணும் நம் வேந்தற்குத் துயிலெழுமங்கலம் பாடவந்து நின்றாரெ னத் தோழி பாணன்வரவு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

விறலியும்பாணனும்வேந்தற்குத்தில்லையிறையமைத்த
திறலியல்யாழ்கொண்டுவந்துநின்றார்சென்றிராத்திசைபோம்
பறலியல்வாவல்பகலுறைமாமரம்போலுமன்னோ
வறலியல்கூழைநல்லாய்தமியோமையறிந்திலரே.

இகல்வேலவனகல் வறியாப்பாணனைப்
பூங்குழன்மாதர்க்குப் பாங்கிபகர்ந்தது.

இ - ள். விறலியும் பாணனும் - விறலியும் பாணனும்—தில்லை இறை அமைத்த திறல் இயல் யாழ் - தில்லையிறையாலமைக்கப்ப ட்ட வெற்றியியலும் யாழை—வேந்தற்குக் கொண்டு வந்து நின் றார் - நம் வேந்தற்குத் துயிலெழுமங்கலம்பாடக் கொண்டுவந்து நின்றார்கள்—அறல் இயல் கூழை நல்லாய் - அறல்போலுங் கூழை யையுடைய நல்லாய்—இராச் சென்று திசை போம் பறல் இயல் வாவல் - இராப்பொழுதின்கட்சென்று திசையைக்கடக்கும் பறத் தலாகிய வியல்பினையுடைய வாவல்—பகல் உறை மா மரம் போ லும் தமியோமை அறிந்திலர் - இரைதேருங் காலமன்மையாற் பக ற்பொழுதின்கணுறையும் பெரியமரம்போலும் இராப்பொழுதிற்று ணையில்லாதோமை இவரறிந்திலர்போலும். எ - று.

வெற்றி வீணைகளுட்டலையாதல். "எம்மிறை நல்வீணை வாசிக் குமே" என்பவாகலின் இறையமைத்தயாழென்றார். சென்றுபக லுறைமாமரமென்றியைப்பினு மமையும். பறத்தல் பறலென இடைக்குறைந்து நின்றது. போலவென்பது பாடமாயின், பகலு றையுமாமரம்போலத் தமியேமாகிய நம்மையெனவுரைக்க. மன் னும் ஓவும் அசைநிலை. மெய்ப்பாடு அது. பயன் பாணனும் விறலி யும் வரவுணர்த்திச் சிவப்பாற்றுவித்தல். என்னை? இவர் வந்து நின் றதற்குத் தலைவி நம்மை இவர் நகையாடிவந்தாரென்று முனிந்தா ளாகத் தோழி இவரவன்செயலை யறிந்தாரல்லரென்றும், தலைவர்க் கியல்பு நம்மிடத்து வருதலும் அவரிடத்துச் சேறலுமெனவும் இய ல்பு சொல்லுதலாற் சிவப்பாற்றுவித்தாளாம். (௲எரு)

## தோழியியற்பழித்தல்.

தோழியியற்பழித்தலென்பது பாணன்வரவுரைத்த தோழி, இவள் வருந்த அயலாரிடத்து நல்குதலால் எம்முடைய வள்ளல்

இன்று தக்கிருந்திலனெனத் தலைமகளை யியற்பழித்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

திக்கினிலங்குதிண்டோளிறைதில்லைச்சிற்றம்பலத்துக்
கொக்கினிறகதணிந்துநின்றாடிதென்கூடலன்ன
வக்கினகையிவளையயல்வயினல்குதலாற்
றக்கின்றிருந்திலனின்றசெவ்வேலெந்தனிவள்ளலே.

தலைமகளைத் தகவிலனெனச்
சிலைநுதற்பாங்கி தீங்குசெப்பியது.

இ - ள். திக்கின் இலங்கு திண் தோள் இறை - திக்கின்கண் விளங்காநின்ற திண்ணிய தோள்களையுடைய விறைவன்—தில்லைச் சிற்றம்பலத்துக் கொக்கின் இறகது அணிந்து நின்றாடி - தில்லையிற் சிற்றம்பலத்தின்கட் கொக்கினிறகதனை யணிந்துநின்றாடுவான்—தென் கூடல் அன்ன - அவனது தெற்கின்கணுண்டாகிய கூடலை யொக்கும்—அக்கு இன் நகை இவள் நைய அயல்வயின் நல்குதலால் - அக்குமணிபோலும் இனியநகையையுடைய இவள் வருந்த அயலாரிடத்து நல்குதலால்—நின்ற செவ்வேல் எம் தனி வள்ளல்- எல்லாராலுமறியப்பட்டு நின்ற செவ்வேலையுடைய எம்முடைய வொப்பில்லாதவள்ளல்—இன்று தக்கிருந்திலன் - இன்றுதக்கிருந்திலன். எ - று.

அயல்வயினென்பதற்குப் பொருணசையுள்ளத்தராகலிற் காமத்திற்கயலென்றுரைப்பினு மமையும். தலைமகனது தகவின்மையென்பதூஉம் பாடம். (௩௭௬)

## உழையரியற்பழித்தல்.

உழையரியற்பழித்தலென்பது தோழி தலைமகளை யியற்பழித்துக் கூறாநிற்பக் கேட்டு, தன்மாட்டன்புடை நெஞ்சத்தையுடைய விவள்பேதுற இதற்குப் பிரியாமையின் வயலூரன் வரம்பிலனென உழையர் அவனை யியற்பழித்துக் கூறாநிற்றல். அதற்குச் செய்யுள்—

அன்புடைநெஞ்சத்திவள்பேதுறவம்பலத்தடியா
ரென்பிடைவந்தமிழ்தூறநின்றாடியிருஞ்கழியற்
றன்பெடைநையத்தகவழிந்தன்னஞ்சலஞ்சலத்தின்
வன்பெடைமேற்றுயிலும்வயலூரன்வரம்பிலனே.

அரத்தவேலண்ணல் பரத்தையிற்பிரியக்
குழைமுகத்தவளுக் குழையருரைத்தது.

இ - ள். அடியார் என்பிடை அமிழ்து வந்து ஊற - அடியவரென்புகளிடையே அமிழ்தம்வந்தூற—அம்பலத்து நின்றருடி இருஞ் சுழியல் - அம்பலத்தின்கண்ணே நின்றருடுவோனது பெரியசுழியலின்கண்—தன் பெடை கையத் தகவு அழிந்து - தன்பெடை வருந்தத் தகுதிகெட்டு—அன்னம் சலஞ்சலத்தின் வன் பெடைமேல் துயிலும்—அன்னஞ் சலஞ்சலத்தினது வலியபெடைமேற் கிடந்துறங்கும்—வயல் ஊரன் - வயலாற் சூழப்பட்ட ஊரையுடையவன்—அன்புடை நெஞ்சத்து இவள் பேதுற - தன்மாட்டன்பையுடைய நெஞ்சத்தையுடைய இவள் மயங்காநிற்ப இதற்குப் பிரியாமையின்—வரம்பு இலன் - தகவிலன். எ - று.

அன்புடைநெஞ்சத்திவளென்றதனால், பரத்தையரதன்பின்மை கூறப்பட்டதாம். இருஞ்சுழியலூரெனவியையும். சுழியலென்பது ஒரு திருப்பதி. வன்பெடையென்றதனாற் பரத்தையரது வன்கண்மை விளங்கும். ஒருசொல் வருவியாது பேதுறுதலான் வரம்பிலனென்றுரைப்பாருமுளர். உள்ளுறையுவமம் வெளிப்படநின்றது. இவையிரண்டற்கும் மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த நகை. பயன் தலைமகனை யியற்பழித்துத் தலைமகளை யாற்றுவித்தல்.

## இயற்படமொழிதல்.

இயற்பட மொழிதலென்பது தலைமகனை யியற்பழித்தவர்க்கு, அன்று நம்பொருட்டாக நம்புனத்தின்கண்ணே மாந்தழையேந்தி வந்தார் இன்று என்னெஞ்சத்தின்கண்ணார்; அதுகிடக்க, மறந்துறங்கினேனாயின் அமளியிடத்துவந்து என்பயோதரத்தைப் பிரியாதார்; இத்தன்மையாரை நீங்கள் கொடுமைகூறுகின்றதென்னோவெனத் தலைமகள் அவனையியற்பட மொழியாநிற்றல். அதற்குச் செய்யுள்—

அஞ்சார்புரஞ்செற்றசிற்றம்பலவரந்தண்கயிலை
மஞ்சார்புனத்தன்றுமாந்தழையேந்திவந்தாரவரென்
னெஞ்சார்விலக்கினுநீங்கார்நனவுகனவுமுண்டேற்
பஞ்சாரமளிப்பிரிதலுண்டோவெம்பயோதரமே.

வரிசிலையூரன் பரிசுபழித்த
உழையர்கேட்ப வெழினகையுரைத்தது.

இ - ள். அஞ்சார் புரம் செற்ற சிற்றம்பலவர் அம் தண் கயிலை - இறைவனென்று உட்காதாருடைய புரங்களைக்கெடுத்த சிற்றம்பலவரது அழகிய குளிர்ந்த கயிலைக்கண்—மஞ்சு ஆர் புன

ந்து - மஞ்சார்ந்த புனத்தின்கண்—அன்று மாந்தழை ஏந்தி வந்தார் அவர் நனவு என் நெஞ்சார்—அன்று மாந்தழையை யேந்திவந்தாராகிய அவர் இன்று நனவின் என்னெஞ்சத்தின்கண்ணார்—விலக்கினும் நீங்கார் - யான்றடுப்பினும் அவ்விடத்தினின்று நீங்கார்—கனவும் உண்டேல் - துயிலு முண்டாயின்—பஞ்சு ஆர் அமளி எம் பயோதரம் பிரிதல் உண்டோ - பஞ்சார்ந்தவமளிக்கண் எம்பயோதரத்தைப் பிரிதலுண்டோ! நீர் கொடுமைகூறுகின்றதென்! எ - று.

அஞ்சார் தறுகண்ணரெனினுமமையும். தழையேந்திவந்தாரென்பதனை முற்றென்று, இனிவந்தனசெய்து நம்மைப் பாதுகாத்தார் இன்றிவ்வாறொழுகுவரென் றுரைப்பினுமமையும். கனவுமுண்டேலென்பதற்குத் துயில்பெற்றுக் கனுக்காணினென்றுரைப்பினு மமையும். எனது நெஞ்சாரென்பதூஉம் வாரனைப் பரிசபழுத்தவென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகனை யியற்படமொழிந்தாற்றுதல். (கூஎஅ)

## நினைந்துவியந்துரைத்தல்.

நினைந்துவியந்துரைத்தலென்பது புனலாடப்பிரிந்து பரத்தையிடத் தொழுகாநின்ற தலைமகன், யான்றன்னை நினையாது வேறொன்றன்மேல் உள்ளத்தைச் செலுத்தும்வழியும் தானென்னை நினைந்து என்னுள்ளம் புகாநின்றாள்; அவ்வாறன்றி யான்றன்னை நினையுந்தோறும் பள்ளத்துப் புகும்புனல்போல நிறுத்த நில்லாது என் மனத்தா ளாகாநின்றாள்; ஆதலாற் பிரிந்து ஈண்டிருத்தல் மிகவுமரிதெனத் தலைமகளை நினைந்து வியந்து கூறாநிற்றல். அதற்குச் செய்யுள்—

தெள்ளம்புனற்கங்கைதங்குஞ்சடையன்சிற்றம்பலத்தான்
கள்ளம்புகுநெஞ்சர்காணுவிறையுறைகாழியன்னா
ளுள்ளம்புகுமொருகாற்பிரியா துள்ளியுள்ளுதொறும்
பள்ளம்புகும்புனல்போன்றகத்தேவரும்பான்மையளே.

மெல்லியற்பரத்தையை விரும்பிமேவினோன்
அல்லியங்கோதையை யகனமர்ந்துரைத்தது.

இ - ள். தெள்ளம் புனல் கங்கை தங்கும் சடையன் - தெளிய நல்லபுனலையுடைய கங்கைதங்குஞ் சடையையுடையவன்—சிற்றம்பலத்தான் - சிற்றம்பலத்தின்கண்ணான்—கள்ளம் புகு நெஞ்சர் காணு இறை - பொய்நுழையு நெஞ்சத்தையுடையவர் ஒரு

ஞான்றுங் காணாதவிறைவன்—உறை காழி அன்னாள் - அவனுறை கின்ற காழியையொப்பாள்—உள்ளி ஒருகால் பிரியாது உள்ளம் புகும் - யான்றன்னை நினையாது வேறொன்றன்மேலுள்ளத்தைச் செலுத்தும்வழியும் தானென்னைநினைந்து ஒருகாலும்பிரியாது என் னுள்ளம்புகாநின்றாள்—உள்ளுந்தொறும் - அவ்வாறன்றி யான்றன் னைநினையுந்தோறும்—பள்ளம் புகும் புனல் போன்று அகத்தே வரும் பான்மையள் - உயர்ந்தவிடத்தினின்றும் பள்ளத்திற்புகும் புனலையொத்துத் தடுப்பரியளாய் என்மனத்தின்கண்வரு முறை மையளாகாநின்றாள்; அதனாற் பிரிந்தீண்டிருத்தல் அரிதுபோலும். எ - று.

தெள்ளம்புனல் மெல்லம்புலம்பு போல்வதோர் பண்புத்தொ கை. மெய்ப்பாடு மருட்கை. பயன் பரத்தையினீங்கித் தலைமகளி டத்தணைதல். (௫எ௬)

## வாயில்பெறாதுமகன்றிறநினைதல்.

வாயில்பெறாதுமகன்றிறநினைதலென்பது பரத்தையிற் பிரி ந்து நினைவோடுவந்த தலைமகன் வாயிற்கணின்று, இத்தன்மையான் என்னைவந் தணைகின்றிலன்; யான் இனி வண்டுறையுங் கொங்கை யை எவ்வாறு நண்ணுவதென்று வாயில்பெறாது மகன்றிற நினையா நிற்றல். அதற்குச்செய்யுள்—

**தேன்வண்டுறைதருகொன்றையன்சிற்றம்பலம்வழுத்தும்**
**வான்வண்டுறைதருவாய்மையன்மன்னுகுதலையின்வா**
**யான்வண்டுறைதருமாலமுதன்னவன்வந்தணையா**
**னென்வண்டுறைதருகொங்கையெவ்வாறுகொனண்ணுவதே.**

பொற்றொடிமாதர் நற்கடைகுறுகி
நீடியவாயிலின் வாடினன்மொழிந்தது.

இ - ள். தேன் வண்டு உறைதரு கொன்றையன் சிற்றம்பலம் வழுத்தும் - தேனும் வண்டுமுறையும் கொன்றைப்பூவையணிந்தவ னது சிற்றம்பலத்தை வழுத்தும்—வான் வள் துறை தரு வாய்மை யன் - வானிடத்துளவாகிய வளவியவிடங்களை எனக்குத்தரு மெ ய்ம்மையையுடையான்—மன்னு குதலை இன் வாயான் - நிலைபெற்ற குதலையையுடைய இனியவாயையுடையான்—வள் துறை தரு மால் அமுது அன்னவன் - வளவிய கடல் தந்த பெருமையையுடைய அமிர்தத்தையொப்பான்—வந்து அணையான் - அவன் என்னைவந் தணைகின்றிலன்—வண்டு உறைதரு கொங்கை நான் நண்ணுவது

எவ்வாறு கொல்-நறுநாற்றத்தால் வண்டுகளுறையுங் கொங்கையை யுடையாளை யான்பொருந்துவது இனியெவ்வாறோ! எ - று.

தேனை நுகரும் வண்டெனினுமமையும். வழுத்துவார்பெறும் வானென்பது வழுத்தும் வானென இடத்துநிகழ்பொருளின் றொழில் இடத்துமேலேறிற்று. இப்பொழுது குதலையையுடைத்தாகிய வாயான் மேல்வளவிய நாற்றுறைகளைச்சொல்லி எனக்கின்பத்தைச்செய்யும் அமிழ்தன்னவளென்றுரைப்பினு மமையும். வாயிலின்-வாயிலால். மெய்ப்பாடு அழுகை. பயன் வாயில்கோடல். நெஞ்சொடு சொல்லியது (௫௮௦)

## வாயிற்கணின்றுதோழிக்குரைத்தல்.

வாயிற்கணின்று தோழிக்குரைத்தலென்பது வாயில்பெறாது மகன்றிறநினையாநின்ற தலைமகன், நல்லநாட்டுப்பொலியும் மகளிர் தங்கண்ணிணையான்வந்த அச்சத்தால்வந்த மயக்கத்தால் உண்டாகிய வாட்டத்தை நீக்காத இவ்விரதம் யாதாமென வாயில்வேண்டித் தோழிக்குக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

கயல்வந்தகண்ணியர்கண்ணிணையான்மிகுகாதரத்தான்
மயல்வந்தவாட்டமகற்றாவிரதமென்மாமதியி
னயல்வந்தவாடரவாடவைத்தோனம்பலநிலவு
புயல்வந்தமாமதிற்றில்லைநன்னாட்டுப்பொலிபவரே.

பெருந்தகைவாயில் பெறாதுநின்
றருந்தகைப்பாங்கிக் கறியவுரைத்தது.

இ - ள். வந்த ஆடரவு மா மதியின் அயல் ஆட வைத்தோன் அம்பலம் நிலவு-ஏதங்குறித்துவந்த ஆடரவைப்பெருமையையுடைய பிறையின்பக்கத்து அதனைவருந்தாமற்செய்து ஆடவைத்தவனது அம்பலம் நிலைபெற்ற—புயல் வந்த மா மதில் தில்லை நல் நாட்டுப் பொலிபவர் - புயல்தங்கிய பெரியமதிலையுடைய தில்லையைச்சூழ்ந்த நல்லநாட்டிற்பொலியும் மகளிர்—கயல் வந்த கண்ணியர் கண் இணையால் - கயல்போலுங் கண்ணையுடையவர் கண்ணிணையால்—மிகு காதரத்தான் மயல் வந்த வாட்டம் - ஒருகாலைக்கொருகால் மிகாநின்ற அச்சத்தால்வந்த மயக்கத்தாலுண்டாகிய வாட்டத்தை—அகற்றா விரதம் என் - நீக்காத இவ்விரதம் யாதாம். எ-று.

தில்லைநன்னாட்டுப்பொலிபவர் அகற்றாதவெனவியையும்.பொலிபவர்க்கு என்னு நான்கனுருபு விகாரவகையாற் றொக்கதெனினு மமையும். இது முன்னிலைப்புறமொழி. இதனுள் கயல்வந்த கண்

ணியரென்றது தலைமகளை, தில்லைநன்னாட்டுப் பொலிபவரென்றது தோழியை. இனி மதிக்குவமை தலைமகளும் அரவிற்குவமை தலைமகனும் ஈசனுக்குவமை தோழியுமென்றாக்கி, அவ்வகைத்தாகிய பாம்பையும் மதியையும் தம்மிற்பகையறுத்து ஓரிடத்தே விளங்க வைத்தாற்போல என்னுடன் அவட்குண்டாகிய வெறுப்பைத் தீர்த்து விளங்கவைத்தல் உனக்குங் கடனென்றானாயிற்றென உள்ளுறைகாண்க. மதியையரவேதங் குறித்து வந்தாற்போலத் தலைமகளைத் தலைமகனேதங்குறித்து வருதலாவது தலைமகளுக்கு ஊடல் புலவி துனியென்னும் வெறுப்புத் தோன்றுதற்குத் தக்க காரணங்களைத் தலைமகன் உண்டாக்கிக்கொண்டு வருதல். அரவைக்கண்டு மதிக்கச்சந்தோன்றினாற்போலத் தலைமகனைக்கண்டு தலைமகளுக்கும் ஊடல் புலவி துனியென்னும் வெறுப்புத்தோன்றிற்று; ஆதலால் அத்தலைமகனையும் தலைமகளையும் மதிக்குமரவுக்குமொப்பச் சிலேடித்த சிலேடைக்கு மறுதலையாகாது, "தேவ ரனையர் கயவர்" * என்றாற்போலவாமெனக் கொள்க. கயல்வந்த கண்ணியர் கண்ணிணையால் வந்த அச்சத்தால் வந்த மயக்கத்தால் வந்த வாட்டம் இவனுக்கு வருதற்குக்காரணம் தலைவி பராமுகஞ்செய்யும்படி தான் வருந்தல். இதனைத் தீர்த்தல் தில்லைநன்னாட்டுப் பொலியு மகளிர்க்குக் கடனென்றானெனக் கொள்க. அது "பிணிக்கு மருந்து பிறமணியிழை—தன்னோய்க்குத் தானே மருந்து" † என்றும், "துறைமேய்வலம்புரி தோய்ந்துமணலுழுத தோற்றமாய்வான்—பொறைமலிபூம்புன்னைப் பூவுதிர் நுண்டாது போர்க்குங்கான—னிறைமதிவாண்முகத்து நீள்கயற்கண் செய்த—வுறைமலி யுய்யாநோ யூர்சுணங்கு மென்முலையே தீர்க்கும்போலும்" ‡ என்றும், சொல்லியவாறுபோலக் கண்ணாலுண்டாகிய நோய்க்குக் கண்ணே மருந்தாமென்று சொல்லியவாறுமெனக் கொள்க. மெய்ப்பாடும் பயனும் அவை. தோழியை வாயில்கோடற் கிவ்வகை சொன்னானென்பது.

## வாயில்வேண்டத்தோழிகூறல்.

வாயில்வேண்டத் தோழிகூறலென்பது வாயில்வேண்டிய தலைமகனுக்கு, பண்டு நீர் வரும் வழியிடை வருமேதமும் இருளுமெண்ணாது கன்றையகன்ற ஈற்றாவையொத்து எம்மாட்டு வருதிர்; இன்று எம்பொருந்தாதார் தெருவே அன்று எம்மாட்டேர்ந்துவந்த

* திருக்குறள், கயமை. ௧.
† ,, புணர்ச்சிமகிழ்தல். ௨.
‡ சிலப்பதிகாரம், கானல்வரி. ௮.

தேர்மேலேறிப் போகாநின்றீர்; இதுவன்றே எம்மாட்டு நுமதரு ளெனத் தோழி அவன்செய்தி கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

கூற்றாயினசினவாளியெண்ணீர்கண்கள்கோளிழித்தாற்
போற்றான்செறியிருட்பொக்கமெண்ணீர்கன்றகன்றபுனிற்
றீற்றாவெனநீர்வருவதுபண்டினம்றெம்மீசர்தில்லைத்
தேற்றார்கொடிநெடுவீதியிற்போதிரத்தேர்மிசையே.

வைவேலண்ணல் வாயில்வேண்டப்
பையரவல்குற் பாங்கிபகர்ந்தது.

இ - ள். கூற்றாயின சின ஆளி எண்ணீர் - கூற்றம்போலக் கொடியவாகிய சினத்தையுடைய யாளிகளை ஊறுசெய்வனவாகக் கருதாது—கண்கள் கோள் இழித்தால் போல் தான் செறி இருள் பொக்கம் எண்ணீர் - கண்களைக் கோளிழித்தாற்போலச் செறிந்த விருளின் மிகுதியைத்தான் இடையூறாகநினையாது—கன்று அகன்ற புனிற்று ஈற்றா எனப் பண்டு நீர் வருவது - கன்றையகன்ற ஈன்றணிமையையுடைய ஈற்றாவையொத்துப் பண்டு நீர் எம்மாட்டு வருவது—இன்று எம் ஈசர் தில்லைத் தேற்றார் கொடி நெடு வீதியில் - இன்று எம்முடையவீசரது தில்லையிலே எமது பொருந்தா தாரது கொடியையுடைய நெடியவீதியில்—அத் தேர்மிசைப் போதிர் - எம்மாட்டேர்ந்துவந்த தேர்மேலேறிப் போகாநின்றீர்; இதுவன்றே எம்மாட்டு நும்மருளாயினவாறு. எ - று.

ஆளியெண்ணீர் பொக்கமெண்ணீர் என்பனவற்றை முற்றாக வுரைப்பினுமமையும். கண்களுக்குக் கோளென்றது பார்வை. இதனை இழித்தலென்பது கண்மணியைவாங்குதல். தானென்பது அதுவன்றி இதுவொன் றென்பதுபட நின்றதோரிடைச்சொல்; அசைநிலையெனினுமமையும். ஈற்றாவென்றது கடுஞ்சூல் நாகன் றிப் பலகாலீன்ற ஆவை. மெய்ப்பாடு வெகுளி. பயன் வாயின் மறுத்தல். (௩அ௨)

## தோழிவாயில்வேண்டல்.

தோழிவாயில்வேண்டலென்பது தலைமகளுக்கு அவன் செய் தது கூறிச்சென்று, அன்று நம்புனத்தின்கண்ணேவந்து யானைக டிந்தவிருந்தினர் தாந்தம் பெருமையை நினையாது இன்று நம் வாயிற்கண்வந்து, வேட்கைப்பெருக்கந் தம்மிடத்துச் சிறப்ப நின்று ஒன்றும் வாய்திறக்கின்றிலர்; இதற்கியாஞ் செய்யுமாறென்

ளேவெனத் தலைமகளைத் தோழி வாயில் வேண்டாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**வியந்தலைநீர்வையமெய்யேயிறைஞ்சவிண்டோய் குடைக்கீழ்**
**வயந்தலைகூர்ந்தொன்றும்வாய்திறவார்வந்தவாளரக்கன்**
**புயந்தலைதீரப்புலியூரானிருக்கும்பொருப்பிற்**
**கயந்தலையானைகடிந்தவிருந்தினர்கார்மயிலே.**

வாயில்பெறுது மன்னவனிற்ப
ஆயிழையவட்குத் தோழிசொல்லியது.

இ - ள். கார்மயிலே - கார்காலத்து மயிலையொப்பாய்—வந்த வாள் அரக்கன் புயம் தலை தீர - வரையை யெடுக்கவந்த வாளினையுடைய அரக்கனது கையுந் தலையும் உடலினிங்க—புலியூர் அரன் இருக்கும் பொருப்பின் - புலியூரரன் வாளாவிருக்குங் கைலைப் பொருப்பின்கண்—கயம் தலை யானை கடிந்த விருந்தினர் - மெல்லிய தலையையுடைய யானையை நம்மேல்வாராமல் அன்றுமாற்றிய நம்விருந்தினர்—விண் தோய் குடைக் கீழ் - தமது விண்ணைத்தோயாநின்ற குடைக்கீழ்—அலை நீர் வையம் வியந்து மெய்யே இறைஞ்ச - கடலாற் சூழப்பட்ட வுலகத்துள்ளாரெல்லாரும் வியந்து சென்று அகனமர்ந்திறைஞ்ச—வயம் தலைகூர்ந்து ஒன்றும் வாய் திறவார் - தாந்தமது பெருமைநினையாது நங்கடைவந்து நின்று வேட்கைப்பெருக்கந் தம்மிடத்துச் சிறப்ப ஒன்றுஞ் சொல்லுகின்றிலர்; இனி மறுத்தலரிது. எ - று.

விண்டோய்குடைக்கீழிறைஞ்சவெனவியையும். வயா வயமெனநின்றது. இருந்த துணையல்லது ஒருமுயற்சி தோன்ருமையின், இருக்குமென்ருர். சிற்றிலிழைத்து விளையாடும்வழி விருந்தாய்ச்சென்று நின்ருணுகலின், விருந்தினரென்ருள். இற்செறிக்கப்பட்ட விடத்து ஊண்காலத்து விருந்தாய்ச் சென்ருணுகலின் விருந்தினரென்ருளெனினு மமையும், "புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்—பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்" * என்பது இலக்கணமாதலின். கார்ப்புனத்தேயென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு இளிவரல். பயன் தலைமகளைச் சிவப்பாற்றுவித்தல். (௩௮௩)

## மனையவர்மகிழ்தல்.

மனையவர்மகிழ்தலென்பது தோழி வாயில்வேண்டத் தலைமகள் துனித்த நோக்கங்கண்டு, ஓகைகொண்டு செல்லவேண்டிக்

* தொல். பொருள். களவு. ௧௬.

காதலன் வந்தானென்று சொல்லுமளவில் இவளுடைய காவியங் கண்கள் கழுநீர்ச்செவ்வியையெள்வுதல் கற்றனவென மனையவர் தம்முண் மகிழ்ந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**தேவியங்கண்டிகழ்மேனியன்சிற்றம்பலத்தெழுது மோவியங்கண்டன்னவொண்ணுதலாடனக்கோகையுய்ப்பான், மேவியங்கண்டனையோவந்தனனெனவெய்துயிர்த்துக் காவியங்கண்கழுநீர்ச்செவ்விவெள்வுதல்கற்றனவே.**

கன்னிமாதுேக்கி கனன்றுநோக்க
மன்னியமனையவர் மகிழ்ந்துரைத்தது.

இ - ள். தேவி அங்கண் திகழ் மேனியன் சிற்றம்பலத்து எழுதும் - தேவியவ்விடத்து விளங்குமேனியையுடையவனது சிற்றம்பலத்தின்கண் எழுதப்பட்ட—ஓவியம் கண்டன்ன ஒண்ணுதலாள் தனக்கு ஓகை உய்ப்பான் - ஓவியத்தைக் கண்டாற்போலும் ஒண்ணுதலையுடையாள் தனக்கு ஓகைகொண்டு செல்லவேண்டி—வந்தனன் மேவு இயம் கண்டனையோ என வெய்துயிர்த்து - காதலன்வந்தான் வந்துபொருந்துகின்ற இயவொலிகேட்டனையோவென்று கண்டார் வந்துசொல்லக்கேட்டு வெய்தாகவுயிர்த்து—காவியங்கண் கழுநீர்ச் செவ்வி வெளவுதல் கற்றன - குவளைப்பூப்போலுங்கண்கள் கழுநீர்மலர்ச்செவ்வியை வெளவுதல்வல்லவாயின! இனியென்னிகழும்! எ - று.

அங்கட்டிகழ் மேனியென்பது மெலிந்து நின்றது. தேவியுடைய வழகியகண்மலர்கள் சென்றுவிளங்கு மேனியையுடையவனெனினு மமையும். மேவியங்கண்டனையோவந்தனனென வென்பதற்கு, அழகிய கண்டன் வந்தானென்று மேவியுரைப்பவெனினு மமையும். ஐயோவென்றது உவகைக்கண் வந்தது. வெய்துயிர்த்தற்கு வினைமுதல் உயிர்த்தற்குக் கருவியாகிய பொறியெனினு மமையும். மெய்ப்பாடு அழுகை. பயன் தலைமகள் வாயினேராமையுணர்த்துதல். (௩அச)

## வாயின்மறுத்துரைத்தல்.

வாயின்மறுத்துரைத்தலென்பது மனையவர் துனிகண்டு மகிழாநிற்ப, இவனை நமக்குத் தந்தபின்னர் நம்முடைய வாயத்தார் முன்னே நங்காதலர் இன்று நங் கடையைக்கண்டார்; இதுவன்றோ நம்மாட்டு அவரருளெனத் தோழிக்குத் தலைமகள் வாயின்மறுத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**உடைமணிகட்டிச்சிறுதேருருட்டியுலாத்தருமிந்**
**நடைமணியைத்தந்தபின்னர்முன்னான்முகன்மாலறியா**
**விடைமணிகண்டர்வண்டில்லைமென்றோகையன்னார்கண்மு**
**ன்னங், கடைமணிவாணகையாயின்றுகண்டனர்காதலரே.**

மடவரற்றோழி வாயில்வேண்ட
அடல்வேலவ னாரருளுரைத்தது.

இ - ள். மணி வாள் நகையாய் - முத்துப்போலுமொளியையு டைய நகையையுடையாய்—உடை மணி கட்டிச் சிறுதேர் உருட்டி உலாத்தரும் - உடைமணியை யரையிற்கட்டிச் சிறுதேரையுருட்டி உலாவும்—இந் நடை மணியைத் தந்த பின்னர் - இவ்வியங்குதலையுடைய இந்தமணியை நமக்குத்தந்தபின்—முன் நான்முகன் மால் அறியா - முற்காலத்து நான்முகனுமாலுந் தேடியுமறியாத—விடை மணிகண்டர் வள் தில்லை மென் தோகை அன்னார்கள் முன் - விடையையுடைய மணிசண்டரது வளவிய தில்லையின் மெல்லிய மயிலையொப்பார்கண் முன்னே—நம் கடை காதலர் இன்று கண்டனர் - நங்கடையைக் காதலர் இன்றுகண்டார்; இதுவன்றோ நம்மாட்டு அவரருள். எ - று.

கட்டியென்பது ஈண்டுத் தங்கியென்னும்பொருட்டாய் நின்றது. நடைமணியென்றது புதல்வனை. விடமணிகண்டரென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு வெகுளி. பயன் வாயின்மறுத்தல். ()

## பாணனொடுவெகுளுதல்.

பாணனொடு வெகுளுதலென்பது, தோழிக்கு வாயின்மறுத்த தலைமகள், நின்னிடத்து அவர்நீங்காத வருள்பெரியரென்று நீ சொல்லவேண்டுமோ? அதுகிடக்க, கொற்சேரியி லூசிவிற்றுப் புலையா எம்மில்லத்து நின்னுடைய நல்லநல்ல பொய்யைப்பொருந்தி நிற்கலுற்றோ நீ போந்ததெனை வாயில்வேண்டிய பாணனொடு வெகுண்டு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**மைகொண்டகண்டர்வயல்கொண்டதில்லைமல்கூரர்நின்**
**வாய், மெய்கொண்டவன்பினரென்பதென்விள்ளாவருள்பெ**
**ரியர், வைகொண்டவூசிகொற்சேரியின்விற்றெம்மில்வண்ண**
**வண்ணப்,பொய்கொண்டுநிற்கலுற்றோபுலையாத்தின்னிபோந்**
**ததுவே.**

மன்னியாழ்ப்பாணன் வாயில்வேண்ட.
மின்னிடைமடந்தை வெகுண்டுரைத்தது.

இ - ள். மை.கொண்ட கண்டர் வயல் கொண்ட தில்லை மல்கு ஊரர் - கருமையைப்பொருந்திய கண்டத்தையுடையவரது வயலைப்பொருந்திய தில்லைக்கண்ணுளராகிய வளமல்கியவூரையுடையவர்—நின்வாய் மெய் கொண்ட அன்பினர் என்பதென் - நின்கண் மெய்ம்மையைப்பொருந்திய வன்பையுடையரென்று நீசொல்லவேண்டுமோ—விள்ளா அருள் பெரியர் - அவர் எம்மிடத்து நீங்காதவருள் பெரியரன்றே? அதுகிடக்க —வை கொண்ட ஊசி கொல் சேரியின் விற்று - கூர்மையைப்பொருந்திய ஊசியைக் கொற்சேரியின்கண் விற்று—எம் இல் வண்ண வண்ணப் பொய் கொண்டு நிற்கல் உற்றே - எம்மில்லத்து நின்னுடைய நல்லநல்ல பொய்ம்மையைப்பொருந்தி நிற்கலுற்றே——புலை ஆத் தின்னி - புலையனாகிய ஆத்தின்னி—போந்தது - ஈண்டு நீ போந்தது! இது சாலநன்று! எ - று.

மெய்கொண்ட வன்பினரென்று சொல்லுகின்றதென்?நின் வாயிலவர் விள்ளாவருள்பெரியரன்றேவென் றுரைப்பினுமமையும். ஊசிகொற் சேரியின்விற்றென உவமவினை உவமிக்கப்படும் பொருண்மேலேறி நின்றது. அடுக்கு பன்மைக்கண் வந்தது. ஆத்தின்னியென்பதனை முன்னிலைக்கண் வந்ததாக வுரைப்பினுமமையும். விற்குநின்னென்பதூஉம் பாடம். மெய்ப்பாடும் பயனும் அவை. ()

## பாணன்புலந்துரைத்தல்.

பாணன் புலந்துரைத்தலென்பது தலைமகள் வெகுண்டுரையாநிற்ப, நின்புருவநெரிய வாய்துடிப்ப என்னை யெறிதற்குக் கல்லெடுக்கவேண்டா; நினது கரியகண்களின் சிவப்பாற்றுவாயாக; நீ வெகுளப்படுவதன்று; நினக்குப் பல்லாண்டு செல்வதாக; யான் வேண்டியவிடத்துப் போக நின்னடியை வலங்கொள்ளாநின்றேனென வாயில்பெறுமையிற் பாணன் புலந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்—

**கொல்லாண்டிலங்குமழுப்படையோன்குளிர்தில்லையன்னாய்**
**வில்லாண்டிலங்குபுருவநெரியச்செவ்வாய்துடிப்பக்**
**கல்லாண்டெடேல்கருங்கண்சிவப்பாற்றுகறுப்பதன்று**
**பல்லாண்டடியேனடிவலங்கொள்வன்பணிமொழியே.**

கருமலர்க்கண்ணி கனன்றுகட்டுரைப்பப்
புரியாழ்ப்பாணன் புறப்பட்டது.

இ - ள். கொல் ஆண்டு இலங்கு மழுப் படையோன் குளிர் தில்லை அன்னாய் - கொற்றொழில் அவ்விடத்து விளங்கும் மழுவாகிய படையையுடையவனது குளிர்ந்த தில்லையையொப்பாய்—வில் ஆண்டு இலங்கு புருவம் நெரியச் செவ்வாய் துடிப்ப - வில்லையடிமைக்கொண்டு விளங்காநின்ற புருவநெரியச் செவ்வாய்துடிப்ப—கல் ஆண்டு எடேல் - எறிதற்குக் கல்லை அவ்விடத்தெடுக்கவேண்டா—கருங்கண் சிவப்பு ஆற்று - கரியகண்களைச் சிவப்பாற்றுவாயாக—கறுப்பது அன்று - வெகுளப்படுவதன்று—பல்லாண்டு-நினக்குப் பல்லாண்டுகள் உளவாகவேண்டும்—பணிமொழி - பணிமொழியையுடையாய்—அடியேன் அடி வலங்கொள்வன் - யான் வேண்டிய தேயத்துக்குப்போக அடியேன் நின்னடியை வலங்கொள்ளாநின்றேன். எ - று.

கருங்கண்ணினது சிவப்பெனினுமமையும். பல்லாண்டென்றது தலைமகனுடனுண்டாகிய வெறுப்புத் தீர்ந்து கூடியிருமென்று சொல்லியது நமக்குத் தவறாயிற்றாயின் பல்லாண்டும் இப்படியிருப்பீரென்றான். இப்படியிருப்பீரென்றது பல்லாண்டுமிப்படித் தனித்திருப்பீரென்று வளமாகத் தன்பாணவார்த்தை சொல்லியவாறென்றறிக. புருவநெறிக்கவென்பதூஉம் வெவ்வாயென்பதூஉம் பாடம். புரி-நரம்பு. மெய்ப்பாடு அச்சம். பயன் சிவப்பாற்றுவித்தல். (௩௮௭)

## விருந்தொடுசெல்லத்துணிந்தமைகூறல்.

விருந்தொடுசெல்லத் துணிந்தமைகூறலென்பது வாயில் பெறாது பாணன் புலந்து நீங்காநிற்ப, யாவர்க்கும் வாயினேராது வெகுண்டுரைத்தலாற் றழல்வேல்போல மிளிர்ந்து முத்தம்பயக்குமிவளுடையகண்கள் விருந்தொடு வந்தானென்று சொல்லுமளவிற் பண்டைநிறமாகிய கருங்குவளையதுசெவ்வி பரந்த; என்ன மனையறக் கிழத்தியோவென இல்லோர் தம்முட் கூறாநிற்றல். அதற்குச் செய்யுள்—

மத்தக்கரியுரியோன்றில்லையூரன்வரவெனலுந்
தத்தைக்கிளவிமுகத்தாமரைத்தழல்வேன்மிளிர்ந்து
முத்தம்பயக்குங்கமுநீர்விருந்தொடென்றதமுன்னங்
கித்தக்கருங்குவளைச்செவ்வியோடிக்கெழுமினவே.

பல்வளை பரிசுகண்
டில்லோ ரியம்பியது.

இ - ள். மத்தக் கரி உரியோன் தில்லை ஊரன் வரவு எனலும் - களிப்பையுடைத்தாகிய யானையின்றோலையுடையவனது தில்லையூர னது வரவென்று சொல்லத்தொடங்குதலும்—தத்தைக் கிளவி முகத் தாமரைத் தழல் வேல் மிளிர்ந்து - கிளியின்மொழிபோலும் மொழியையுடையாளது முகமாகிய தாமரைக்கண்ணே தழலையு டையவேல்போலப் பிறழ்ந்து—முத்தம் பயக்கும் கழுநீர் - நீர்த் துளியாகிய முத்தத்தையுண்டாக்காநின்ற கண்ணாகிய செங்கழுநீர் மலர்—விருந்தொடு என்னாத முன்னம் - விருந்தோடென்று சொ ல்லுவதற்கு முன்—கித்தக் கருங்குவளைச் செவ்வி ஓடிக் கெழு மின - விரையப் பண்டைநிறமாகிய கரியகுவளைச்செவ்வி பரந்து மேவின! என்னமனையறக்கிழத்தியோ! எ - று.

மத்தம் மதமென்பாருமுளர். ஊரன்வரவென வினையெச்ச மாகப் பிரிப்பினுமமையும். கித்தமென்பதனைச் செய்யப்பட்ட தென்னும் பொருளதோர் வடமொழித் திரிபென்பாருமுளர். விரு ந்துவாயிலாகப் புக்கவழி இல்லோர் சொல்லியது. மெய்ப்பாடு உவ கை. பயன் மெய்ம்மகிழ்தல். (௩௮௮)

## ஊடறணிவித்தல்.

ஊடறணிவித்தலென்பது விருந்தேற்றுக்கொண்ட தலைமகளு ழைச்சென்று, நம்முடைய தோன்றலைத் தனக்குத் துணையாகக் கொண்டுவந்து தோன்றுதலான் நினதுளத்துக் கவற்சியையொ ழிந்து இனி நம்மரசற்குக் குற்றேவல் செய்வாயாகவெனத் தோழி அவளை யூடறணிவியாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**கவலங்கொள்பேய்த்தொகைபாய்தரக்காட்டிடையாட்டுவந்த**
**தவலங்கிலாச்சிவன்றில்லையன்னாய்தழுவிம்முழுவிச்**
**சுவலங்கிருந்தநந்தோன்றற்றுணையெனத்தோன்றுதலா**
**லவலங்களைந்துபணிசெயற்பாலையரசனுக்கே.**

தோன்றலைத்துணையொடு தோழிகண்டு
வான்றகைமடந்தையை வருத்தந்தணித்தது.

இ - ள். கவலம் கொள் பேய்த் தொகை பாய்தர - கவற்சி கொள்ளுதற்கேதுவாகிய பேய்த்திரள் கரணங்களைப் பாயா நிற்ப—காட்டிடை ஆட்டு உவந்த - புறங்காட்டின்கண் ஆடுதலை விரும்பிய—தவல் அங்கு இலாச் சிவன் தில்லை அன்னாய் - கேடங் கில்லாத சிவனது தில்லையையொப்பாய்—தழுவி முழுவி சுவல் அங்கு இருந்த - தழுவி முத்தங்கொண்டு சுவலிடத்தேறியிருந்த—

நம் தோன்றல் துணை எனத் தோன்றுதலால் - நம்முடைய தோன்றலைத் தமக்குத் துணையெனக்கருதி வந்து தோன்றுதலான்— அவலம் களைந்து அரசனுக்குப் பணி செயற்பாலை - நினதுள்ளத்துக் கவற்சியைநீக்கி இனியரசற்குக் குற்றேவல் செயற்பாலை. எ - று.

தழுவிமுழுவித்தோன்றுதலாலெனை வினையும். சுவற்கணங்கிருந்தவெனினு மமையும். மெய்ப்பாடு பெருமிதம். பயன் தலைமகளைச் சிவப்பாற்றுவித்தல். (௩௮௯)

## அணைந்தவழியூடல்.

அணைந்தவழியூடலென்பது தோழியாலூடல் தணிவிக்கப்பட்டுப் பள்ளியிடத்தாளாகிய தலைமகள், நீ செய்கின்றவிதனை யறியின் நின் காதலிமார் நின்னைவெகுள்வர்; அதுகிடக்க, யாம் மேனி முழுதுஞ் சிறுவனுலுண்டாக்கப்பட்ட பால்புலப்படும் தன்மையையுடையேம்; அதன்மேல் யாமும் நீ செய்கின்றவிக் கள்ளத்தை விரும்பேம்; அதனால் எங்காலைத் தொடாதொழி; எங்கையை விடுவாயாக எனத் தலைமகன் றன்னையணைந்தவழி யூடாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சேறுன்றிகழ்வயற்சிற்றம்பலவர்தில்லைநகர்வாய்
வேறுன்றிகழ்கண்ணிளையார்வெகுள்வர்மெய்ப்பாலன்செய்த
பாறுன்றிகழும்பரிசினமேவும்படிறுவவேங்
காறுன்றொடேறொடேரேல்விடுதீண்டலெங்கைத்தலமே.

தெளிபுனலூரன் சென்றணைந்தவழி
ஒளிமதிநுதலி யூடியுரைத்தது.

இ - ள். சேல் திகழ் வயல் - சேல்விளங்கும் வயலையுடைய— சிற்றம்பலவர் தில்லை நகர்வாய் வேல் திகழ் கண் இளையார் - சிற்றம்பலவரது தில்லைநகரிடத்துளராகிய வேல்போலுங் கண்ணையுடைய நின்காதலிமாராகிய விளையவர்—வெகுள்வர் - நீசெய்கின்றவிதனையறியின் நின்னைவெகுள்வர்,அதுவேயுமன்றி—மெய் பாலன் செய்த பால் திகழும் பரிசினம் - மேனி சிறுவனுலுண்டாக்கப்பட்ட பால்புலப்படுந் தன்மையையுடையேமாதலின் நினக்குத் தகேம்—மேவும் படிறு உவவேம் - இதன்மேலே யாமும் நீயும் மேவுநாணின்மையோடுகூடிய கள்ளத்தை விரும்பேம்—கால் தொடல்-அதனால் எங்காலைத் தொடாதொழி—தொடரேல்-எம்மைத் தொடரவேண்டா——எம் கைத்தலம் தீண்டல் - எங்கைத்தலத்தைத் தீண்டற்பாலையல்லை—விடு - விடுவாயாக. எ - று.

திகழ்வயற்றில்லையென வியையும். பால் திகழுமென்னும் இடத்துநிகழ்பொருளின்வினை மெய்யாகிய விடத்துமேலேறிநின்றது. நான்கிடத்தும் தானென்பது அசைநிலை. பரிசினமேனுமென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு வெகுளி. பயன் ஊடனீங்குதல். (௫௬௦)

## புனலாட்டுவித்தமைகூறிப்புலத்தல்.

புனலாட்டுவித்தமை கூறிப்புலத்தலென்பது அணைந்தவழியூடாநின்ற தலைமகள் ஊடறீராநின்ற தலைமகனோடு, இவர்செய்த பிழையெல்லாம் பொறுக்கலாம்; பலருமறிய வொருத்தியைப் புனலாட்டுவித்து அது செய்யாதார்போல என்மனையின்கணிவர்வந்து நிற்கின்றவிது எனக்குப் பொறுத்தலரிதெனத் தணிக்கத் தணியாது பரத்தையைப் புனலாட்டுவித்தமை கூறிப் புலவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

செந்தார்நறுங்கொன்றைச்சிற்றம்பலவர்தில்லைநகரோர்
பந்தார்விரலியைப்பாய்புனலாட்டிமன்பாவியெற்கு
வந்தார்பரிசுமன்றாய்நிற்குமாறென்வளமனையிற்
கொந்தார்தடந்தோள்விடங்காலயிற்படைக்கொற்றவரே.

ஆங்கதனுக் கழுக்கமெய்தி
வீங்குமென்முலை விட்டுரைத்தது.

இ - ள். கொந்து ஆர் தடந்தோள் விடம் கால் அயில் படைக் கொற்றவர் - கொத்துமாலைநிறைந்த பெரியதோளினையும் நஞ்சைக் காலுங் கூரியபடையையுமுடைய கொற்றவர்—பாவி யெற்கு என் வள மனையின் நிற்குமாறு - தீவினையேற்கு எனது வளமனையில்வந்து நிற்கின்றபடி—ஓர் பந்து ஆர் விரலியைப் பாய் புனல் ஆட்டி-பந்துபயின்ற விரலாளொருத்தியைப் பாய்ந்த புனலையாட்டுவித்து—வந்தார் பரிசும் அன்றாய் - வெளிப்படத்தவறுசெய்து வந்தார் சிலர் நிற்கும்பரிசுமன்றாய் மனத்தவறு செய்யாதார் வந்து நிற்குமாறு வந்து நின்றாராயின்; அது பொறுத்தலரிது. எ - று.

செந் தார் நறுங் கொன்றைச் சிற்றம்பலவர் தில்லை நகர் பாய் புனலாட்டி - செய்ய தாராகிய நறிய கொன்றைப்பூவினையுடைய சிற்றம்பலவரது தில்லையாகிய நகர்வரைப்பிற் பாயும்புனலையாட்டி யெனக்கூட்டுக.

தில்லைநகரோர்பந்தார்விரலியென வியைப்பினுமமையும். மன் ஒழியிசைக்கண்வந்தது, அசைநிலையெனினு மமையும். ஒருத்தியைப் புனலாட்டிவந்தார்பரிசுமன்றாய்க் கொற்றவர் மனைக்கண்

வந்து நிற்குமாறென்னென்று கூட்டியுரைப்பினு மமையும். கொத்துமாலை பலவாயொன்ருகியமாலை. ஆங்கதனுக்கு-அப்படிற்று நிலையால். விட்டுரைத்தது-வெளிப்படவுரைத்தது. மெய்ப்பாடும் பயனும் அவை. (௬௱௧)

## கலவிகருதிப்புலத்தல்.

கலவிகருதிப் புலத்தலென்பது புனலாட்டுவித்தமைகூறிப் புலவாநின்ற தலைமகள், ஊடறீர்க்க நுதலுந்தோளுமுதலாயினவற்றைத் தைவந்துவருடித் தலையளி செய்யாநின்ற தலைமகனோடு, எம்முடைய சிறிய வில்லின்கண்வந்து அன்று நீயிர்செய்த தலையளி எங்கட்கு அன்று வேண்டுதுமாயினும் இன்று உமது திருவருள் எங்கட்கு நீயிர்வந்த இத்துணையு மமையும்; வேறு நீயிர் தலையளி செய்யவேண்டுவதில்லையெனக் கலவிகருதிப் புலவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

**மின்றுன்னியசெஞ்சடைவெண்மதியன்விதியுடையோர்**
**சென்றுன்னியகழற்சிற்றம்பலவன்றென்னம்பொதியி**
**னன்றுஞ்சிறியவரில்லெமதில்லநல்லூரமன்னோ**
**வின்றுன்றிருவருளித்துணைசாலுமன்னெங்களுக்கே.**

கலைவளரல்கு றலைமகன்றன்னொடு
கலவிகருதிப் புலவிபுகன்றது.

இ - ள். மின் துன்னிய செஞ்சடை வெண் மதியன் - மின்னையொத்த செஞ்சடைக்கண்வைத்த வெண்பிறையையுடையான்—விதியுடையோர் சென்று உன்னிய கழல் சிற்றம்பலவன் - நற்பாலையுடையோர் சிற்றின்பத்திற்குக் காரணமான புலன்களை விட்டுச்சென்று நினைந்த கழலையுடைய சிற்றம்பலவன்—தென்னம் பொதியில் எமது இல்லம் நன்றும் சிறியவர் இல் - அவனது தெற்கின்கணுண்டாகிய பொதியிலிடத்து எமதுகுடி பெரிதுஞ் சிறியவரதுகுடி, அதனுன்—நல் ஊர - நல்லவூரையுடையாய்—இன்று உன் திருவருள் எங்களுக்கு இத்துணை சாலும் - முற்காலத்து நின்றலையளிவேண்டுதுமாயினும் இப்பொழுது உனது திருவருள் எங்கட்கு நீ வந்தவித்துணையுமமையும்; நீ தலையளி செய்யவேண்டுவதுண்டோ? எ - று.

மன்னும் ஓவும் அசைநிலை. சாலுமன்னென்புழி மன்னும் அசைநிலைபோலும். மெய்ப்பாடு வெகுளி. பயன் புலத்தல்; ஃபுலவி நீங்கியதூஉமாம். (௬௱௨)

## மிகுத்துரைத்தூடல்.

மிகுத்துரைத்தூடலென்பது கலவிகருதிப் புலவாநின்ற தலைமகள், புணர்தலுறுநின்ற தலைமகனுடன் நீர் விழுமியநாட்டு விழுமியநல்லூர் விழுமியகுடியிலுள்ளீர்; எம்போல்வாரிடத்து இவ்வாறு புணர்தல்விரும்புதல் நுமக்குவிழுமியவல்லவென மிகுத்துரைத்தூடாநிற்றல். அதற்குச்செய்யுள்—

செழுமியமாளிகைச்சிற்றம்பலவர்சென்றன்பர்சிந்தைக்
கழுமியகூத்தர்கடிபொழிலேழினும்வாழியரோ
விழுமியநாட்டுவிழுமியநல்லூர்விழுக்குடியீர்
விழுமியவல்லகொல்லோவின்னவாறுவிரும்புவதே.

நாடூரு மில்லுஞ்சுட்டி
ஆடற்பூங்கொடி யூடியுரைத்தது.

இ - ள். செழுமிய மாளிகைச் சிற்றம்பலவர் - வளவிய மாளிகைகளாற் சூழப்பட்ட சிற்றம்பலத்தையுடையார்—அன்பர் சிந்தைச் சென்று கழுமிய கூத்தர் - அன்பர்சிந்தைக்கட் சென்று பொருந்திய கூத்தர்—கடி பொழில் ஏழினும் - அவரது காவலையுடைய வுலகமேழினுள்ளும்—விழுமிய நாட்டு விழுமிய நல்லூர் விழுக் குடியீர் - சிறந்தநாட்டின்கட் சிறந்தநல்லூரிற் சிறந்தகுடியிலுள்ளீர்—இன்னவாறு விரும்புவது விழுமிய அல்ல கொல்லோ - எம்போல்வாரிடத்து இத்தன்மைய்வாகிய நெறியைவிரும்புதல் உமக்குச் சிறந்தனவல்லபோலும். எ - று.

வாழியும் அரோவும் அசைநிலை. விரும்புவதென்புழி, இன்னவாறு விரும்புவபோல்வனவென்பது கருத்தாகலின், ஒருமைப்பன்மைமயக்கம் அமையுமாறு முடைத்து. இன்னவாறென்பதற்கு இன்னவண்ணம் விரும்புதலெனினுமமையும். விரும்புதலென்பதூஉம் பாடம். ஆடல்-நுடக்கம். மெய்ப்பாடும் பயனும் அவை. ()

## ஊடனீடவாடியுரைத்தல்.

ஊடனீடவாடியுரைத்தலென்பது தணிக்கத்தணியாது மிகுத்துரைத்துத் தலைமகள் மேன்மேலு மூடாநிற்ப, அன்று அம்மலையிடத்துத் தன்னையெய்துதற்கோ ருபாயமின்றி வருந்தாநிற்பயானுய்யும்வண்ணந் தன்னிணை மலர்க்கண்ணினது இனியநோக்கத்தைத் தந்தருளி என்னைத்தன்வயமாக்கிய நம்பெண்ணமுதம் அதுவன்று; இது நம்மைவருத்துவதோர் மாயமாமெனத் தன்னை

ஞ்சிற்குச் சொல்லி ஊடனீடத் தலைமகன் வாடாநிற்றல். அதற்குச செய்யுள்—

திருந்தேனுயநின்றசிற்றம்பலவர்தென்னம்பொதியி
லிருந்தேனுயவந்திணைமலர்க்கண்ணினின்னோக்கருளிப்
பெருந்தேனெனநெஞ்சுகப்பிடித்தாண்டநம்பெண்ணமிழ்தம்
வருந்தேலதுவன்றிதுவோவருவதொர்வஞ்சனையே.

வாடா ஊட
னீடா வாடியது.

இ - ள். திருந்தேன் உய நின்ற சிற்றம்பலவர் தென்னம் பொதியில் - ஒருவாற்றானுந் திருந்தாத யான் பிறவித்துன்பத்திற் பிழைக்கவந்து நின்ற சிற்றம்பலவரது தெற்கின்கணுளதாகிய பொதியிலிடத்து—இருந்தேன் உய வந்து - ஒருமுயற்சியுமின்றி யிருந்த யானுய்யும்வண்ணம் வந்து—இணை மலர்க் கண்ணின் இன் நோக்கு அருளி - தன்னுடைய இணைந்தமலர்போலுங் கண்களினது உள்ளக்கருத்தை வெளிப்படுத்தும் நாணோடுகூடிய நோக்கமாகிய இனிய கடைக்கணோக்கத்தை முன்னெனக்குத்தந்து—பெருந்தேன் என நெஞ்சு உகப் பிடித்து ஆண்ட - பெருந்தேன் போலவினிதாய் என்னெஞ்சமுருக என்னைப்பிடித்துத் தன்வயமாக்கிய—நம் பெண் அமிழ்தம் அது அன்று-நமது பெண்வடிவையுடைய அமிழ்தமாகிய அது இதுவன்று—இதுவோ வருவது ஓர் வஞ்சனை - இதுவோ வருவதொருமாயம்—வருந்தேல் - அதனான் நீ வருந்தாதொழி. எ - று.

ஓகாரம் ஒழியிசைக்கண்வந்தது. தன்னைநோக்கியொருமுயற்சியுமில்லாத யான் பிறவித்துன்பத்திற் பிழைக்கத் தானேவந்து• தன்னிணைமலர்க்கண்ணி னினிய கடைக்கணோக்கத்தைத் தந்து பெருந்தேன்போன்றினிதாய், என் வன்மனநெகிழ என்னை வலிந்து பிடித்தடிமைக்கொண்ட பெண்ணமிழ்தமென வேறொரு பொருள் விளங்கியவாறு கண்டுகொள்க. மெய்ப்பாடு அழுகை. பயன் தலைமகளைச் சிவப்பாற்றுவித்தல். (௩௬௪)

## துனியொழிந்துரைத்தல்.

துனியொழிந் துரைத்தலென்பது ஊடனீடலால் தலைமகனாற்றாவாயில் கண்ட தலைமகள், அன்று நங்குன்றிடத்து மிக்கவிருளின்கண்ணே அரிதிரண்டு யானைவேட்டஞ்செய்யும் அழுரகத்துத் தமதுவேலே துணையாகவந்து இயல்பைப் பொருந்திய வன்மை

நமக்குத் தந்தவர்க்கு இன்று நாமுடம்படாது நிற்குமிந்நிலைமை என்றுமெனத் துனியொழிந்து அவனோடு புணர்ச்சிக்குடம்படா நிற்றல். அதற்குச்செய்யுள்—

**இயன்மன்னுமன்புதந்தார்க்கென்னிலையிமையோரிறை ஞ்சுஞ்,செயன்மன்னுஞ்சீர்க்கழற்சிற்றம்பலவர்தென்னம்பொ தியிற்,புயன்மன்னுகுன்றிற்பொருவேறுணையாப்பொம்மென் னிருள்வா,யயன்மன்னும்யானைதுரந்தரிதேருமதரகத்தே.**

தகுதியினூரன் மிகுபதநோக்கிப்
பனிமலர்க்கோதை துனியொழிந்தது.

இ - ள். இமையோர் இறைஞ்சும் செயல் மன்னும் சீர்க் கழல் சிற்றம்பலவர் தென்னம் பொதியில் - இமையோரிறைஞ்சும் நுண் செயல்தங்கிய நல்ல வீரக்கழலணிந்த திருவடியையுடைய சிற்றம் பலவரது தெற்கின்கணுளதாகிய பொதியிலிடத்து—புயல் மன்னு குன்றில் பொம்மென் இருள் வாய் - புயறங்கிய இக்குன்றிற்செறி ந்த விருளின்கண்ணே—அயல் மன்னும் யானை துரந்து - பக்கத் துத்தங்கும் யானைகளையோட்டி—அரி தேரும் அதரகத்து - அரி மா அவைபுக்கவிடந்தேடும் வழியகத்து—பொருவேல் துணையா - தமது பொருவேலே துணையாக வந்து—இயல் மன்னும் அன்பு தந்தார்க்கு - இயல்பாகிய நிலைபெற்றவன்பை நமக்குத் தந்தவர் க்கு—நிலை என் - யானிவ்வாறுடம்படாது நிற்குநிலை என்னும்! இது தகாது. எ - று.

பெயரெச்சத்திற்கும் பெயர்க்கும் ஒருசொன்னீர்மைப்பாடு ண்மையின், இயன்மன்னுமன்பெனத் தொக்கவாறறிக. இயல் பைப் பொருந்தியவன்பெனினு மமையும். அதரகத்து வந்தென வொருசொல் வருவித்துரைக்கப்பட்டது. புயன்மன்னுகுன்றில ன்பு தந்தார்க்கெனக் கூட்டுக. தகுதியின்-தகுதியான். மிகுபதம்- ஆற்றுமைமிக்க வளவு. தகுதியினூரனெனப் பாடமாயின், தகுதி யில்லாத மிகுபதமென்க. மெய்ப்பாடு அச்சம், பயன் சிவப் பாற்றுதல். (௩௬௯)

## புதல்வன்மேல்வைத்துப்புலவிதீர்தல்.

புதல்வன்மேல்வைத்துப் புலவிதீர்தலென்பது துனியொழித் துக்கூடிப் பிரிந்தவழிப் பின்னும் பரத்தைமாட்டுப் பிரிந்தானெ ன்று கேட்டுப் புலந்து வாயின்மறுக்க, வாயிற்கணின்று விளையா டாநின்ற புதல்வனை யெடுத்தணைத்துத் தம்பலமிட்டு முத்தங்கொ

டுத்து அதுவாயிலாகக்கொண்டு தலைமகன் செல்லாநிற்ப, அப்புதல்வனை வாங்கியணைத்துக்கொண்டு, அவன்வாயிற்றம்பலந் தன்மெய்யிற் படுதலான் எல்லார்க்கும் பொதுவாகிய தம்பலத்தைக் கொண்டுவந்தோ நீ யெம்மைக் கொண்டாடுவது? அதுகிடக்க, இதனை நினக்குத் தந்தவாறு சொல்லுவாயாகவெனப் புதல்வன்மேல் வைத்துத் தலைமகள் புலவி தீராநிற்றல். அதற்குச்செய்யுள்—

**கதிர்த்தநகைமன்னுஞ்சிற்றவ்வைமார்களைக்கண்பிழைப்பித்**
**தெதிர்த்தெங்குநின்றெப்பரிசளித்தானிமையோரிறைஞ்சு**
**மதுத்தங்கியகொன்றைவார்சடையீசர்வண்டில்லைநல்லார்**
**பொதுத்தம்பலங்கொணர்ந்தோபுதல்வாவெம்மைப்பூசிப்பதே**

புதல்வனது திறம்புகன்று
மதரரிக்கண்ணி வாட்டந்தவிர்ந்தது.

இ - ள். மதுத் தங்கிய கொன்றை வார் சடை ஈசர் இமையோர் இறைஞ்சும் வண் தில்லை நல்லார் பொதுத் தம்பலம் கொணர்ந்தோ - தேன்றங்கிய கொன்றைப்பூவையுடைய நீண்ட சடையையுடையவீசரது இமையோரால் வணங்கப்படும் வளவிய தில்லையிலுளராகிய நல்லாரெல்லார்க்கும் பொதுவாகிய தம்பலத்தைக்கொண்டுவந்தோ—புதல்வா - புதல்வா—எம்மைப் பூசிப்பது - நீயெம்மைக்கொண்டாடுவது? அதுநிற்க—கதிர்த்த நகை மன்னும் சிற்றவ்வைமார்களைக் கண் பிழைப்பித்து - இது நினக்குத் தருகின்றவிடத்து நின்றந்தை ஒளிவிட்ட முறுவல்பொருந்திய நின்சிறியவன்னைமாரைக் கண்ணைத்தப்புவித்து—எதிர்த்து எங்கு நின்று எப்பரிசு அளித்தான் - அவர்காணாதவண்ணம் ஒருவாற்றானின்னையெதிர்ப்பட்டு எவ்விடத்துநின்று எவ்வண்ணமிதனை நினக்குத்தந்தான்? நீயிது சொல்லவேண்டும். எ - று.

மெய்ப்பாடு இளிவரலைச்சார்ந்த நகை. பயன் ஊடனீங்குதல்.

## கலவியிடத்தூடல்.

கலவியிடத் தூடலென்பது புதல்வனை வாயிலாகப்புக்குப் புலவி தீர்த்துப் புணர்தலுறாநின்ற தலைமகனைத் தலைமகள் ஒரு காரணத்தால் வெகுண்டு, அவன் மார்பகத்துதைப்ப, அவ்வெகுடல் தீரவேண்டி அவனவள்காலைத் தன்றலைமேலேற்றுக்கொள்ள, அது குறையாக அவள் புலந்தழாநின்றமையை அவ்விடத்து உழையர் தம்முட் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்—

சிலைமலிவாணுதலெங்கையதாகமெனச்செழும்பூண்
மலைமலிமார்பினுதைப்பத்தந்தான்றலைமன்னர்தில்லை
யுலைமலிவேற்படையூரனிற்கள்வரிலென்னவுன்னிக்
கலைமலிகாரிகைகண்முத்தமாலைகலுழ்ந்தனவே.

*சிறடிக்குடைந்த நாறிணர்த்தாரவன்*
*றன்மைகண்டு பின்னுந்தளர்ந்தது.*

இ - ள். மலை மலி செழும் பூண் மார்பின் உதைப்ப - யான் வெகுண்டு மலைபோலும் வளவிய பூணையுடைய தன் மார்பகத்து மிதிப்ப—சிலை மலி வாணுதல் எங்கையது ஆகம் எனத் தலை தந்தான் - அவ்வாகத்தைச் சிலைபோலும் வாணுதலையுடைய எங்கைய தென்றேகருதித் தன்சென்னியைத் தந்தனன், அதனான்—மன்னர் தில்லை உலை மலி வேற்படை ஊரனின் கள்வர் இல் என்ன உன்னி - மன்னனது தில்லையில் உலையிடத்துண்டாகிய தொழிலான் மிக்க வேலாகிய படையையுடைய ஊரனைப்போலக் கள்வரில்லையென்று கருதி—கலை மலி காரிகை கண் முத்த மாலை கலுழ்ந்தன - மகளிர்க்குத்தக்க யாழ்முதலாகிய கலைகளான் மிக்க காரிகை நீர்மையையுடையாளுடைய கண்கள் கண்ணீர்த்துளித் தாரையாகிய முத்தமாலையைப் பொருந்தின; அதனான், இவள் புலத்தற்குக் காரணம் வேண்டுவதில்லைபோலும். எ - று.

இதுவுந் துறைகூறிய கருத்து. மெய்ப்பாடு இளிவரலைச்சார்ந்த நகை. பயன் தலைமகளைச் சிவப்பாற்றுவித்தல். பிள்ளைவாயிலாகப் புக்க தலைமகனை யேற்றுக்கொண்டு பள்ளியிடத்தாளாக மேற்சொன்னவகையே உண்ணின்றெழுந்த பொருமை காரணம் பெற்றுத் தோன்றியது; தோன்றத் தலைமகன் ஆற்றுமையின் அவ்வாற்றுமைகண்டு சிவப்பாற்றுவித்தல். தலைமகளிடத்தும் தலைமகனிடத்தும் இவ்வகை நிகழ்ந்ததுகண்டு தோழி யிதுசொன்னுளென்பது. தலைமகன்றன்சொன்னுனெனினு மமையும். என்னை? "மனைவியுயர்வுங் கிழவோன் பணிவு—நினையுங் காலைப் புலவியுளுரிய" * என்றூர்தொல்காப்பியனுர். தலைமகளவ்வகைசெய்யவும் பெறுமென்பது. (௩௬௭)

## முன்னிகழ்வுரைத்தூடறீர்த்தல்.

முன்னிகழ்வுரைத்தூடறீர்த்தலென்பது கலவியிடத்தூடாநின்ற தலைமகளுக்கு, யாங்கொடிய நெறியைச்சென்று சிறியவூரின்

* தொல். பொருள். பொருளியல் ௩௩.

கண் மரையதட்பள்ளியின் இச்செறிந்த மெல்லிய முலைகள் என் மார்பிடை வந்தடர்க்கத் தங்கிய சிறியதுயிற்கு மாறுகண்டிலம்; அதனை நீ யுள்ளியுமறிதியோவென முன்னிகழ்வுரைத்துத் தலைமகன் அவளை யூடறீராநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஆறூர்சடைமுடியம்பலத்தண்டரண்டம்பெறினு
மாறூர்மழவிடையாய்கண்டிலம்வண்கதிர்வெதுப்பு
நீறூர்கொடுநெறிசென்றிச்செறிமென்முலைநெருங்கச்
சீறூர்மரையதளிற்றங்குகங்குற்சிறுதுயிலே.

முன்னிகழ்ந்தது நன்னுதற்குரைத்து
மன்னுபுனலூரன் மகிழ்வுற்றது.

இ - ள். ஊர் மழ விடையாய் - தவழாநின்ற இளையவேற்றை யுடையாய்—ஆறு ஊர் சடைமுடி அம்பலத்து அண்டர் அண்டம் பெறினும் - ஆறுபரந்த சடைமுடியையுடைய அம்பலத்தின்கணுள ராகிய அண்டரதண்டமுழுதையும் யாம் பெறினும்—வண்கதிர் வெதுப்பு நீறு ஊர் கொடு நெறி சென்று - ஞாயிற்றினுடைய வளவியகதிர்கள் வெதுப்பிய நீறுபரந்த கொடியநெறியைச்சென்று—இச் செறி மென்முலை நெருங்க - இச்செறிந்த மெல்லிய முலைகள் எம்முடைய மார்பினிடைவந்தடர—சீறூர் மரை அதளின் தங்கு கங்குல் சிறுதுயில் மாறு கண்டிலம் - நெறியாற்சிறிய வூரின்கண் மரையதட்பள்ளியிற்றங்கிய இரவிற்சிறியதுயிற்குமாறு கண்டிலம்; அதனை நீ யுள்ளியுமறிதியோ? எ - று.

அண்டரதண்டமுழுதும் பெறுதலால் வருமின்பமும் அத்துயிலான்வந்த வின்பத்திற்கு மாறல்லவென்றவாறு. இளவேறு புதல்வன். தமக்குத்தக்க பள்ளியுமிடமு மின்மையிற் சிறுதுயிலென்றான். துயிலும்பொழுதிற் றுயிலாப்பொழுது பெரிதாகலின் அவ்வாறு கூறினானெனினு மமையும். துயிற்கென்னு நான்கனுருபு விகாரவகையாற் றொக்குநின்றது. முன்னிகழ்ந்தது கூறுவானாய் உண்ணின்ற சிவப்பாற்றுவித்தது. நெருங்கவென்பதூஉம் மரவதளென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு உவகை. பயன் தலைமகளை மகிழ்வித்தல். (நகூஅ)

## பரத்தையைக்கண்டமைகூறிப்புலத்தல்.

பரத்தையைக்கண்டமை கூறிப்புலத்தலென்பது முன்னிகழ்வுரைத்தூடறீர்த்து இன்புறப்புணரப்பட்ட தலைமகள் பிறர்க்கும் நீ இவ்வாறின்பஞ் செய்தியென்றுகூற, நின்னையொழிய யான்

வேறொருத்தியையு மறியேனென்ற தலைமகனுக்கு, நின்பரத்தை போகாநின்றவள் நம்வாயிற்கணின்று தேருருட்டி விளையாடாநின்ற புதல்வனைக் கண்டு நின்மகனென்றையுற்றுத் தழுவ, நீ யையுற வேண்டா; அவன் உன்மகன்; உறவு மெய்யாகிய வுறவே; ஈதும் உனதில்லமே; ஈண்டுவருவாயாகவென் றியான்கூற, அதுகேட்டுத் தானாணிப்போயினாள்; யானவனை யறியேனாக நீ மாயங்கூறவேண் டுவதில்லையெனத் தான் பரத்தையைக் கண்டமைகூறிப் பின்னுமவ னொடு புலவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

ஐயுறவாய்நம்மகன்கடைக்கண்டுவண்டேருருட்டு
மையுறுவாட்கண்மழவைத்தழுவமற்றுன்மகனே
மெய்யுறவாமிதுனில்லேவருகெனவெள்கிச்சென்றாள்
கையுறுமான்மறியோன்புலியூரன்னகாரிகையே.

பரத்தையைக்கண்ட பவளவாய்மாதர்
அருத்தநெடுவே லண்ணற்குரைத்தது.

இ - ள். நம் அகன் கடைக் கண்டு ஐயுறவாய் - நமதகன்ற கடைக்கட் கண்டு நின்மகனென்றையுற்று—வள் தேர் உருட்டும் மை உறு வாள் கண் மழவைத் தழுவ - வளவிய சிறுதேரையுருட் டும் மையுற்ற வாட்கண்ணையுடைய புதல்வனைத் தான்வந்துதழுவ, அதனைக்கண்டு—உன் மகனே - அவன் உன்மகனே—மெய் உற வாம் - உறவு மெய்யாகிய வுறவே—இது உன் இல்லே - இதுவும் நினதில்லமே—வருகென-ஈண்டு வருவாயாகவென் றியான்கூற— கை உறு மான் மறியோன் புலியூர் அன்ன காரிகை - கையைப் பொருந்திய மான்மறியையுடையவனது புலியூரைப்போலுங் காரி கை—வெள்கிச் சென்றாள் - நாணிப்பெயர்ந்தாள்; அதனான், யான வனை யறியாதேனாக நீ நினைத்து மாயங்கூறவேண்டுவதில்லை. எ-று.

ஐயுறவாகவெனத் திரித்துக்கொள்க. அரத்தகுநெடுவேலென் பது பாடமாயின், அரத்தொழிலாற்றக்க நெடுவேலென வுரைக்க. மெய்ப்பாடு நகை. பயன் சிவப்பாற்றுதல். ஆற்றாமையே வாயிலா கப் புக்க தலைமகன் தலைமகளைச் சிவப்பாற்றுவிப்பான் நின்னின் வேறுசிலரெனக்கில்லையால் நீ வெகுளற்கவென்றாற்குத் தலைமக ளிவ்வகை சொன்னாளென்பது. (௩௯௯)

## ஊதியமெடுத்துரைத்தூடறீர்த்தல்.

ஊதியமெடுத்துரைத்தூடறீர்த்த லென்பது பரத்தையைக் கண்டமைகூறிப் புலந்து வேறுபட்ட தலைமகளுக்கு, இத்தன்மைய

ஞப் யாவர்க்கு மூதியமாகலின், அன்பானன்றியருளாற் பரத்தை யர்க்குந் தலையளிசெய்ய வேண்டுமென்றே; புறப்பெண்டீரைப்போல யாமவனோடு புலக்கற்பாலேமல்லேம்; அவன் வரும்பொழுது எதிர் தொழுதும் போம்பொழுது புறந்தொழுதும், புதல்வனைப் பயந்தி ருக்கையன்றோ நமக்குக் கடனாவதெனத் தோழி தலைமகனதூதிய மெடுத்துரைத்து அவளையூடநீர்த்து, அவனோடு பொருந்தப் பண் ணுநிற்றல். அதற்குச்செய்யுள்—

காரணிகற்பகங்கற்றவர்நற்றுணைபாணரொக்கல்
சீரணிசிந்தாமணியணிதில்லைச்சிவனடிக்குத்
தாரணிகொன்றையன்றக்கோர்தஞ்சங்கநிதிவிதிசே
ரூருணியுற்றவர்க்கூரன்மற்றியாவர்க்குமூதியமே.

இரும்பரிசி லேற்றவர்க்கருளி
விரும்பினர்மகிழ மேவுதலுரைத்தது.

இ-ள். ஊரன் கார் - ஊரன் வேண்டாமைக்கொடுத்தலிற் காரோடொக்கும்—அணி கற்பகம் - வேண்டக்கொடுத்தலின் அழ கிய கற்பகத்தோடொக்கும்—கற்றவர் நல் துணை - நுண்ணிய கல் வியனாகலிற் கற்றவர்க்கு நல்லவுசாத்துணை—பாணர் ஒக்கல் - இசையுணர்வானுங் கெழுதகைமையானும் பாணர்க்கு அவர் சுற்றத் தோடொக்கும்—சீர் அணி சிந்தாமணி - நினைத்ததுகொடுத்தலிற் சீரையுடைய நல்ல சிந்தாமணியோடொக்கும்—அணி தில்லைச் சிவ னடிக்குத் தார் அணி கொன்றையன் - அழகிய தில்லைக்கட் சிவ னது திருவடிக்குத் தாராகி அவனாலணியப்படுங் கொன்றைப் பூவின்றன்மையையுடையன்—தக்கோர்தம் சங்கநிதி - சான்றோர் தமக்குத் தொலையாதநிதியாயிருத்தலிற் சங்கநிதியோடொக்கும்— விதி - நட்டார்க்கும் பகைவர்க்குந் தப்பாது பயன்கொடுத்தலின் விதியோடொக்கும்—உற்றவர்க்குச் சேர் ஊருணி - சுற்றத்தார்க்கு அவர்வேண்டிய செய்யவிருத்தலின் அணிக்காகிய ஊருணியோ டொக்கும்—யாவர்க்கும் ஊதியம் - அதனை வரைவின்றி எல்லா ர்க்கும் இவன் பெறும் பயன். எ - று.

தாரணிகொன்றையனென்பது குரங்கனென்பதுபோல உவ மைப்பொருட்பட நின்றதெனினுமமையும். விதிசேரூருணியென் பதற்கு முறைமையாற் சேரப்படுமூருணி யெனினுமமையும். தக் கார்க்குஞ் சுற்றத்தார்க்குங் கொடுத்தல் வண்மையன்மையின் அவரை வேறுபிரித்துக் கூறினாள். ஊடநீர்ந்து கூடியவழித், தலை மகட்கு உண்ணின்றசிவப்பு ஒருகாரணத்தாற் சிறிது புலப்பட,

450. [illegible]

400. [illegible] 113

"ஊரணி" என்றே இதம்பரம்பிரதியொன்றில் இருந்தது. அணித்தாகிய ஊரணியென்ற உரைக்கேற்பவும் அக்கொள்கையைவலியுறுத்து "ஊர்க்கு மணித்தே பொய்கை" என்றகுறுந்தொகையடிகட்கியையவும் "ஊரணி" என்ற பாடமே கோடற்குரித்து.

ஊரன் யாவர்க்கு மூதியமாகலின் அன்பானன்றி அருளாற் பரத்தையர்க்குந் தலையளிசெய்யுமன்றே; அதனான் நீ புலக்கற்பாலையல்லையென்று குறிப்பினாற் றோழி இவப்பாற்றுவித்தது. மெய்ப்பாடு உவகை. பயன் மெய்ம்மகிழ்தல்.

இவ்வகை கூத்தர் மகிழ்ந்து இன்னபோல்வன தலைமகனது குணங்களைப் பாராட்டினாரென்பது. என்னை? "தொல்லவை யுரைத்தலு நுகர்ச்சி யேத்தலும்—பல்லாற்றானு மூடலிற் றணித்தலு முறுதி காட்டலு மறிவுமெய்ந் நிறுத்தலு—மேதுவி லுணர்த்தலுந் துணியக்காட்டலு—மணிநிலை யுரைத்தலுங் கூத்தர்மேன" என்றார் தொல்காப்பியனார். இப்பாட்டு ஐவகைத்திணைக்கும் உரித்தாகலிற் பொதுவகைத்தெனப் பெறுமென்பது. (௪00)

பரத்தையிற்பிரிவு முற்றிற்று.

## திருக்கோவையாருரைமுற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

* தொல். பொருள். கற்பு. உஎ.

## மேற்கோள்.

பாட்டு.

௪௫. "தேற்றுப்புன்சொன்றேற்றிசின்" புறநானூறு உ0உ.

௬௯. "புனவர்தட்டை" புறநானூறு ௪௬.

௧0உ. "குழிந்தாழ்ந்தகண்ண" நாலடியார், தூய்தன்மை ௬.

௯எ௫. எம்மிறைநல்வீணை வாசிக்குமே" திருநாவுக்கரசுநாயனார்.தேவாரம், தனித்திருவிருத்தம் (பொது) எ.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௬ | ௩௪ | வாறன்று. | வாறன்று; |
| ௭ | ௧0 | என்னை | என்னை, |
| ௧௭ | ௪ | நிற்குமென்பது; | நிற்குமென்பது. |
| ௫௮ | ௨௩ | பூம்குழல் | பூங்குழல் |
| ௬௬ | ௨௩ | பூம்கயிலை | பூங்கயிலை |
| ௭௨ | ௧௯ | ளயலதிர்சங்குகதி | ளயலதிறங்குகதி |
| ௭௬ | ௩௩ | கடைக்கண்ண | சடைக்கண்ண |
| ௭௯ | ௧௭ | கருப்புச்சி | கருப்புச் |
| ௧௩௫ | ௨௯ | க்ழுநீர்மலர் | கழுநீர்மலர் |
| ௧௩௯ | ௩௪ | மெயப்பாடு | மெய்ப்பாடு |
| ௧௪௫ | ௨௨ | இச்செறி | இற்செறி |
| ௧௫௯ | ௧௭ | உட்கோள் | உட்கொள |
| ௧௬௪ | ௨0 | உட்கோள் | உட்கொள |
| ௧௯௭ | [illegible] | குளறவும் | குளுறவும் |
| ௧௯௮ | ௩ | குளறவும் | குளுறவும் |
| ௨௧௩ | ௯ | பூம்தண் | பூந்தண் |
| ௨௪௫ | ௨௨ | கென்னு | கென்று |
| ௨௭௮ | ௨ | பகர்ந்து | பகர்ந்தது |
| ௩௧௯ | ௧௩ | பண்ணுதல் | பண்ணுதற்குப்பிரிவு. |
| ௩௬௮ | ௧௪ | கொண்டது. | கொண்டது |
| ௩௭௯ | ௨௯ | பிரியாமை | பரியாமை |
| ௩௮0 | ௧0 | பிரியாமை | பரியாமை |
| ௩௮௮ | ௧௮ | தங்கி | தாங்கி |
| ௩௯0 | ௧௪ | ஞுண்டாகிய | ஞுண்டாகிய |
| ௩௯௬ | ௧ | அதற்குச | அதற்குச் |

# பாட்டுமுதற்குறிப்பகராதி.